



# இதயம் பேசுகிறது... (IIA)

மணியன்











# என்னுரை

இதயம் பேசுகிறது IIa, இதோ உங்கள் கரங்களில் இருக்கிறது. ஆஸ்திரேலியா, சிங்கப்பூர், மலேசியா — பயணக் கதை இது. வழக்கம் போலவே, இந்தப் பகுதி விகடனில் தொடராக வந்தபோது, வாசக அன்பர்கள் ஆர்வத்துடன் படித்து விட்டுப் பாராட்டினார்கள். சற்று மாறுபட்ட கருத்துக்களையும் ஒரு சிலர் தெரிவித்திருந்தார்கள். முந்திய இரண்டு பகுதிகளைப் போல் இந்தப் பயணக் கதை பிரமிப்பூட்டுவதாக இல்லை என்பதே அவர்களின் கருத்து.

இதற்குக் காரணம் என்ன?

இங்கிலாந்து, அமெரிக்கா, கனடா, ஜப்பான் முதலிய நாடுகளைப் பற்றி முன்பு எழுதியிருந்தேன். அந்த நாட்டு மக்கள் நம்மிலும் மாறுபட்டவர்கள். அவர்களின் கலாசார, சமூக வாழ்க்கை முறைகளில் வியக்கத்தக்க மாற்றங்களை யாரும் காண

முடியும். எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் நம்மிலும் வித்தியாசமான தோற்றமே அங்கு தெரியும். அத்துடன் பல சுவையான சம்பவங்களும் அமைந்து விட்டதால், புதிய புதிய அனுபவங்களை வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ள முடிந்தது.

சிங்கப்பூர், மலேசியா பயண அனுபவம் அதே போன்று அமைய முடியாது. எப்படிப் பார்த்தாலும் நம் முத்திரையைத்தான் இங்கே பார்க்க முடியும். வியப்பையும் புதுமைகளையும் அதிகமாக எதிர்பார்க்க முடியாது. சிங்கப்பூர், மலேசிய மக்கள் ஆசியர்கள். இவர்களில் இந்தியரும் சீனரும் பெரும் எண்ணிக்கையில் உள்ளனர். இவர்களிடம் ஐரோப்பியத் தன்மையையோ, அமெரிக்க குணாதிசயத்தையோ எதிர்பார்க்க முடியுமா? குடியேறிய இந்தியர்களும், சீனர்களும் அந்த நாட்டையே தாய் நாடாகக் கொண்டு, அந்த நாட்டுச் சூழ்நிலைகளுக்கேற்ப வாழ்கிறார்கள். எனினும் சமூக, கலாசார ரீதியில் இவர்களிடம் வேறுபாடுகளைக் காண முடியாது. அப்படியிருக்க இந்த மக்களைப் பற்றி எழுதும்போது பெரிய பிரமிப்பை எப்படி உண்டுபண்ண முடியும்? இதயம் பேசுகிறது IIa பற்றி வித்தியாசமான கருத்து தெரிவித்திருந்த அன்பர்களுக்கு இதுவே என் விளக்கம்.

சிங்கப்பூர், மலேசியா பயணத்தின்போது ஆஸ்திரேலியாவுக்குச் செல்லும் வாய்ப்பும் எனக்குக் கிடைத்தது. கிழக்கே ஓர் ஐரோப்பாவாக விளங்கும் இந்த நாட்டில் எனக்குக் கிடைத்த அனுபவங்களையும் இந்தப் பகுதியில் பரிமாறிக் கொண்டிருக்கிறேன். கிரிக்கெட் விளையாட்டில் சரித்திரம் படைத்த டான் பிராட்மனை சந்திக்கும் அரிய வாய்ப்பு ஆஸ்திரேலியாவில் எனக்குக் கிடைத்தது.

இதயம் பேசுகிறது IIa எப்படி இருக்கிறது? இதன் தன்மையும் தரமும் எப்படி? அது, எதிர்காலம் மதிப்பிட வேண்டிய விஷயம் என்று கருதுகிறேன்.

'மாலா'
சென்னை 4.
7—3—73.

மணியன்

# 1

புகழ்பெற்ற 'ஸிட்னி' நகரின் அற்புதத் தோற்றம்.

முப்பத்தையாயிரம் அடி உயரத்தில் விமானம் பறந்து கொண்டிருந்தது. மலேஷியன் சிங்கப்பூர் விமான சர்வீஸ்காரர்கள் (எம்.எஸ்.ஏ.) அளித்த உபசரிப்பில் திணறிய வண்ணம், என் 'ஸீட்'டிற்கு அருகில் இருந்த கண்ணாடி வழியாக வெளியே தெரிந்த நிர்மலமான ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். கீழே நீல நிறக் கடல், மேலே நீல நிற வானம்! எவ்வளவு நேரம் பார்த்துக் கொண்டிருந்தாலும் அலுக்காத ஒரு காட்சி அது! 'எல்லையற்றதோர் வானக் கடலினிடை' என்றானே கவிஞன், அதன் பொருள் அப்போதுதான் எனக்குக் கொஞ்சம் புரிந்தது.

''மிஸ்டர் மணியன், நீங்கள் ஏதாவது 'ட்ரிங்க்' சாப்பிடுகிறீர்களா?'' -இனிமையான குரல் ஒன்று என்னைத் திரும்பச் செய்தது.

எம். எஸ். ஏ. விமானப் பணிப் பெண் புன்னகை தவழ என் முன்னால் நின்று கொண்டிருந்தார்.

''நோ... தாங்க் யூ...'' என்றேன்.



''கொஞ்சம் 'பி'ராவது...''

''மன்னிக்க வேண்டும். நான் மது அருந்துவதில்லை......''

''ஓகே! கொஞ்சம் ஆரஞ்சு ஜூஸ்.''

ஏதாவது சாப்பிடாவிட்டால் விடமாட்டார் போலிருக்கிறதே என்று தோன்றவே, ''யெஸ்'' என்றேன்.

விமான ஒலிபெருக்கியில் காப்டன் பேசினார் :

''நண்பர்களே, இப்போது நாம் ஜாகர்த்தாவை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறோம். ஜாகர்த்தாவில் விமானம் அதிக நேரம் நிற்காது. அங்கிருந்து நேராக 'ஸிட்னி' போகிறோம்......'' என்று கூறி, ஜாகர்த்தாவின் அப்போதைய நேரம், சீதோஷ்ண நிலை எல்லாவற்றையும் விளக்கினார்.

நான் என் 'ஸீட்'டுக்கு மேலேயிருந்த வெள்ளைப் பித்தானை இயக்கினேன். [விமானத்தில் பணிப் பெண்களை அழைக்க, தலைக்குமேல் பொருத்தப்பட்டிருக்கும் பித்தான்களைத்தான் இயக்க வேண்டும்.]

''யெஸ் மிஸ்டர் மணியன்...''

அதே புன்முறுவலுடன் நின்றார் பணிப் பெண்.

''சிங்கப்பூரிலிருந்து ஸிட்னி எவ்வளவு நேரப் பயணம்......?'' என்று கேட்டேன்.

''சிங்கப்பூரிலிருந்து ஜாகர்த்தா ஒன்னேமுக்கால் மணி நேரம், பிறகு அங்கிருந்து கிட்டத்தட்ட ஏழு மணி நேரம்......''

''தாங்க் யூ......''

நான் யோசித்துப் பார்த்தேன். மொத்தம் எட்டரை மணி நேரம் விமானத்தில் இருந்தாக வேண்டுமே! நேரத்தை எப்படிக் கழிப்பது?

''எக்ஸ்கியூஸ் மி......''

மீண்டும் பணிப் பெண்ணின் குரல்.

என் முன்னுள் இருந்த 'ஸீட்'டிலிருந்து ஒரு பலகை நீண்டது. அதன் மீது 'ஆரஞ்சு ஜூஸை' வைத்துவிட்டு, என்னிடம் இரண்டு பிளாஸ்டிக் உறைகளை நீட்டினார். அவற்றை வாங்கிப் பிரித்தேன். ஓர் உறையில் காலுக்குப் போட்டுக் கொள்ள கறுப்பு சாக்ஸ் ஜோடியும், கண்ணை மறைத்துக் கொள்ள ஒரு கறுப்பு முகமூடியும் இருந்தன. [இந்தக் கறுப்பு முகமூடி, விமானத்தில் தூங்கும் வசதிக்காக. அடுத்த 'ஸீட்' பயணி விளக்குப் போட்டிருக்கிறாரே என்று கவலைப்படாமல் கண்ணை மூடிக்கொண்டு தூங்கலாம்] இன்னொன்றில், விமான 'ஸீட்'டிலேயே பொருத்தப்பட்டிருந்த ஒரு டேப் ரிகார்டரிலிருந்து சங்கீதம் கேட்க, நீண்ட 'ஒய்'ருடன் கூடிய ஒரு கருவி இருந்தது.

கருவியை ஸீட்டிலிருந்த 'பிளக்'கில் செருகி, காதில் வைத்துக் கொண்டேன். எட்டு 'சானல்'கள் (Channel) இருந்தன. எட்டாவது 'சான'லில் தமிழ் இசை. ஆம்! தமிழ் இசைதான்! (எம். எஸ். ஏ. சர்விஸ் வாழ்க என்று வாழ்த்தத் தோன்றுகிறதல்லவா?)

'திருப்பரங்குன்றத்தில் நீ சிரித்தால்......' சுசீலா — ராஜலட்சுமி யின் குரல் இனிமை.

நமது இசையை ரசித்தபடியே ஆரஞ்சு ஜூஸைப் பருகினேன்.

''எக்ஸ்கியூஸ் மி......''

'மறுபடியும் ஹோஸ்டஸ்ஸா' என்று நிமிர்ந்தேன். இந்த முறை என் அருகில் இருந்து அந்தக் குரல் வந்தது.

என் பக்கத்து ஸீட் பயணிதான் என்னிடம் பேச்சுக் கொடுக்க என்னை அழைத்தார்.

''யெஸ்...'' என்றேன் நான்.

''என் பெயர் டான் ஸிடன் (Don Seaton). நான் ஸிட்னி போகிறேன்... நீங்கள்?'' என்று, கைகொடுக்க கரத்தை நீட்டினார்.

''என் பெயர் மணியன்......நானும் ஸிட்னி போகிறேன்'' என்று கூறி அவரிடம் கரம் கொடுத்தேன்.

''நீங்கள் இந்தியர்தானே?......''

''ஆமாம், எப்படிக் கண்டு பிடித்தீர்கள்?''

''ஹோஸ்டஸ்ஸிடம் நீங்கள் பேசியதிலிருந்து......''

''புரியவில்லையே......''

''நீங்கள் மது அருந்துவதில்லை என்று சொன்னீர்களே...... அதிலிருந்து நீங்கள் ஒரு 'ஹிந்து' என்று புரிந்து கொண்டேன்......''

''ஓ!'' என்றேன் நான்.

வேறு என்ன சொல்வது? 'இந்து'க்களைப் பற்றி அவர் கொண்டிருந்த கருத்தை மாற்ற நான் விரும்பவில்லை.

''உங்களுக்குச் சொந்த ஊர் ஸிட்னிதானா?''

''ஆமாம்......''

''என்ன தொழில் செய்கிறீர்கள்?''

''டாலோ (Tallow) வியாபாரம்.''

எனக்கு அவர் சொன்னது புரியவில்லை. 'டாலோ' என்றால்? ஒரு கணம் தயங்கிய பிறகு, ''அப்படி யென்றால் என்ன?'' என்று கேட்டேன்.

''அது ஒரு 'பை ப்ராடக்ட்'... இறைச்சியிலிருந்து கிடைக்கும் ஒரு உபபொருள். சோப் தயாரிப்புக்கு அது முக்கியம். இந்த வியாபார வேலை காரணமாக நான் அடிக்கடி வெளிநாடு போவேன். உங்கள் நியூடெல்லிக்குக்கூட ஒரு முறை வந்திருக்கிறேன். எஸ். டி. ஸி—யுடன் தொடர்பு உண்டு......''

''அப்படியா? 'ஸிட்னி' தான் உங்கள் ஹெட்குவார்ட்டர்ஸா?''

''ஆமாம்! நீங்கள் இதற்கு முன்னால் ஸிட்னி வந்திருக்கிறீர்களா?''

''இல்லே, இதுதான் முதல் பயணம். உங்கள் ஆஸ்திரேலியாவைப் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்களேன்......'' என்றேன்.

டான் சிரித்தார். பிறகு, ''என்ன சொல்ல வேண்டும்?'' என்றார்.

''ஆஸ்திரேலியாவைப் பற்றி எனக்குத் தெரிந்தது மிகவும் குறைவு. இந்தியாவிலிருந்து 6000 மைல்களுக்கு அப்பால் உள்ள ஒரு நாடு; பிரபல கிரிக்கெட் ஆட்டக்காரர்களும், டென்னிஸ் ஆட்டக்காரர்களும் நிறைந்த ஒரு தேசம் என்றுதான் தெரியும். டான் பிராட்மெனால் புகழ்பெற்ற ஒரு கண்டம் என்றும் தெரியும். அதன் பிறகு 'கங்காரு'வைப் பற்றித் தெரியும். அவ்வளவுதான்...'' என்றேன்.

''உங்கள் இந்தியாவையும், பாகிஸ்தானையும் சேர்த்து, அதைப் போல் இரண்டு பங்கு பரப்புள்ள தேசம் எங்கள் ஆஸ்திரேலியா. ஆனால், இதில் உபயோகமுள்ள பகுதி மிகவும் குறைவு. ஆங்கிலேயர்கள் எங்கள் நாட்டை 'வெயில் நிறைந்த நாடு' என்று போற்றுவார்கள். கிறிஸ்துமஸ் படங்களில் மேலே நாடுகளில் பனி மூடிய வீடுகளையும், போட்டோக்களையும் பார்த்திருப்பீர்களே, எங்கள் நாட்டில் அப்படி இருக்காது. கிறிஸ்துமஸ், கடும் வெயில் காலத்தில்தான். இவ்வளவு பெரிய எங்கள் நாட்டின் ஜனத்தொகை என்ன தெரியுமா? மொத்தம் ஒன்னேகால் கோடிதான்'' என்றார்.

இதைக் கேட்டதும் நான் சிரித்தேன்.

''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

''உங்கள் நாட்டின் ஜனத்தொகை, நாங்கள் ஒவ்வொரு ஆண்டும் உருவாக்கும் மக்கள் தொகை. 'ஆண்டுக்கு ஒரு ஆஸ்திரேலியாவை நாங்கள் சேர்த்துக் கொண்டிருக்கிறோம்' என்று தமாஷாகச் சொல்வோம். அது நினைவுக்கு வந்தது, சிரித்தேன்'' என்றேன்.

''எங்கள் நாட்டைப் பற்றிச் சொன்னேன். உங்கள் நாட்டைப் பற்றிச் சொல்லுங்கள்......'' என்றார் டான்.

''எங்களைப் பற்றி உங்களுக்கு என்ன தெரியும்?'' என்றேன் நான்.

''நத்திங் மச்! ஐம்பது கோடி மக்களை ஒரு பெண்மணி ஆள்கிறார், அவர் மிகவும் திறமை வாய்ந்தவர் என்று தெரியும். இதைத் தவிர வேறொன்றும் தெரியாது. உங்கள் நாட்டைவிட, உங்கள் 'இந்து' மதத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள ஆசை உண்டு. அதைப் பற்றிச் சொல்லுங்களேன்'' என்றார்.

''இந்து மதத்தைப் பற்றியா? அவ்வளவு எளிதில் அதைப் பற்றிச் சொல்லிவிட முடியாதே!'' என்றேன்.

''எங்கள் நாட்டைப் பற்றி ஓரிரு வார்த்தைகளில் நான் சொன்னது போல் உங்கள் மதத்தைப் பற்றி, அதன் மகத்துவத்தைப் பற்றி ஓரிரு வார்த்தைகளில் சொல்லுங்களேன்'' என்றார்.

'இதென்னடா சோதனை...... பெரிய பெரிய தத்துவ ஞானிகளிடம் கேட்க வேண்டிய கேள்வியை என்னிடம் கேட்டு விட்டாரே இவர்' என்று தயங்கினேன்.

''இந்து மதம் மற்ற மதங்களைப் போன்றதல்ல. மனிதன் மனிதனாக வாழ சில நெறிமுறைகளை வகுத்துத் தந்திருக்கும் ஒரு வழிமுறை அது. அதை ஒரு மதம் என்று சொல்வதை விட, வாழ்க்கை விஞ்ஞானம் (Science of Living) என்று சொல்லலாம். எங்கள் மதம் சொல்லும் மகத்தான உண்மை ஒன்று உண்டு. 'இல்லாததை நம்மால் உருவாக்க முடியாது, இருப்பதை நம்மால் அழிக்க முடியாது.' புரிகிறதா?'' என்றேன்.

நான் சொன்னதையே திரும்பத் திரும்ப சொல்லிவிட்டு, ''யெஸ்... நம்மால் எதையும் உருவாக்க முடியாதுதான்; அழிக்கவும் முடியாது தான்......'' என்றார்.

தொடர்ந்து அதே ரீதியில் கேள்வி கேட்டு நம்மைத் தவிக்க வைக்கப் போகிறாரே என்ற அச்சத்தில், பேச்சை மாற்றினேன் நான்.

''நீங்கள் அடிக்கடி எந்த நாட்டிற்குப் போகிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''ரங்கூன் எனக்கு மிகவும் பழகிய நகரம். அந்த நாட்டைப் பார்த்து விட்டு உங்கள் நாட்டை நினைத்தால், சொர்க்கம்தான் ...... ரங்கூனில் பாதி தொழிற்சாலைகள் மூடப்பட்டுக் கிடக்கின்றன......'' என்றார்.

பேசிக் கொண்டே, டான் ஸீடன் ஆறேழு 'கிளாஸ்' விஸ்கி அருந்தி விட்டார். தூக்கம் அவருக்குக் கண்களைச் சுற்றியது.

'குட் நைட்' என்று கூறி, கறுப்புக் கண்மூடியையும், கால் உறையையும் அணிந்து கொண்டு, சீட்டில் அப்படியே சாய்ந்து கொண்டு விட்டார்.

நான் எட்டாவது 'சானலை'த் திருப்பினேன். 'நினைத்தால் நான் வானம் சென்று' பாலசுப்பிரமணியம்—சுசிலா குரலினிமை எழுந்தது. இன்னிசையில் நானும் கண்ணை மூடினேன்.

முதல் நாள் இரவு எட்டரை மணிக்கு சிங்கப்பூரில் விமானத்தில் ஏறிய நான், மறுநாள் காலை எட்டரை மணிக்குத்தான் (ஆஸ்திரேலியா நேரம்) ஸிட்னி நகர விமான நிலையத்தில் இறங்கினேன்.

வளர்ந்துவிட்ட எல்லா நாட்டு விமான நிலையங்களைப் போலத்தான், அதுவும் பிரமாண்டமாக இருந்தது. வழக்கப்படி, இமிக்ரேஷன், கஸ்டம்ஸ் பகுதிகளைக் கடந்தேன்.

கஸ்டம்ஸ் சோதனை மிகவும் சுலபமாக இருந்தது.

'டிக்ளேர் செய்ய உங்களிடம் ஏதாவது இருக்கிறதா? இந்த இந்த அயிட்டங்கள் கொண்டு வந்திருக்கிறீர்களா?' என்று ஒரு காகிதத்தை நீட்டிக் கேட்கிறார்கள். 'இல்லை' என்று சொன்னால், நம்மை நம்பி, வெளியே அனுப்பி விடுகிறார்கள். சந்தேகக் கண்கொண்டு பார்ப்பதும், சந்தேகத்துடன் பெட்டிகளைச் சோதனை செய்வதும் இல்லை.

''உணவுப் பொருள்கள் ஏதாவது இருக்கிறதா?'' என்று ஒரு கேள்வி.

என்னிடம் பருப்புப் பொடியும், எலுமிச்சங்காய் ஊறுகாயும் இருந்தது. அதை நான் எடுத்துக் காட்டினேன்.

''என்ன இது?'' என்று கேட்டார்கள்.

''என் உணவுக்குத் தேவையான பொருள்கள்......'' என்று கூறி, ''நான், வெஜிடேரியன், எனக்கு இவை தேவை. எனவே, இவற்றை எடுத்துக் கொண்டு போக அனுமதி கொடுக்க வேண்டும்......'' என்றேன்.

''சட்டம் இடம் தரவில்லை. இருந்தாலும் உங்கள் நிலைமை எனக்குப் புரிகிறது. எடுத்துக் கொண்டு போங்கள். என்ஜாய் யுவர்செல்ப்...... (Enjoy yourself)'' என்றார்கள்.

என்னைத் தன் வீட்டிற்கு அழைத்துப் போக, 'ஷெல்' நிறுவனத்தில் பணியாற்றும் ராமானுஜம், விமான நிலையத்திற்கு வந்திருந்தார். அவரைத் தவிர, ஆஸ்திரேலியாவில் என்னைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பை ஏற்றிருந்த, 'ரெப்கோ' நிறுவனத்தாரின் பிரதிநிதியான மெக்கால்லேன் என்ற ஆஸ்திரேலிய நண்பரும் விமான நிலையத்திற்கு வந்திருந்தார். சிறிது நேரம் உரையாடி விட்டு, ராமானுஜத்தின் வீட்டிற்குப் புறப்பட்டோம்.

வண்டியை ஓட்டிக் கொண்டே, ''கஸ்டம்ஸில் ஏதாவது பிராப்ளம் இருந்ததா?'' என்று கேட்டார் ராமானுஜம்.

''இல்லை'' என்று கூறி, பருப்புப் பொடி விஷயத்தை விளக்கினேன்.

''எனக்கும் இதே போல் ஒரு அனுபவம். இந்த நாட்டிற்குள் புதிய ஷூக்கள், கம்பளி, லினன் போன்றவற்றைக் கொண்டு வரக்கூடாது என்று சட்டம். நான் கொண்டு போயிருந்தேன். கஸ்டம்ஸ் அதிகாரியிடம், 'நான் இங்கு ஒரு வருஷம்தான் தங்கப் போகிறேன். இவற்றை இங்கே வாங்க என்னிடம் பணம் கிடையாது. இவை இல்லாமல் என்னால் இருக்கவும் முடியாது......' என்றேன். என் நிலைமை அந்த ஆஸ்திரேலிய அதிகாரிக்குப் புரிந்தது. 'ஓகே! என்ஜாய் யுவர்செல்ப்' என்று கூறி அனுப்பி விட்டார். இவர்களுக்கு சட்டத்தின் எழுத்து முக்கியமல்ல, அதன் கருத்துதான் முக்கியம். (Not the letter of the Law-But the Spirit of the Law). அத்துடன், ஸ்தலத்தில் இருக்கும் அதிகாரிக்கு எந்தவித முடிவும் எடுக்க அதிகாரம் உண்டு. நிலைமைக்கு ஏற்ப அவர் முடிவெடுப்பார். நம் நாட்டைப் போல் ஒவ்வொன்றுக்கும் மேலதிகாரியின் உத்தரவை எதிர்பார்க்க வேண்டிய அவசியம் இல்லை அவருக்கு. கஸ்டம்ஸில் மட்டுமல்ல, ஆஸ்திரேலியாவில் எல்லா இடங்களிலும் இந்தத் தன்மையைக் காணலாம். இந்த தேசத்தின் மகோன்னத வளர்ச்சிக்கு இந்த விஷயம் ஒரு முக்கிய காரணம் என்று நான் கருதுகிறேன்'' என்றார்.

வண்டி ஸிட்னி நகரின் பிரதான வீதிகளில் நுழைந்து சென்று கொண்டிருந்தது.

நான் ஆஸ்திரேலிய மண்ணை நன்றாக நுகர்ந்தேன்.

# 2

மிஸ்டர் 'மிக்'

நான் ஆஸ்திரேலியாவை அடைந்தவுடன் முதலில் செய்ய நினைத்த காரியம் ஒன்றுதான். எப்படியாவது ஸர். டான் பிராட்மெனைச் சந்தித்து விடவேண்டும் என்பதில் மிகவும் துடிப்பாக இருந்தேன். எனவே, எல்லோரிடமும் பிராட்மெனைப் பற்றி விசாரிக்க ஆரம்பித்தேன்.

''பிராட்மென் எங்கிருக்கிறார்? அவரைச் சந்திக்க வேண்டுமே! சந்திக்க முடியுமா? சிறு வயதிலிருந்து எனக்கு அவர்மீது அலாதியான பற்று உண்டு. எப்பாடு பட்டாவது அவரைச் சந்தித்தேயாக வேண்டும்'' என்று எனது ஆஸ்திரேலிய பயணத் திட்டத்தை உருவாக்க உதவிக் கொண்டிருந்த 'ரெப்கோ' நிறுவனத்தைச் சேர்ந்த திரு. மெக்கால்ஸேன் அவர்களிடம் கேட்டேன்.

எனது துடிப்பைக் கண்டு சற்றே வியப்படைந்த மெக்கால்ஸேன், ''அவர் எங்கிருக்கிறார் என்று கண்டுபிடிக்க முயல்கிறேன்...'' என்றார்.

''என்ன சார் இது? டான் பிராட்மென் விலாசம் தெரியாது என்கிறீர்களே! ஆச்சரியமாக இருக்கிறதே...!'' என்றேன் நான்.



''இதில் என்ன ஆச்சரியம்? பிரர்ட்மென் ஈஸ் ஜஸ்ட் எ பெர்ஸன் (Bradmen is just a person). அவரைப் பற்றிய விவரங்கள் தெரிய வேண்டுமானால், ஏதாவது பத்திரிகையின் ஸ்போர்ட்ஸ் பிரிவுடன் தொடர்பு கொள்ளலாம். அவர்கள் அவரைப் பற்றிய தகவலை வைத்திருப் பார்கள்'' என்றார்.

பிறகு, ''பிராட்மென் இருக்கட்டும், ஆஸ்திரேலியாவில் நீங்கள் எங்கெல்லாம் போக விரும்புகிறீர்கள்...?'' என்று கேட்டார்.

''முடிந்தவரை எல்லா இடங்களையும் பார்க்க வேண்டும்'' என்றேன்.

மெக்கால்ஸேன் சிரித்தார். பின்னர் ''இது மிகப் பெரிய நாடு. ஒரு கோடியில் பெர்த் நகரம், இன்னொரு கோடியில் ஸிட்னி, மேலே பிரிஸ்பேன். ஒவ்வொரு நகரத்திற்கும் இடையே ஆயிரக்கணக்கான மைல்கள். எனவே, இருக்கும் நாட்களுக்குள் நீங்கள் ஏதாவது ஒரு பகுதியை நன்றாகப் பாருங்கள், போதும்'' என்றார்.

''சரி, நீங்களே திட்டம் போட்டுத் தாருங்கள்'' என்றேன்.

ஸிட்னி, மெல்போர்ன், கான்பெரா ஆகிய நகரங்களைப் பார்ப்பதாக வும், திரும்பிப் போகும்போது, 'பெர்த்'தைப் பார்க்கலாம் என்றும் ஏற்பாடாயிற்று. டெலிபோன் மூலமாகவே எல்லா ஏற்பாடுகளையும் செய்து முடித்தார் மெக்கால்ஸேன்.

'வென்ட்வொர்த்' (Wentworth) என்ற பிரபலமான ஒட்டலில் தான் எனக்கு இடம் ஏற்பாடு செய்திருந்தார்கள். ஸிட்னி நகரில் என்னைச் சந்தித்த இந்திய நண்பர்கள் ''நீங்கள் எங்கே தங்கி யிருக்கிறீர்கள்?'' என்று என்னைக் கேட்டபோது, நான் ''வென்ட்வொர்த்'' என்று பதில் சொன்னவுடன், அவர்கள் புருவங்கள் உயர்ந்ததிலிருந்தும், ''வென்ட் வொர்த்தா......அங்கேதான் விண்வெளி வீரர்கள் தங்கினார்கள்'' என்று அதிசயத்துடன் சொன்னதிலிருந்தும், 'நாம் மிகப் பெரிய ஒட்டலில்தான் தங்கிக் கொண்டிருக்கிறோம் போலிருக்கிறது' என்ற உணர்வினை நான் பெற்றேன்.

நண்பர் ராமாநுஜத்தின் வீடு, ஸிட்னி நகரிலிருந்து பதினைந்து மைல்கள் தள்ளி 'வெஸ்ட்ரைட்' (Westryde) என்ற இடத்தில் இருந்தது. வென்ட்வொர்த் ஒட்டலிலிருந்து அங்கே சென்றுவர ஆறு அல்லது ஆறரை ஆஸ்திரேலியன் டாலர்கள் எனக்குச் செலவாகும். (அதாவது ஐம்பது ரூபாய்க்கு மேல்.) ராமாநுஜத்தின் வீட்டிற்கு எதற்காகப் போக வேண் டும் என்று கேட்கிறீர்களா? அங்கேதான் எனக்குத் தேவையான சாப்பாடு கிடைத்தது. ஆனாலும் ஒரு வேளைச் சாப்பாட்டிற்கு ஐம்பது ரூபாய் செலவழிக்க முடியாத காரணத்தால், 'ஸிட்னி' நகரில் இருந்தபோது ஒன்று விட்டு ஒரு நாள்தான் நான் உணவருந்தினேன்.

என்னுடைய பயணத் திட்டத்தை வகுத்துக் கொடுத்துவிட்டு, ''கொஞ்சம் ஒய்வெடுத்துக் கொள்ளுங்கள். மாலையில் சந்திக்கிறேன்...'' என்று கூறி என்னிடம் விடை பெற்றார் மெக்கால்ஸேன்.

அவர் வெளியேறிய பிறகு, அறையிலிருந்த சுகமான கட்டிலில் சாய்ந்து கொண்டேன். அடுத்த நிமிஷம், பிராட்மென் நினைவு மீண்டும் வந்துவிட்டது எனக்கு.

'ஒரு சாதாரணப் பிரஜை என்றல்லவா பிராட்மெனைச் சொல்லிவிட்டார் இவர்' என்ற எண்ணம் எழுந்தது. எனக்குத் தெரிந்த எல்லோருக்கும் 'போன்' செய்து, பிராட்மெனைப் பற்றி விசாரித்தேன். எல்லோரும் ஏறத்தாழ அதே கருத்தைத்தான் சொன்னார்கள்.

''இந்த நாட்டிலேயே 'ஹீரோ ஒர்ஷிப்' (Hero Worship) குறைவு. ஒவ்வொருவர் ஒவ்வொரு துறையில் சிறந்து விளங்குகிறார்கள். அந்தச் சிறப்புக்கு மக்களிடம் அவ்வப்போது பாராட்டுப் பெறுகிறார்கள். அவ்வளவுதான். அர்த்தமில்லாத, கண்மூடித்தனமான 'ஹீரோ ஒர்ஷிப்' ஒரு தேசத்தையே கெடுத்து விடும்'' என்று என்னிடம் விளக்கினார் கிரிப்பித் என்ற ஆஸ்திரேலிய நண்பர்.

சிறிது யோசித்துப் பார்த்தேன்: 'உண்மைதான்! நம் நாட்டைத்தான் இந்த 'ஹீரோ ஒர்ஷிப்' எந்த அளவுக்குக் கெடுத்திருக்கிறது!'

விவேகம் தலை தூக்கியபோதும், என் ஆசையைக் கட்டுப்படுத்த முடியவில்லை! எப்படியும் பிராட்மெனைச் சந்தித்துவிட வேண்டும் என்ற முடிவுடன், 'டெய்லி டெலிகிராப்' என்ற பத்திரிகையின் விளையாட்டு இலாகாவுடன் டெலிபோனில் தொடர்பு கொண்டு, ''பிராட்மென் எங்கு தங்கியிருக்கிறார்?'' என்று விசாரித்தேன்.

என்னுடன் டெலிபோனில் பேசியவர் ஒரு பெண்மணி. என்னைப் பற்றிய விவரங்களையும், என் வேண்டுகோளையும் கவனமாகக் கேட்டுவிட்டு, ''மிஸ்டர் மணியன், உங்கள் டெலிபோன் எண்ணைக் கொடுங்கள். நான் விசாரித்து போன் செய்கிறேன்...'' என்று இனிமையாகப் பதில் சொன்னார்.

அடுத்த பத்து நிமிஷத்திற்குள் அவரிடமிருந்து போன் கால் வந்தது. அவர் குரலில் இருந்த இனிமை, குழைவு, பண்பு எல்லாம், 'இவரிடம் இன்னும் கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருக்க மாட்டோமா?' என்ற ஆவலைத்தான் என்னிடம் ஏற்படுத்தியது. அவர் மட்டுமல்ல, ஆஸ்திரேலிய நாடு முழுவதிலும் டெலிபோனில் பேசும் எல்லோரிடமும் இந்த உயர்ந்த பண்பு இருப்பதைக் கவனித்தேன்.

'டெய்லி டெலிகிராப்' பெண்மணி சொன்னார்: ''மிஸ்டர் மணியன், நீங்கள் கேட்டவுடன் பதில் சொல்ல முடியாமைக்கு மன்னிக்க வேண்டுகிறேன். பிராட்மென் இருக்குமிடம் அடிலெய்ட்! இப்போது அவருடைய விலாசம்...'' என்றவர் ஒரு கணம் நிறுத்தி, ''உங்களிடம் பேப்பர் பென்சில் இருக்கிறதா? இருக்காது என்று நினைக்கிறேன். எடுத்துக் கொள்ளுங்கள், அதுவரை நான் காத்திருக்கிறேன்...'' என்று கூறி, நான் 'ஒகே' என்று கூறிய பிறகு, நிதானமாக அந்த விலாசத்தை ஒவ்வோர் எழுத்தாகக் கூறிவிட்டு, ''இன்னும் ஏதாவது தேவையானால் ஃபீல் ஃப்ரீ டு ஆஸ்க் அஸ்...'' என்றார்.

அவர் பேசிய தோரணை, முறை எல்லாம் என்னை மிகவும் கவர்ந்தது. அவர் மூலம் அந்தப் பத்திரிகையைப் பற்றிய என் எண்ணமே உயர்ந்தது.

'ஒரு ஸ்தாபனத்தின் முதல் பொது ஜனத்தொடர்பு அதிகாரி டெலிபோன் ஆபரேடர்தான்' என்ற கருத்தை, ஆஸ்திரேலிய நாட்டில் பலரும் என்னிடம் கூறினார்கள். ரெப்கோ நிறுவனத்தார் டெலிபோன் கர்ட்டஸி ட்ரெயினிங் (Telephone Courtesy Training) என்ற ஒன்றை நடத்துகிறார்கள். 'கௌரவத்திற்காகவும் லாபத்திற்காகவும் டெலிபோன் செய்தல்' (Phoning for Prestige and Profit) என்ற துண்டுப் படமும் அவர்களிடம் இருக்கிறது. 'டெலிபோன் செய்தல், டெலிபோன் பேசுதல்' (Making Calls, Taking Calls) என்ற இரு பகுதிகள் அதில் உள்ளன. அதைப் படித்தபோது நம் நாட்டிலும் அந்த முறையை ஏன் கையாளக் கூடாது என்றுதான் எனக்கு எண்ணத் தோன்றியது.

அதில் கீழ்க்கண்ட அரிய யோசனைகள் வழங்கப்பட்டிருந்தன :

Respond promptly, armed with pad and pencil, give company name, department, your name.

Be pleasant, friendly and smile.

If not available arrange to ring back.

Get the full story in a friendly and interested way.

Confirm that you are listening and indicate you understand.

Advise the action you will take and convey a genuine desire to be helpful.

Say "Goodbye" pleasantly and let the caller hang up first.

"சூயிங்கம் மெல்பவர்களை டெலிபோன் அருகில் கூட விடக்கூடாது" என்று கடைசியில் குறிப்பிட்டிருந்தார்கள்.

நம் ஊரில், வெற்றிலை, பாக்கு, புகையிலை போட்டுக் கொள்பவர்களை டெலிபோன் ஆபரேடர் வேலைக்கு அமர்த்தக் கூடாது என்று சட்டம் போட்டால் கூடத் தேவலை என்று எனக்குத் தோன்றுகிறது. வாய் நிறைய புகையிலையைக் குதப்பிக் கொண்டு, என்ன பேசுகிறார் என்று அவருக்கும் புரியாமல், நமக்கும் புரியாமல் குழப்பும்போது, நம்மில் எவ்வளவு பேர் எரிச்சல் பட்டிருக்கிறோம்?

அந்நியச் செலாவணியோ, பெர்மிட்டோ, லைசென்ஸோ இல்லாமல் வெளிநாட்டிலிருந்து நாம் கற்றுக் கொள்ளக்கூடிய விஷயமாக இது எனக்குத் தோன்றியது.

## 23, 24, 25, 26, 27.

ஒவ்வொரு 'ஸெண்ட்'டாக டாக்ஸி மீட்டர் ஏறிக் கொண்டிருந்தது. நம் ஊர் டாக்ஸிகளில் பத்து பத்து பைசாவாகத்தானே மீட்டர் ஏறும்! ஆஸ்திரேலியாவில் ஒவ்வொரு 'ஸெண்ட்'டாக ஏறியது. விஷம் போல் வேகமாக ஏறும் மீட்டரையே கவனித்துக்கொண்டு, 'வெஸ்ட்ரைட்' பகுதியில் உள்ள, நண்பர் ராமாநுஜம் வீட்டிற்குப் போய்க் கொண்டிருந்தேன் நான்.

டாக்ஸி டிரைவர் ஓர் இளைஞர். ஒய்யாரமாக 'சூயிங்க'த்தை மென்றுகொண்டே மிக அலட்சியமாக வண்டியை ஓட்டிக் கொண்டிருந்தார் அவர். திடீரென்று என் பக்கம் திரும்பிய அவர், ''மிஸ்டர், உங்கள் கை ஜாக்கிரதை'' என்றார்.

நான் கையைப் பார்த்துக் கொண்டேன்; சரியாகத்தான் இருந்தது. எனவே, ''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று புரியாமல் கேட்டேன்.

''உங்கள் கையை உள்ளே வையுங்கள். கதவுக்கு வெளியே கை இருக்கக் கூடாது. உடம்பு முழுவதும் காருக்கு உள்ளே இருக்க வேண்டும். அத்துடன் 'ஸீட் பெல்ட்'டும் போட்டுக் கொள்ள வேண்டும். நீங்கள் மிக ஸ்டைலாக முழங் கையை வெளியே நீட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்கிறீர்கள். நீங்கள் அப்படி உட்கார்ந்தால், எனக்கு இருபத்தைந்து டாலர் 'ஃபைன்' விழும்... உங்களால் நஷ்டம் எனக்கு'' என்றார்.

நான் கையை உள்ளே இழுத்துக் கொண்டே, ''நல்ல வேளை, கையை அப்படி வைத்துக் கொண்டால் எனக்கு நஷ்டம் ஒன்றும் இருக்காதே...'' என்றேன் தமாஷாக.

''சொல்ல முடியாது; பெரிய நஷ்டம் ஏற்படலாம்'' என்றார்.

''பெரிய நஷ்டமா?''

''ஆமாம். நீங்கள் உங்கள் கையையே இழக்க நேரிடலாம். இந்த ஊரில் கார்கள் மிக வேகமாக, அருகருகே ஓடும். பக்கத்தில் வரும் ஒரு கார்க்காரர் உங்கள் முழங்கை'சில்'லை உடைத்து எடுத்துக்கொண்டுபோய் விடுவார். அது பெரிய நஷ்டமில்லையா?'' என்றார் சிரித்துக்கொண்டே.

நானும் சிரித்தேன். 'உடல் முழுவதும் காருக்குள் இருக்க வேண்டும்' என்பது அந்த நாட்டுச் சட்டம் என்றும் தெரிந்து கொண்டேன். அது நல்ல சட்டமாக எனக்குத் தோன்றியது.

''நீங்கள் ரொம்ப வருஷமாக டாக்ஸி ஓட்டுகிறீர்களோ?'' என்று கேட்டேன்.

''இல்லை. இரண்டு வருஷம்தான் ஆகிறது...'' என்றவர், வண்டியை ஓர் ஓரமாக நிறுத்தி, 'வரைபடம்' (Road Map) ஒன்றை எடுத்து, 'வெஸ்ட்ரைட்' எங்கிருக்கிறது என்று பார்க்க ஆரம்பித்தார். மேலை நாடுகளில் இத்தகைய வரைபடங்கள் மிகவும் சகஜம். பெரிய வீதிகள், சிறிய தெருக்கள், பகுதிகள் எல்லாவற்றையும் விளக்கி, மிகத் தெளிவாக ஒரு புத்தகம் போட்டிருப்பார்கள். அதன் உதவியுடன், வெகு சுலபமாக எந்த இடத்தையும் கண்டுபிடித்து விடலாம். (மந்தவெளிப்பாக்கம், இந்திராநகர் போன்ற இடங்களில் சில நண்பர்களின் வீடுகளைத் தேடும் போது, அப்படி ஒரு வரைபடப் புத்தகத்தை நாமும் போட்டால் என்ன என்று எனக்குத் தோன்றும். சென்னையில் யாரேனும் ஒருவர் இந்தப் பணியைச் செய்ய முன்வந்தால், வியாபார ரீதியாகக் கூட அது நல்ல பலனைத் தரலாம்.)

நான் அப்போதிருக்கும் இடத்திலிருந்து 'வெஸ்ட்ரைட்' இருக்கும் பக்கத்தைப் புரிந்து கொண்டு, மீண்டும் வண்டியை ஸ்டார்ட் செய்தார் அவர்.

''உங்கள் பெயர் என்ன?'' என்று கேட்டேன் அவரை.

''மிக்...'' என்ருர்.

''முழுப் பெயர்...?''

''மிக் அமென்டோலியா (Mick Amendolia). என்னுடைய எண் 1418...'' என்ருர்.

''சொந்த டாக்ஸியா?''

''சொந்தம் மாதிரி. நானும் என் பிரதரும் சேர்ந்து, கஷ்டப்பட்டு வாங்கியிருக்கிருேம்...''

''இந்த ஊரில் டாக்ஸி வாங்குவது கஷ்டமா என்ன?''

''கார் வாங்கி விடலாம். அது மூவாயிரம் டாலர்தான். ஆனுல், டாக்ஸி நம்பர் வாங்குவது கஷ்டம். ஒரு நம்பர் வாங்க 15000, 20000 டாலர் கூடச் செலவாகும்.''

''நம்பரா, புரியவில்லையே...?''

''இவ்வளவு டாக்ஸிகள்தான் ஓடலாம் என்று சர்க்கார் முடிவு செய்திருக்கிருர்கள்,அவ்வளவு நம்பர் பதிவு செய்திருக்கிருர்கள். எனவே, யாராவது அந்த நம்பரை விற்க வந்தால்தான், புது டாக்ஸி போடலாம். பல பழைய டிரைவர்கள் அதை வாங்கப் போட்டி போடுவார்கள். எனவே நம்பரின் விலை ஏறிக் கொண்டே போகும். நான் சொல்வது உங்களுக்குப் புரிகிறதா?'' என்ருர்.

''புரிகிறது...'' என்று கூறிவிட்டு, ''டாக்ஸி ஓட்டி மாதம் எவ்வளவு சம்பாதிக்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''அதிகமாக உழைத்தால், அதிகமாகச் சம்பாதிக்கலாம். சில சமயம் வாரம் 500 லிருந்து 750 டாலர் வரை கூடச் சம்பாதிப்பேன். ஆயிரம் கிடைக்கும் வாரமும் உண்டு. என் தகப்பனுர் மீன் வியாபாரி. 'நீ என்னடா வண்டி ஓட்டிப் பிழைக்கிருய்? மீனில் இதைவிட அதிகப் பணம் உண்டு' என்கிருர். இந்தத் தொழில் முன்மாதிரி இல்லை. நிறைய கிரேக்க நாட்டு மக்கள் எங்களுக்கு இதில் போட்டியாக வந்துவிட்டார்கள். எங்கள் நாட்டில் இந்த 'இமிக்ரன்ட்ஸ்'தான் பெரிய பிரச்னை. கண்டவர்கள் வந்து, எங்கள் பிழைப்பைக் கெடுக்கிருர்கள்... சர்க்கார் இதைப் பற்றிக் கவனிக்க வேண்டும்'' என்றவர், ''அது சரி, நீங்கள் ஏன் இதையெல்லாம் கேட்கிறீர்கள்? நீங்கள் யார்?'' என்ருர்.

நான் என்னைப் பற்றிக் கூறினேன்.

''ஓ!'' என்றவர், ''ஹேய்... என் வருமானத்தைப் பற்றியெல்லாம் உங்கள் பத்திரிகையில் எழுதிவிடாதீர்கள்... இந்த இன்கம்டாக்ஸ் காரர்கள் நம்மைத் தொல்லைப்படுத்தி விடுவார்கள். அடுத்த பிப்ரவரியில் கல்யாணம் பண்ணிக் கொள்ளலாம் என்றிருக்கிறேன். அந்த வேளையில் தொல்லை வேண்டாம்...'' என்று கூறி 'ஹோ...ஹோ'வென்று சிரித்தார்.

'சரிதான். இன்கம்டாக்ஸ்காரர்களைக் கண்டு உலகில் எல்லோருமே பயப்படுகிருர்கள் போலும்' என்று எண்ணிக் கொண்டேன் நான்.

'வெஸ்ட்ரைட்'டில் ராமாநுஜம் வீட்டில் என்னை விட்டுவிட்டுப் புறப்படும்போது, மீண்டும் ஒரு முறை இன்கம்டாக்ஸ் விவகாரத்தையே நினைவுபடுத்திவிட்டுப் போனுர் மிக்.

# 3

'நாகரிக' ஆஸ்திரேலியர்கள்!!

ரிசர்வ் பாங்க் கட்டடத்தின் அருகில் ஏகக் கூட்டம்.

அங்கிருந்துதான், ஸிட்னி நகரைச் சுற்றிக் காட்டும் பஸ்கள் பல புறப்படவிருந்தன. இரண்டு மணி நேர டூர், அரை நாள் டூர், முழு நாள் டூர் என்று பல பஸ்கள். அவற்றில் பயணம் செய்ய, போட்டி போட்டுக் கொண்டு கூட்டம்.

நான் அரை நாள் 'டூர்' போகத் தீர்மானித்தேன். டிக்கெட்டுக்காகக் காத்திருந்தபோது, அந்தக் கூட்டத்தைக் கவனித்தேன். ஆணுக்கும் பெண்ணுக்கும் வித்தியாசம் தெரியாத ஒரு பெரும் கூட்டம் அங்கே கூடியிருந்தது.

நீண்ட தலைமுடியுடன் (நமது பாகவதர் கிராப் போல்) 'தொள தொள'வென்று டிரஸ் போட்டுக் கொண்டு கையில் ஒரு குழந்தையுடன் தொய்ந்து நின்ற ஒரு கணவரும், அழகாகக் கிராப் செய்து கொண்டு, 'டைட்' பாண்ட் ஷர்ட் அணிந்து கம்பீரமாக நின்ற ஒரு மனைவியையும் கண்டேன். நீண்ட தலைமுடி, பெரிய கிருதா, தொள தொள



1098

சட்டை, அலட்சியப் பார்வை, வாயில் சூயிங்கம்...... இப்படித்தான் பெருவாரியானவர்கள் காணப்பட்டனர். இதுதான் ஆஸ்திரேலியாவின் இன்றைய நாகரிகம்.

'பயனீர் டூர்ஸ்' பஸ் புறப்பட்டது. அந்த பஸ்ஸில் என்னைத் தவிர, எல்லோருமே வெள்ளைக்காரர்கள். ஆஸ்திரேலியாவின் மற்ற பகுதிகளி லிருந்தும், அமெரிக்காவிலிருந்தும் பலர் வந்திருந்தனர்.

வழக்கப்படி 'கைடு', பேச்சில் வல்லவராக இருந்தார்.

எங்கள் பஸ் சென்ற பாதையில் இருந்த பெரிய பெரிய கட்டடங் களைப் பற்றியெல்லாம் விளக்கிக் கொண்டே வந்தார். நகரில் எங்கு பார்த்தாலும் புல்வெளிகள் தென்பட்டன. 'விரிந்து பரந்த நிலப்பரப்பு, ஆங்காங்கே பூங்காக்கள், நிறைய கடற்கரைகள்......' இதுதான் ஸிட்னி.

''இப்போது நாம் மிகப் பழைய மாதா கோயில் ஒன்றைக் கடந்து கொண்டிருக்கிறோம், 1842-ல் கட்டியது. ப்ளீஸ் நோட், 1842!'' என்று அந்த ஆண்டை அழுத்திச் சொன்னார் கைடு.

'ஆங்' என்று ஆச்சரியத்துடன் அந்தக் கட்டடத்தைப் பார்த் தார்கள் பலர்.

ஆமாம்! ஆஸ்திரேலியர்களைப் பொறுத்தவரை, 1842 மிகப் பழமை யான காலம்தான்!

பஸ் ஆங்காங்கே நிற்கும். எல்லோரும் கீழே இறங்கி, இயற்கையை அனுபவிப்பார்கள். போட்டோ எடுப்பார்கள், 'பாப்கார்ன்' சாப்பிடுவார்கள்.

பஸ் நின்ற இடங்களிலெல்லாம் எல்லோரும் இறங்கியபோதும், என் அருகில் அமர்ந்திருந்த ஒரு பெண் மட்டும் இறங்கவே இல்லை. இரண்டு மூன்று 'ஸ்டாப்பிங்'கிற்குப் பிறகு நான் துணிந்து, ''நீங்கள் ஏன் இறங்கிப் பார்க்கவில்லை?'' என்று கேட்டேன்.

''நான் ஸிட்னிவாசி. எனக்கு இதெல்லாம் அலுத்துப்போன விஷயங்கள்'' என்றார்.

''அப்படியானால்...''

''என் நண்பர் ஒருவருக்காக வந்தேன்'' என்றார்.

பஸ் அடுத்த இடத்தில் நின்றபோது, நானும் இறங்கவில்லை.

''நீங்கள் ஏன் இறங்கவில்லை?'' என்று என்னைப் பார்த்துக் கேட்டார் அவர்.

''திரும்பத் திரும்பக் கடற்கரைதான். எத்தனை முறை பார்ப்பது?'' என்றேன்.

''எங்கள் ஸிட்னி அதற்குத்தான் புகழ் பெற்றது. எங்கள் நாட்டு மக்களே விடுமுறைப் பிரியர்கள். எப்போதடா ஓய்வுநாள் வரும் என்று

காத்திருப்பார்கள். வந்தவுடன் குழந்தை குட்டிகளை அழைத்துக் கொண்டு, கடலில் நீந்தப் புறப்பட்டு விடுவார்கள்'' என்றவர், ''பஸ் அடுத்த ஸ்டாப்பில் நிற்கும்போது கண்டிப்பாக இறங்குங்கள். அது புகழ் பெற்ற மான்லி (Manly) பீச்'' என்றார்.

அவர் சொன்னபடி, மான்லி பீச்சில் இறங்கி, கரையை நெருங்கினேன். எனக்கு என்னை நினைத்து மிகவும் வெட்கமாகப் போய்விட்டது. அந்த வட்டாரத்தில் முழுமையாக உடை அணிந்த ஒரே ஆளாக நான் இருந்ததுதான், என் வெட்கத்திற்குக் காரணம்.

மீண்டும் பஸ்ஸில் என் இடத்திற்கு நான் வந்தபோது, ''ஹௌ டு யூ லைக் தி பீச்?... இந்த மாதிரி உங்கள் ஊரில் இருக்கிறதா?'' என்று கேட்டார், என் பக்கத்து ஸீட் பெண்.

நான் பதில் சொல்லவில்லை; சிரித்தேன்.

''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்றவர், ''ஐ யாம் ஸாரி. என்னை நான் அறிமுகப்படுத்திக் கொள்ளாமலேயே பேசுகிறேனே... என் பெயர் டஸ்டி பெக் (Dusty Peck). நான் அரசாங்கத்தில் வேலை செய்கிறேன். ரிபாட்ரியேஷன் ஒர்க்... இன்று, மாலை ஷிப்ட்'' என்று, முழுமையாகத் தன்னைப் பற்றிச் சொன்னார்.

நான் என்னைப் பற்றிச் சொல்லிவிட்டு, ''எங்கள் சென்னை கடற்கரை, உலகிலேயே இரண்டாவது பெரிய கடற்கரை......'' என்றேன்.

''ஓ! அப்படியானால் அந்த இடம் அற்புதமாக இருக்கும் என்று சொல்லுங்கள். பூலோக சொர்க்கம் என்று சொல்லுங்கள்...'' என்றவர், ''கடற்கரையை ஒட்டிப் பெரிய பெரிய ஓட்டல்கள் இருக்கின்றனவா? விமான நிலையத்திலிருந்து அங்கே செல்ல 'ஹெலிகாப்டர்' வசதி இருக்கிறதல்லவா?

' ''ஸர்ப் ரைட்' போக வசதிகள் உண்டா? கடற்கரை ஓட்டல்கள் ரொம்பவும் காஸ்ட்லியாக இருக்குமா? 'மோட்டல்'கள் ஏற்பாடு செய்திருக்கிறார்களா? எனக்குப் பிரயாணம் செய்வது ரொம்பப் பிடிக்கும். உங்கள் சென்னை கடற்கரையைப் பற்றி நிறைய சொல்லுங்கள். அடுத்த லண்டன் பயணத்தைச் சென்னை வழியாக வைத்துக் கொள்கிறேன்'' என்று பேசிக்கொண்டே போனார்.

நான் உடனடியாக அவருக்குப் பதில் ஏதும் சொல்லவில்லை. 'எங்கள் கடற்கரை ஓரத்தில் இன்னும் குடிசைகள்தான் இருக்கின்றன. பெரிய ஓட்டல்கள் எதுவும் இல்லை. சர்க்கார் இலாகா கட்டடங்களும், சர்வ கலாசாலைக் கட்டடங்களும் தான் அங்கே இருக்கின்றன......!' என்று கூற விரும்பவில்லை.

''எங்கள் நாடு சமீபத்தில்தான் சுதந்திரம் அடைந்த நாடு. இப்போதுதான் ஒவ்வொன்றாகக் கவனம் செலுத்தி முன்னேறிக் கொண்டு வருகிறோம். எங்கள் கடற்கரையைப் பெரிய 'பிக்னிக் ஸ்பாட்'டாக ஆக்கப் போகிறோம்'' என்று சொல்லி வைத்தேன்.

பஸ் ஓடிக் கொண்டிருந்தது. டிரைவர் விளக்கம் சொல்லிக் கொண்டே வந்தார்:

''இந்தப் பகுதியைக் கவனித்தீர்களா? இங்கே இயற்கை அன்னை சிரிக்கிருள். இந்த இடத்தில் அடுக்கு மாடிக் கட்டடங்கள் கட்டக்கூடாது என்று சட்டமே இருக்கிறது. பணம் இருப்பவர்கள் பெரிய பெரிய கட்டடங்களாகக் கட்டி, இயற்கையைக் கொன்று விடுகிருர்கள். இயற்கை பாதுகாக்கப்பட வேண்டும், மரங்களையும் பசுமைகளையும் அழிக்கக் கூடாது என்பதில் நாங்கள் அதிக அக்கறை செலுத்துகிருேம்'' என்ருர்.

சென்னையில் சாலைகளை விரிவுபடுத்துகிருேம் என்று சொல்லி, பெரிய பெரிய மரங்களை வெட்டி எறியும் காட்சிதான் அப்போது என் நினைவுக்கு வந்தது.

பஸ் ஒரு புதிய குடியிருப்புப் பகுதி வழியாகச் சென்றது. 'கைடு' விளக்கினுர்:

''இது மிக அழகிய குடியிருப்புப் பகுதி. வாடகை கூட மிகக் குறைவு. ஆனல், ஒரே ஒரு தொல்லை. மதுக் கடை (Pub) இங்கிருந்து மிகவும் தள்ளி இருக்கிறது'' என்ருர். இதைக் கேட்டதும் பஸ்ஸிலிருந்த அனைவரும் 'கொல்'லென்று சிரித்தார்கள்.

''நீங்கள் எப்போது ஸிட்னிக்கு வந்தீர்கள்? இந்த ஊர் பிடித்திருக் கிறதா உங்களுக்கு?'' என்று கேட்டார் மிஸ் பெக்.

''நான் இந்த ஊருக்கு வந்து இரண்டு நாள்தான் ஆகிறது. அதற்குள் இந்த ஊரை எனக்கு மிகவும் பிடித்து விட்டது. காரணம், இயற்கை அழகுதான். வளர்ந்து விட்ட எல்லா நாடுகளிலும், இயற்கை அழிக்கப் பட்டு, செயற்கை தாண்டவமாடுவதைத்தான் நான் பார்க்கிறேன். பெரிய பெரிய நகரங்களில் பசுமைக் காட்சிகளைப் பார்ப்பதே அரிதாகி விட்டது. இங்கு எங்கு நோக்கினும் பசுமை பசுமை! அதுவே மனத்துக்கு இனிமை!'' என்றேன்.

''யூ ஆர் ரைட்! இதுதான் எங்கள் செல்வம். நிறைய நிலப் பரப்பு இருப்பதால் எங்களால் இப்படி வைத்திருக்க முடிகிறது....'' என்ருர்.

நாங்கள் பேசிக் கொண்டிருக்கும் போதே, பஸ் ஒரு 'ரெஸ்டா ரெண்ட்' அருகில் நின்றது.

''எல்லோரும் இறங்கி காபி சாப்பிடலாம்...'' என்ருர் கைடு.

''நீங்களும் வாருங்களேன்...'' என்றேன், மிஸ் பெக்கைப் பார்த்து. ''ஷ்யூர்'' என்று கூறி இறங்கினுர். அப்போதுதான், அவரிடம் உள்ள ஒரு குறையைக் கவனித்தேன். அவருக்கு ஒரு கால் ஊனமாக இருந்தது. இழுத்து இழுத்து நடந்தார். அதைக் கவனித்தும் கவனிக்காதது போல் இருந்தேன் நான்.

ரெஸ்டாரெண்டிற்கு உள்ளே நுழைந்து, காபிக்கு ஆர்டர் கொடுத் தோம். அவருடைய நண்பரை எனக்கு அறிமுகப் படுத்தி வைத்து, ''இவர் நியூஸிலந்திலிருந்து வந்திருக்கிருர்...மாணவர்'' என்று அவரைப் பற்றிக் கூறினுர்.

''பாவம், எனக்காக இவரைச் சிரமப்படுத்தி விட்டேன். அதுவும் இவர் இருக்கும் நிலையில்......'' என்றுர் அந்த நண்பர்.

''என்ன சிரமம்? ஒ...ஊனத்துடன் நடக்கும் சிரமத்தைச் சொல்கிறீர்களா? தட் ஈஸ் நத்திங். அதைப் பற்றி நான் சிந்திப்பதே இல்லை. என்னுல் நடக்கவாவது முடிகிறதே! காலே இல்லாமல் இருப்பவர்களைப் பார்க்கும்போது, நான் எவ்வளவு கொடுத்து வைத்தவள்!......மிஸ்டர் மணியன், என்னை நானே தேற்றிக் கொள்ள இப்படிச் சொல்வதாக நினைக்காதிர்கள். நான் மிகவும் சந்தோஷமாக இருக்கிறேன். இந்த உலகில் நாம் வாழ்வதே குறைந்த நாட்கள்தான். நம்மில் பெரும்பாலோர் இருபத்தையாயிரம் நாட்கள் கூட உயிர் வாழ்வதில்லை. அதில் ஒவ்வொரு நாளையும் அல்லவா மகிழ்ச்சியுடன் நாம் கழிக்க வேண்டும்? திங்க் மிஸ்டர் மணியன், வி டோண்ட் லிவ் ஈவன் ட்வென்டிபைவ் தௌஸண்ட் டேஸ்..'' என்றுர்.

அவர் பேச்சு என்னை மிகவும் கவர்ந்தது. நமது வாழ்க்கையை, நாட்கணக்கில் சுட்டிக் காட்டிய முதல் பெண்மணி அவர்! யோசித்துப் பார்த்தேன். ஆமாம். நம்மில் பலர் இருபத்தையாயிரம் நாட்கள் கூட வாழ்வதில்லையே!

''நீங்கள் நிறையப் பிரயாணம் செய்வீர்களா?'' என்று கேட்டேன் நான்.

''நிறைய! ஐ லவ் இட். உலகம் முழுவதும் பார்த்து விட்டுத்தான் கல்யாணமே செய்து கொள்ளப் போகிறேன். அடேயப்பா, உலகம்தான் எவ்வளவு அழகானது! நான் எங்கும் எதிலும் அழகைத்தான் காண்கிறேன். இன்பம் துன்பம் எல்லாம் நம் மனப் பக்குவத்தில்தான் இருக்கிறது என்பது என் அபிப்பிராயம். நீங்கள் என்ன சொல்கிறீர்கள் மிஸ்டர் மணியன்?'' என்று கேட்டார்.

''எங்கள் மதமே அதைத்தான் சொல்கிறது...'' என்றேன் நான்.

நாங்கள் பேசிக் கொண்டிருக்கும் போதே, எங்கள் அருகில், பஸ் 'கைடு' வந்து அமர்ந்து கொண்டார். என்னைப் பார்த்து, ''ஹலோ...'' என்று கூறிவிட்டு ''இந்த 'ட்ரிப்'பை ரசிக்கிறீர்களா?'' என்று கேட்டார்.

''யெஸ்......இடங்களைவிட உங்கள் பேச்சை அதிகமாக ரசிக்கிறேன் மிஸ்டர் ஜாக்......'' என்றேன்.

பெயர் சொல்லி அழைத்ததும் என்னைத் திரும்பிப் பார்த்தார் அவர். சட்டையில் அவர் குத்தியிருந்த பெயர் சீட்டை நான் பார்த்தேன். ஆமாம்! சட்டையில் அவர் தன் பெயரை எழுதி வைத்திருந்தார்.

''என் பேச்சு இருக்கட்டும், அது என் பிழைப்பு'' என்றுர்.

''பிழைப்பை நன்றுகச் செய்கிறீர்களே, பாராட்ட வேண்டாமா?'' என்று கூறிவிட்டு, ''தினம் தினம் இப்படிப் பேசுகிறீர்களே, அலுக்கவில்லையா?'' என்று கேட்டேன்.

''நீங்கள் என்ன தொழில் செய்கிறீர்கள்?'' என்று பதிலுக்கு என்னைக் கேட்டார் அவர். நான் என்னைப் பற்றிச் சொல்லி விட்டு,

''உங்கள் கேள்வி புரிகிறது! என் தொழிலில் 'வெரைட்டி' உண்டு. தினம் தினம் வெவ்வேறு விஷயங்களைப் பற்றி எழுதுகிறேன்'' என்றேன்.

''அப்படித்தான் நானும். தினம் தினம் பலதரப்பட்ட மக்களைப் பார்க்கிறேன். வெரைட்டி ஆஃப் பீபிள்...... அதனால் அலுப்பதில்லை. அத்துடன் வி ஆஸ்ட்ரேலியன்ஸ் ஆல்வேஸ் லவ் அவர் ஜாப். செய்யும் வேலையில் சலிப்பு ஏற்படக் கூடாது. அது எங்கள் தத்துவம்...'' என்றார்.

மிகச் சாதாரணமாக அவர் கூறிவிட்ட போதும், அதில் பொதிந்திருந்த பெரிய உண்மைகள் என் மனத்தில் ஆழப் பதிந்தன.

''ஆஸ்திரேலியாவில் நீங்கள் எங்கெங்கே போக விரும்புகிறீர்கள்? என்னென்ன பார்க்க விரும்புகிறீர்கள்?'' என்று கேட்டார் அவர்.

''முக்கியமாக டான் பிராட்மெனைப் பார்க்க வேண்டும். மெல்போர்ன் டெஸ்ட் பார்க்க வேண்டும்......பழங்குடி மக்களைப் பார்க்க வேண்டும்'' என்றேன்.

''ஜஸி...'' என்றவர், ''பாருங்கள், பாருங்கள். கிரிக்கெட் இப்போது இங்கே இறந்து கொண்டிருக்கும் ஒரு விளையாட்டு. ஆமாம்! இட் ஈஸ் எ டையிங் கேம்! யார் சார் ஒரு விளையாட்டைப் பார்க்க ஐந்து நாட்களை வீணாக்குவார்கள்? அந்தக் காலத்தில் வேறு வேலை இல்லை, விளையாடிக் கொண்டிருந்தார்கள். இப்போது எங்கள் ஊரில் பிரபலமானது 'ரக்பி' தான். அதையும் பாருங்கள்......'' என்றவர், ''இந்தப் பழங்குடி மக்கள் விவகாரத்தில் கொஞ்சம் ஜாக்கிரதையாக இருங்கள்...'' என்றார்.

''ஜாக்கிரதையாகவா? ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''இல்லை. ஆஸ்திரேலியாவுக்கு வருகிறவர்கள் எல்லோரும் அவர்களைப் பார்க்க விரும்புகிறார்கள். அவர்களைப் பற்றி ஏதேதோ கேள்விப்பட்டிருக்கிறார்கள்! அவர்களில் இன்னும் 'கானிபல்ஸ்' (மனிதனையே சாப்பிடுபவர்கள்) கூட இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் 'அபாரிஜன்ஸ்' இப்போது முன்னேறி வருகிறார்கள். மற்றவர்கள் ஏதோ மிருகக் காட்சி சாலையில் உள்ள மிருகங்களைப் பார்க்க வருவது போல் தங்களை வந்து பார்ப்பதை அவர்கள் விரும்புவதில்லை. அதனால் தான் சொன்னேன். அப்படியே போனாலும், வெள்ளைத்தோல் ஆட்களை உடன் அழைத்துப் போகாதீர்கள்......'' என்றார்.

அவர் சொன்னதில் இருந்த உண்மையை, அடுத்த நாள் நான் பழங்குடி மக்களைச் சந்தித்தபோது புரிந்து கொண்டேன்.

# 4

புகழ்பெற்ற ஸிட்னி கடற்கரை ஒன்றில்...

''இது ஒரு காலத்தில் 'கான்விக்ட்'டுகள் ஏரியா. இப்போதுதான் கொஞ்சம் மாறி இருக்கிறது'' என்ருர் மிஸ்டர் தாமஸ்.

''அதாவது இந்த இடத்திற்கு நிறைய கைதிகள் வந்திருக்கிருர்கள் என்று சொல்கிறீர்களா?'' என்று கேட்டேன் நான்.

''யெஸ்......முன்பெல்லாம் பிரிட்டிஷ் கைதிகளை இங்கே கொண்டு வந்து, விட்டு விட்டுப் போய் விடுவார்கள். அந்தப் 'போமி'கள் பலர் இப்போதும் இருக்கிருர்கள்...'' என்று கூறிவிட்டு, தனது பெயின்டிங் கில் கவனம் செலுத்திஞர் மிஸ்டர் தாமஸ்.

என்னிடம் பேசிக் கொண்டே வண்ணக் கலவையிலிருந்து ஓவியம் தீட்டிக் கொண்டிருந்தார் அவர்.

ஸிட்னி நகரைச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்த போதுதான், நான் மிஸ்டர் தாமஸைத் தற்செயலாகச் சந்தித்தேன். ஒரு பெரிய பாலத்திற்கு அடியில், ஓர் ஒரமாக அமர்ந்து கொண்டு பெயின்ட் செய்து கொண்டிருந்தார். நான் அவர் அருகே சென்று நின்று, என்ன வரைகிருர் என்று பார்த்தேன்.





அருகில் நிழல் பட்டதும், தலை நிமிர்ந்து பார்த்த அவர், ''ஹலோ'' என்றார். நானும் ''ஹலோ'' என்றேன். பிறகு, ''நீங்கள் ஒரு ஓவியரா?'' என்று கேட்டேன்.

''நோ''என்று ஒரே வார்த்தையில் பதில் சொல்லிவிட்டு,ஓவியத்தில் தொடர்ந்து கவனம் செலுத்தலானார்.

''ஹாபியா?'' என்று கேட்டேன் நான்.

''நோ......'' என்றார் அதற்கும்.

''அப்படியானால்?......''...—புரியாமல் கேட்டேன் நான்.

''என்னுடைய உள்ளத்தில் இருக்கும் 'சிருஷ்டி அரிப்பு'க்கு ஒரு வடிகால் இது......புரிகிறதா?'' என்றார். ''இதற்கு 'ஹாபி' என்றுதானே பெயர்?'' என்றேன்.

''யூ ஆர் ராங். பொழுது போகாமல் செய்யும் வேலைதான் ஹாபி. இது என் ஆத்மாவுக்கு நான் செய்யும் தொண்டு. நான் ஒரு டெலி கம்யூனிகேஷன்ஸ் என்ஜினியர். வெறும் மெக்கானிக்கல் ஜாப். அதில் என்னுடைய 'க்ரியேடிவ் ப்ரெயி'னுக்கு வேலை இல்லை. இன்று ஞாயிற்றுக்கிழமை. எனவே, இங்கே வந்து அமர்ந்து, ஓவியம் வரைகிறேன். இது என் சிருஷ்டி அரிப்புக்கு ஒரு வடிகால். சில நாள் இசையில் ஈடுபடுவேன்...'' என்றார்.

''நீங்கள் எதை வரைகிறீர்கள் என்று தெரிந்து கொள்ளலாமா?'' என்று கேட்டேன்.

''இது ராக் ஏரியா. இங்கிருந்து அதோ தெரிகிறதே, அந்த சர்ச்சை வரைகிறேன். அதுதான் காரிஸன் சர்ச்'' என்றார்.

நான் அந்த ஓவியத்தையும், சர்ச்சையும் மாறி மாறிப் பார்த்தேன். என்னையே உற்றுப் பார்த்த தாமஸ், ''என்ன, அந்த சர்ச் போல் தெரியவில்லையே என்கிறீர்களா? உங்களுக்குத் தெரியாவிட்டால் என்ன, எனக்குத் தெரிகிறது. அது போதும்......'' என்றார்.

அவருடைய அந்தப் பேச்சைக் கேட்டு நான் சிரித்தேன். அதன் பிறகு கொஞ்சம் கொஞ்சமாக அவரிடம் பேச்சுக் கொடுத்தேன். அவர் முழுப் பெயர் தாமஸ் கிரிப்பித். நான் ஒரு பத்திரிகைக்காரன் என்று தெரிந்தவுடன், உற்சாகத்துடன் பேச ஆரம்பித்தார் அவர். பேச்சின் போது இரண்டு மூன்று முறை 'போமி'கள் என்ற ஒரு சொல்லை உபயோகித்தார். அவர் மட்டுமல்ல, நான் ஸிட்னியில் இறங்கிய இரண்டு நாட்களுக்குள் பல பேர் 'போமீஸ்' என்று சொல்லக் கேட்டேன்.

'''போமீஸ்' என்று அடிக்கடி சொல்கிறார்களே, என்ன அர்த்தம்?'' என்று கேட்டேன்.

''பிரிட்டிஷ்காரர்களைத்தான் 'போமீஸ்' என்று அழைக்கிறார்கள். ஒரு காலத்தில் பிரிட்டிஷ் அரசாங்கம், அந்த நாட்டுக் கைதிகளை இங்கே கொண்டு வந்து இறக்கிக் கொண்டிருந்தது. அந்தக் கைதிகளின் பனியனில் 'பிரிஸினர் ஆஃப் ஹிஸ் மெஜஸ்டி' (Prisoner of his Majesty) என்று

போட்டிருக்கும். அந்தப் பெரிய வார்த்தை சுருங்கி, போமி (Pohmie) என்று ஆயிற்று. எனவேதான் இப்போதுகூட பிரிட்டிஷ்காரர்களைச் சிலர் 'போமீஸ்' என்று அழைக்கிறார்கள்'' என்றார் சிரித்துக் கொண்டே.

''அப்படியானால் பிரிட்டிஷ்காரர்களை ஆஸ்திரேலியர்களுக்குப் பிடிக்கவில்லை என்று அர்த்தமா?'' என்று கேட்டேன்.

''ஒரு சிலருக்குப் பிடிக்காதோ என்னவோ? எனக்குப் பிடிக்கும். அதிலும் மன்னர் பரம்பரை எனக்கு மிகவும் பிடித்த ஒன்று. ஜனநாயக ஆட்சியை விட அது எவ்வளவோ மேல். ஜனநாயக ஆட்சியில் சாதாரண மனிதன் தலைவன் ஆகி விடுகிறான். அவன் தனக்குப் பிடித்த, தன்னை விட சாதாரணமானவனுக்குப் பல முக்கிய பதவிகளைக் கொடுத்து விடுகிறான். மன்னர் ஆட்சியில் இது நடக்காது. மன்னன் திறமை மிக்கவர்களிடம் தான் பொறுப்பைக் கொடுப்பான். நான் சொல்லும் கருத்து உங்களுக்குப் பிடிக்காது என்று தெரியும். இருந்தாலும் நான் சொல்கிறேன்'' என்றார்.

அடுத்து எங்கள் பேச்சு, ஆஸ்திரேலியாவுக்கு வரும் 'இமிக்ரன்ட்ஸ்' பற்றி எழுந்தது.

''என்னைப் பொறுத்தவரை, இதில் பல அபிப்பிராயங்கள் உண்டு. ஒயிட் ஆஸ்திரேலியன் பாலிஸி (White Australian Policy) எனக்குப் பிடிக்காத ஒன்று. இந்த நாட்டுக்கு வருபவன், 'விஷயம்' தெரிந்தவனாக இருக்க வேண்டும். அவனால் இந்த நாட்டுக்கு ஏதாவது நன்மை ஏற்படவேண்டும். எங்கள் வளர்ச்சிக்கு அவன் உதவ வேண்டும். அப்படிப் பட்டவனுடைய 'தோல்' வெள்ளையாக இருந்தால் என்ன, கறுப்பாக இருந்தால் என்ன? 'வெள்ளைத் தோல் இருப்பவன் மட்டும்தான் இங்கு வரலாம்' என்று ஏதோ கொள்கை வைத்திருக்கிறார்கள். அதுதான் 'ஒயிட் ஆஸ்திரேலியன் பாலிஸி!' இஸ்ரேலிலிருந்தும், மற்ற இடங்களிலிருந்தும், வெள்ளைத் தோல் ஆசாமிகள் வந்து, காரோட்டிகளாகவும், கட்டடம் கட்டும் தொழிலாளியாகவும் பணியாற்றுகிறார்கள். இதனால் எங்களுக்கு என்ன லாபம்? என்னைப் பொறுத்தவரை, ஆசிய நாட்டு டாக்டர்கள், என்ஜினீயர்கள், ஆர்க்கிடெக்டுகள் - இவர்களின் வருகையை நான் அதிகம் விரும்புவேன். ஆசியர்களிடம், சீனர்களை அதிகம் விரும்புவேன். ஜப்பானியர்களிடம் எனக்கு மரியாதை கிடையாது...'' என்றார். அவருடைய இந்தக் கருத்தைக் கேட்டதும் எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

''என்ன சொன்னீர்கள், சீனர்களைப் பிடித்திருக்கிறது, ஜப்பானியர்களைப் பிடிக்கவில்லை என்றா?'' என்று கேட்டேன்.

''யெஸ். சீனர்களிடம் எங்கள் நாட்டில் பலருக்கு மதிப்பு உண்டு. இதுவரை எங்கள் கோர்ட்டில் எந்தக் குற்றத்திற்காகவும் சீனர்கள் ஆஜரானதில்லை. அவர்கள் நேர்மை மிக்கவர்கள். இது உண்மை. விசாரித்துப் பாருங்கள், தெரியும். ஜப்பானியர் ஏமாற்றுக்காரர்கள். நான் இப்படிச் சொன்னால் உங்களுக்குப் புரியாது. கொஞ்சம் விளக்குகிறேன்: ஜப்பான் நாட்டில் தயாராகும் எந்தப் பொருளும், ஜப்பானை விட மற்ற

இடங்களில் மலிவு. ஜப்பான் ரேடியோ, சிங்கப்பூரிலும், ஆஸ்திரேலியா விலும் மலிவு; ஜப்பானில் விலை அதிகம். சாதாரணமாக பொருள் தயாராகும் இடத்தில்தானே மலிவாக இருக்க வேண்டும்? ஜப்பான் விஷயத்தில் இது இல்லை. ஏன்? யோசித்துப் பாருங்கள். யாராவது காரணமில்லாமல் தங்கள் சௌகரியங்களைக் குறைத்துக் கொண்டு மற்றவர்களுக்கு சௌகரியம் செய்து தருவார்களா? இதில் 'மோடிவ்' இருக்கிறது என்பது உங்களுக்குப் புரிகிறதா?'' என்று கேட்டு நிறுத்தினார்.

''இதில் என்ன 'மோடிவ்' இருக்க முடியும்? தங்கள் பொருள் உலகெங்கும் பரவ வேண்டும் என்ற ஆசைதான் 'மோடிவ்''' என்றேன் நான்.

''நோ! ஒரு காலத்தில் ஐரோப்பாவில் ஜெர்மானியர்கள் இருந்த நிலையில், இன்று ஆசியாவில் ஜப்பானியர்கள் இருக்கிறார்கள். எல்லா நாட்டு மக்களையும் 'வாங்க'ப் பார்க்கிறார்கள். தாங்கள் பிறரை ஆளப் பிறந்தவர்கள் என்ற எண்ணம் ஜெர்மானியர்களுக்கும், ஜப்பானியர்களுக்கும் எப்போதும் உண்டு. அந்த நோக்கில்தான், தங்கள் தேவைகளைக் குறைத்துக் கொண்டு, தங்கள் நாட்டு மக்களுக்குக் கிடைக்காத பொருளைக் கூட மற்றவர்களுக்குக் கிடைக்கும்படி செய்கிறார்கள். நான் யுத்தத்தில் பணியாற்றியவன். எனக்கு எல்லா நாட்டு மக்களையும் தெரியும். நீங்கள் ஒரு சீனாக்காரனை நம்பலாம், ஜப்பானியனை நம்பக் கூடாது......'' என்றவர் ஒரு கணம் நிறுத்தி, ''நான் சொல்வது உங்கள் காதில் விழாது என்று தெரியும். இந்தியர்களுக்கு சீனர்கள் மீது அர்த்தமற்ற பகை இருக்கிறது. அதுவும் எனக்குத் தெரியும்'' என்றார்.

நான் பதிலேதும் சொல்லவில்லை. 'எங்கள் பகை அர்த்தமற்றதல்ல. ஒரு காலத்தில் 'இந்தி சீனி பாய் பாய்' என்று கோஷம் போட்டவர்கள் தான் நாங்களும். ஆனால், மோசம் போய் விட்டோம்' என்று கூறத் துடித்தேன். இருப்பினும் என் துடிப்பை அடக்கிக் கொண்டேன். சீனர்கள் மீது அபாரமான பற்று வைத்திருக்கும் அவருடைய 'பக்தி'யை நான் மாற்ற விரும்பவில்லை.

இவருடைய கருத்தைப் பற்றி ஆஸ்திரேலியாவில் பலரிடம் பேசிப் பார்த்த போது, சீனர்களிடம் அன்பு கொண்டுள்ள பலர் அங்கிருக்கிறார்கள் என்ற உண்மை எனக்குப் புரிந்தது.

'வாக்ஸ் அண்ட் ஜெர்ம்ஸ் (Wogs and Germs) இங்கே அனுமதிக்கப் பட மாட்டாது' என்ற ஒரு பலகை அந்தக் கடற்கரையில் வைக்கப் பட்டிருந்தது. நண்பர் ராமாநுஜத்திடம் ''இந்தப் பல்கைக்கு அர்த்தம் என்ன?'' என்று கேட்டேன்.

''யாரோ சிலர் எழுதியிருக்கிறார்கள். எல்லாம் 'கலர் பார்' சமாசாரம்தான். வெள்ளைத் தோல் தவிர மற்றவர்கள் இங்கே குளிக்க வரக்கூடாது என்று போட்டிருக்கிறார்கள்...'' என்றார்.

''வாக்ஸ் என்றால்...?'' என்று கேட்டேன்.

''உடை விஷயத்தில் மேற்கத்திய நாகரிகத்தைப் பின்பற்றும் கறுப்பர்களாம். வெஸ்டர்னைஸ்ட் ஓரியண்ட் ஜெண்டில்மென் (Westernised Orient Gentlemen). இதைச் சுருக்கி 'வாக்ஸ்' ஆக்கி இருக்கிறார்கள்.''

அப்போது, நாங்கள் இருவரும், பழங்குடி மக்களைச் சந்திக்கும் நோக்குடன் கடற்கரை ஓரமாகப் போய்க் கொண்டிருந்தோம்.

நண்பர் மெக்கால்ஸேன் அவர்களிடம் இவர்களைப் பற்றிக் கேட்ட போது, அவர் சரியாகப் பதில் சொல்லவில்லை. கொஞ்சம் அழுத்திக் கேட்ட போது, ''நீங்களே போய்ப் பார்த்துவிட்டு வாருங்கள். பொதுவாக எங்களைப் போன்றவர்கள் வருவதை, அவர்கள் விரும்புவதில்லை. இங்கு வருகிறவர்கள் எல்லாம் ஏதோ மிருகக் காட்சிசாலைக்குப் போவது போல் அவர்களைக் காணச் செல்கிறார்கள். அதனால் அவர்கள் எரிச்சல் அடைகிறார்கள். எனவே, நீங்கள் தனியாகப் போய்ப் பாருங்கள்...'' என்று சொல்லி விட்டார்.

கடற்கரை ஓரமாகப் பயணம் செய்து, கடைசியில் ஓரிடத்தில் பழங்குடிமகன் ஒருவரைச் சந்தித்தேன்.

நான் அவரை நெருங்கியபோது, அவர் தரையிலிருந்த புல்லை வெட்டிக் கொண்டிருந்தார். என்னைப் பார்த்தும் பார்க்காதது போல் இருந்து விட்டார். அவர் பார்வை 'ஒரு மாதிரி'யாகத்தான் இருந்தது. என்னையும் அறியாமல் என்னிடம் ஒரு தயக்கம் ஏற்பட்டது. தொண்டையைக் கனைத்துக் கொண்டு அவரை நெருங்கி ''ஹலோ...'' என்றேன்.

பதில் இல்லை. புல்லை வெட்டிக் கொண்டிருந்தார். நான் துணிவுடன் அவர் அருகில் சென்று ''மிஸ்டர், நான் ஒரு இந்தியன். உன் சகோதரன்'' என்று கூறிக் கையை நீட்டினேன்.

புல் வெட்டும் இயந்திரத்தைக் கீழே போட்டுவிட்டு, என்னை உற்றுப் பார்த்தார். பிறகு, ''ஆர் யூ ஆன் இண்டியன்?'' என்றார்.

''யெஸ்'' என்றேன்.

கொஞ்சம் கொஞ்சமாக அவர் முகம் மலர்ந்தது.

''ஐயாம் தாமஸ் கோ (Thomas Coe). வெல்கம் டு மை கன்ட்ரி'' என்று கூறிக் கையை நீட்டினார். பிறகு, ''மிஸ்டர் இண்டியன், நீங்கள் பேசாமல் ஆஸ்திரேலியாவுக்கு வந்து குடியேறி விடுங்கள். உலகிலேயே ஆஸ்திரேலியாதான் சிறந்த நாடு. நிறைய இடம், நிறைய பணம், நிறைய வேலை வாய்ப்பு இருக்கிறது. 'இந்தியாவில் வேலை வாய்ப்பு இல்லை; பசி, பட்டினி இருக்கிறது' என்று கேள்விப்பட்டேன். அங்கிருந்து கொண்டு ஏன் கஷ்டப்பட வேண்டும்? உங்களைப் போன்ற பலர் இங்கு வந்து விட்டால், எங்கள் நிறத்தவர் அதிகமாகி இப்போதிருக்கும் இந்த நிறப் பிரச்னை கூட இங்கிருந்து போய்விடும்'' என்றார். எடுத்தவுடன் அவர் இப்படிப் பேசியது என்னை வியப்பில் ஆழ்த்தியது.

''இந்தியர்களை எங்களுக்குப் பிடிக்கும். அவர்களுக்கும் எங்களைப் போல் பாரம்பரியம் உண்டு. நாங்கள் மூவாயிரம் ஆண்டு குடிமக்கள். இந்தியாவைப் போல், எங்கள் இனத்திலும் நிறைய மொழிகள் உண்டு. நான் பேசும் மொழிக்கு கோரின்ஜிஸ் (Goringess) என்று பெயர்'' என்றவர், ''உங்கள் பாஷையின் பெயர் என்ன?'' என்று கேட்டார்.

''தமிழ்'' என்றேன்.

இரண்டு முறை சொல்லிப் பார்த்தார்.

''நீங்கள் இங்கே என்ன செய்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''டிரக் டிரைவராக இருக்கிறேன்.''

''இங்கேதான் வசிக்கிறீர்களா?''

''என் ஊரா? அது உள்ளே இருக்கிறது. காட்டில், புதரில் போக வேண்டும். என் ஊரின் பெயர் கண்டோபோலியான் (Condo Bolian). உங்கள் ஊரின் பெயர்?'' என்று கேட்டார்.

''நான் தமிழ் நாட்டு வாசி. என் சொந்த ஊர் வேதாரண்யம்'' என்றேன்.

அதையும் இரண்டு முறை சொல்லிப் பார்த்தார்.

தாமஸ் கோ, அதன் பிறகு அவர்கள் இனத்தைப் பற்றியும், அவர்களைப் பற்றி மற்றவர்கள் எப்படித் தவறாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பது பற்றியும் என்னிடம் பேசினார்.

நாங்கள் பேசிக் கொண்டிருந்தபோது, நிறைய குழந்தைகள் எங்களைச் சூழ்ந்து கொண்டன. அந்தக் குழந்தைகள் பேச்சும், போக்கும் தமிழ் நாட்டை எனக்கு நினைவுபடுத்தின.

# 5

ஸிட்னி நகரக் கடற்கரையின் ஓர் அற்புதத் தோற்றம்

"இன்னும் சில மணிநேரத்தில் புத்தாண்டு பிறக்கப் போகிறது. எங்களுடைய மனமார்ந்த புத்தாண்டு வாழ்த்துக்களை உங்களுக்கு இப்போதே தெரிவித்துக் கொள்கிறோம். ஆனால்... நாங்கள் இப்படிச் சொல்வதற்காக எங்களை மன்னிக்க வேண்டுகிறோம். பிறக்கப் போகும் புத்தாண்டைப் பார்க்க, அதன் சுகத்தை அனுபவிக்க, உங்களில் சிலர் உயிருடன் இருக்கப் போவதில்லை. உங்களில் குறைந்தது இருபது பேராவது புத்தாண்டு பிறக்கும்போது இறந்து விடுவீர்கள். ஆமாம், நாங்கள் சொல்வது உண்மை! அந்த இருபது பேருக்காக நாங்கள் வருத்தப்படுகிறோம்..."

யாராவது இப்படி புது வருஷ வாழ்த்துக் கூறி நீங்கள் கேட்டிருக்கிறீர்களா? 'இப்படி யாராவது அபசகுனமாக வாழ்த்துக் கூறுவார்களா?' என்றுதானே கேட்கத் தோன்றுகிறது.

இந்த வாழ்த்தைக் கேட்டதும் எனக்கும் அப்படித்தான் தோன்றியது.

டிசம்பர் மாதம் 31-ம் தேதி இரவு 9 மணிக்கு, ஸிட்னி நகரில், வென்ட்வொர்த் ஓட்டலில், என் அறையில்தான் எனக்கு இப்படி வாழ்த்துக் கூறினார் ஒருவர்.



அவர்தான் டெலிவிஷன் அறிவிப்பாளர்.

''இரவு ஒன்பது மணிக்கு உங்கள் அறைக்கு வந்து, 'ஆல் நேஷன்ஸ் கிளப்' புத்தாண்டு நடனத்திற்கு அழைத்துச் செல்கிறேன். அறையிலேயே இருங்கள்'' என்று நண்பர் முத்துசாமி சொல்லி இருந்தார். அவருக்காகக் காத்திருந்த போதுதான், பொழுது போகாமல் டெலிவிஷனைத் திருப்பினேன். அப்போதுதான் டெலிவிஷன் அறிவிப்பாளர் அபசகுனமாக வாழ்த்தினார். இப்படி எதற்காக ஒருவர் வாழ்த்துக் கூற வேண்டும் என்று நான் யோசித்துக் கொண்டிருக்கும்போதே அவர் தொடர்ந்து. ''நண்பர்களே, நான் சொல்வது கசப்பான உண்மை. ஒவ்வோர் ஆண்டும், புத்தாண்டு தினத்தன்று, ஸிட்னி சாலைகளில் நடக்கும் கார் விபத்துக்களில், குறைந்தது இருபது, முப்பது பேர் இறந்து விடுகிறார்கள். இந்த ஆண்டும் அந்த எண்ணிக்கை இருக்கும் என்றும் போலீஸ் அதிகாரிகள் நினைக்கிறார்கள். அந்த இருபது, முப்பது பேர் உங்களில் சிலராகத்தானே இருக்க முடியும்? எனவேதான் அப்படிச் சொன்னோம். என்ன சொல்கிறீர்கள்? அந்தக் கொடுமை வேண்டாம் என்றா? நாங்களும் அதைத்தான் விரும்புகிறோம். அது நிகழாமல் இருக்க உங்கள் ஒத்துழைப்பு தேவை. நிறையக் குடித்து விட்டுக் கார் ஓட்டாதீர்கள். 'என்றால் நிறைய குடிக்காமல் இருக்க முடியாது' என்கிறீர்களா? சரி, குடியுங்கள், ஆனால், கார் ஓட்டாதீர்கள்; டாக்ஸியில் போங்கள். டாக்ஸி அபாயமற்றது. இந்த ஒத்துழைப்பு தந்தால் விபத்து குறையும். விபத்தைக் குறைக்கத்தான் இப்படி விபரீதமாக உங்களை வாழ்த்துகிறோம்'' என்றார்.

எனக்கு அதைக் கேட்டு முதலில் சிரிப்புத்தான் வந்தது. பிறகு சிந்தித்துப் பார்த்த போது, இதுவும் ஒரு சிறந்த வழிதான் என்பது புலப்பட்டது.

ஸிட்னி நகரில் இருந்த சில நாட்களுக்குள், தினமும் பத்திரிகைகளில் நான் பார்த்த முக்கிய செய்தி, கார் விபத்துச் செய்திதான். கண் மூடித்தனமான வேகத்தில் காரை ஓட்டிக் கொண்டு போவதும், குடித்து விட்டு நிதானம் தவறி காரை ஓட்டி விபத்துக்கள் ஏற்படுத்துவதும் சர்வ சகஜமான செய்திகளாக இருந்தன.

அன்றிரவு (இல்லை, மறுநாள் காலை) மூன்று மணிக்கு நான் நடன நிகழ்ச்சியைப் பார்த்துவிட்டு ஓட்டலுக்குத் திரும்பியபோது, சாலைகளில் ஓடிக் கொண்டிருந்த கார்களின் எண்ணிக்கையைக் கண்டு பிரமித்து விட்டேன். கண்ணுக்கெட்டிய தூரம் வரை கார்களாகவேதான் தென்பட்டன.

அறையில் 'போர்' அடிக்கவே, கதவைப் பூட்டிக் கொண்டு, கீழே 'லாபி'யை அடைந்தேன்.

வெளிநாடுகளில் உள்ள பெரிய ஓட்டல்களில், 'லாபி'யில் அமர்ந்திருந்தாலே, பொழுது போய்விடும்.

'லிப்டு'க்கு அருகில் இருந்த ஒரு 'சோபா'வில் அமர்ந்து கொண்டு, போவோர் வருவோரை வேடிக்கை பார்க்கலானேன். எனக்குப் பக்கத்து சோபாவில் வயதான இரண்டு மூதாட்டிகள் அமர்ந்திருந்தனர்.

என் பார்வை அவர்கள் பக்கம் திரும்பும் போதெல்லாம், அவர்கள் பார்வையும் என் மீது பட்டது. வயதானவர்களிடம் பேச்சுக் கொடுத்தால், 'வள வள'வென்று பேசி நம்மைக் கொன்று விடுவார்கள் என்ற பயத்தில், நான் அவர்களிடம் பேச்சுக் கொடுக்காமலே இருந்தேன். ஆனால், அந்த அம்மையாரில் ஒருவர் திடீரென்று என் அருகே வந்து, ''ஹாப்பி நியூ இயர் யங்மேன்......'' என்றார்.

''தாங்க் யூ......விஷ் யூ தி ஸேம்......'' என்றேன்.

''என்ன, நியூ இயர் பார்ட்டிக்கு எங்கேயும் போகவில்லையா?'' என்று அடுத்த கேள்வியைக் கேட்டார் அந்த அம்மையார்.

''போக வேண்டும். அதற்காகத்தான் ஒரு நண்பரை எதிர்பார்த்து அமர்ந்திருக்கிறேன்'' என்றேன்.

''ஐ ஸி......யூ ஆர் லக்கி. உங்களை அழைத்துப் போக நண்பர் வருகிறார்... ஊம்ம்...'' என்று பெருமூச்சு விட்டார் அந்த மூதாட்டி. அந்தப் பெருமூச்சில்'பெரிய விஷயம்' இருப்பதாகத் தோன்றியது எனக்கு. இனிமேலும் அவரிடம் பேச்சுக் கொடுக்காமல் இருக்கக் கூடாது என்ற முடிவுடன், ''நீங்கள் எங்கேயும் போகவில்லையா?'' என்று கேட்டு வைத்தேன்.

''எனக்கேதப்பா போக்கிடம்? வயதாகி விட்டதே......இனி என்னால் யாருக்கு என்ன லாபம்? யார் என்னை பார்ட்டிக்கெல்லாம் கூட்டிக்கொண்டு போவார்கள்?'' என்று சலித்துக் கொண்டார்.

''ஏன் அம்மா அப்படிச் சலித்துக் கொள்கிறீர்கள்? நீங்கள் இந்த ஓட்டலில்தானே தங்கி இருக்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''இந்த ஓட்டலிலா? நோ...நோ! ஏதோ பொழுதைக் கழிக்க இந்த 'லாபி'க்கு வந்திருக்கிறேன். வீட்டில் இருக்க முடியவில்லை. அதனால் இங்கே வந்தேன்'' என்றார்.

''வீட்டில் இருக்க முடியவில்லையா? நீங்கள் சொல்வது எனக்குப் புரியவில்லையே......'' என்றேன்.

''புரியாதுதான், எனக்கும்தான் புரியவில்லை. நான் என் வீட்டில் இருக்கக் கூடாதாம்; அதுவும் என் மகன் வீட்டில். என் மருமகப் பெண் தான் என்னை வெளியே துரத்தி விட்டாள். கடவுள் அவளை நன்றாகத் தண்டிப்பார்......எப்போதுமா அவள் மருமகளாக இருந்து விடுவாள்? அவளும் ஒரு நாள் மாமியார் ஆகவேண்டியவள்தானே? அப்போது புரியும் நான் படும் சிரமம்......'' என்று சலித்தார்.

'சரிதான், ஏதோ சுவாரசியமான மாமியார்—மருமகள் சச்சரவு. இந்த ஊரில் அது எப்படி இருக்கிறது என்று தெரிந்து கொள்வோம்' என்ற எண்ணத்துடன், அந்த மூதாட்டியிடம் மேலும் பேச்சுக் கொடுத்தேன்.

''நீங்கள் உங்கள் மகனுடன் இங்கே இருக்கிறீர்களா?'' என்று கேட்டேன்.

''இல்லையப்பா! நான் 'அடிலெய்ட்' வாசி. என் கணவர் ஒரு அக்கௌண்டண்ட். அவர் இறந்து போய்ப் பன்னிரண்டு வருஷங்கள் ஆகின்றன. என் மகன் ஒரு டாக்டர். ஸிட்னியில் இருக்கிறன். எப்போதாவது அவனைப் பார்க்க வருவேன். அடிலெய்டில் எனக்குப் பொழுதே போவதில்லை. சாப்பாடு-தூக்கம், சாப்பாடு- தூக்கம். இதுதான் அங்கே என் வாழ்க்கை! அதனல் எப்போதாவது இப்படி ஸிட்னிக்கு வருவேன். 'புது வருஷமாயிற்றே, மகனுடன் இருக்கலாம்' என்று வந்தேன். என் மகன் நல்லவன்தான்! ஆனல், அந்த ராட்சஸி இருக்கிறளே, அவள்தான் அவனைக் கெடுக்கிறள். நான் என்ன,எப்போதுமா என் மகனுடன் இருந்து விடப் போகிறேன்? ஏதோ ஒரு 'நாள், கிழமை' என்றுதானே வருகிறேன்? கணவனுடன் புது வருஷ பார்ட்டிக்குப் புறப்பட்டுவிட்டாள் அவள். நான் கூட வருகிறேன் என்று சொல்லவில்லை. 'வீட்டிலேயே டி.வி.பார்த்துக் கொண்டிருக்கிறேன்' என்று சொன்னேன். கேட்கவில்லையே! 'கதவைப் பூட்டிக் கொண்டு போக வேண்டும். அதனல் எங்கேயாவது ஓட்டல் 'லாபி'யில் போய் இரு' என்று சொல்லி விட்டாள். நீயே சொல்லுப்பா! இது சரியா? அது சரி, இப்படி யெல்லாம் நடக்கும் என்று தெரிந்தும் நான் வந்தது தப்புதான்! ஊரில் இருந்தால், நிம்மதியாக இருப்பேன். எனக்கு வசதிக்கொன்றும் குறைவில்லை. நீ அடிலெய்டுக்கு வந்தால் என் வீட்டுக்கு வந்து பார், புரியும். என் பெயர் அப்பாட் (Abbot). பைரன் தெரு, முப்பத்தைந்தாம் நம்பர் வீடு என்னுடையது. கண்டிப்பாக வா... ஒவ்வொருவர் மாதிரி இருக்க மாட்டேன். என்னமாய் உன்னை உபசரிப்பேன் தெரியுமா?'' என்றர். அம் மூதாட்டியின் இதயம் பரிவான உபசரிப்புக்காக எவ்வளவு ஏங்குகிறது என்று அறிந்ததும் உள்ளம் நெகிழ்ந்து போனேன்.

சற்றுப் பொறுத்து ''நீ எந்த ஊர்க்காரன்? பார்த்தால் ரொம்ப நல்லவனுகத் தெரிகிறயே...'' என்றர்.

''நான் இந்தியாக்காரன். என்னை நல்லவன் என்று சொன்னதற்கு நன்றி......'' என்றேன்.

''உங்கள் ஊரின் ஜாயிண்ட் பாமிலி ஸிஸ்டம்பற்றி கேள்விப்பட்டிருக்கிறேன். அது எனக்கு ரொம்ப பிடித்திருக்கிறது. வீடு, பணம், சாப்பாடு தானு வாழ்க்கை? இல்லையப்பா! பரிவு, அன்பு, இன்ப துன்பத்திலே பங்கு- இதுதான் வாழ்க்கை. தனியாகச் சாப்பிட்டால் சாப்பிட்ட மாதிரியே இல்லை. வாழ்க்கை என்றல் பரஸ்பரம், பரிமாற்றம் இருக்க வேண்டும். நாலு பேர் நம்மை மதிக்க வேண்டும், நம் ஆலோசனையைக் கேட்க வேண்டும். பேரன், கால்லே அடிபட்டுக் கொண்டால், பாட்டின்னு அழுது கொண்டே என்கிட்டே வரனும். 'ஒண்ணுமில்லேடா கண்ணு'ன்னு சொல்லி நான் கட்டுப் போட வேண்டும். அதிலேதான் மகிழ்ச்சி இருக்கிறது. எங்க நாட்டிலே வயசாயிட்டா, வாழ்க்கையே ஒரு சுமையா போய்விடுகிறது. இட் ஈஸ் ஹாரிபிள். லைப் ஷுட் நாட் பிகம் எ பர்டன்... உங்க ஊர் ஸிஸ்டத்தைப் பத்திக் கேட்டிருக்கேன். தாத்தா, பாட்டி, பேரன், பேத்தின்னு சேர்ந்து இருந்தா, அது தனிதான்'' என்று பேசிக் கொண்டே போனர்.

''எங்கள் ஊரிலும் அந்த முறை கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து கொண்டு வருகிறது'' என்றேன்.

''இட் ஈஸ் பிடியபிள்......'' என்ருர்.

இத்தனை நேரம் இவள் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த இன்னெரு கிழவி, ''மிஸ்டர் இண்டியன்'' என்று என்னிடம் ஏதோ கேட்க முற்பட்டார்.

''என் பெயர் மணியன்'' என்றேன் குறுக்கிட்டு.

''ஐயாம் ஸாரி, மிஸ்டர் மணியன், நான் என் ஹஸ்பெண்டோட நிறைய ஊருக்குப் போயிருக்கேன். உங்கள் ஊர் 'பாலே' எல்லாம் எனக்கு ரொம்பப் பிடிக்கும். ஒரு தரம், டி. வி. யிலே அந்த 'ஃபைவ் ஹஸ்பெண்ட்ஸ்' கதையைப் பார்த்தேன். அதிலே ஒரு சந்தேகம்'' என்ருர்.

''ஃபைவ் ஹஸ்பெண்ட்ஸ் கதையா?'' என்று புரியாமல் கேட்டேன்.

''அதுதான், ஒரு லேடிக்கு ஐந்து கணவர்கள். அந்தக் கால ராஜா ராணி கதை; சூதாடி, கன்ட்ரியை லூஸ் பண்ணிடருங்க......''

''ஓ......பாரதக் கதையா? யெஸ்...யெஸ்... பாஞ்சாலி சபதம்! அதிலே என்ன சந்தேகம்......'' என்றேன், விஷயத்தைப் புரிந்து கொண்டு.

''அந்தப் பெண், யாரோ ஒருத்தன் அவள் துணியைப் பிடிச்சு இழுத்தபோது, அவனைத் தள்ளி விட்டுக் கதறினு......அந்தக் கதையைப் பார்த்துக் கொண்டிருந்த என் ஹஸ்பெண்ட், 'இவள் ஏன் இப்படிப் பண்ரு? இவளுக்கு ஏற்கெனவே அஞ்சு ஹஸ்பெண்ட்ஸ் இருக்காங்க. அப்படியிருக்க ஆருவதா அந்த ஆளையும் ஏத்துக்கிட்டா என்ன? ஏன் முரண்டு பண்ரு? அஞ்சு கணவரை மாரேஜ் பண்றபோது, ஆருவது ஒரு பெரிசா?' என்று கேட்டார். எனக்கும் அவர் கேட்டது சரியாத் தோணித்து. அவள் ஏன் அவனேட சண்டை போடணும்? அவனையும் 'அலவ்' பண்ணியிருக்கலாமே......'' என்ருர்.

இந்தக் கேள்விக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் சிறிது நேரம் தயங்கினேன் நான். பாரதக் கதையின் தத்துவத்தைப் புரிந்து கொண்டால், இந்தக் கேள்விக்கு இடமே இல்லை என்பதும் எனக்குப் புரிந்தது. என்ருல் முடிந்த அளவு அதை விளக்கினேன்.

''ஓ......ஐஸி'' என்ருர் அந்த அம்மையார், என் விளக்கத்தைக் கேட்டு. அந்த 'ஐஸி'யில் 'நீங்கள் ஏதோ சொல்கிறீர்கள், என்ருல் ஒப்புக் கொள்ள முடியவில்லை' என்ற பாவம்தான் தொனித்தது.

''ஸிட்னியில் எல்லா இடங்களுக்கும் போய் விட்டீர்களா?'' என்று கேட்டார் திருமதி அப்பாட்.

''இல்லை, இப்போதுதான் போய்க் கொண்டிருக்கிறேன்......''

''கிங்க்ஸ் கிராஸிற்குப் (Kings Cross) போனீர்களா?''

''இல்லை......''

''கண்டிப்பாகப் போங்கள். அதுவும் இன்றைய இரவு அது சொர்க்க லோகமாக இருக்கும்.......''

''ஈஸ் இட்?''

''என்ன, ஈஸ் இட் என்று சாதாரணமாகக் கேட்கிறீர்கள். 'ஜே ஜே' என்று கூட்டம் இருக்கும். இரவு, பகல் போல் ஜொலிக்கும். அங்கு 'நியூ இயரை' ஆரம்பிக்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டும்......ஆமாம், நீங்கள் எங்கே போகப் போவதாகச் சொன்னீர்கள்?''

''ஆல் நேஷன்ஸ் கிளப் என்று சொன்னார்கள்......''

''ஓ! அதுவும் கிங்க்ஸ் கிராஸில்தான் இருக்கிறது......''

''நீங்கள் சொல்வதைப் பார்த்தால், ஸிட்னியும், கிங்க்ஸ் கிராஸும் உங்களுக்கு ரொம்பவும் பிடிக்கும் போல் இருக்கிறது?''......

''ஒரு காலத்தில் ரொம்பவும் பிடித்திருந்தது......இப்போது ஸிட்னி மாறிவிட்டது. இயற்கை அழகை அழித்து, செயற்கைக் கட்டடங்களைக் கட்டிக் கொண்டிருக்கிறார்கள்......''

நாங்கள் பேசிக் கொண்டிருக்கும் போதே, அந்த 'லாபி'யில் பல இளைஞர்களும், யுவதிகளும் குறுக்கும் நெடுக்கும் போய்க் கொண்டிருந்தார்கள். எங்களுக்கு நேர் எதிரே இருந்த ஒரு 'பாரி' (Bar)ல் நிறையப் பேர் மது அருந்திக் கொண்டிருந்தார்கள். மதுவும், மாதுவும் சேர்ந்து கொள்ளவே சிரிப்பும், கும்மாளமும் அடிக்கடி அங்கிருந்து வெளிப்பட்டுக் கொண்டிருந்தது.

திடீரென்று, மிகவும் குட்டை ஸ்கர்ட் அணிந்த ஒரு பெண்மணி அந்த மூதாட்டி அருகே வந்து ''யூ ஆர் மிஸஸ் ஸைமன்?......'' என்று கேட்டாள்.

''இல்லையே, நான் அப்பாட்......'' என்றார் இவர்.

''ஐயாம் ஸாரி......ஐயாம் வெயிட்டிங் ஃபார் மிஸஸ் ஸைமன்'' என்று கூறி, அந்த 'பாரு'க்குள் நுழைந்தாள் அந்தப் பெண். அந்தப் பெண்ணின் மீது என் பார்வை தற்செயலாகத் திரும்பியது.

''ஹேய்! அப்படிப் பார்க்காதே! ஊரை விட்டு ஊர் தனியாக வந்திருக்கிறாய்; இரவு வேளை வேறு......அந்தச் செழுமையான கேர்ல் உன்னைக் கலக்கி விடப் போகிறது''...என்றார் திருமதி அப்பாட், கண்ணைக் குறும்பாகச் சிமிட்டிக் கொண்டே.

பிறகு ''இந்த மினி ஸ்கர்ட்டைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?'' என்று கேட்டாள்.

''இதுவரை ஒன்றும் நினைக்கவில்லை'' என்றேன் நான்.

''எனக்கு அது பிடிக்கவில்லை, என் பிள்ளைக்குப் பிடித்திருக்கிறது. என் மருமகப் பெண் கூட 'மினி'தான் போடுகிருள். அதற்கெல்லாம் ஒரு வயசு வேண்டாமோ? 'மினி'யைவிட 'மிடி'தான் (Medi) நன்ருயிருக் கிறது. 'மேக்ஸி' (Maxi) வேண்டாம்... ஆனுலும் 'மினி', 'மைக்ரோ மினி' யாக மாறிக் கொண்டு போகிறது. படிக்கும் பெண் போட்டுக் கொண்டால் பரவாயில்லை. கல்யாணம் ஆகி, குழந்தை பெற்ற என் மருமகப் பெண் எல்லாம் போட்டுக் கொண்டால்......''

பிடிக்காத மாமியாரின் பேச்சு எப்படி யெல்லாம் இருக்கும் என்பதற்கு திருமதி அப்பாட்டின் பேச்சு உதாரணமாகத் திகழ்ந்தது. 'வேண்டாத மருமகள் கை பட்டால் குற்றம், கால் பட்டால் குற்றம்' என்ற கதைதான்!

மணி பத்தடித்து விட்டது. நண்பர் முத்துசாமி வரவில்லை. எனக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை.

''என்ன, என்னைப் போல் நீயும் இங்கேதான் இருக்கப் போகிருயா? இந்த 'லாபி'யில்தான் நியூ இயரா?'' என்று கேலியாகக் கேட்டார் திருமதி அப்பாட்.

''என்ன செய்வதென்று புரியவில்லை. ஒன்பதுக்கெல்லாம் வருகிறேன் என்று சொன்னுர், மிஸ்டர் முத்துசாமி'' என்றேன்.

''போன் பண்ணிப் பாரேன்'' என்ருர் அவர்.

அது நல்ல யோசனையாகப் பட்டது. போன் செய்தேன்.

''குஜ்ஜி ஹியர்......'' என்றது ஒரு குரல்.

''எனக்கு மிஸ்டர் முத்துசாமி வேண்டும்'' என்றேன்.

''நான் முத்துசாமிதான்! ஓ, மிஸ்டர் மணியனு? எங்கே இருக்கிறீர் கள்? உங்கள் ப்ரோக்ராம் உறுதியாகாததால், நீங்கள் வரவில்லை என்று எடுத்துக் கொண்டேன். நீங்கள் ஒரு டாக்ஸி வைத்துக் கொண்டு நேராக இங்கு வந்து விடுங்கள். நான் வந்து அழைத்துப் போவேன். ஆனுல், இப்போது காரை எடுத்தால், மறுபடியும் 'பார்க்' செய்ய இடம் கிடைக்காது......ஸோ......ப்ளீஸ், நீங்களே வந்து விடுங்கள்'' என்ருர்.

''ஓ......கே......'' என்று கூறி, மீண்டும் 'லாபி'க்கு வந்து, திருமதி அப்பாட்டிடம் விடை பெற்றேன்.

''குட் பை! அடிலெய்ட் வந்தால் என் வீட்டிற்கு வா. அட்ரஸ் முப்பத்தைந்து, பைரன் ஸ்ட்ரீட்'' என்று, மறுபடியும் தன் விலாசத்தைச் சொன்னுர்.

''நிச்சயம் வருகிறேன்'' என்று கூறி, காமிராவைத் தூக்கிக்கொண்டு புறப்பட்டேன். இரண்டடி நடந்திருப்பேன்.

''ஹாய்'' என்று மீண்டும் குரல் கொடுத்து, என்னைத் தடுத்து நிறுத்தி, என் அருகில் வந்து, ரகசியமாக '''கிங்ஸ் கிராஸு'க்குப்போகும் போது ஜாக்கிரதை. அங்கே நிறைய 'கேர்ல்ஸ்' உண்டு...'' என்றார். பிறகு ''நேரம் கிடைக்கும் போது, அங்கே நடக்கும் ஒரு நாடகத்தைப் பார்க்கத் தவறாதே! அந்த நாடகத்திற்கு ஹேர் (Hair) என்று பெயர். நடிக நடிகைகள் எல்லோரும், ஒரு காட்சியில் முழு நிர்வாணமாக வருகிறார்கள்......டோன்ட் மிஸ் இட்......'' என்றார்.

''நிச்சயம் பார்க்கிறேன்'' என்று கூறிப் புறப்பட்டேன்.

'இந்த வயதிலும் 'அந்த' விஷயத்தில் என்ன உற்சாகம் அவருக்கு' என்று எண்ணி, எனக்குள் சிரித்துக் கொண்டேன் நான்.

# 6

ப்ருஸ் குடும்பத்தினருடன்...

வென்ட்வொர்த் ஓட்டல் வாசலில் நின்றபடி, தெருவில் சென்ற டாக்ஸியை யெல்லாம் கைகாட்டி நிறுத்திப் பார்த்தேன். எதுவும் நிற்க வில்லை. வெகு நேரம் பொறுத்து, ஓட்டல் வாசலில் ஒரு டாக்ஸி வந்து நின்றது. அதற்குள் ஏற முற்பட்டேன்.

''எங்கே?'' என்று கேட்டார் டிரைவர்.

''கிங்க்ஸ் கிராஸ்...'' என்றேன்.

''ஸாரி...'' என்று கூறி, என்னை இறக்கிவிட்டுப் போய் விட்டார். அதன் பிறகு வந்த டாக்ஸியிலும் அதே பதில்தான்.

'ஏன் இப்படி?' என்று புரியாமல் நான் தவித்துக் கொண்டிருந்த போது, ஓட்டல் வாசலில் நின்றிருந்த தர்வான் என்னை நெருங்கி, ''மிஸ்டர், இன்றிரவு கிங்க்ஸ் கிராஸுக்கு டாக்ஸிகள் வராது. பேசாமல் பஸ் ஏறிப் போங்கள்'' என்றார்.

''டாக்ஸிகள் வராதா? ஏன்?'' என்று கேட்டேன்.



''கிங்க்ஸ் கிராஸில் இன்று இரவு ஏகக் கூட்டம் இருக்கும். வண்டிகள் எல்லாம் ஊர்வலம் போல ஊர்ந்து போய்க் கொண்டிருக்கும். டாக்ஸிக் காரர்கள் அந்த ஊர்வலத்தில் அகப்பட்டுக் கொள்ள விரும்ப மாட்டார்கள். அதனுல், அதோ நேர் எதிரே இருக்கிறது பாருங்கள், பஸ் ஸ்டாண்ட். அங்கு போய் 387-ம் நம்பர் பஸ் எடுத்துக் கொண்டு போங்கள். கிங்க்ஸ் கிராஸுக்கு 12 ஸெண்ட்தான்'' என்முர்.

அவர் யோசனைப்படி, நான் பஸ்ஸில்தான் பயணம் செய்தேன்.

அறுபத்துமூவர் விழாவின்போது, மயிலாப்பூருக்கு டாக்ஸிகள் வராது என்பார்களே, அப்படித்தான் புத்தாண்டு இரவன்று கிங்க்ஸ் கிராஸுக்கு வரமாட்டார்கள் என்பதும் எனக்குப் புரிந்தது.

மிகவும் வளர்ந்துவிட்ட ஆஸ்திரேலிய நாட்டில், பஸ்கள் மிகச் சாதாரணமாகத்தான் இருந்தன. நம் ஊரில் இருக்கும் பஸ்கள் 'மேல்' என்று தோன்றும்படிதான் இருந்தன அவை. அந்த பஸ்ஸில் பயணம் செய்தவர்களை யெல்லாம் ஒருமுறை பார்த்தேன். எல்லாரும் ஏதோ ஒரு போதையில் இருந்ததாகவே தோன்றியது.

பஸ், கிங்க்ஸ் கிராஸை நெருங்கிய போதுதான், ஓட்டல் தர்வான் சொன்னதன் பொருள் எனக்கு விளங்கியது. மைல் கணக்கில் கார்கள் ஊர்ந்து கொண்டிருந்தன.

**கி**ங்க்ஸ் கிராஸ்!

அது உண்மையிலேயே ஒரு தனி உலகம்தான். அதைப் பார்த்தவுடன் பாரிஸின் சாம்ப்ஸ் எலிஸஸ் பகுதி, லண்டனின் ஸோஹோ சதுக்கம், நியூ யார்க்கின் பிராட்வே, டோக்கியோவின் கின்ஸா—இவைதான் என் நினைவுக்கு வந்தன. விளக்குகள் பளிச்சிட்டு இரவைப் பகலாக்கிக் கொண்டிருந்தன. பிறக்கப் போகும் புத்தாண்டை வரவேற்க, பலூன்களுடனும், காகிதத் தோரணங்களுடனும் மக்கள் ஆங்காங்கே உலவிக் கொண்டிருந்தனர்.

பஸ்ஸிலிருந்து இறங்கி, 'ஆல் நேஷன்ஸ் கிளப்' எங்கிருக்கிறது என்று தேடிக் கொண்டே நடந்தேன் நான். சாலையின் இரு மருங்கிலும் ஜோடி ஜோடியாக ஆணும் பெண்ணும் தங்களை மறந்து நின்று கொண்டிருந்தனர்.

''ஆல் நேஷன்ஸ் கிளப் எங்கிருக்கிறது?'' என்று யாரிடமாவது கேட்கலாம் என்முல், யாராவது தனியாக இருந்தால்தானே! ஜோடி ஜோடியாக நின்று இனிமை காணும் 'சிறுசு'களை நெருங்கி அந்தக் கேள்வியைக் கேட்க எனக்குத் தைரியம் வரவில்லை. சிவ பூஜையில் கரடியாக நினைத்து என்னை விரட்டுவார்கள் என்று தோன்றியது. எனவே, நானே தேடி அந்த கிளப்பைக் கண்டுபிடித்தேன்.

நம் ஊர் ஜிம்கானு கிளப் போல் ஒன்றுதான், ஸிட்னியில் உள்ள ஆல் நேஷன்ஸ் கிளப். எல்லா நாட்டைச் சேர்ந்தவர்களும் அதில் அங்கத்தினர்களாக இருந்ததால், அந்தப் பெயர்.

வரவேற்பில் இருந்தவரிடம் ''மிஸ்டர் முத்துசாமியைச் சந்திக்க வேண்டும்...'' என்றேன்.

அவர், அங்கிருந்த ஓர் ஒலிபெருக்கியின் மூலம், ''முத்துசாமி, முத்துசாமி'' என்று குரல் கொடுத்தார்.

நான் அந்த கிளப்பின் உட்புறம் கண்ணோட்டமிட்டேன். மதுவும், மாதுவும் எங்கும் காணப்பட்டன.

உள்ளேயிருந்து ஆர்க்கெஸ்ட்ராவின் ஓசை கம்பீரமாக வெளியாகிக் கொண்டிருந்தது.

இரண்டு முறை அவர் குரல் கொடுத்தும் முத்துசாமி வரவில்லை. இதற்குள் ஒரு பெண்மணி என்னை நெருங்கி, ''நீங்கள் யாரைப் பார்க்க வேண்டும்'' என்று கேட்டார்.

''முத்துசாமியை'' என்றேன்.

''முத்துசாமி...'' என்று ஒருமுறை கூறிப் புருவத்தைச் சுருக்கியவர், ''ஓ, யூ மீன் குஜ்ஜி...'' என்று கூறிவிட்டு, ஒலிபெருக்கியில் ''குஜ்ஜி, யூ ஆர் வான்டட்'' என்று குரல் கொடுத்தார்.

அடுத்த நிமிஷம், ''ஹலோ மிஸ்டர் மணியன்...'' என்று, என் முன்னுல் நின்ருர் ஒருவர்.

அவரை உற்றுப் பார்த்தேன் நான்.

சிவந்த உருவம், மெல்லிய தேகவாகு, சுருண்ட முடி. முத்துசாமி யுடன் எனக்குக் கடிதத் தொடர்புதான் உண்டு. 'ஸிட்னி அருகில் உள்ள உல்லங்காங் என்ற இடத்தில் பணி புரியும் ஒரு தொழில் நுட்ப வல்லுநர், விகடன் வாசகர்'—இதுதான் அவரைப் பற்றி எனக்குத் தெரிந்த விவரங் கள். 'நான் ஆஸ்திரேலியா வருகிறேன், உங்கள் உதவி தேவை!' என்று எழுதியிருந்தேன். 'தாராளமாக உதவுகிறேன். வாருங்கள்' என்று பதில் எழுதியிருந்தார். ஸிட்னியை அடைந்தவுடன் டெலிபோனில் அவருடன் பேசினேன். புத்தாண்டு இரவன்று, ஆல் நேஷன்ஸ் கிளப்பில் சந்திப்ப தாக ஏற்பாடு செய்து கொண்டேன். ஆகவே, அப்போதுதான் முதன் முறையாக அவரைப் பார்க்கிறேன். அசப்பில், ஆஸ்திரேலியர் போன்றே தோன்றினுர் அந்த சென்னைவாசி.

''என்ன......மௌனமாகி விட்டீர்கள்?... கம் இன்...'' என்ருர் அவர் என்னைப் பார்த்து.

''தாங்க்யூ......'' என்று கூறி, நுழைவுக் கட்டணத்தைச் செலுத்தி விட்டு அவரைப் பின் தொடர்ந்தேன்.

ஹாலில் பெருங் கூட்டம். வாத்திய இசைக்கேற்ப, ஆணும் பெண் ணும் இணைந்து நடனமாடிக் கொண்டிருந்தனர்.

ஒரு மூலையில் இருந்த டேபிளுக்கு என்னை அழைத்துச் சென்று, அங் கிருந்தவர்களிடம் என்னை அறிமுகப்படுத்தி விட்டவர்,''திஸ் ஈஸ் பீட்டர், டோனு, ப்ரூஸ், லெஸ்லி'' என்று படபடவென்று வரிசையாகச் சொல்லிக் கொண்டே போனுர். யார் பீட்டர், யார் டோனு என்று உடனே கேட்டிருந்தால் என்னுல் சொல்லி இருக்க முடியாது.

''ஹலோ...'' என்றேன் நான், எல்லோரையும் பார்த்து.

''ஹாவ் எ ட்ரிங்க்...'' என்று என்னிடம் ஒரு டம்ளரைக் கொடுத் தார்கள்.

''தாங்க்யூ... நான் மது அருந்துவதில்லை'' என்று அதை நிராகரித்து விட்டு, குளிர்பானம் ஒன்றை எடுத்துக் கொண்டேன்.

இதற்குள் முத்துசாமி, ''மன்னிக்க வேண்டும், கொஞ்சம் ஆடி விட்டு வருகிறேன்...'' என்று கூறி, லெஸ்லி என்ற பெண்ணை அழைத்துக் கொண்டு, அரங்குக்கு ஆடச் சென்ருர்.

டோனு என்ற பெண்மணி என் அருகில் வந்து, ''கம் ஆன், லெட் அஸ் டான்ஸ்...'' என்ருள்.

''மன்னிக்க வேண்டும். எனக்கு ஆடிப் பழக்கமில்லை...'' என்றேன்.

''ஈஸ் இட்?...பின் எதற்காக இங்கே வந்தீர்கள்?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டாள் அவள்.

''ஜஸ்ட் லைக் தட் வந்தேன்...'' என்றேன்.

''உங்கள் ஊரில் புது வருஷத்திற்கு நீங்கள் நடனம் ஆடுவ தில்லையா?'' என்று அடுத்த கேள்வியைக் கேட்டாள்.

''இப்போதெல்லாம் ஒரு சிலர் ஆடுகிருர்கள். ஆனுல், எங்கள் நாட்டில் அதெல்லாம் வழக்கமில்லை...'' என்று கூறி, நடனத்தில் கவனம் செலுத்தினேன்.

கொஞ்ச நேரம் ஆடிவிட்டு வந்த முத்துசாமி, ''லெஸ்லி ஒரு பள்ளிக் கூட ஆசிரியை. நல்ல பெண். அவளுடன் நீங்கள் ஆடுங்கள்...'' என்ருர்.

''குஜ்ஜி, என்னைப் பற்றி உன் பாஷையில் என்ன சொல்கிருய்?'' என்று குறுக்கிட்டுக் கேட்டாள் லெஸ்லி.

''நீ ரொம்ப நல்ல பெண் என்று சொல்கிறேன்'' என்ருர் முத்துசாமி சிரித்துக் கொண்டே.

முத்துசாமி, டோனுவுடன் அடுத்த ரவுண்ட் ஆடச் சென்ருர்.

லெஸ்லி என் அருகில் வந்து அமர்ந்து கொண்டாள்.

''நீங்கள் ஸிட்னியில்தான் இருக்கிறீர்களா?'' என்று கேட்டேன் அவளை.

''இல்லை. இங்கிருந்து சில மைல்கள் தள்ளி உல்லங்காங் என்ற இடத்தில் இருக்கிறேன். புது வருஷத்திற்காக இங்கே வந்தேன்.''

''ஐஸீ... எங்கே பணியாற்றுகிறீர்கள்?''

''உல்லங்காங்கிலேயே ஆசிரியை வேலை செய்கிறேன்.''

''வேலை பிடித்திருக்கிறதா?''

''அப்கோர்ஸ்...... டீச்சிங் நல்ல தொழிலாயிற்றே! சின்ன வயதி லிருந்தே எனக்கு அதில் ஆர்வம் அதிகம்'' என்ருள்.

பிறகு, அந் நாட்டுக் கல்வி முறையைப் பற்றி என்னிடம் விளக்கினுள்: ''ஆஸ்திரேலியாவில் குழந்தைகளை உருவாக்குவதில் ஆசிரியைகளின் பங்கு மகத்தானது. ஆசிரியை எப்படி இருக்கிருளோ, அப்படித்தான் குழந்தை களும் இருக்கும்'' என்ருள்.

'வளர்ந்து வரும் எங்கள் தேசத்தில் பெற்ருேரால் குழந்தைகளைச் சரியாகக் கவனிக்க முடிவதில்லை. எனவே, வருங்கால சந்ததிகளின்

நல்வாழ்வு, எங்களைப் போன்ற ஆசிரியைகளிடம்தான் இருக்கிறது. ஆசிரியைகள் தவருன முறையில் நடந்து கொண்டால், அவர்களைப் பார்த்துக் குழந்தைகளும் அப்படியே உருவாகும். பெற்ருேரிடம் இருக்கும் நேரத்தைவிட, எங்களைப் போன்ற ஆசிரியைகளிடம்தான் அதிக நேரத்தைக் குழந்தைகள் செலவிடுகின்றன. சொல்லப் போனல் நாங்கள்தான் ரியல் பேரண்ட்ஸ்'' என்ருள் லெஸ்லி.

இரண்டோர் ஆண்டுகள் 'டீச்' செய்துவிட்டு, கல்யாணம் செய்து கொண்டு, குழந்தைகளுடன் வாழ வேண்டும் என்பதுதான் லெஸ்லியின் ஆசையாம்!

''என்னைப் போன்ற ஆசிரியை, சிறந்த மனைவியாக இருக்க முடியும். குழந்தைகளுக்குக் கல்வி கற்றுக் கொடுக்கும் போதே, நாங்களும் நிறையக் கற்றுக் கொள்கிருேம்! நீதி போதனைகள் செய்யும்போது, நாங்களும் போதனை பெறுகிருேம்! குழந்தைகளிடம் பழகிப் பழகி 'சகிப்புத் தன்மை' பெற்றுவிடுகிருேம். எனவே, எங்களைப் போன்ற ஆசிரியையை மனைவியாக அடைய, கொடுத்து வைத்திருக்க வேண்டும். ஆயிரம்தான் சொல்லுங்கள், பெண், குடும்பத் தலைவியாக, இல்லத்தரசியாக இருப்பதற்கே படைக்கப்பட்டவள். வேறு வேலைகள் அவளுக்கு ஏற்றதல்ல'' என்ருள்.

அவள் பேசப் பேச, அவள் லெஸ்லியா, இல்லை, நம் ஊர் லட்சுமியா என்ற சந்தேகமே எனக்கு ஏற்பட்டது.

மணி நள்ளிரவு பன்னிரண்டை நெருங்கிக் கொண்டிருந்தது. வாத்திய கோஷ்டி துரித கதியில் இயங்கியது. ப்ரூஸ் என்ற பெண்மணி என்னை நெருங்கி, என் கையைப் பிடித்து இழுத்து ''கம்ஆன்... லெட் அஸ் ஸெலிப்ரேட் தி நியூ இயர்''என்று அரங்குக்கு இழுத்துச் சென்றுவிட்டார்.

எனக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை. தர்மசங்கடமான நிலைமை. ப்ரூஸ் என் கையை இறுக்கமாகப் பிடித்துக் கொண்டுவிட்டார். கால்களை இப்படியும் அப்படியும் நகர்த்தினேன்.

''இப்படி ... இப்படி... யெஸ்... யெஸ்... தட் இஸ் ரைட்...'' என்று, என்னை மெல்ல அணைத்துக் கொண்டு, நடனம் கற்பித்தார் ப்ரூஸ்.

நானும் கொஞ்சம் கொஞ்சமாக அதைப் புரிந்து கொண்டேன். அந்த நடனம் ஒன்றும் அவ்வளவு கஷ்டமானதாக இருக்கவில்லை. ஹாலில் இருள் கப்பிக் கொண்டு வந்தது. இசை ஓசை அதிகரித்தது. பலூன்கள் 'பட் பட்'என்று வெடித்தன. வண்ணச்சுருள் காகிதங்கள் அறையெங்கும் பறந்தன.

'ஹாப்பி நியூ இயர்... ஹாப்பி நியூ இயர்' என்ற கோஷம் பிறந்தது. கணவனும் மனைவியும், காதலனும் காதலியும் ஒருவரை ஒருவர் கட்டி முத்தமிட்டுக் கொண்டார்கள். திருமதி ப்ரூஸ் மெல்ல என் கன்னத்தில் முத்தமிட்டார்.

[திருமதி ப்ரூஸ் 45 வயதுப் பெண்மணி. என் மனைவிக்காகச் சொல்லவில்லை; உண்மையில் அவர் வயதானவர்தான்.]

''ஏதோ ஆடத் தெரியாது என்று சொன்னீர்களே, பிரமாதமாக ஆடினீர்களே'' என்ருள் டோரு, என் அருகில் வந்து.

நான் அசட்டுச் சிரிப்பு சிரித்தேன்.

அதன் பிறகும் நடனம் நடைபெற்றது. எல்லோரும் சேர்ந்து சேர்ந்து ஆடினர்.

இரவு மணி இரண்டு.

''ஓகே... இப்போது நாம் இங்கிருந்து புறப்பட்டு, ப்ருஸ் வீட்டிற்குப் போகிறோம். அங்கு ஒரு சிறு நடனம்'' என்றார் குஜ்ஜி.

''என்னது? மணி இரண்டாகிவிட்டது. இன்னும் நடனமா?'' என்றேன்.

''கம் ஆன் மணியன். வருஷத்திற்கு ஒரு நாள். நாளை முழுவதும் தூங்கலாம்'' என்று கூறி, என் பதிலுக்குக் காத்திராமல் வெளியேறினார் குஜ்ஜி.

ப்ருஸ் வாழும் இடத்திற்கு நாங்கள் சென்ற போது, மணி மூன்று. சிறிய வீடு அது. ஹாலில் இருந்த நாற்காலிகளும் மேஜைகளும் வெளியே அகற்றப்பட்டன. எல்லோரும் மீண்டும் கொஞ்சம் மது அருந்தினார்கள். முத்துசாமி, இந்திய நடனம் ஆடினார். ஒரு கறுப்புத் துணியைப் போர்த்திக் கொண்டு, 'ஆடு பாம்பே' ஆடினார். அவரைப் பார்த்து, மற்றவர்களும் ஆடினார்கள்.

டோனா என் அருகில் வந்து, ''உங்கள் ஊர் நடனம் பிரமாதம்தான்'' என்றாள்.

''புராதனமானது'' என்றேன். பிறகு, ''மன்னிக்க வேண்டும். நீங்கள் எல்லோருமே இங்கே இருக்கிறீர்களா? எல்லோரும் உறவினரா?'' என்று கேட்டேன்.

''உறவினர்கள்தான். இது என் தாயார் ப்ருஸின் வீடு'' என்றாள்.

''ஓ... அவர்தான் உங்கள் தந்தையா?'' என்று ப்ருஸிடம் நெருங்கி இருந்தவரைக் காட்டிக் கேட்டேன்.

''இல்லை, ப்ருஸ் என் தாயார்...'' என்றார்.

''அப்படியானால் அவர்...?'' என்று கேட்டேன்.

டோனா சுற்றுமுற்றும் பார்த்தாள். பிறகு, ''இப்படி உள்ளே வாருங்கள்... சொல்கிறேன்...'' என்று என்னை ஒரு தனி அறைக்குள் அழைத்துச் சென்று, கதவை உட்புறம் தாளிட்டாள்.

''என் தாயார் ப்ருஸ், என் தகப்பனாரை விவாகரத்து செய்து விட்டார். இப்போது இருப்பவர் புதுக் கணவர். நான் முதல் கணவருடைய மகள். பீட்டர் என் கணவர். அதோ, இன்னொரு பையன் இருக்கிறானே, அவன் என் தாயாரின் இப்போதைய கணவரின் மாஜி மனைவியின் பிள்ளை, புரிகிறதா?''... என்றாள்.

''புரிகிறது'' என்றேன்.

டோனாவின் பேச்சில் இரண்டு விஷயங்கள் நன்றாகப் புரிந்தன. அவர்கள் உறவுமுறை மட்டுமல்ல; என்னதான் சமூகம் அனுமதித்தாலும், இம்மாதிரி உறவுகளைப் பற்றி பகிரங்கமாகப் பேச, ஒரு சிலர் இன்னமும் தயங்கத்தான் செய்கிறார்கள் என்ற உண்மையும் அன்று எனக்குப் புரிந்தது.

# 7

“நாலு அவுன்ஸ் டார்க் சாக்லெட் எடுத்துக் கொண்டு, அதை லேசாக உடைத்துக் கொள்ளுங்கள். இரண்டு டீஸ்பூன் தண்ணீர், நாலு முட்டை, மூன்று டீஸ்பூன் சர்க்கரை, ஹைன் இன்ஸ்டன்ட் பிரஞ்ச் காப்பி ஒரு கவர், ஒரு சாக்லெட் கேக், அரை பைன்ட் க்ரீம் இவற்றையும் எடுத்துக் கொள்ளுங்கள்.

''வெந்நீரில் சாக்லெட்டைக் கரைய விட்டு, சர்க்கரையையும், முட்டையையும் போட்டு 'பீட்' செய்யுங்கள். பிறகு, இன்ஸ்டன்ட் காபியைப் போட்டுக் கலக்குங்கள். கலக்கினால், அருமையான பார்ட்டி 'கேக்' கிடைக்கும். தேவையான அளவுக்கு அதை வெட்டிக் கொள்ளலாம். பிறகு அதை ஃபிரிட்ஜில் வைத்திருங்கள். எல்லாவற்றையும் கவனமாகக் கேட்டுக் கொண்டீர்களா? நான் மீண்டும் சொல்கிறேன், சரி பார்த்துக் கொள்ளுங்கள்....''

ஸிட்னி நகரில், வென்ட்வொர்த் ஓட்டல் அறையில், நண்பர் ராமாநுஜத்திற்காகக் காத்திருந்தபோது, பொழுது போகாமல் டெலிபோன் டைரக்டரியைத் திருப்பினேன்.



''உங்களுக்கு ஒரு புது 'ரெஸிபி' (Recipe) வேண்டுமா? 79-3057 எண்ணுக்கு போன் செய்யுங்கள்'' என்று குறிப்பிட்டிருந்தது.

அந்த எண்ணுக்கு போன் செய்தேன். 'மேக் எ பார்ட்டி கேக்' (Make a party Cake) என்று அன்றைய 'ரெஸிபி'யைச் சொன்னார்கள். அதைத்தான் மேலே அப்படியே தந்திருக்கிறேன்.

அந்த எண்ணில், தினம் தினம் ஒரு புதிய 'ரெஸிபி' சொல்வார்களாம். குடும்பப் பெண்கள் அதைப் பெரும் ஆர்வத்துடன் கேட்கிறார்களாம்.

''எங்கள் டெலிபோன் இலாகா இப்படிப் புதிய புதிய உத்திகளைக் கையாளும். 'ஸ்போர்ட்ஸ்'ஸுக்கென்று ஒரு எண்ணே உண்டு. அதைத் தவிர, பிரார்த்தனை கீதம் கேட்க வேண்டுமென்றால் ஒரு எண். பலர் தினமும் இரவு படுக்கப் போகு முன் 'பைபிள்' பாடலைக் கேட்டுவிட்டுத்தான் படுக்கிறார்கள்'' என்று மிஸ்டர் ரோஜர்ஸ் என்ற நண்பர் அவர் ஊர் டெலிபோனைப் பற்றி என்னிடம் பெருமையாகப் பேசினார்.

அன்றிரவு படுக்கப் போகும்போது நானும் 599-3000 என்ற எண்ணுக்கு போன் செய்து, பிரார்த்தனை கீதம் ஒன்றைக் கேட்டேன்.

'உயர்ந்த வாழ்க்கை வாழ வேண்டும். சிற்றின்பத்தைக் கடந்து பேரின்பத்தை அனுபவிக்க முயல வேண்டும்' என்ற கருத்தினை வலியுறுத்தி, பதிவு செய்யப்பட்ட ஒரு பாடல் டெலிபோனில் அஞ்சலாகியது.

''ஸிட்னிக்கு வந்து விட்டு, ஸிட்னி கிரிக்கெட் மைதானத்தைப் பார்க்காமல் போகக் கூடாது. வாருங்கள்,அங்கே இப்போது ஒரு மாட்ச் நடந்து கொண்டிருக்கிறது, போகலாம்...'' என்று அழைத்தார் நண்பர் ராமானுஜம்.

ஸிட்னி கிரிக்கெட் மைதானத்தைப் பற்றியும், அதிலுள்ள புகழ் பெற்ற 'ஸிட்னி ஹில்' (Sydney Hill) லைப்பற்றியும் நான் நிறைய கேள்விப் பட்டிருந்தேன்.

எனவே, அவருடன் புறப்பட்டேன். போகும்போது கிரிக்கெட்டைப் பற்றிப் பேச்சு எழுந்தது. ''ஆஸ்திரேலியாவில் இப்போதெல்லாம் கிரிக்கெட்டுக்கு 'மவுசு' குறைந்து வருகிறது. ஜனங்கள் குறைந்த நேரத்தில் முடியக் கூடிய விறுவிறுப்பான ஆட்டத்தையே விரும்புகிறார்கள். 'யாரையா ஐந்து நாட்கள் உட்கார்ந்து கொண்டு ஒரு ஆட்டத்தைப் பார்ப்பது' என்று மக்கள் சலித்துக் கொள்கிறார்கள்...'' என்று குறிப்பிட்டார் ராமானுஜம். பிறகு, ''பொதுவாகவே ஆஸ்திரேலியர்களுக்கு கிரிக்கெட்டில் மற்றவர்கள் நினைப்பது போல் பேராவல் கிடையாது......'' என்று கூறிவிட்டு, தனக்குத்தானே சிரித்துக் கொண்டார் அவர்.

''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''இல்லை, இதுபற்றி ஒரு 'ஜோக்' உண்டு. அது நினைவுக்கு வந்தது, சிரித்தேன்'' என்றார்.

''ஜோக்கா! சொல்லுங்களேன்...'' என்றேன்.

''ஆஸ்திரேலியாவின் முன்னாள் பிரதமர் மென்ஸிஸ், அவர் மனைவியுடன் ஒருநாள் கிரிக்கெட் மாட்சுக்குச் சென்றாராம். அன்று ஹாப்ஸ் (Hobs), சட்லிப் (Sutliff) இருவரும் ஆரம்ப ஆட்டக்காரர்கள். இருவரும் முழு நாள் ஆடி, 'அவுட்' ஆகாமலே உள்ளே சென்றார்கள். மென்ஸிஸ் தம்பதி அன்று ஒரு நாள்தான் ஆட்டம் பார்த்தார்கள். இது நடந்து ஒரு வருஷத்திற்குப் பிறகு, இந்தத் தம்பதி இங்கிலாந்துக்குச் சென்றிருந்தனர். அங்கேயும் இரு நாடுகளுக்கிடையே நடந்த 'மாட்ச்' சைக் காண, முதல் நாள் மென்ஸிஸ் தம்பதி சென்றனர். ஹாப்ஸ், சட்லிப் இருவரும் மட்டையுடன் உள்ளே நுழைந்தனர். அதைக் கண்டதும், திருமதி மென்ஸிஸ் திகைத்துப் போய், 'என்ன இது, இன்னுமா இவர்கள் அவுட் ஆகவில்லை' என்று கேட்டாராம். இது சாதாரண ஜோக்காக இருக்கலாம். ஆனால் ஆஸ்திரேலியப் பெண்களுக்குக் கிரிக்கெட்டில் அவ்வளவாக ஆசை கிடையாது என்ற உண்மையை இது விளக்குகிறதல்லவா?......'' என்றார்.

ஸிட்னி மைதானத்தில், க்வீன்ஸ்லாந்திற்கும், நியூஸௌத்வேல்ஸுக்கும் இடையே மாட்ச் நடந்து கொண்டிருந்தது. நாங்கள் உள்ளே நுழைந்தபோது, இந்திய ஆட்டக்காரர் ஸுர்தியும், ஆல்பரியும் ஆடிக் கொண்டிருந்தனர். ஆட்டம் சுவாரசியமாக இல்லை. நான் மைதானத்தைச் சுற்றிப் பார்த்தேன். ஒருபுறம் பெரிய மேடு ஒன்று தெரிந்தது. அதில், கால்களை நன்றாக நீட்டியவாறு, குல்லாயைக் கண்வரை மறைவாக அணிந்து, புல் தரையில் அமர்ந்து கொண்டு, பலர் மாட்சைப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

''அதுதான் புகழ் பெற்ற 'ஸிட்னி ஹில்''' என்றார் ராமாநுஜம். நான் அந்த இடம்வரை சென்று, சிறிது நேரம் உட்கார்ந்துவிட்டு வந்தேன்.

''**1778**-ம் ஆண்டு, 700 பிரிட்டிஷ் கான்விக்டுகளின் வருகையுடன் ஆரம்பிக்கப்பட்ட நகரம் எங்கள் ஸிட்னி. வெள்ளைக்காரர்கள் எந்த நோக்கத்துடன் அவர்களை இங்கே அனுப்பினார்களோ தெரியாது. இன்று உலகில் உள்ள எல்லா நாடுகளுடனும் போட்டியிடும் வண்ணம் மிக உன்னத நகரமாக ஸிட்னி வளர்ந்திருக்கிறது.

''670 சதுர மைல் பரப்பளவிலுள்ள ஸிட்னி, இன்று தென் பஸிபிக்கில் மிகப் பெரிய துறைமுகம். 'லைட்வெயிட் கான்கிரீட்'டில் கட்டப்பட்ட உலகின் மிகப் பெரிய கட்டடம் இங்கேதான் இருக்கிறது. ஒற்றை ஸ்பானில், ஒரு பிரமாண்டமான சஸ்பென்ஷன் பிரிட்ஜ் இருப்பதை இங்குதான் காணலாம். அந்த பிரிட்ஜில் இரண்டு ரயில்வே லைன்களும், எட்டு வரிசைக் கார்களும் போகின்றன. இதையெல்லாவற்றையும் விட, எங்கள் ஸிட்னியில், நவீனமான ஒரு ஆபரா ஹவுஸ் (Opera House) உருவாகிக் கொண்டிருக்கிறது. கடலோரம் பாய்மரக் கப்பல் போன்ற தோற்றமுள்ள அந்த கலைக்கூடத்துக்கு ஆகும் செலவு என்ன தெரியுமா? 80 மில்லியன் டாலர் (அதாவது அறுபத்தெட்டு கோடி ரூபாய்). எங்கள் ஸிட்னியின்

ஜனத் தொகை இருபத்தைந்து லட்சம். அதில் பன்னிரண்டு லட்சம் அழகிய பெண்கள்...'' என்று ஸிட்னி புராணம் ஒன்றைப் படித்தார் தாமஸ் என்ற டூரிஸ்ட் ஆபீஸர்.

''இந்த அழகிய பெண்களை எங்கே சந்திக்கலாம் என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? கோ டு கிங்க்ஸ் கிராஸ் டு நைட்...யூ வில் ஸீ ஸம் ஆஃப் தெம்......'' என்றார் அவர் தொடர்ந்து.

அன்றிரவு நான் கிங்க்ஸ் கிராஸுக்கு மீண்டும் புறப்பட்டேன்.

'ஹவுஸ் புல்' என்ற போர்டு அங்கே தொங்கிக் கொண்டிருந்தது. அரங்கின் வாசலில் பல பேர் இப்படியும் அப்படியும் உலவிக் கொண்டிருந்தார்கள். 'ஒரு வேளை இங்கும் கள்ள மார்க்கெட்டில் டிக்கெட் கிடைக்குமோ?' என்று ஒருவித நப்பாசையுடன் அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தேன் நான். ஆனால், ஜோடி ஜோடியாக வந்து கொண்டிருந்த பலரும், 'கவுன்ட்டர்'வரை வந்து ஏமாற்றத்துடன் திரும்பிக் கொண்டிருந்தனர்.

குறுந்தாடி வைத்திருந்த ஒருவர், 'கவுன்ட்டர்' பெண்மணி சொன்னதைக் கேட்டு என் பக்கம் திரும்பி ''பீபிள் ஆர் மாட் (Mad) ஐ திங்க்...... இந்த நாடகம் வந்து ஒரு வருஷம் ஆகிறது. இன்னும் ஹவுஸ் புல்லா...... அப்படி என்னதான் இருக்கிறது இதில்!'' என்றார்.

''நீங்கள் இதுவரை இந்த நாடகத்தைப் பார்த்ததில்லையா?'' என்று கேட்டேன் நான்.

''இரண்டு முறை பார்த்து விட்டேன். ஏதோ பொழுது போகவில்லை. அதனால்தான் வந்தேன்'' என்றார்.

''அப்படித்தான் மற்றவர்களும் வருகிறார்களோ என்னவோ?'' என்றேன் நான்.

''மே பி (May be), பட் ஸ்டில், இது பயித்தியக்காரத்தனம்தான்'' என்று கூறிவிட்டு, ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக்கொண்டு அங்கிருந்து நகர்ந்தார்.

நான் மீண்டும் 'கவுன்ட்டர்' அருகே சென்று, அங்கிருந்த பெண்மணியிடம் ''நான் நாளைக் காலை ஸிட்னியை விட்டுப் போகிறேன். நான் ஒரு பத்திரிகைக்காரன். எனவே, இன்று இதைப் பார்க்க முடியுமானால், நன்றாக இருக்கும்'' என்றேன்.

''ஓ! யூ ஆர் எ ஜர்னலிஸ்ட்! ஜஸ்ட் வெயிட்'' என்று கூறி, உள்ளே சென்று, வேறு யாருடனோ பேசிவிட்டு வந்து 'உட்புறம் வாருங்கள்' என்று ரகசியமாகக் கூப்பிட்டு, கைக்குள் மறைத்து ஒரு டிக்கெட்டைத் திணித்தாள். பிறகு, ''உள்ளே போய் அமருங்கள், பணம் அங்கே வந்து வாங்கிக் கொள்கிறேன்'' என்றாள். எல்லாம் நம் ஊரில் நடப்பது போலவே இருந்தது.

ஸிட்னி நகரில், கிங்க்ஸ் கிராஸில் இருந்த ஒரு நாடகக் கொட்டகையில் நடந்து கொண்டிருந்த 'ஹேர்' என்ற நாடகத்தைப் பார்க்க நான் செய்த முஸ்தீபுகள்தான் இவை.

ஸிட்னி நகரில் நான் இருந்த சில நாட்களுக்குள் என்னைச் சந்தித்த பலரும் (திருமதி அப்பாட் உட்பட) ''நீங்கள் 'ஹேர்' பார்த்து விட்டீர்களா?'' என்று கேட்டு, 'ஹேர்' மீது எனக்கு ஒரு மோகத்தையே உண்டாக்கி விட்டார்கள்.

நாடக அரங்கின் உள்ளே அமர்ந்து, மேடையைப் பார்த்தேன். திரைச் சீலை எதுவும் இல்லை. ஏதோ காலி செய்யப் போகும் பழைய வீடு போல், எல்லாம் கலைந்து காணப்பட்டன.

இரவு சரியாகப் பத்து மணிக்கு நாடகம் துவங்கியது. மேடை மீது ஹிப்பிகள் பலர் தோன்றினர். நம் ஊர் எம். ஆர். ராதா போல் (தோற்றத்தில்) ஒருவர், கட்டைத் தொண்டையில், நாடகத்தைப்பற்றி ஏதோ சொன்னார். வெறும் நிஜார் மட்டும்தான் அவர் அணிந்திருந்தார். மேலே சட்டை எதுவும் இல்லை. திடீரென்று அந்த நிஜாரையும் அவிழ்த்தார். நல்ல வேளை, உள்ளே ஒரு சிறு துணி மட்டும் இருந்தது.

சபையில் உள்ள ஒருவரிடம் தம் நிஜாரை வீசி, ''கீப் இட்... அப்புறம் வாங்கிக் கொள்கிறேன்'' என்றார். அவர் ஏதோ பதில் சொல்ல, ''மறுத்தால், இந்த உள் ஆடையையும் அவிழ்த்து உன் மேல் எறிவேன்'' என்று சிரித்துக் கொண்டே பயமுறுத்தினர்.

இவரைச் சுற்றி இவரைப் போலவே 'காட்டுமிராண்டித்தனமான' சிலர் தோன்றினர், தொள தொளவென்ற ஆடையுடன் சில பெண்கள். எல்லோரும் அடித் தொண்டையிலிருந்து கத்தினர்கள்.

மரக் கிளையில் தொங்கும் மந்திகள் போல், அவ்வப்போது சிலர் கொட்டகையின் உச்சிக்குப் போய்த் தொங்கினர்கள். 'ஆர்க்கெஸ்ட்ரா' புடைசூழ உரத்த குரலில் பாடினர்கள். நாடகம் முழுவதும், இன்றைய அமெரிக்க நாகரிகத்தைக் கேலி செய்வதாகத்தான் இருந்தது.

இடைவேளைக்கு முன்னல் ஒரு காட்சி, எல்லோரும் சொல்லிச் சொல்லி அலுத்துப் போன அந்தக் காட்சி. கொட்டகையின் உச்சியிலிருந்து பெரிய குடைபோல் ஒன்று கீழே வந்து, நடிக நடிகைகளையெல்லாம் மூடிக் கொண்டது. எல்லோரும் உரத்த குரலில் பாடிக் கொண்டிருந்தார்கள். பாட்டு முடியும்போது, குடை மேலே ஏறியது. நடிக நடிகைகள் அனைவரும், எந்தவித உடையுமின்றி, நிர்வாணமாக மேடை மீது நின்று கொண்டிருந்தனர்.

எதற்காக என்று கேட்கிறீர்களா?

இன்றைய நாகரிக உலகத்தைக் கேலி செய்கிறார்களாம்!

அரங்கத்தில் கூடி யிருந்த ஆணும் பெண்ணும், இந்தக் காட்சியைப் பெருமிதத்தோடு பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

இன்டர்வெலின் போது, இதை விமரிசனம் வேறு செய்தார்கள்.

கடைசியில் ஒரு வழியாக நாடகம் முடிந்தது.

அந்த நாடகத்தைப் பெரிய 'ஸடைர்' என்ருர்கள். எனக்கு அதில் எதுவும் பிடிக்கவில்லை.

'கிங்க்ஸ் கிராஸி'லிருந்து, ஓட்டலுக்கு நடந்தே திரும்பி விடலாம் என்று புறப்பட்டேன். அந்த நள்ளிரவு வேளையிலும் சாலையில் நடமாட்டம் அதிகமாகவே இருந்தது. ஆங்காங்கே நிறையப் பெண்கள் காணப்பட்டனர். டூரிஸ்ட் ஆபீசர் சொன்ன கருத்து நினைவுக்கு வந்தது. ஸிட்னியில் பெண்கள் அதிகம்தான்.

கண்பட்ட இடமெல்லாம் தனித்து நிற்கும் பெண்கள் காணப்பட்டனர். நான் ஒரு தெரு மூலையில் நின்று, வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன். தனித்து நிற்கும் பெண்களிடம் சென்று, ஏதோ பேசி, அவர்களை அழைத்துக் கொண்டு, காரிலோ டாக்ஸியிலோ பயணமாகிக் கொண்டிருந்தனர் பல இளைஞர்கள். அதைப் பார்த்துக் கொண்டிருந்தபோது, கிங்க்ஸ் கிராஸில் 'பிக்அப் கேர்ல்ஸ்' அதிகம் என்று பல நண்பர்கள் கூறியது எனக்கு நினைவுக்கு வந்தது.

நான் தெரு முனையில் நிற்பதை வெகு நேரமாகக் கவனித்துக் கொண்டிருந்த ஒரு 'மினிஸ்கர்ட் பெண்' என்னை நெருங்கி "ஹலோ!" என்று சிரித்தாள்.

நானும் "ஹலோ" என்றேன்.

"ஏன் இங்கே நிற்கிறீர்கள்? போவோமா?" என்ருள்.

"எங்கே?" என்றேன்.

"நீங்கள் எங்கு சொல்கிறீர்களோ, அங்கே" என்ருள்.

"மன்னிக்கவும்......நான் ஒரு ஏழை டூரிஸ்ட்" என்றேன், அவள் என்ன கூறுகிருள் என்பதைப் புரிந்து கொண்டு.

"நீங்கள் எந்த நாட்டிலிருந்து வருகிறீர்கள்? ஆர்மீனியனு?" என்று கேட்டாள்.

"இல்லை, இந்தியன்."

"ஓ! இந்தியரா? அதுதான் இப்படி ஒதுங்கி நிற்கிறீர்கள். இந்தியர்கள் ஒரு பெண்ணோடு காதல் செய்யும் முறை எனக்குத் தெரியும். அது மிகவும் கஷ்டமானது" என்ருள்.

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? புரியவில்லையே" என்றேன்.

"நான் இஸ்ரேல் பெண். இஸ்ரேலிலிருந்து இங்கு வருவதற்கு முன்னல், பம்பாயில் ஒரு இரவு தங்கினேன். உங்கள் 'உருது' படம் இரண்டு பார்த்தேன். அதில் காதலனும் காதலியும் ஓடிப் பிடித்து விளையாடுகிருர்கள், பாடுகிருர்கள், மரத்தில் ஒளிந்து கொள்கிருர்கள், தரையில் உருளுகிருர்கள். அதன் பிறகுதான் படுக்கை அறைக்குப் போகிருர்கள். விசாரித்ததில் 'அதுதான் இந்தியன் வே ஆஃப் மேகிங் லவ்' என்ருர்கள். அது ரொம்ப கஷ்டம் மிஸ்டர்" என்று கூறி, அங்கிருந்து நகர்ந்தாள். நான் பிரமித்துப் போய் நின்றேன்.

இந்தியப் படங்கள்தான் இந்தியாவைப் பற்றி எத்தகைய அபிப்பிராயங்களை உருவாக்கி இருக்கின்றன?

# 8

டாக்டர் மார்டென்ஸன் (ஸீனியர்) அவர்களுடன்...

லால்குடி ஜெயராமனின் வயலினும், வெங்கட்ராமனின் வீணையும், ரமணியின் புல்லாங்குழலும் ஒன்று சேர்ந்து இனிமையைப் பொழிந்து கொண்டிருந்தன. சின்னஞ்சிறு டேப் ரிகார்டர் மூலம் வெளியான அந்த இன்னிசையைக் கேட்டுக் கொண்டே, நண்பர் சுப்பையாவுடன் மெல்போர்ன் நகரின் ஒரு கோடியில் உள்ள ஓர் இடத்தை நோக்கிப் பயணம் செய்து கொண்டிருந்தேன் நான்.

ஸிட்னி நகரிலிருந்து புறப்பட்டு நான் சென்ற அடுத்த நகரம், மெல்போர்ன். மெல்போர்ன் நகர விமான நிலையத்திலேயே என்னைச் சந்தித்து, தம் வீட்டிற்கு அழைத்துச் சென்றார், மதுரையைச் சேர்ந்த டாக்டர் சுப்பையா.

'ஸெயின்ட் வின்ஸண்ட்' என்ற பிரபல ஆஸ்பத்திரியில், முக்கியமான ஒரு டாக்டராகப் பணியாற்றுகிறார் இளைஞர் டாக்டர் சுப்பையா.

மெல்போர்ன் நகரை அடைந்தவுடன் நான் செய்த முதல் காரியம், டான் பிராட்மெனைச் சந்தித்ததுதான். அந்தப் பேட்டி முடிந்த பிறகு, ''உங்கள் ஊர் மக்களைச் சந்திக்க வேண்டும். அதற்கு ஏற்பாடு செய்யுங்கள் டாக்டர்'' என்று சுப்பையாவைக் கேட்டுக் கொண்டேன்.



''மக்கள் என்பது மிகவும் விரிவான வார்த்தை. எத்தகைய மக்களைச் சந்திக்க வேண்டும், அவர்களிடமிருந்து என்ன தெரிந்து கொள்ள வேண்டும்? அதை விளக்கமாகச் சொல்லுங்கள்— ஸிட்னி நகருக்கும் மெல்போர்ன் நகருக்கும் நிறைய வித்தியாசம் உண்டு. மெல்போர்ன், விக்டோரியா மாநிலத்தைச் சேர்ந்த ஊர். இவர்கள் தங்களைப் பெருமையுடன் 'விக்டோரியன்'கள் என்று சொல்லிக் கொள்வார்கள். விக்டோரியன்கள் கொஞ்சம் தூய்மையானவர்களாம் (Puritans)! பிரிட்டிஷ் பாரம்பரியத்தின் சுவடுகளை இங்கே நிறையக் காணலாம். ஸிட்னியைப் போல் இந்த ஊரில்'நைட் கிளப்'கள் கிடையாது. சொல்லப் போனால், இரவு வாழ்க்கைக்கு இந்த ஊர் ஏற்றதே அல்ல... ஸிட்னியில் நீங்கள் பார்த்தீர்களே, 'ஹேர்' என்ற நாடகம், அதை இந்த ஊருக்குள் கனவில் கூட விடமாட்டார்கள். அந்த விஷயத்தில் ரொம்ப 'ஸ்ட்ரிக்ட்' இவர்கள்... அதனால் யாரைச் சந்திக்க வேண்டும் என்று குறிப்பாகச் சொல்லுங்கள், ஏற்பாடு செய்கிறேன்...'' என்றார்.

''அப்படியா? யாரையெல்லாம் சந்தித்தால் எனக்குக் கொஞ்சம் விஷயங்கள் கிடைக்குமோ, அவர்களிட மெல்லாம் என்னை அழைத்துச் செல்லுங்கள்...'' என்றேன்.

''நாளை காலை என்னுடைய ஸீனியர் டாக்டர் வீட்டில் ஒரு 'பார்பிக்யூ' (Barbecue) பார்ட்டி இருக்கிறது. அங்கே பல டாக்டர்கள் குடும்பத்துடன் வருவார்கள். நீங்கள் என்னுடன் வந்தால், அவர்களை யெல்லாம் சந்திக்கலாம்'' என்றார்.

மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டேன் நான்.

மெல்போர்ன் நகரின் ஒரு கோடியில் இருந்த அந்த ஸீனியர் டாக்டரின் வீட்டுக்குத்தான், அப்போது நாங்கள் கர்நாடக இசையை ரசித்துக் கொண்டே, காரில் பயணம் செய்து கொண்டிருந்தோம்.

டாக்டர் சுப்பையாவுக்கு நமது கர்நாடக இசையில் மிகவும் ஈடுபாடு இருந்தது. லால்குடியின் வயலினில் அவருக்குப் பயித்தியமே உண்டு. ஆகவே, அந்த 'டேப்'பைப் போட்டுக்கொண்டுதான் எப்போதும் பயணம் செய்தார்.

''நாம் சந்திக்கப் போகும் டாக்டரின் பெயர் என்ன?'' என்று கேட்டேன்.

''டாக்டர் மார்டென்ஸன். அவர் மிகவும் பிரபலமான சர்ஜன், வெரி நைஸ் மேன்...'' என்றார்.

அமைதியான இடத்திலே அமைந்திருந்த அந்த பங்களாவுக்குள் நுழைந்து, கிருகினுல் ஒலி எழுப்பும் அழைப்பு மணியை இயக்கினோம். ''வெல்கம் சுப்பையா...'' என்று கூறிக்கொண்டே கதவைத் திறந்தார் டாக்டர் மார்டென்ஸன்.

சுப்பையா என்னை அறிமுகப்படுத்தி வைத்தார்.

''வெல்கம் மிஸ்டர் மணியன்...'' என்று கூறி, எங்களை வீட்டின் பின்பக்கத்தில் இருந்த திறந்த வெளிக்கு அழைத்துச் சென்றார் டாக்டர் மார்டென்ஸன்.

அங்குதான் அந்த பார்ட்டி நடந்து கொண்டிருந்தது.

திறந்தவெளியில், ஒரு பெரிய குமுட்டி அடுப்பை மூட்டி, தணலில் இறைச்சியைப் போட்டு சுட்டுச் சுட்டு எல்லோருக்கும் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். இறைச்சி மட்டுமல்ல, வாழைப் பழத்தையும் சுட்டுச் சாப்பிட்டார்கள். இந்த மாதிரி திறந்த வெளியில் திறந்த அடுப்புடன் நடக்கும் பார்ட்டிக்குத்தான் 'பார்பிக்யூ' (Barbecue) பார்ட்டி என்று பெயராம்!

அந்த இடத்தில் குழுமியிருந்தவர்கள் எல்லோரும் டாக்டர்கள்தான். அவர்களுடன் அவர்கள் குடும்பத்தினரும் இருந்தார்கள். எல்லோருக்கும் நான் அறிமுகம் செய்து வைக்கப்பட்டேன். 'இந்தியன்' என்றதும், என்னைச் சூழ்ந்து கொண்டு ஒவ்வொருவரும் ஒவ்வொரு கேள்வி கேட்க ஆரம்பித்தார்கள்.

எனக்குத் தேவையான சாப்பாட்டை எடுத்துக்கொண்டு, புல்வெளியில் அமர்ந்தேன். என்னிடமிருந்த 'டேப்' ஒன்றை டாக்டர் சுப்பையா கொண்டு வந்திருந்த 'டேப் ரிகார்ட'ரில் போட்டேன். என்னைச் சுற்றிப் பெண்களும், குழந்தைகளும் அமர்ந்து கொண்டனர்.

முதலில் 'ராஜ ராஜ ஸ்ரீ ராஜன் வந்தான்' என்ற திரைப் பாட்டு ஒலித்தது. அதை எல்லோரும் உற்றுக் கேட்டார்கள். பிறகு, 'தேடினேன் வந்தது' என்ற பாடல்.

''நைஸ்'' என்ற கருத்து பரவலாக எழுந்தது. பாட்டின் இடையே வரும் வாத்தியங்களை யெல்லாம் ஒரு சின்னப் பையன் நுட்பமாகக் கவனித்து, ''ஹை... ட்ரம்ஸ்...... திஸ் ஈஸ் வயலின்...... திஸ் ஈஸ் ப்ளூட்... திஸ் ஈஸ் சிதார்'' என்று சொல்லிக்கொண்டே வந்தான்.

''நீங்கள் ரவிசங்கர் சிதார் கேட்டிருக்கிறீர்களா?'' என்று ஒரு பெண் என்னைக் கேட்டாள்.

''ஓ'' என்றேன்.

''ஹி ஈஸ் வெரி நைஸ்...'' என்றாள் இன்னொருத்தி.

''ஐ லவ் ஹிம்... ஏன் தெரியுமா? அவர்தான் 'பீட்டில்'ஸின் குரு'' என்றாள் இன்னொருத்தி.

எப்படி! சிஷ்யர்களால் குருவுக்குப் பெருமை!

இதற்குள் ஒரு சிறு பையன் என்னிடம் மிக நெருங்கி வந்து, ''மிஸ்டர் மணியன், எனக்கொரு சந்தேகம். கேட்கலாமா?'' என்றான்.

''கேளேன்'' என்றேன், சாதாரணமாக.

''இந்தியாவை யார் கண்டுபிடித்தார்கள்?'' என்று ஒரு கேள்வியைத் தூக்கிப் போட்டான் அவன்.

''இந்தியாவை யார் கண்டு பிடித்தார்களா? என்ன கேட்கிறாய்?'' என்று சற்றே திகைத்துப் போய்க் கேட்டேன்.

''யெஸ்... காப்டன் குக் ஆஸ்திரேலியாவைக் கண்டுபிடித்தார். அதே போல் இந்தியாவை யாராவது கண்டு பிடித்திருக்க வேண்டுமே... அவர் யார்?'' என்றான்.

அவனுடைய இந்தக் கேள்விக்கு, என்ன பதில் சொல்வது என்று எனக்குப் புரியவில்லை.

''இந்தியா மிகவும் புராதனமான தேசம். ஆயிரமாயிரம் ஆண்டுகளாக இருக்கிற நாடு...அதை யாரும் கண்டு பிடிக்கவில்லை'' என்றேன்.

என் பேச்சு அவனைத் திருப்திப்படுத்தவில்லை.

''ஐயாம் ஸாரி... உங்களுக்கு உங்கள் நாட்டைப் பற்றிக் கூடச் சரியாகத் தெரியவில்லை. ஒருவர் கண்டு பிடிக்காமல் ஒரு தேசம் வரமுடியாது. முதலில் அதைத் தெரிந்து கொள்ளுங்கள். 'காப்டன் குக்' போல் உங்கள் நாட்டையும் ஒருவர் கண்டுபிடித்துத்தான் இருக்க வேண்டும். விசாரித்துத் தெரிந்து கொள்ளுங்கள்'' என்று கூறிவிட்டு, பட்டென்று அங்கிருந்து எழுந்து சென்றுவிட்டான்.

சில விநாடிகள் ஒன்றும் தோன்றாமல் அமர்ந்துவிட்டேன் நான்.

இதற்குள் டாக்டர் சுப்பையா ஒரு பெண்ணை அழைத்துக்கொண்டு வந்து என்னிடம் அறிமுகப்படுத்தினார்.

''இவர் பெயர் கார்பரா மெய்ச். இவர் ஒரு நர்ஸ். நம் நாட்டுக்கெல்லாம் உதவியிருக்கிறார்'' என்றார்.

''கிளாட் டு மீட் யூ'' என்று அவரைப் பார்த்துச் சொல்லிவிட்டு, ''எங்கள் நாட்டுக்கு நீங்கள் எப்படி உதவி யிருக்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''உங்கள் நாட்டுக்கு என்று இல்லை. 'அண்டர் டெவலப்ட் நேஷன்ஸ்' (Under developed Nations) எல்லாவற்றுக்கும் நாங்கள் உதவுகிறோம். வாக் எகென்ஸ்ட் வாண்ட் (Walk against want) என்று ஒன்று. தனியார் தர்ம ஸ்தாபனம் அதை நடத்துகிறது. என்னைப் போல் சிலர் ஒரு நாளைக்கு எட்டு மணி நேரம் நடப்பதாக அவர்களிடம் சொல்வோம். உடல் வியர்க்க ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்திற்கு நடப்போம். வழியில் சிலர் தாகத்திற்கு 'கோக்' போன்ற பானங்கள் கொடுப்பார்கள். எட்டு மணி நேரம் நடந்தால், இவ்வளவு பணம் என்று உண்டு. நடந்து அவர்களிடமிருந்து அந்தப் பணத்தைப் பெற்று, கஷ்டப்படும் நாடுகளின் உதவி நிதிக்குக் கொடுத்து விடுவோம். அப்படி நான் நடந்திருக்கிறேன். அதைத்தான் இவர் பெரிதாகச் சொல்கிறார்'' என்றார்.

''நீங்கள் நடந்தால்தான் பணமா? அந்த ஸ்தாபனம் அதைச் சும்மாவே கொடுக்கலாமே?'' என்றேன் நான்.

''அப்படிக் கொடுப்பது 'பிச்சை' போல் இருக்கும். இப்போது என்னுடைய உழைப்புக்கு அவர்கள் பணம் கொடுக்கிறார்கள்; சம்பாதித்த பணத்தை நான் தர்மம் செய்கிறேன். 'தர்மம்' வேறு, 'பிச்சை' வேறு. இதில் இருக்கும் கௌரவமே அலாதியானது'' என்றார்.

பிறகு அவரிடம் பொதுவாகப் பேசிக் கொண்டிருந்தேன். திருமண விஷயமாகப் பேசியபோது, அங்கிருந்த பெண்களில் பலரும், ''நாங்கள் கொஞ்சம் 'கன்சர்வேடிவ்' இளைஞரையே கல்யாணம் செய்து கொள்ள விரும்புகிறோம். காரணம், அவர்தான் கொஞ்சம் 'ஸ்டேபி'ளாக இருப்பார். இந்த நாகரிகப் பித்துப் பிடித்தவர்கள், நாலு நாளைக்குத்தான் சரியாக இருப்பார்கள்'' என்ற கருத்தைத் தெரிவித்தார்கள்.

இதற்குள் ''மிஸ்டர் மணியன், கொஞ்சம் உள்ளே வருகிறீர்களா?'' என்று என்னை அழைத்தார் டாக்டர் மார்டென்ஸன்.

'ஷ்யூர்' என்று அவருடன் உள்ளே சென்றேன்.

அங்கே, சற்று வயதான ஒரு பெரியவர் கம்பீரமாக நின்றுகொண்டு இருந்தார்.

''இவர் என் தந்தை. மிஸ்டர் மார்டென்ஸன்...... ஒரு காலத்தில் மிகவும் பிரபலமான டாக்டர்'' என்று அறிமுகம் செய்து வைத்தார்.

''ஒரு காலத்தில் என்ன? இன்றும்தான். நான் மட்டும் தொழில் செய்து கொண்டிருந்தால், இன்றும் லட்சக்கணக்கில் சம்பாதிப்பேன்'' என்றார் அந்தப் பெரியவர் சிரித்துக்கொண்டே. பிறகு, "வெல் யங்மேன்'' என்று கூறி, என் தோளைத் தட்டி ''ஹௌ ஈஸ் இண்டியா? நான் பம்பாயில் சில நாள் தங்கி இருக்கிறேன். உங்கள் ஊர் டாக்டர்கள் எல்லாம் எப்படி யிருக்கிறார்கள்? அதே போல், இரவு பகல் பாராமல் உழைத்துக் கொண்டிருக்கிறார்களா? இல்லை...... வாழ்க்கையையும் கொஞ்சம் அனுபவிக்கிறார்களா...?'' என்று கேட்டார்.

''உங்கள் கேள்வி புரியவில்லையே!'' என்றேன்.

''எனக்குச் சில இந்திய டாக்டர்களைத் தெரியும். 'பேஷண்டு'களைத் தவிர வேறு ஒன்றுமே அவர்களுக்குத் தெரியாது. இருபத்து நாலு மணி நேரமும் உழைத்துச் சம்பாதிப்பார்கள். எந்தவித சுகத்தையும் அனுபவிக்கமாட்டார்கள். அவசர அவசரமாக வேலை செய்து, அவசர அவசரமாகச் சாப்பிட்டு, அவசர அவசரமாக வாழ்க்கையை முடித்துக் கொண்டு விடுவார்கள். வாழ்க்கையை ரசித்து வாழ வேண்டும். பணம் ஒரு கருவிதான் என்பதைப் புரிந்துகொண்டு, அதைச் சம்பாதிக்க வேண்டும். அப்படியில்லாமல், வயிற்றைக் கட்டி, வாயைக் கட்டிச் சம்பாதித்த சொத்தை இன்னொருவருக்கு வைத்துவிட்டுச் செத்துப் போவார்கள். லைஃப் ஈஸ் டு பி என்ஜாய்டு.

''நான் என்ன செய்தேன் தெரியுமா? அறுபத்து மூன்றாவது வயதில், 'ஓகோ' என்று பிராக்டீஸ் இருக்கும்போதே ஒரு நாள் என் பையனை அழைத்து இன்றிலிருந்து நான் 'ரிடையர்' ஆகிறேன். இனி என் பிராக்டீஸ் முழுவதும் உன்னுடையது. 'டேக் இட்' என்றேன். அன்றிலிருந்து

'கத்தி'யைக் கையால் கூடத் தொடவில்லை. இப்போது எனக்கு வயது 72. நானும் என் மனைவியும் தனியாக வாழ்கிறோம். இந்த ரிடையர்டு வாழ்க்கைக்காக நான் காத்திருந்தேன். வாழ்க்கையில் அனுபவிக்க வேண்டியது எவ்வளவோ இருக்கிறது. சிறந்த புத்தகங்களைப் படிக்க வேண்டும், இனிமையான இசையைக் கேட்டு அனுபவிக்க வேண்டும், தோட்டத்தில் சிருஷ்டிகர்த்தாவாக இருக்க வேண்டும், நாடுகள் பலவற்றைக் காண வேண்டும். ஓ... தேர் ஆர் லாட் ஆஃப் திங்ஸ் இன் லைஃப்... இப்போது நான் அவற்றை அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். இன்று காலை மூன்று மணிக்கு 'டைம்' பத்திரிகை படித்துக் கொண்டிருந்தேன். அதில் வந்திருந்த ஒரு சிறந்த விஷயம் என்னைக் கவர்ந்தது'' என்று அவர் பேசிக்கொண்டே போனார். அவரைத் தடுத்து நிறுத்தி, ''மன்னிக்க வேண்டும். காலையில் மூன்று மணிக்கு 'டைம்' பத்திரிகை படித்துக் கொண்டிருந்தீர்களா? என்ன அது?'' என்றேன்.

''யெஸ்......விடியற்காலை மூன்று மணிக்குத்தான். வேடிக்கையாக இருக்கிறதா? அதெல்லாம்தான் ரிடையர்டு வாழ்க்கையின் ரகசியங்கள். கமான், லெட் அஸ் ஸிட் ஸம்வேர் அண்ட் டாக்...... என்னைப் பற்றி நீ தெரிந்து கொள்ளலாம், உன்னைப் பற்றி நான் தெரிந்து கொள்கிறேன்'' என்றார்.

அடேயப்பா! அவரிடம்தான் எத்தனை எத்தனை சுவையான விஷயங்கள் இருந்தன!



# 9

ஜோன் — ஜென்னி

''ஏன் இப்படி அவசர அவசரமாகச் சாப்பிடுகிறீர்கள்? நிறுத்தி, நிதானமாகச் சாப்பிடுங்களேன்...'' என்றார் மார்டென்ஸன்.

''மன்னிக்க வேண்டும். எனக்கு அவசரமாகச் சாப்பிட்டே பழக்கமாகிவிட்டது. சில சமயம் ஐந்தே நிமிஷத்தில் 'லஞ்ச்' சாப்பிட்டுவிட்டு புறப்பட்டு விடுவேன்'' என்றேன் நான்.

''அது தவறு. வாழ்க்கையை அனுபவிக்கும் விதம் அதுவல்ல. உணவைச் சுவைத்து உண்ண வேண்டும், கலகலப்பாகப் பேசிக்கொண்டே சாப்பிட வேண்டும். இசையை ரசித்துக் கொண்டே இறைச்சியை உண்ண வேண்டும். இந்தியர்கள் மூன்று நான்கு 'கோர்ஸ்' சாப்பாடு சாப்பிடுவார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். நாங்கள் எல்லாம் அநேகமாக 'ஸிங்கிள் கோர்ஸ்'தான். டின்னர் டேபிளுக்குப் போய்விட்டால், குறைந்தது இரண்டு மணி நேரமாவது ஆகும். என்னைப் பொறுத்தவரை, ஒவ்வொரு விஷயத்திலும் தனி அக்கறை செலுத்த வேண்டும்... அது சாப்பாடானாலும் சரி, தூக்கமானாலும் சரி, வேலையானாலும் சரி! இன் லைஃப், எவ்வெரி பிட் மஸ்ட் பி என்ஜாய்ட். அதிலும் இப்போது ரிடையர் ஆகவிட்டு, நான் எல்லாவற்றையும் ரொம்பவும் ரசிக்கிறேன்...'' என்றார்.



நாங்கள் இருவரும், அந்த வீட்டில் ஒரு மூலையில் அமர்ந்தவாறு பேசிக் கொண்டிருந்தோம். எழுபத்திரண்டு வயது இளைஞர் டாக்டர் மார்டென்ஸன் மிகவும் உற்சாகத்துடன் என்னிடம் பேசிக் கொண்டிருந்தார். ரிடையர் ஆன பிறகு, தான் நடத்தும் தனிக் குடித்தனத்தைப் பற்றி விரிவாகப் பேசினர்.

எனக்கு, ஸிட்னி நகரில் 'வென்ட் வொர்த்' ஓட்டல் 'லாபி'யில் சந்தித்த திருமதி அப்பாட்டின் நினைவு வந்தது.

''உங்கள் ஊரில் வயதானவர்கள் படும் கஷ்டங்களைப் பற்றி நான் ஓர் அம்மையார் மூலம் கேள்விப்பட்டேன். பிள்ளை குட்டிகளை விட்டு விட்டு, யாருமற்ற அநாதைகளைப் போல் தனி வாழ்க்கை வாழுவதை அவர்கள் வெறுக்கிறார்கள். வாழ்க்கையையே ஒரு சுமையாகக் கருதுகிறார்கள்...'' என்று திருமதி அப்பாட்டின் சோகக் கதையைச் சொன்னேன்.

அதைக் கேட்டுவிட்டு டாக்டர் மார்டென்ஸன் சிரித்தார். பிறகு, '' ஷி ஈஸ் எ ஃபூல்......ஸாரி, நான் இப்படிச் சொல்வதற்கு என்னை மன்னிக்க வேண்டும். வாழ்க்கையை எப்படி ரசிக்க வேண்டுமென்று அவளுக்குத் தெரியவில்லை. தனிமை வாழ்க்கை கசக்கிறதோ? அது சொர்க்கம் ஐயா, சொர்க்கம். அவளைத் தோட்ட வேலையில் ஈடுபடச் சொல்லுங்கள், நேரம் போவதே தெரியாது. நம் கையால் நடும் சின்னஞ் சிறு செடி சிறப்பாக வளர்வதைப் பார்க்கும்போது, எத்தகைய புல்லரிப்பு ஏற்படும் தெரியுமா? 'சிருஷ்டி'யின்போது ஏற்படும் சிலிர்ப்பு இருக்கிறதே, ஓ...... இட் ஈஸ் கிரேட்... நல்ல சங்கீதத்திலும் ஈடுபாடு கொள்ளச் சொல்லுங்கள். நாலு இடங்களைப் பார்க்கச் சொல்லுங்கள். நான் அடுத்த ஜூலை மாதம் நாலாம் தேதி என் மனைவியுடன் ஓர் உலகப் பயணம் மேற்கொள்ளவிருக்கிறேன். அதற்கான திட்டங்களில் இப்போதே ஈடுபட்டிருக்கிறேன். அதைப் பற்றிச் சிந்திக்கும்போது, தோட்ட வேலைக்கு நேரம் குறைந்து விடுகிறது. எந்தெந்த ஊருக்குப் போவது என்பது பற்றி முடிவு செய்து, அந்தந்த ஊரைப் பற்றியெல்லாம் படித்துத் தெரிந்து கொள்கிறேன்... அடுத்த ஜூலைக்கு இந்த ஜனவரியிலேயே என்ன அவசரம் என்று கேட்டு விடாதீர்கள். இதுவே லேட்.... பிரயாணத்தில் மட்டும் நான் திட்டம் போட்டு வேலை செய்கிறவன். வாருங்கள், என் வீடு வரை போய் வருவோம்... என் தோட்டத்தையும் நீங்கள் பார்க்கலாம்...'' என்று கூறி, என்னை அழைத்துக் கொண்டு தம் காரில் அவர் வீட்டிற்குச் சென்றார்.

அமைதியான இடத்தில் இருந்த அந்த வீட்டைச் சுற்றி, அழகான தோட்டம் ஒன்று இருந்தது. அந்தத் தோட்டம் முழுவதையும் ஒரு சிறு குழந்தையின் உற்சாகத்துடன் எனக்குச் சுற்றிக் காண்பித்தார். வீட்டின் பின்னல், ஒரு 'நர்ஸரி'யே வைத்திருந்தார். அவருடைய உற்சாகத்தையும், சுறுசுறுப்பையும் கண்டு நான் சற்று வியந்துதான் போனேன்.

''இந்த வயதில் எவ்வளவு உற்சாகம் உங்களுக்கு?'' என்றேன்.

''வயதா? எதை வயது என்கிறீர்கள்? வருஷங்கள் வயதை ஏற்படுத்துவதில்லை. அது மனத்தில் இருக்கிறது. இருபது வயது இளைஞர்கள், சலித்துப் போய், எழுபது வயது கிழ வாழ்க்கை வாழ்வதில்லையா?

நான் என் வயதைப் பற்றியே சிந்திப்பதில்லை. ஐ ஃபீல் ஐயாம் யங்...'' என்று கூறியவர், தானே 'டீ' போட்டுக்கொண்டு வந்து எனக்குக் கொடுத்தார்.

டீயைப் பருகிக் கொண்டே, அந்த 'டிராயிங் ரூமை'ச் சுற்றிப் பார்த்தேன். பாதி படித்து மூடி வைக்கப்பட்டிருந்த 'டைம்' பத்திரிகையைக் கண்டதும், அன்று அதிகாலையில் அவர் படித்து வைத்த பத்திரிகை அதுதானோ என்று தோன்றியது. எனவே, அதைப் பற்றிக் கேட்டேன்.

''ஓ, அதுவா? எங்களுடைய தினசரி வாழ்க்கையில் எந்தவித கட்டுப்பாடும் கிடையாது. நோ ரிஜிடிடி! இஷ்டப்பட்ட போது தூங்குவோம். இஷ்டப்பட்ட போது விழித்திருப்போம். நேற்றிரவு மூன்று மணிக்கு விழிப்பு வந்துவிட்டது; எழுந்திருந்து கொஞ்சம் டீ போட்டுச் சாப்பிட்டு விட்டு 'டைம்' பத்திரிகை படித்துவிட்டு, மீண்டும் படுத்துக் கொண்டு தூங்கினேன்... மிஸ்டர் மணியன், சுருக்கமாகச் சொன்னால், இந்த ரிடையர்ட் வாழ்க்கை சொர்க்கம்... மீண்டும் அந்த அப்பாட் அம்மாளைச் சந்தித்தால், கையில் இருக்கும் சொர்க்கத்தை விட்டு விட்டு எங்கோ இருக்கும் நரகத்திற்காக ஏங்க வேண்டாம் என்று சொல்லுங்கள்...'' என்றார்.

அவரிடமிருந்து விடை பெற்று, மீண்டும் அவர் பிள்ளை மார்டென்ஸன் வீட்டிற்கு வந்தேன். அந்தப் பெரியவர் கூறிய பல கருத்துக்கள் என்னைச் சுற்றிச் சுற்றி வந்தன. 'வாழ்க்கை வாழ்வதற்கே' என்ற அவருடைய அந்தக் கருத்துக்கள்தான் எத்தனை சுவையானவை என்று எண்ணினேன்.

பிற்பகல் நான்கு மணிக்கு மேல்தான் அந்த 'பார்பிக்யூ' பார்ட்டி முடிவடைந்தது. அதன் பிறகு அங்கிருந்த சில பெண்களிடம் பேசிக் கொண்டிருந்தேன். அந்த நாட்டுப் பெண்கள், தங்கள் வருங்காலத்தைப் பற்றி எப்படிச் சிந்தித்து வைத்திருக்கிறார்கள் என்று அறிந்து கொள்ள விரும்பி, அந்தப் பெண்களிடம் பேச்சுக் கொடுத்தேன். 'இப்போது என்ன படிக்கிறீர்கள், மேற்கொண்டு என்ன செய்ய விரும்புகிறீர்கள், எத்தகைய கணவனை அடைய விரும்புகிறீர்கள்' என்ற மூன்று கேள்விகளைக் கேட்டேன்.

அதற்கு மூன்று பெண்களும் மூன்று விதமாகப் பதில் அளித்தார்கள்.

ஜோன் மார்டென்ஸன் (Joan Mortenson) என்ற, ஸெக்ரடேரியட் கோர்ஸ் படிக்கும் பெண், வியாபார உலகில் உள்ள அதிசயமான 'புள்ளி'களை யெல்லாம் சந்தித்துப் பேச விரும்பினாள். ஒரு வியாபாரியையே திருமணம் செய்து கொள்ள விரும்புகிறாள் அவள்.

மெட்ரிக் படிக்கும் ஜென்னி (Jenny) மெட்ரிக்கை முடித்து, கல்லூரியில் படிக்க விரும்புகிறாள். வெளிநாட்டு வியாபாரி யாரையாவது கணவனாக அடைய வேண்டும் என்பது இவள் விருப்பம். அப்போதுதான் நாடுகள் பலவற்றைக் காணலாமாம்.

எலிசபெத்துக்கோ, உயரமாக, 'டார்க்' கலரில் லட்சணமாக உள்ள ஒருவனைக் கல்யாணம் செய்து கொள்ள ஆசை. இப்போது அவள் ஆசிரியர் வேலைக்குப் படிக்கிறாள். படிப்பு முடிந்ததும், கல்யாணம் செய்துகொண்டு,

குழந்தை குட்டிகளைப் பெற்றுக் கொள்ள ஆசைப்படுகிறாள். 'ஐ லவ் கிட்ஸ்' என்று, அந்த 'லவ்'வில் ஓர் அழுத்தம் கொடுத்து அவள் சொல்லும்போது, அவள் பார்க்க மிகவும் அழகாக இருந்தாள்.

இந்த மூன்று பெண்களும், 'டீன் ஏஜர்ஸ்' தான். ஆனால், அவர்களின் பேச்சு, எண்ணம், செயல் இவற்றில் 'பக்குவம்' காணப்பட்டது. தங்கள் வருங்காலத்தைப் பற்றிச் சில திடமான முடிவுகளுடன் இருந்தார்கள். அதே வயதுள்ள நம் நாட்டுப் பெண்கள் பெரும்பாலோரிடம் காண முடியாத ஒரு 'முதிர்ச்சி'யை நான் அந்தப் பெண்களிடம் கண்டேன்.

இந்த முதிர்ச்சி அவர்களுக்கு எப்படி ஏற்பட்டது?

இதைப் பற்றி மிச்சல் என்ற ஓர் ஆஸ்திரேலிய தகப்பனாரிடம் பேசினேன். ஒரே வரியில் அவர் சொன்ன பதில்: ''வளரும்போது அவர்களுக்குக் கொடுக்கப்படும் சுதந்திரம்தான் இந்த முதிர்ச்சிக்குக் காரணம்....''

உண்மைதான்!

அந்த நாட்டுப் பெண்கள் பரிபூரண சுதந்திரத்துடன் வளர்கிறார்கள். 'இப்படி நிற்காதே', 'இவனுடன் பேசாதே', 'இதைச் செய்யாதே', 'இப்படித்தான் டிரஸ் செய்து கொள்ள வேண்டும்' என்று நம் பெற்றோர் போடும் கட்டுப்பாடுகளை அந்தப் பெற்றோர் போடுவதில்லை! அதன் பலன், சுயமாகச் சிந்தித்து, செயலாற்றக் கூடிய பிரஜைகள் உருவாகிறார்கள்...!

டாக்டர் சுப்பையாவிடம் இது பற்றிப் பேசிக் கொண்டே, காரில் பிரயாணம் செய்தேன்.

''இந்த ஊர்ப் பெண்கள், எந்த விஷயத்திலும் சுயமாகச் சிந்தித்துச் செயல்படுகிறார்கள். இந்தியன் ஒருவனை மணந்து கொண்டுள்ள ஆஸ்திரேலியப் பெண் ஒருத்தியைச் சந்தித்து இது பற்றிப் பேச விரும்புகிறீர்களா?'' என்று கேட்டார்.

''ஓ... பேசலாமே...'' என்றேன்.

நாங்கள் நேராக, மிஸஸ் கில்லியன் (Gillian) என்ற பெண்ணின் வீட்டிற்குச் சென்றோம்.

அது ஒரு சின்னஞ்சிறு அழகிய 'அபார்ட்மெண்ட்'.

தமிழகத்தில் வேளாளர் குலத்தில் பிறந்து, மலேஷியாவில் குடியேறி விட்ட சேகர், எங்களை முகமலர்ச்சியுடன் வரவேற்றார். அவர் மனைவி கில்லியன், இந்திய முறைப்படி கைகூப்பி வணங்கினார்.

டாக்டர் சுப்பையா என்னை அறிமுகப்படுத்தி வைத்து, ''வெளிநாட்டுப் பெண்ணை மணந்து கொண்டுள்ள உங்கள் அனுபவத்தையும், வெளிநாட்டு ஆண்மகனை மணந்து கொண்டுள்ள உங்கள் மனைவியின் அனுபவத்தையும் தெரிந்து போக வந்துள்ளார்'' என்றார்.

''பத்திரிகையில் எழுதுவதற்காகவா?'' என்று கேட்டார் திருமதி சேகர்.

''எழுதினால் என்ன?'' என்றேன்.

''தாராளமாக எழுதலாம்...... இருந்தாலும், எந்த விஷயத்தைப் பற்றியும் பேசுவதற்கு முன்பு, எதற்காகப் பேசுகிறோம் என்று தெரிந்து கொள்வது அவசியம் அல்லவா? அதனால்தான் கேட்டேன்'' என்றார்.

பிறகு, ''சுருக்கமாகச் சொல்லிவிடுகிறேன். என் பெற்றோர் ஸிட்னி நகருக்கு அருகாமையில் இருக்கிறார்கள். நான் இங்கு ஒரு பெண்கள் ஆஸ்பத்திரியில் பணியாற்றிக் கொண்டிருந்தேன். என் ஹாஸ்டல் தோழி ஒருத்தியின் மூலம், சேகரின் அறிமுகம் கிடைத்தது. மெல்போர்ன் சர்வகலாசாலையில் படிக்கும் ஒரு டாக்டர் என்று தெரிந்தவுடன், 'ஓகோ, இன்னொரு திமிர் பிடித்த மாணவரா?' என்று தான் எண்ணினேன். ஆனால், இவரைச் சந்தித்த போது, இவருடன் பேசிய போது, இவருடைய பண்பும் நிதானமும் என்னை மிகவும் கவர்ந்தது. பிறகு என்ன? காதலித்தோம், எண்ணங்களைப் பரிமாறிக் கொண்டோம். என் அம்மாவிடம் விஷயத்தைச் சொன்னேன். 'வேற்று நாட்டுக்காரரை மணந்து கொள்வதில் உள்ள 'பிராப்ளங்கள்' உனக்குத் தெரியுமல்லவா?' என்று ஒரே ஒரு கேள்வியைத்தான் என் அம்மா கேட்டாள். 'நன்றாகத் தெரியும். அந்த பிராப்ளங்களை எப்படிச் சமாளிப்பது என்றும் தீர்மானித்து விட்டேன்' என்றேன். 'அப்படியானால் உனக்கு என் ஆசிகள், பெஸ்ட் விஷஸ்!' என்றாள் என் அம்மா. இப்படி என் விஷயம் சுலபமாக முடிந்துவிட்டது. அவர் விஷயம்? அதில்தான் கொஞ்சம் சிக்கல்! அவரையே கேளுங்கள்...'' என்றார்.

திருமதி கில்லியன் தெளிவாகப் பேசினார், அவர் பேச்சில் உறுதி தொனித்தது.

''என்ன மிஸ்டர் சேகர், உங்களைப் பற்றிச் சொல்லுங்கள்'' என்றேன்.

''என்ன சொல்ல வேண்டும்?'' என்று கேட்டார்.

''எல்லாம்தான். உங்களுக்குத் தமிழ் நாட்டில் சொந்த ஊர் எது?'' என்று கேட்டேன்.

''சரியாகத் தெரியாது. பல காலமாக நாங்கள் மலேயாவில் ஸெட்டில் ஆகிவிட்டோம். 'கொலம்போ பிளானி'ல் இங்கே வந்தேன்... இங்கேதான் சுமதியைச் சந்தித்தேன்...'' என்றார்.

''சுமதியா?''

''ஆமாம்! கில்லியனுக்கு இந்தியப் பெயர் கொடுத்திருக்கிறேன். சுமதி... ஹௌ டு யூ லைக் இட்?'' என்று கேட்டார்.

''வெரிகுட் நேம். இந்தியப் பெண் போல் புடவையும் கட்டிக் கொள்ளச் சொல்லப் போகிறீர்களா?'' என்று கேட்டேன்.

இந்தக் கேள்விக்குத் திருமதி கில்லியன் பதில் சொன்னார்:

''கட்டிக் கொள்ள ஆசைதான்... கட்டிக் கொள்ளவும் போகிறேன். ஆனால், இதனால் எல்லாம் நான் இந்தியன் ஆகிவிட முடியுமா என்ன? பெயரை மாற்றி வைத்துக் கொண்டாலோ, புடவை கட்டிக் கொண் டாலோ ஒருவர் 'இந்தியன்' ஆகிவிட முடியாது என்பது என் எண்ணம். நான் ஆஸ்திரேலியப் பெண் என்பதையும், சேகர் இந்தியர் என்பதையும் எந்தக் காரணம் கொண்டும் மறைத்துவிடவோ, மறந்து விடவோ முடியாது. இம்மாதிரி சொல்லி நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதில் அர்த்தம் இல்லை. நாங்கள் இருவரும் வெவ்வேறு

நாட்டைச் சேர்ந்தவர்கள் என்பதை நன்முக உணர்ந்து கொண்டு, இனிமையாகக் குடித்தனம் நடத்த வேண்டும். அதுதான் புத்திசாலித் தனம்...'' என்முர்.

''உங்கள் மனைவியின் கருத்து மிகவும் சரியானது'' என்றேன்.

''அவளிடம் நான் கண்ட பெருமையே இதுதான். என்னைச் சந்திப்ப தற்கு முன்பு, தாடியும் தலைப்பாகையும் வைத்திருப்பேன் என்று நினைத் தாளாம். இந்தியர் என்முல் ஏனே 'சர்தார்ஜி' நினைவுதான் பலருக்கும் வந்துவிடுகிறது. எப்படியோ சந்தித்தோம், பழகினேம், காதலித்தோம், கல்யாணமும் செய்து கொண்டுவிட்டோம். ஆனல்......'' என்று நிறுத்தினர்.

''என்ன இது? கதாசிரியர்கள் போல் ஆனல் போடுகிறீர்கள்'' என்றேன்.

''இந்த விஷயம் என் தாயாருக்கு இன்னும் தெரியாது... அவளால் சுலபத்தில் இதை ஜீரணித்துக் கொள்ள முடியாது...'' என்முர். சிறிது நேரம் பொறுத்து ''விரைவில் நாங்கள் மலேஷியாவுக்குப் போகப்போகி ரேம். மலேஷியா, காஸ்மோபாலிடன் நாடு. எனவே, சுமதிக்குப் பிரச்னை எதுவும் இருக்காது. என் தாயார் சுமதியை சந்தித்துவிட்டால், அவளுடன் ஒரு மணி பேசிக் கொண்டிருந்து விட்டால், பிறகு எல்லாம் சரியாகி விடும்...'' என்முர்.

''ஐ ஹோப் ஸோ...'' என்முர் கில்லியன் சிரித்துக் கொண்டே.

பேசிக் கொண்டே டிராயிங் ஹாலை ஒட்டி இருந்த சமையல் அறையில், எங்களுக்கு அருமையான காபி தயாரித்துக் கொடுத்தார் கில்லியன்.

''இம்மாதிரி காதல் விஷயங்களில் எங்கள் பெற்ருேர் பெரும்போக் காக நடந்து கொள்கிருர்கள். எங்களுக்குப் பரிபூரண சுதந்திரம் கொடுத்து விடுகிருர்கள். எங்களுக்கு எது நல்லது, எது கெட்டது என்பது எங்களுக்கே தெரியும். சுயமாகச் சிந்தித்து முடிவு எடுப்போம் நாங்கள். எங்கள் திருமணம் எங்கள் பெற்ருேர் கையில் இல்லை; எங்களிடமேதான் இருக்கிறது. இந்த நாட்டில் பெருவாரியான பெண்கள் வேலைக்குப் போவதே, தகுந்த கணவரைத் தேடிக் கொள்ளத்தான். 'நாலு இடத்தில் வேலை செய்தால், நாலு பையன்களைச் சந்திக்கலாம். நாலு பேருடன் பழகினல், நமக்குத் தகுந்த ஒருவனைத் தேர்ந்தெடுக்கலாம்...' என்ற நோக்குடன் எங்கள் நாட்டில் பல பெண்கள் வேலைக்குப் போகிருர்கள். நாங்கள் யோசித்து ஒரு முடிவெடுத்தால், எங்கள் பெற்ருேர் அதற்குக் குறுக்கே நிற்பதில்லை'' என்முர் திருமதி சுமதி கில்லியன்.

அவர்களிடமிருந்து விடைபெற்றுத் திரும்பும்போது, டாக்டர் சுப்பையாவிடம் நான் சொன்னேன்:

''பெண்கள் வளர்ப்பில் நாம் இன்னும் கொஞ்சம் கவனம் செலுத்த வேண்டியது அவசியம். அவர்களுடைய 'புற' வாழ்க்கை முன்னேறி விட்டது. அதற்கேற்ப 'அக' வாழ்க்கையில் முன்னேற்றம் இல்லை. இது பற்றிப் பெரியவர்கள் சிந்திக்க வேண்டும்...''

டாக்டர் சுப்பையா என் கருத்தை ஒப்புக் கொண்டார்.

# 10

நீண்ட முடி – பெரிய கிருதாவுடன் டாக்டர் ப்ரெயன்

'ஸெயின்ட் வின்ஸன்ட் ஆஸ்பத்திரி' மெல்போர்னில் உள்ள முக்கியமான ஆஸ்பத்திரிகளில் ஒன்று. அங்குதான் டாக்டர் சுப்பையா பணி புரிகிறார். 'மிகவும் புத்திசாலியான இந்திய டாக்டர்' என்று டாக்டர் மார்டென்ஸன் போன்ற ஸீனியர் டாக்டர்கள் அவரைப் புகழ்ந்தார்கள்.

''எங்கள் ஆஸ்பத்திரியைச் சுற்றிப் பாருங்கள். ஆனால், தயவு செய்து சென்னை ஆஸ்பத்திரிகளை இதனுடன் ஒப்பிட்டுப் பார்க்காதீர்கள்'' என்றார் டாக்டர் சுப்பையா.

ஒருநாள் காலை, அந்தப் பிரமாண்டமான ஆஸ்பத்திரியைச் சுற்றிப் பார்த்தேன். சுத்தம், பரிவு, பண்பு இவற்றுக்கெல்லாம் எடுத்துக் காட்டாக விளங்கியது அந்த ஆஸ்பத்திரி. அங்கு என்னை மிகவும் கவர்ந்தவர்கள், இன்முகத்துடன் கூடிய நர்ஸ்கள்தான். முகத்தைச் சுளித்துக் கொண்டோ, 'சிடு சிடு'வென்று நோயாளிகளிடம் கோபித்துக் கொண்டோ ஒரு நர்ஸைக் கூட நான் பார்க்கவில்லை.

''யாராவது ஒரு நோயாளியிடம் பேசிப் பாருங்களேன்'' என்றார் டாக்டர் சுப்பையா.



'கிட்னி டிரான்ஸ்பிளான்ட்' செய்து கொண்ட ஒரு நோயாளியை அணுகி, அவரிடம் பேச்சுக் கொடுத்தேன்.

''எனக்கு நடந்தது மிகவும் கடுமையான ஆபரேஷன்தான். இருந்தாலும் டாக்டர்கள், நர்ஸ்கள் இவர்களின் கண்காணிப்பாலும், இனிய பேச்சாலும் என் நோயின் கடுமை வெகுவாகக் குறைந்துவிட்டது போல் தோன்றியது. இவர்களின் பணிவிடைகளையும், இன்முகத்தையும் பார்க்கும்போது, அடிக்கடி நோயாளியாக இங்கு வரலாமா என்று கூட எனக்குத் தோன்றுகிறது'' என்றார் அவர், சிரித்துக் கொண்டே.

பல வார்டுகளையும் கடந்து சென்றோம் நாங்கள். அந்த வராந்தாக்கள் எல்லாம் பளிச்சென்றிருந்தன. 'இலை போட்டுச் சாப்பிடலாம்' என்பார்களே, அப்படி துடைத்து வைத்தாற்போல் காட்சி அளித்தன.

''நம் சென்னையில் இந்த அளவுக்குப் பெரியதாக எதையும் செய்ய முடியாது என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால், இருப்பதை இன்னும் சிறப்பாக வைத்துக் கொள்ளலாமே. ஆஸ்பத்திரியில் சுத்தம் மிகவும் அவசியம். அது நம்மிடம் இல்லை. ஜெனரல் ஆஸ்பத்திரி போன்ற பெரிய ஆஸ்பத்திரிகளில் நுழைந்து வெளியே வந்தால், ஏதோ நரகத்துக்குள்ளிருந்து வருவது போன்றுதான் இருக்கிறது. இதை நாம் எப்பாடு பட்டாவது மாற்றியாக வேண்டும்'' என்றேன் டாக்டர் சுப்பையாவிடம்.

டாக்டர் சுப்பையா எனக்குப் பதில் சொல்லவில்லை. எனவே, மீண்டும் என் கருத்தை வலியுறுத்தினேன்.

''எவ்வளவோ செய்ய வேண்டும் மிஸ்டர் மணியன். ஆனால், என்னைப் போன்றவர்கள் ஏதாவது சொன்னால், 'வெளி நாட்டில் வேலை செய்யும் திமிர்! இஷ்டப்படி 'கமென்ட்' செய்கிறான்' என்பார்கள். அதனால்தான் உங்கள் கேள்விகளுக்குப் பதில் சொல்லவில்லை. நம் நாட்டில் எல்லாக் கோளாறுகளுக்கும் அடிப்படைக் காரணம், மக்கள் தொகைதான். அதை எப்படியாவது நாம் குறைத்தாக வேண்டும். அது குறைந்தால், ஒவ்வொரு பிரச்னைக்கும் சுலபமாகத் தீர்வு கண்டு விடலாம். இந்த தேசத்தை எடுத்துக் கொள்ளுங்கள். மக்கள் தொகை மிகவும் குறைவு. வேலை வாய்ப்புக்கள் நிறைய உண்டு. எனவே, 'நீயும் செய்து கொள், நானும் செய்கிறேன்' என்ற மனப்பான்மை வளர்ந்து விட்டது. ஒருவரைக் கண்டு ஒருவர் பொறுமைப்படுவது என்பது இந்த 'மண்ணில்' இல்லாத ஒரு விஷயம். அதே போல் ஒவ்வொருவனும் உழைத்தே முன்னுக்கு வருகிறான். அப்பன் புகழில் மகன் பிரகாசிப்பதோ, பாட்டன் சொத்தில் பேரன் சுக போகம் அனுபவிப்பதோ மிகவும் குறைவு. 'உழைப்பின் கௌரவம்' என்கிறோமே, 'டிக்னிடி ஆஃப் லேபர்' (Dignity of Labour) அதன் அர்த்தத்தை இங்கே முழுமையாகக் காணலாம். தொழிலில் ஏற்றத்தாழ்வே இல்லை. சொல்லப் போனால், உழைப்பு அதிகமான 'மேனுவல் லேபர்' (Manual Labour) செய்பவர்கள் அதிகம் சம்பாதிக்கிறார்கள்.

''ஒரு டாக்டரைவிட, ஒரு சாதாரண ஃபிட்டர் அதிகம் சம்பாதிப்பான். செய்யும் வேலையை வைத்துக்கொண்டு ஆளுக்கு மதிப்புக் கொடுப்பதெல்லாம் இங்கே கிடையாது. இந்த மனேபாவமே இந்த நாட்டை முன்னுக்குக் கொண்டு வந்திருக்கிறது. இதெல்லாம் நம் நாட்டுக்கு வர வேண்டும். அறிவிலோ, ஆற்றலிலோ நாம் எவருக்கும் குறைந்தவர் அல்ல. தமிழனுக்கு இருக்கும் திறமை தனியானது; ஈடு இணையற்றது. நம் ஊர் டாக்டர்கள் பலர் உலகப் புகழ் பெற்றவர்கள். இருந்தாலும் நாம் பின் தங்கி யிருக்கிறேம். இதற்கு என்ன காரணம்? இதை நாம் அலசி ஆராய வேண்டும். நோய் இருக்கிறது என்று தெரிந்து கொண்டு, அதன் அடிப்படைக் காரணத்தைப் புரிந்து கொள்ளாமல் இருந்தால் அர்த்தமில்லே. 'நோய் இருக்கிறது...நோய் இருக்கிறது' என்று சொல்லிக் கொண்டே இருப்பதிலும் பலன் இல்லே. அதற்கு மருந்து கண்டு பிடிப்போம், மாற்று கண்டு பிடிப்போம்'' என்ருர்.

''உங்கள் கருத்தை ஒப்புக் கொள்கிறேன். அதற்கு முதலில் உங்களைப் போன்ற அனுபவம் பெற்ற டாக்டர்கள் தாய் நாட்டுக்குத் திரும்ப வேண்டும்'' என்றேன்.

''நிச்சயமாக! நான் சில ஆண்டுகள் வெளி நாட்டில் இருந்துவிட்டு, தாய் நாடு திரும்பித்தான் பணியாற்ற விரும்புகிறேன்'' என்ருர் சுப்பையா.

பேசிக் கொண்டே நாங்கள் ஒரு டாக்டரின் அறைக்குள் நுழைந்தோம்.

''மீட் டாக்டர் ப்ரெயன் டையர் (Brian Dwyer). இந்தப் பிரிவின் ப்ரெயினே அவர்தான்......'' என்று ஓர் இளைஞரை அறிமுகப்படுத்தி வைத்தார்.

''ஹலோ'' என்று கூறி, அவரிடம் கைகொடுத்து, அவரை உற்றுப் பார்த்தேன் நான்.

கூர்மையான கண்கள், அகன்ற நெற்றி, களையான முகம். ஆனால், அந்த நீண்ட முடியும், பெரிய கிருதாவும்தான் எனக்கு என்னமோ போல் இருந்தது.

ஆஸ்திரேலிய நாட்டில் இவரைப் போல் நீண்ட முடியுடனும், பெரிய கிருதாவுடனும் பலரை நான் சந்தித்த போதும், ஒரு பிரபலமான டாக்டருமா இப்படி இருக்க வேண்டும் என்ற எண்ணம் என்னிடம் எழுந்தது.

எண்ணத்தை அடக்கிக் கொள்ள முடியாமல், ''மன்னிக்க வேண்டும் டாக்டர், உங்களை ஒரு 'நேரிடை'க் கேள்வி கேட்கலாமா?'' என்றேன்.

''ஷ்யூர்'' என்ருர் டாக்டர் ப்ரெயன்.

''கல்லூரி மாணவர்களிலும், சாதாரண மக்களிடையேயும் 'ஹிப்பி' கோலத்தில் நான் பலரைச் சந்தித்திருக்கிறேன். ஏதோ 'சிறு பிள்ளைத் தனம்' என்று அதை நினைத்துக் கொண்டேன். ஆனல், உங்களைப்போல்

அறிவாளிகளும் பொறுப்பில் இருப்பவர்களும் இப்படி இருப்பது சரியா?.. ஏன் இப்படி இருக்கிறீர்கள்? தலைமுடியை அழகாக வெட்டிக் கொண்டால் என்ன? நோயாளிகளிடம் பழக வேண்டிய நீங்கள் 'ட்ரிம்'மாக இருக்க வேண்டாமா?'' என்று கேட்டேன்.

டாக்டர் ப்ரெயன் என்னையே உற்றுப் பார்த்தார். பிறகு, 'ஹூம்...' என்று ஒரு பெருமூச்சு விட்டு, ''நாங்கள் இப்படி இருப்பதில் என்ன தவறு கண்டு பிடித்தீர்கள்?'' என்று கேட்டார்.

''தவறு என்று சொல்லவில்லை. ஒரு டாக்டர், 'டீஸெண்டாக' இருக்க வேண்டும் என்பது என் கருத்து. 'சமூகத்திலிருந்து மாறுபட்டு இருக்க விரும்புகிறோம். மற்றவர்களைப் போல் நாங்கள் இருக்க விரும்ப வில்லை. நாங்கள் 'நான் கன்பர்மிஸ்ட்' (Non-Confirmist) என்பது ஹிப்பிக்களின் தத்துவம். அந்தத் தத்துவம் உங்களைப் போன்றோருக்குப் பொருந்துமா என்று கேட்கிறேன்...'' என்றேன்.

''மன்னிக்க வேண்டும், மிஸ்டர் மணியன்! நீண்ட முடியும், ஸைட் பர்ன்ஸூம்தான், இருபதாம் நூற்றுண்டின் நாகரிகம். திஸ் ஈஸ் தி ஆர்டர் ஆஃப் தி டே...எனவே, நாங்கள் 'நான் கன்பர்மிஸ்ட்' அல்ல; நீங்கள்தான் 'நான் கன்பர்மிஸ்ட்', புரிகிறதா? இன்றைய சமுதாயத்தால் அங்கீகரிக்கப்பட்ட விஷயங்கள், நீண்ட முடி, நீண்ட கிருதா. அதை வைத்துக் கொள்ளாதவர்கள் இன்றைய சமுதாயத்திற்கு முரணாக நடப்ப வர்கள். எனவே, முதலில் நீங்கள் அதை வைத்துக் கொள்ளுங்கள். இல்லா விட்டால், நான்தான் உங்களை 'நான் கன்பர்மிஸ்ட்' என்று சொல்ல நேரிடும்'' என்றார்.

நான் சிரித்தேன்.

''சிரிக்காதீர்கள் மிஸ்டர் மணியன். 18, 19-ம் நூற்றுண்டில் ஆண்கள் எல்லோரும் நீண்ட முடி வளர்த்தார்கள். பெரிய கிருதா வைத்துக் கொண்டார்கள். அதுதான் ஆண்மைக்கு எடுத்துக்காட்டு, வீரத்திற்கு விளக்கம். புரிகிறதா? இன்னொரு விஷயம், ஹிப்பிக்களோடு என்னைப் போன்றவர்களைச் சேர்க்காதீர்கள். அவர்கள் குளிக்கவே மாட்டார்கள்; அழுக்காக இருப்பார்கள். நாங்கள் அப்படியல்ல. எப்போதும் சுத்தமாக இருப்போம். சுத்தமாக இருந்து, நீண்ட முடி வளர்த்து, பெரிய கிருதா வைத்திருப்பவர்கள் மீதுதான், பெண்களுக்கு சுலபமாக 'மோகம்' ஏற்படுகிறது. அது தெரியுமா உங்களுக்கு? உங்கள் நீண்ட முகத்திற்கு நீண்ட கிருதா அழகாக இருக்கும். வைத்துக் கொள்ளுங்கள். உங்கள் தலையின் முன்னால் கொஞ்சம் முடி உதிர்ந் திருக்கிறது. அந்தக் குறை தெரியாமல் இருக்க ஒரு வழி சொல்கிறேன்; பேசாமல் என்னைப் போல் நீண்ட முடி வளருங்கள். பிறகு பாருங்க ளேன், உங்கள் பர்ஸனாலிடி கூடுவதை. உங்கள் பின்னால் பெண்கள் 'க்யூ' நிற்பார்கள்'' என்றார் சிரித்துக் கொண்டே!

அவர் பேச்சையும், அதில் உள்ள அழுத்தத்தையும் கேட்டு நான் பிரமித்துத்தான் போனேன்.

அவரை 'நுன் கன்பர்மிஸ்ட்' (Non-Confirmist) எனக் குற்றம் சாட்டப் போக, என்னையே அல்லவா 'நுன் கன்பர்மிஸ்ட்' என்று கூறி விட்டார். பெரிய ஆள்தான் என்று எண்ணிக் கொண்டேன்.

பிறகு அவருடைய குடும்பத்தைப் பற்றியும், தொழிலைப் பற்றியும் கேள்விகள் கேட்டேன்.

அவருடைய தாயார் ஒரு பத்திரிகை ஆபீசில் பணி புரிகிறார். ஒரு சகோதரர் 'ஆக்சுவரிஸ்ட்'டாக இருக்கிறார். இரண்டு சகோதரிகளில் ஒருத்தி 'நடிகை'யாக இருக்கிறாள் என்று பெருமையுடன் சொல்லிக் கொண்டார்.

இந்தியாவைப் பற்றிக் கேட்ட போது, ''உங்கள் மேடம் காந்தியை எனக்குப் பிடிக்கும். அதைவிட உங்கள் குடியரசுதான் எனக்கு மிகவும் பிடிக்கும். ஆஸ்திரேலியாவும் விரைவில் குடியரசாக வேண்டும் என்பது என் ஆசை. எதற்கு எங்களுக்கு இன்னும் ராணி? முடியாட்சிக் காலம் முடிந்துவிட்டது. அர்த்தமற்ற சம்பிரதாயங்களும், சடங்குகளும் இனி தேவையில்லை. இந்த நாட்டில் குடியாட்சி மலர வேண்டும். அத்துடன் மற்றவர்களுக்காக சண்டைக்குப் போகும் வழக்கம் எல்லாம் ஒழிய வேண்டும். வியட்நாமில் யாரோ, யாருடனே சண்டை போடுகிறார்கள். அதற்கு ஏன் ஆஸ்திரேலியன் உயிரை விட வேண்டும்? நான் இதை எதிர்த்துப் போராடினேன். இறுதிவரை போராடுவேன். என்னைப் பொறுத்தவரை, ராணியும் ராஜாவும் தேவையற்றவர்கள்...'' என்றார்.

இந்த ராணிப் பிரச்னை, ஆஸ்திரேலியாவில் பரவலாக விவாதிக்கப் படுவதை நான் கவனித்தேன். இளைஞர் சமுதாயத்திடம் 'ராணி தேவை யில்லை' என்ற கருத்துத்தான் பரவலாக இருக்கிறது.

ஆனால், சற்று வயதானவர்களிடமோ?

'ரெப்கோ' ஸ்தாபனத்தைச் சேர்ந்த திரு. கிரிப்பித் அவர்கள் கூறிய சில வார்த்தைகள், இந்தப் பிரச்னையைத் தெளிவாக்கப் படம் பிடித்துக் காட்டியது.

''மிஸ்டர் மணியன், நான் சில ஆண்டுகளுக்கு முன்பு, முதன் முதலில் இங்கிலாந்துக்குப் போனேன். போனவுடன் செய்த முதல் காரியம் என்ன தெரியுமா? 'பக்கிங்ஹாம் அரண்மனை' வாசலில் போய் நின்று, அதையே சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தேன். எனக்குப் புல்லரித்தது; ஏதோ ஒரு மன நிறைவு ஏற்பட்டது. ராஜா, ராணியிடம் அப்படி ஒரு பக்தி. நானும் என் தந்தையும் ஏதாவது விழாவுக்குச் சென்றால், 'காட் சேவ் தி கிங்' (God save the King) என்ற பாட்டு வரும்போது நிமிர்ந்து நிற்போம். தள்ளாத வயதிலும் என் தந்தை நிமிர்ந்து, ஆடாது, அசையாது சிலைபோல் நிற்பார். அவர் அளவுக்கு இல்லா விட்டாலும், நானும் தளராது நிற்பேன். இப்போது என் மகனுடன் போகும்போது, அந்தப் பாட்டு வந்தால், அவன் சற்று வளைந்துதான் நிற்கிறான். அவனை விடச் சிறியவன், கடமையே என்று நிற்காமல் நிற்கிறான். அடுத்த தலைமுறை எழுந்து நிற்காது என்றே நினைக்கிறேன்.

''எங்கள் தேசத்தில் 'ராணி'யின் நிலை என்ன என்பதை, இது உங்களுக்குப் புரிய வைத்திருக்கும் என்று நினைக்கிறேன். என்ன செய்வது? இன்றைய தலைமுறை, அடையாளங்களுக்கு (Symbols) மதிப்புக் கொடுக்க மறுக்கிறார்கள். ராஜாவும் ராணியும் சிறந்த விஷயங்களுக்கு ஓர் அடையாளமாக நிற்பவர்கள். அவர்களுக்கு மரியாதை கொடுப்பது, நல்லவற்றிற்கு மரியாதை கொடுப்பதாகும். அப்படிப் பார்த்தால், 'தேசியக் கொடி' மட்டும் என்ன பெரிது? அதையும் ஒரு சாதாரணத் துணி என்று ஒதுக்கிவிடலாமே...... மனிதன் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு சிறந்தவனாக வாழ, இப்படிப்பட்ட சில கட்டுப்பாடுகளுக்கு உட்படுவது நல்லது என்று எனக்குத் தோன்றுகிறது. நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? இந்தியாவில் ராஜாக்கள் அதிகமாக இருந்தார்கள் அல்லவா? உங்கள் நாட்டு மக்கள் 'அடையாள'ங்களுக்கு நல்ல மதிப்புக் கொடுக்கிறார்களா?'' என்று கேட்டார்.

''கொடுக்கிறார்கள்'' என்று ஒரே வரியில் பதில் சொல்லி வைத்தேன் நான்.

வேறு என்ன சொல்வது?

'மிகவும் மட்டமான படத்தைப் பொறுமையுடன் மூன்று மணி நேரம் பார்த்துவிட்டு, கொடி வணக்கத்தின் போது ஒரு நிமிஷம் நிற்கப் பொறுமையில்லாது எங்கள் மக்கள் வெளியேறி விடுகிறார்கள்' என்பதை அவரிடம் எப்படிச் சொல்வது?

11

இரு இளம் ஆஸ்திரேலிய அழகிகள்

ஒரு சீனாக்காரர், தனது பெற்றோரின் சமாதிக்குச் சென்று, அங்கு அவர்கள் வழக்கப்படி உணவு படைத்து மரியாதை செலுத்தினார். அவரது அந்தச் செய்கையையே கவனித்துக் கொண்டிருந்த அவருடைய அமெரிக்க நண்பர் அவரை நெருங்கி, ''என்ன செய்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

''மறைந்த என் தந்தைக்கு உணவு படைக்கிறேன்......'' என்றார் அந்த சீனாக்காரர்.

இதைக் கேட்டு அமெரிக்கர் சிரித்தார்.

''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று கேட்டார் சீனாக்காரர்.

''இல்லை. செத்துப் போன உங்கள் தகப்பனார் மீண்டும் உயிருடன் வந்து சாப்பிடவா போகிறார்? அதை எண்ணிச் சிரித்தேன்'' என்றார்.

''அப்படியா?'' என்ற சீனாக்காரர், 'கடகட'வென்று சிரித்தார்.

''நீங்கள் ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று கேட்டார் அமெரிக்கர்.



''இல்லே, போன வாரம் நீங்கள் கூட உங்கள் பெற்ருேரின் சமாதியில் மலர் வளையம் வைத்தீர்கள். ஒருவேளே உங்கள் பெற்ருேர் எழுந்து வந்து அந்த மலரை நுகர்ந்தார்களோ என்று எண்ணினேன்... சிரிப்பு வந்தது'' என்ருர்.

டெலிவிஷனில் அஞ்சலான இந்த நிகழ்ச்சியை, நானும் எனது ஆஸ்திரேலிய நண்பர் ஒருவரும் பார்த்துக் கொண்டிருந்தோம். பிற நாடுகளே அறிமுகப்படுத்தும் ஒரு டெலிவிஷன் நிகழ்ச்சி அது.

'ஹாங்காங்—விஸிட்டர்ஸ் பாரடைஸ்...' என்ற, ஹாங்காங் நகரைப் பற்றிய அந்தப் படத்தை, ஆஸ்திரேலிய நாட்டின் தலைநகரான 'கான்பரா' நகர் 'ரெக்ஸ்' (Rex) ஒட்டலில் அமர்ந்து பார்த்துக் கொண்டிருந்தோம்.

''இந்த நிகழ்ச்சியைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்று என்னைக் கேட்டார் அந்த நண்பர்.

''நம்பிக்கைதான் மனிதனை வாழ வைக்கிறது. இம்மாதிரி விஷயங்களையெல்லாம் தர்க்கரீதியாக ஆராய்ந்து பார்க்கக் கூடாது. 'ஸென்டிமெண்ட்' இருக்கும் இடத்தில் 'லாஜிக்'குக்கு இடமில்லை......'' என்றேன்.

''யு ஆர் ரைட்......அத்துடன் சீனர்களின் கலாசாரமும் இதன் மூலம் நமக்குப் புரிகிறது, அவர்கள் பண்பாடும் நமக்குப் புரிகிறது......'' என்று கூறி, சீனுவின் 'புகழ்' பாட ஆரம்பித்து விட்டார் அவர்.

சீனப் பிரஜை எப்படி நேர்மையும், நாணயமும் நிறைந்தவனுக இருக்கிருன் என்பதைப் பற்றிக் கூறிவிட்டு, ''நான் என்ன சொன்னுலும் நீங்கள் நம்ப மாட்டீர்கள்.உங்களுக்குத்தான் சீனர்களைப் பிடிக்காதே...'' என்ருர்.

''நீங்கள் நினைப்பது தவறு. சாதாரண சீனப் பிரஜை மீது இந்தியனுக்கு எந்தவித விரோதமும் கிடையாது. 'இந்தி சீனி பாய்பாய்' என்ற கொள்கை எங்களுக்கு உண்டு. எங்கள் நாட்டுக் கண்ணேட்டத்திலிருந்து சீனுவைப் பார்த்தீர்களானுல் நாங்கள் நினைப்பது எவ்வளவு 'சரி' என்பது உங்களுக்குப் புரியும்......இந்திய-சீன உறவு சிறப்படைய வேண்டும் என்பதுதான் எல்லோருடைய விருப்பமும்......'' என்று கூறினேன்.

''அந்த உறவு பலப்பட்டு விட்டால், ஆசியாவில் மறுமலர்ச்சி தோன்றிவிடும். ஐரோப்பிய நாடுகளைவிட, ஆசிய நாடுகள் பலம் பொருந்தியதாக ஆகிவிடும். அதன் பிறகு ஜப்பான்காரனும் கொஞ்சம் பயப்படுவான்'' என்று, ஜப்பானின் மீது தமக்குள்ள கோபத்தைக் காட்டிக் கொண்டவர், பேச்சை மாற்ற விரும்பி, ''மிஸ்டர் மணியன், இந்த டி.வி. நிகழ்ச்சிகளில், இந்தியாவைப் பற்றிச் சரியாகக் காட்டுவதில்லை. அதற்கு ஏற்பாடு செய்யுங்கள்...... நான் இந்தியாவுக்குப் போயிருக்கிறேன். அங்கே பிரமாதமான 'டூரிஸ்ட்' இடங்களெல்லாம் இருக்கின்றன. நான் தென்னிந்தியாவில் மதுரை, மகாபலிபுரம் எல்லாம் போயிருக்கிறேன். இன்னும் கொஞ்சம் ஒட்டல் வசதி செய்ய வேண்டும். பப்ளிஸிடி செய்ய வேண்டும். அப்புறம், ஐ யாம் ஸாரி டு ஸே திஸ்...இந்தப் பிச்சைக்காரர்களை அந்த இடங்களிலிருந்து அப்புறப்படுத்தவேண்டும்...'' என்ருர்.

நாங்கள் பேசிக் கொண்டிருக்கும்போதே, என் அறையில் மணி அடித்தது.

''ஸார்......உங்கள் 'டூர்' நிகழ்ச்சி தயார். நீங்கள் புறப்படலாம்...'' என்ருள் ரிஸப்ஷனிஸ்ட் பெண்.

ஆஸ்திரேலிய நாட்டு நகரமான கான்பரா நகரைச் சுற்றிப் பார்க்க விரும்பி, ஏற்பாடு செய்ய முடியுமா என்று ஓட்டல் அதிகாரியிடம் கேட்டிருந்தேன். அதற்கு முன்னுல் கான்பரா நகர 'லயன்ஸ் கிளப்' கூட்டம் ஒன்றிற்குப் போயிருந்தேன். அங்குதான், அந்த ஆஸ்திரேலிய நண்பர் ஜானைச் சந்தித்தேன். நான் வெளியே போகும்வரை என்னுடன் இருப்பதாகக் கூறி, தனது கருத்துக்களை யெல்லாம் சொல்லித் தீர்த்தார் அவர்.

மெல்போர்ன் நகரிலிருந்து நான் சென்ற அடுத்த நகரம், ஆஸ்திரேலியாவின் தலைநகரான கான்பராதான்.

''கண்டிப்பாக நீங்கள் கான்பராவுக்குப் போக வேண்டும். திட்டமிட்டுக் கட்டப்பட்ட அழகிய நகரம் அது'' என்று எல்லோரும் சொல்லியிருந்தார்கள்.

ஹில் ஹாரிஸ் (Hill Haris) என்ற 'கைடு' என்னையும், வேறு சில நண்பர்களையும் அழைத்துக் கொண்டு, ஊர் சுற்றிக் காண்பித்தார். கான்பரா நகரில் மக்களைப் பார்ப்பதே அரிதாக இருந்தது.

''எங்கள் ஊரின் ஜனத்தொகை லட்சத்து முப்பதிஞயிரம்......இது இப்போது ஆண்டுக்குப் பத்து சதவிகிதம் ஏறிக் கொண்டிருக்கிறது...'' என்று, வருத்தத்துடன் தெரிவித்தார் ஹாரிஸ்.

ஒரு பெரிய தேசத்தின் தலைநகரின் ஜனத்தொகையே லட்சத்து முப்பதிஞயிரம்தான்.

தோட்ட நகரம் என்பார்களே (Garden City), அதன் முழுப் பொருளும் கான்பராவுக்குப் பொருந்தும். புல்வெளிகளும், நீர் ஊற்றுக்களும், ஏரிகளும் எங்கும் தென்பட்டன.

பொழுதை எப்படிக் கழிப்பது என்று புரியாத மக்கள், புதிய புதிய இடங்களை 'பிக்னிக் ஸ்பாட்'டாகத் தேர்ந்தெடுத்து, அங்கு போய் அமர்ந்து கொண்டு 'பார்பிக்யூ' (Barbecue) பார்ட்டி நடத்துகிருர்கள். ஏரிக்கரையில் மணிக்கணக்காக அமர்ந்து தூண்டில் போட்டு மீன் பிடிக்கிருர்கள். எந்தவித 'நோக்கு'மில்லாமல் மணிக்கணக்கில் 'டிரைவ்' போகிருர்கள்.

எல்லா இடங்களுக்கும் எங்களை அழைத்துச் சென்ற ஹாரிஸ், ''இந்த ஊர் நாணயங்கள் செய்யும் இடத்தைப் பார்ப்போம் வாருங்கள்'' என்று ஆஸ்திரேலிய 'மின்ட்'டுக்கு அழைத்துச் சென்ருர்.

'கொல்லன் பட்டறையில் ஈக்கு என்ன வேலை' என்ற பழமொழி, ஆஸ்திரேலியாவுக்குப் பொருந்தாது. 'மின்ட்'டின் வாசலில் நான் நின்ற போது, என் முகத்தைச் சுற்றி ஈக்கள் பறந்து கொண்டே இருந்தன.

தள்ளித் தள்ளிப் போய் நின்ற போதும் அந்த 'ஈ'த் தொல்லையிலிருந்து என்னால் தப்ப முடியவில்லை. அவை என்மீது அசாத்திய காதல் கொண்டு விட்டன.

'என்னைச் சுற்றியிருந்த மற்றவர்களை யெல்லாம் விட்டு விட்டு, என்னை மட்டும் ஏன் இந்த 'ஈ' இப்படித் துரத்துகிறது' என்று புரியாமல் தவித்தேன் நான். என் தவிப்பைப் புரிந்து கொண்ட ஹாரிஸ், ''நீங்கள் இன்று புறப்படும்போது, 'ஏரோ கார்ட்' போட்டுக் கொள்ளவில்லையோ'' என்று கேட்டார்.

''ஏரோ கார்டா? என்ன அது?'' என்று கேட்டேன்.

''ஈ, கொசுக்களிலிருந்து தப்பித்துக் கொள்ள இங்கு எல்லோரும் ஏரோ கார்ட் (Aero Guard) போட்டுக் கொள்வோம். இந்த கான்பரா புதிதாக உருவாகிவரும் நகரம். 1913-ல் தான் ஆரம்பிக்கப்பட்டது இது. நிலப் பரப்பு இங்கே அதிகம். எனவே, வயல் வெளிகளிலிருந்து ஈக்கள் போன்ற பூச்சிகள் தொல்லை உண்டு. கஷ்டப்பட்டு அவற்றை அழித்துக் கொண்டு வருகிறோம். அதற்கு முன் அவற்றிலிருந்து எங்களைப் பாதுகாத்துக் கொள்ள, இந்த 'ஏரோ கார்ட்' 'ஸ்ப்ரே'யைப் பயன் படுத்துகிறோம். இதை நம் மீது தெளித்துக் கொண்டால், ஈ, கொசு நம்மை அண்டாது. நீங்கள் போட்டுக் கொள்ளவில்லை, அதனால்தான் உங்களை அவை துன்புறுத்துகின்றன'' என்றார்.

''அப்படியா? நாளையிலிருந்து கண்டிப்பாக அந்தக் கவசம் போட்டுக் கொண்டு விடுகிறேன்'' என்றேன்.

அந்த நாணயச் சாலை பிரமாண்டமானது. கண்ணாடிக் கதவுகள் வழியாக உள்ளே எப்படி வேலை நடக்கிறது என்பதைப்பார்க்க முடிகிறது. எல்லோரும் பார்ப்பதற்கென்றே, ஆரம்ப கட்டத்திலிருந்து கடைசி கட்டம் வரை 'காலரி' அமைத்திருந்தார்கள். அதன் வழியாகப் பார்த் தால் நாணயம் செய்யும் முறையை நன்கு தெரிந்து கொள்ள முடிகிறது.

நாணயச் சாலையிலிருந்து வெளியே வந்ததும் நண்பர் ஹாரிஸ் ''புதிதாகப் பெறும் எந்த அறிவையும் பயன்படுத்த வேண்டும் என்று பொதுவாகச் சொல்வார்கள். இது அதற்கு விதிவிலக்கு. இந்த அறிவைப் பயன்படுத்தி, சொந்தமாக நாணயத் தயாரிப்பில் ஈடுபட்டு விடாதீர்கள். பிறகு என்ன நடக்கும் என்று நான் சொல்ல வேண்டாம்......'' என்றார் சிரித்துக்கொண்டே.

நானூற்றைம்பது அடி உயரத்திற்கு எழும்பி விழும் 'தாமஸ் குக்' நினைவாக அமைக்கப்பட்டிருந்த 'நீர் ஊற்றின்' முன்னால் உள்ள ஒரு பெஞ்சில் அமர்ந்து, வெகு நேரம் அந்த ஊற்றை ரசித்துக் கொண்டிருந் தேன். என் அருகில் வந்து அமர்ந்த ஓர் இளைஞன், ''வெரி நைஸ்...... வெரி நைஸ்......ஈஸ் இட் நாட்'' என்றார்.

''ரியலி வெரி நைஸ்'' என்றேன்.

''ஐயாம் லான்ஸ் மெக்கார்த் (Lance Mccarth)'' என்று கை கொடுத்தார் அவர்.

''ஐயாம் மணியன். இண்டியன் ஜர்னலிஸ்ட்'' என்றேன்.

''ஓ......ஜர்னலிஸ்ட்......'' என்றவர், ''நான் ஒரு ஸ்கூல் டீச்சர்... ஒய்வு நேரத்தில் டாக்ஸியும் ஓட்டுவேன்... இப்போது ஒரு டூரிஸ்டை டாக்ஸியில் ஏற்றிக் கொண்டு வந்தேன். 'இந்த இடம் மனத்துக்கு மிகவும் ரம்யமாக இருக்கிறது. இப்படி ஒரு 'வாக்' போய் வருகிறேன்' என்று அவர் போயிருக்கிறுர்'' என்ருர்.

''ஆசிரியராகக் கிடைக்கும் சம்பளம் போதாததால், டாக்ஸி ஓட்டு கிறீர்களா?'' என்று கேட்டேன் நான்.

''வெல்......பொழுதும் போகவேண்டும் அல்லவா! இந்த ஊரில் பொழுது போக்கு அம்சங்கள் மிகக் குறைவு. இது ஒரு தலைநகரம். அதற் குரிய 'கௌரவ லட்சணங்கள்' தான் அதிகம். எங்கு நோக்கினும் 'எம்பஸி' கட்டடங்களும், சர்க்கார் அலுவலகங்களும், யுனிவர்ஸிடி ஆபீஸ்களும்தான் இருக்கும். 'நைட் கிளப்ஸ்', சினிமா ஹால் எல்லாம் குறைவு. அதனுல் ஒய்வு நேரத்தில் டாக்ஸி ஓட்டுகிறேன். அதில் வாரம் அறுபது எழுபது டாலர் கிடைக்கிறது...'' என்ருர்.

''உங்கள் ஊரில் சராசரி வருமானம் எவ்வளவு?'' என்று கேட்டேன்.

''ஊம்ம்...'' என்று இழுத்தவர், ''ஆண்டுக்கு ஏறத் தாழ ஐயாயிரம் டாலர் (நம் ஊர் கணக்குப்படி நாற்பத்திரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய்) சராசரி வருமானம் என்று சொல்லலாம்......இந்த நகரத்திலேயே வெளி நாட்டு மக்கள் அதிகம். ஐந்தில் ஒருவர் அந்நியராக இருப்பார். வருவோர் எல்லோரையுமே 'வா வா' என்று வரவேற்கிருேம் நாங்கள். அப்படி வருகிறவர்களில் சிலர், எங்கள் நாகரிகத்தை 'கான்விக்ட் நாகரிகம்' என்கிறுர்கள். எப்படி இருக்கிறது?'' என்றவர், ''உங்கள் கல்கத்தா எப்படி இருக்கிறது?'' என்று கேட்டார்.

''நாட் பாட்'' (Not Bad) என்று கூறி, ''கல்கத்தாவைப் பற்றி உங்களுக்கு என்ன தனி அக்கறை?'' என்று கேட்டேன்.

''இந்தியாவுக்கு அதுதானே முந்தைய தலைநகரம். அதனுல்தான் கேட்டேன். எனக்கு இந்தியா பிடிக்கும். டி.வி.யில் உங்கள் சிதார் கச்சேரி கேட்டிருக்கிறேன். ஐ லைக் தட் இன்ஸ்ட்ருமென்ட்......'' என்றவர், ''ஒரு பூகோள ஆசிரியன் என்ற முறையில் உங்கள் தேசத்தைப் பற்றிக் கொஞ்சம் தெரிந்து வைத்திருக்கிறேன். உங்கள் ஜனத்தொகை யைப் பாதி குறைத்து விட்டீர்களானுல், உங்கள் பிரச்னைகளில் முக்கால் பங்கு தீர்ந்து விடும். அதற்கு நீங்கள் எடுத்துக்கொள்ளும் முயற்சி போதாதோ என்று நினைக்கிறேன். இரண்டு குழந்தைகளுக்கு மேல் பெற்றுக் கொண்டால், தண்டனை உண்டு என்று சட்டம் போட வேண்டும். யெஸ்......சட்டத்தின் இரும்புக் கரம் நீண்டால்தான், இம்மாதிரிப் பிரச்னைகளுக்கு முடிவு காண முடியும். ஒன்று, மனிதன் கடவுளுக்குப் பயப்பட வேண்டும், அல்லது சட்டத்திற்குப் பயப்பட வேண்டும்... கடவுள் பயம்தான் போய்க் கொண்டிருக்கிறதே... அதனுல் தான் சட்டம் அவசியம் என்கிறேன்...'' என்ருர்.

'ஜப்பானியர்களைப்பற்றி இவர் கருத்து எப்படி இருக்கிறது, தெரிந்து கொள்ளலாமா' என்று, நாசுக்காக அதைக் கேட்டேன்.

''அவர்களைக் கண்டு நாங்கள் பயப்படுகிறோம்......'' என்று ஒரே வார்த்தையில் சொன்னார். இதற்குள் அவர் ஏற்றி வந்த 'டூரிஸ்ட்' வந்து விடவே, ''ஐ லாட் டு ஹாவ் மெட் யூ மிஸ்டர் மணியன்...'' என்று கூறி என்னிடமிருந்து விடை பெற்றார்.

ஆஸ்திரேலிய சர்வகலாசாலைக்கு என்னை அழைத்துச் சென்றார் ஹாரிஸ். 'எல்லா வேலைகளையும் விட்டு விட்டு அங்கே அமர்ந்து படிக்கலாமா' என்ற ஆசையைத்தான் அந்த இடம் என்னிடம் ஏற்படுத்தியது. மிக அமைதியான, ரம்மியமான இடம்.

மறுநாள் சர்வகலாசாலை நூல் நிலையத்திற்கு கான்பராவில் வாழும் தமிழ் நண்பர் இ. சா. விசுவநாதன் என்னை அழைத்துச் சென்றார். அங்கே நம் ஊரில் வெளியாகும் தமிழ்ப் பத்திரிகையிலிருந்து, உலகப் பத்திரிகைகள் அனைத்தும் இருந்தன. எல்லாவற்றையும் 'மைக்ரோ பிலிம்' செய்து வைத்திருந்தார்கள். நமது சுதேசமித்திரன் பத்திரிகையின் பழைய பிரதி ஒன்றை அங்கே கண்டபோது, எனக்கு உண்மையிலேயே பெருமையாக இருந்தது.

நான் கான்பரா நகரில் இருந்த சமயம், 'ஓரியண்டலிஸ்ட் கான்பரன்ஸ்' அங்கே நடந்து கொண்டிருந்தது. சென்னையிலிருந்து அந்த மகாநாட்டில் கலந்து கொள்ள டாக்டர் ராகவன் அவர்களும், புலவர் சஞ்சீவி அவர்களும் வந்திருப்பதாகக் கேள்விப்பட்டு, அவர்களைக் காண முயன்றேன். இருவரையும் என்னால் சந்திக்க முடியவில்லை. குறிப்பாக நான் அன்பும் மதிப்பும் வைத்திருக்கும் நண்பர் ந.சஞ்சீவியை அங்கே சந்திக்க முடியாமல் போனது, எனக்கு வருத்தமாகத்தான் இருந்தது.

நண்பர் விசுவநாதன் வீட்டில் அருமையான சாம்பார்—ரசம் சாப்பாடு கிடைத்தபோது, இந்த உணவைப் பகிர்ந்து கொள்ள நண்பர் சஞ்சீவி இல்லையே என்று வருந்தினேன்.

இந்திய ஹைகமிஷனர் திரு. தாமஸ் அவர்களுடன் தேனீர் அருந்தி விட்டு, கான்பராவிலிருந்து மீண்டும் ஸிட்னி நகருக்குப் புறப்பட்டேன்.

# 12

பிரபல நடிகர் சிப்ஸ் ராபெர்ட்டியுடன்...

"இந்த விலாசத்திற்குப் போக வேண்டும், நீங்கள் உதவ முடியுமா?'' என்று கேட்டு, ஒரு விலாசத்தை நண்பர் கிரிப்பித்திடம் காட்டினேன்.

அதை வாங்கிப் பார்த்த அவர், ''ஓ, நீங்கள் இவரைச் சந்திக்கப் போகிறீர்களா?'' என்று வியப்புடன் கேட்டார்.

''ஆமாம். டெலிபோன் செய்து, எங்கேஜ்மெண்ட் ஏற்பாடு செய்திருக்கிறேன்.''

''உங்களைச் சந்திக்க அவர் ஒப்புக்கொண்டு விட்டாரா?''

''யெஸ்......ஏன் அப்படிக் கேட்கிறீர்கள்?''

''இல்லை, அவர் மிகவும் 'பாபுலர்' ஆசாமி...... 'சிப்ஸ் ராபெர்ட்டி' (Chips Rafferty) என்றால், தெரியாத ஆஸ்திரேலியர் இருக்க மாட்டார்கள். அவர் சிப்ஸ் ராபெர்ட்டி எம். பி. இ. (M. B. E.) இந்த நாட்டின்



'காரி கூப்பர்' (Gary Cooper) என்பார்கள் அவரை. நானே உங்களை அவர் வீட்டிற்கு அழைத்துச் செல்கிறேன். எனக்கும் அவரைப் பார்க்க விருப்பம்தான்'' என்றார் கிரிப்பித்.

நாங்கள் இருவரும் ஆஸ்திரேலிய நாட்டுப் பிரபல நடிகரான 'சிப்ஸ்' அவர்கள் வீட்டிற்குக் காரில் புறப்பட்டோம்.

''வான்க்லூஸ் ஈஸ் எ குட் அட்ரஸ் (Vancluse)'' என்றார் மிஸ்டர் கிரிப்பித், காரை ஓட்டிக் கொண்டே.

''குட் அட்ரஸா? அப்படி யென்றால் என்ன அர்த்தம்?'' என்று கேட்டேன்.

''ஹம்......இட் மீன்ஸ் குட் அட்ரஸ். அதாவது, ஒருவர் வான்க்லூ ஸில் வசிக்கிறார் என்றால், செல்வந்தர், பெரிய மனிதர் என்று அர்த்தம்... ஒரு காலத்தில் 'சிப்ஸ்' மிகப் பெரிய நடிகர். மனுஷன் ஆறரை அடி இருப்பார். இப்போது அவர் அவ்வளவு பிரபலமில்லை...அவர் என்ன, ஆஸ்திரேலியாவில் உள்நாட்டு சினிமாவே அவ்வளவு பிரபலமில்லை. 'சிப்ஸ்' சொந்தமாகப் படம் எடுத்து நஷ்டப்பட்டதாகக் கூடக் கேள்வி......'' என்றார்.

அவர் பேச்சிலிருந்து பல விஷயங்கள் எனக்குப் புரிந்தன.

ஆஸ்திரேலிய நாட்டின் திரைப்படத் தொழிலைப் பற்றிப் புரிந்து கொள்ள விரும்பி, சிட்னி நகர ஸ்டேட் டிபார்ட்மெண்டாரை அணுகி னேன் நான். அவர்கள்தான் 'சிப்ஸ் ராபெர்ட்டியைச் சந்தியுங்கள்!' என்று கூறி, அவர் விலாசத்தை என்னிடம் தந்தார்கள். கிரிப்பித் அவர் கள் கூறியதிலிருந்து, அவர் வாழும் இடம், 'அரிஸ்டோகிராடிக் ஏரியா' என்பதையும் புரிந்து கொண்டேன். ஆஸ்திரேலிய நாட்டு சினிமாத் தொழிலைப் பற்றிப் பேசிக் கொண்டே 'சிப்ஸ்' அவர்களின் வீட்டிற்குக் காரில் பிரயாணம் செய்தோம் நாங்கள்.

''ஆஸ்திரேலியாவில் அநேகமாக ஓடுவது, அமெரிக்கப் படங்கள் தான். டெலிவிஷன் வந்த பிறகு, பொதுவாக சினிமாவுக்கே 'மவுசு' குறைந்துவிட்டது. வீட்டில் இருந்தபடியே எல்லாப் படங்களையும் பார்த்து விட முடியும் என்றால், தியேட்டருக்கு ஏன் போகிறார்கள்?'' என்று கேட்டார் கிரிப்பித்.

பேசிக் கொண்டே, அவர் வாழும் பகுதியை நெருங்கி விட்டோம் நாங்கள். எங்களுக்கு அவர் வீட்டைக் கண்டு பிடிப்பது சிரமமாக இருக்க வில்லை. காரணம், என்னிடம் டெலிபோனில் பேசும்போது, 'இந்தப் பகுதிக்கு வந்த பிறகு, என் வீட்டைச் சுலபமாகக் கண்டு பிடித்து விடலாம். என் வீட்டு வாசலில் செந்நிற போஸ்ட் பாக்ஸ் ஒன்று இருக்கும்' என்று அடையாளம் கூறியிருந்தார் சிப்ஸ்.

''நீங்கள் இறங்கிக் கொள்ளுங்கள், நான் காரைப் 'பார்க்' செய்து விட்டு வந்துவிடுகிறேன்'' என்று, அந்த வீட்டு வாசலில் என்னை இறக்கி விட்டார் கிரிப்பித்.

காரிலிருந்து இறங்கிய நான், அந்த வீட்டு வாசலில் தோட்ட வேலை செய்து கொண்டிருந்த ஒருவரிடம் ''மிஸ்டர் சிப்ஸ் இருக்கிருரா?'' என்று கேட்டேன்.

கழுத்தைச் சுற்றிக் கட்டிக்கொண்டிருந்த 'ஏப்ர'னைக் கழற்றிக் கொண்டே, ''ஓ...யூ ஆர் தட் இண்டியன் ஜர்னலிஸ்ட்...ஊம்... கம் ஆன்...கம் ஆன்...'' என்று கனத்த குரலில் கூறி, தலையிலிருந்த அழுக்குக் குல்லாயைக் கழற்றினுர் அந்த தோட்டக்காரர்.

இதற்குள் என் அருகில் வந்து விட்ட கிரிப்பித், ''ஓ, மிஸ்டர் ராபெர்ட்டியை வாசலிலேயே சந்தித்து விட்டீர்களா?'' என்ருர்.

நான் அவரை ஏறிட்டுப் பார்த்தேன். என்னுல் நம்பவே முடியவில்லை! அழுக்கு அரை டிராயர் ஒன்றைப் போட்டுக் கொண்டு, ஒரு வாரமாக 'ஷேவ்' செய்யப்படாத முகத்துடன், பெரிய கத்திரியால் செடிகளை வெட்டிக் கொண்டிருந்த அந்த மனிதர்தான் 'சிப்ஸ்' என்பதை என்னுல் வெகு நேரம் நம்பவே முடியவில்லை.

''ஹேய்...கமான்...லெட் அஸ் கோ இன்......'' என்று கட்டைத் தொண்டையில் கூறிக் கொண்டே முன்னுல் நடந்தார் சிப்ஸ்.

அவர் குரல், தோற்றம், நடை, உடை, பாவனை எல்லாவற்றிலும் ஒரு 'தடித்தனம்' காணப்பட்டது. 'எதையும் ஒருவித அலட்சிய பாவத்துடன்தான் எடுத்துக் கொள்வார் அவர்' என்பதை, அவருடைய ஒவ்வொரு செய்கையும் எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தது.

உள்ளே, சிறு அறை ஒன்றை அடைந்தோம்.

''ஹேய்! இந்த அறையை நான் சுத்தமாக வைத்திருக்கவில்லை. என் செக்ரட்ரி,இரண்டு நாளாக லீவ்''என்றவர், ''இதில் உட்காருங்கள்'' என்று, எனக்கு ஒரு நாற்காலியும், கிரிப்பித்துக்கு ஒரு நாற்காலியும் காட்டினுர். பிறகு, ஒரு சிகரெட்டை எடுத்து,அதைப் பாதியாக பிய்த்துப் பற்ற வைத்துக் கொண்டார். நான் அறையைச் சுற்றிக் கண்ணேட்ட மிட்டேன்.

'குப்பையும் கூளமுமாக இருக்கிறது' என்பார்களே, அப்படித்தான் இருந்தது அது. ஆங்காங்கே அணைக்கப்பட்ட சிகரெட் துண்டுகள், கிழித்துப் போடப்பட்ட காகிதங்கள், பழைய துணிகள்... காலி மதுப் புட்டிகள்......

''ஹேய்... என்ன பார்க்கிறீர்கள்? அறை அசுத்தமாக இருக்கிறதே என்ரு?'' என்று, பளிச்சென்று கேட்டுவிட்டார் சிப்ஸ்.

''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை...... பெரிய கலைஞர்களின் வீடெல் லாம் இப்படித்தான் இருக்கும் என்பார்கள்'' என்றேன்.

''நான்சென்ஸ்...... கலைஞரின் வீடு சுத்தமாகவும் இருக்கலாம்... என் காரியதரிசி வரவில்லை. அதனுல்தான் இந்தக் குழப்பம்... எனக்கு இதெல்லாம் செய்யப் பொறுமை கிடையாது. ஐ லவ் கார்ட்ட னிங் (Gardening). வேலையில்லாவிட்டால், தோட்டத்தில்தான்

இருப்பேன்...... அதெல்லாம் இருக்கட்டும், என்ன விஷயம்? என்னை எதற்காகப் பார்க்க விரும்பினீர்கள்?'' என்று, அதே 'கன'மான குரலில் கேட்டார்.

''ஆஸ்திரேலிய நாட்டுத் திரைப்படத் தொழிலைப் பற்றித் தெரிந்து கொள்ள விரும்பினேன். உங்களைக் கேட்டால் தெரிந்து கொள்ளலாம் என்றார்கள், அதனால்தான் வந்தேன்'' என்றேன்.

''ஹேய்...... என்னைக் கேட்டால் தெரிந்து கொள்ளலாம் என்று எந்த 'பாஸ்டர்ட்' சொன்னான்?......'' என்று கேட்டார்.

(இந்த 'பாஸ்டர்ட்' (Bastard) என்ற சொல், அவர் வாயிலிருந்து சர்வ சாதாரணமாக வந்தது. எல்லாரையும் அந்த அடைமொழியிலேயே அழைத்தார். அன்புடன் சொல்லும்போதும் அதே வார்த்தை, ஆத்திரத்துடன் சொல்லும்போதும் அதேதான். அது அவரிடம் பழக்கமாகியிருந்தது. அதன் பொருளை உணர்ந்து, திட்டும் நோக்கத்துடன் அவர் சொல்லவில்லை. நம் தஞ்சை ஜில்லாவாசிகள் சிலர், இப்படித்தான் சில கெட்ட வார்த்தைகளைச் செல்லமாகப் பயன்படுத்துவார்கள். என்ன வார்த்தை என்று கேட்கிறீர்களா? அதை எழுத்தில் சொல்ல முடியாதே!)

''சர்க்கார் இலாகாவினர் உங்களைப் பற்றிச் சொன்னார்கள்'' என்றேன்.

''ஓ! அந்த 'பெலோஸ்' (Fellows) என்னை ஞாபகம் வைத்திருக்கிறார்களா? இந்த நாட்டில் திரைப்படத் தொழில் செழிக்காமல் போனதற்கே இந்த சர்க்கார்தான் காரணம். அமெரிக்கப் படங்களுடன் எங்களால் போட்டி போட முடியவில்லை'' என்றார்.

''ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்? நீங்களும் ஆங்கிலத்தில்தானே படம் எடுக்கிறீர்கள்? தரமான படங்களாக எடுத்தால் கண்டிப்பாகப் போட்டி போடலாமே...'' என்றேன்.

'கலகல'வென்று சிரித்தார் 'சிப்ஸ்'. பிறகு, ''எல்லாரும் அப்படித்தான் நினைக்கிறார்கள். இது ரொம்பவும் 'காம்ப்ளிகேடட்' விஷயம். அமெரிக்கப் படங்களுடன் போட்டி போட வேண்டும் என்றால், மிகப் பெரிய படங்களாக எடுக்க வேண்டும். எங்கள் படங்களை அமெரிக்காவிலும் வெளியிட வேண்டும். அப்போதுதான் பணம் கிடைக்கும். ஆனால் அமெரிக்காவில் உள்ள தியேட்டர்களை யெல்லாம், பெரிய பெரிய தயாரிப்பாளர்கள் தங்கள் 'கண்ட்ரோ'லில் வைத்திருக்கிறார்கள். தங்கள் நாட்டுப் படங்களைத்தான் அவர்கள் போடுகிறார்கள். எனவே, எங்கள் நாட்டுப் படங்களுக்கு அங்கே இடம் கிடைப்பதில்லை. அதனால், உள்ளூர் மார்க்கெட்டை மட்டுமே நம்பிப் படம் எடுக்க வேண்டி யிருக்கிறது. விரலுக்குத் தகுந்தபடிதானே வீங்க முடியும். உள்ளூரில் மட்டும் ஓடும் படத்திற்கு நிறைய செலவு செய்ய முடியாது.

''எனவே, குறைந்த செலவில் சாதாரண அமைப்பில் எடுக்கும் எங்கள் படங்கள், நிறைய செலவில், கண்ணைக் கவரும் வண்ணம் எடுக்கப்படும் 'ஹாலிவுட்' படங்களுடன் போட்டி போட முடியாமல் செத்து

மடிகின்றன. அத்துடன் இந்த நாட்டில் சினிமா எடுப்பவனுக்கு 'பாங்க்' காரர்கள் பணம் கொடுப்பதில்லை. அவனை அவர்கள் நம்பமாட்டேன் என்கிறார்கள். சினிமாவை ஒரு வியாபாரமாக இவர்கள் கருதுவதில்லை. என்ன செய்வது?'' என்றார்.

''தேசியப் பற்று கொண்ட மக்களின் ஆதரவு அதிகரித்தால், உங்கள் பிரச்னைக்குத் தீர்வு கிடைக்கலாம்...'' என்றேன் நான்.

உடனே கொதித்தெழுந்தார் 'சிப்ஸ்'.

''நான்சென்ஸ்......'' என்று கூறி, அவருக்கே உரித்தான அந்த சொல்லை அந்த நாட்டு மக்களுக்குப் பிரயோகித்து, ''அந்தப் பற்றெல்லாம் இருந்தால் நாங்கள் எப்போதோ முன்னேறி இருப்போமே! அவனவன் சும்மா 'என்ஜாய்' பண்ண விரும்புகிறான். செக்ஸி ஹாலிவுட் படம் என்றால், அங்கேதான் போய்விடுகிறான். டெலிவிஷனில் கூட, தினம் தினம் இரண்டரை மணி நேரத்திற்கு 'ஆஸ்திரேலிய விஷயங்கள்' அடங்கிய படங்கள் காண்பிக்க வேண்டும் என்று சட்டம் கொண்டு வந்தார்கள். என்ன ஆயிற்று! பலிக்கவில்லை. டி. வி. கம்பெனிக்காரர்கள் 'நாங்கள் தயாரிப்பாளர்கள் அல்ல, வெளியிடுபவர்கள்தான். இந்தச் சட்டம் எல்லாம் எங்களிடம் செல்லுபடியாகாது' என்று கூறிவிட்டார்கள். இங்கிலாந்தில் இருப்பது போல் 'கோட்டா ஸிஸ்டம்' வரவேண்டும். அதற்குச் சட்டம் போட வேண்டும். ஆஸ்திரேலிய தயாரிப்புக்கு சர்க்கார் 'நிதி உதவி' செய்ய வேண்டும். இப்போது நிலைமை என்ன தெரியுமா? ஒரு படம் எடுத்து வெளியிட்டால், 'ரா பிலிம்' (Raw Film) செலவுகூட, உள்நாட்டு வெளியீட்டின் மூலம் கிடைப்பதில்லை. நான் இதுவரை கஷ்டப்பட்டு எட்டுப் படங்கள் எடுத்தேன். மிஞ்சியது பண நஷ்டம்தான். விடுங்கள், இந்த மக்களுக்கு இவ்வளவுதான் தகுதி...'' என்று மக்கள் மீது பாய்ந்தார்.

என்னிடம் பேசிக்கொண்டே, அரை அரை சிகரெட்டாகப் பிடித்துத் தீர்த்தார் சிப்ஸ்.

''உங்கள் நாட்டில் 'உருது'ப் படங்கள் நன்றாக ஓடுகின்றன என்று கேள்வி. அத்துடன், 'ப்ளடி' அமெரிக்கனுடன் போட்டி போட வேண்டிய அவசியம் உங்களுக்கு இல்லை. உங்கள் தாய்மொழியில் அல்லவா படம் எடுக்கிறீர்கள். அதில் அவன் வந்து போட்டி போட முடியாதே...'' என்றவர், கொஞ்சம் குரலைத் தாழ்த்தி, ''ஹேய்... அவசரப்பட்டு உங்கள் நாட்டில் எல்லோருக்கும் ஆங்கிலக் கல்வி கொடுத்து விடாதீர்கள். உங்கள் ஊரில் இங்கிலீஷ், இங்கிலீஷ் என்று எல்லோரும் பறக்கிறார்களாம்! நன்றாக ஆங்கிலம் தெரிந்துவிட்டால், அப்புறம் அவனவன் ஹாலிவுட் படம்தான் பார்ப்பான். பிறகு உங்கள் 'பிலிம் இண்டஸ்டிரி'க்கு ஆபத்து வந்துவிடும். உங்கள் திரைப்படத் தொழில் பிழைக்க வேண்டுமானால், ஆங்கிலத்தைக் கொஞ்சம் தள்ளி வையுங்கள். எதற்கு ஆங்கிலம்? ஜப்பான்காரன் ஆங்கிலம் இல்லாமல் முன்னேறவில்லையா, என்ன?'' என்றார்.

''உங்களைப் பற்றி இன்னும் கொஞ்சம் தெரிந்துகொள்ள வேண்டும். பேட்டி மாதிரி சில கேள்விகள் கேட்கலாமா?'' என்று கேட்டேன்.

''ஓ!... என்னைப் பற்றியா?—ஒன்று செய்யுங்கள். மீட் ஜான் லயன்ஸ்... அவர் என்னைப் பற்றியெல்லாம் சொல்லுவார்...'' என்றவர், ''ஹேய்... போட்டோ கிட்டோ போடப் போகிறுயா? போடுவதானுல் கேட்டுப் போடு. நிறையப் போட்டு உன் வியாபாரத்தைப் பெருக்கிக் கொள்ள நினைத்தால், என் வக்கீல் உன்னிடம் பேசுவார்'' என்று உரக்கச் சிரித்துக் கொண்டே கூறினர்.

''ஒரே ஒரு கேள்வி. உங்கள் ஊரில் எத்தகைய படங்களை மக்கள் அதிகம் விரும்புகிறுர்கள்?'' என்று கேட்டேன்.

''வெல்...... அட்வென்சர் ஸ்டோரீஸ்தான் எங்கள் மக்களுக்கு அதிகம் பிடிக்கிறது. சாதாரணமாக எல்லா நாட்டு 'ஆவரேஜ்' மக்களும் விரும்புவது, 'அட்வென்சர்' கதைகள்தான்......'' என்ருர், ஆஸ்திரேலிய நாட்டு காரி கூப்பர்.

முப்பத்தைந்து வருட காலமாகத் திரைத் துறையில் மின்னி வரும் அந்த ஆறரை அடி உயர நடிகரிடம் விடைபெறும்போது, உண்மையிலேயே ஒரு கலைஞனிடமிருந்து விடைபெறுகிறேம் என்ற உணர்வு என்னுள் எழுந்தது.

நாங்கள் காரில் ஏறிக் கொண்டு புறப்பட்டோம். அதற்குள், பழைய அழுக்குக் குல்லாய், ஏப்ரன், கத்தரிக்கோல் சகிதம் தோட்டத்திற்குள் நுழைந்து விட்டார் சிப்ஸ் ராபெர்ட்டி.

# 13

"இங்கு குளிர் காலம் ஆரம்பித்து விட்டது. இன்றைய அதிக வெப்ப நிலை 54°F ஆகும். கம்யூனிஸ்ட் சீனாவைப் பற்றி இங்கு அடிக்கடி செய்திகள் வருகின்றன. 'பங்களா தேஷ்' பற்றி அதிக செய்திகள் இப்போது இல்லை. சில நாட்களுக்கு முன்னால் அடிக்கடி செய்திகள் வந்து கொண்டிருந்தன. போன வாரம் இங்கு மெல்போர்ன் பல்கலைக் கழகத்தில் 'ஓபன் டே' (Open Day) என்று கொண்டாடினார்கள். அன்று எல்லாப் பிரிவும் பொதுமக்களுக்குத் திறந்து வைக்கப்பட்டிருந்தன. அநேக விதமான சினிமாக்கள், கலை நிகழ்ச்சிகள், சித்திரப் பிரிவுகள் முதலியன இருந்தன. மெடிகல் டிபார்ட்மெண்ட் முதல், இண்டியன் டிபார்ட் மெண்ட் வரை எல்லாம் திறந்து வைக்கப்பட்டு விளக்கிச் சொல்லப் பட்டன.

"அன்று, இந்தியக் கல்வி இலாகாவின் சார்பில், ஓர் ஆஸ்திரேலியப் பெண் (பெயர் ஸோபி) ஒரு தென்னிந்திய கிராமிய நடனம் ஆடினாள். 'ரன் அவே' (Run away) என்ற வங்காளிப் படத்தை, இங்கிலீஷ் 'ஸப் டைட்டில்' போட்டுக் காட்டினார்கள். தமிழ்ப் படங்கள் என்றுதான்



இந்த நிலைக்கு வருமோ? தமிழர்கள் இல்லாத வெளிநாட்டில் தமிழ்ப்படங்களைக் காட்டுகிறார்களா? ஏராளமான தமிழர்கள் பிஜியில் இருந்தும், தற்போது அவர்களுக்குத் தமிழ் தெரியாது. நம்முடைய தமிழக அரசு, இதற்கு ஏதாவது வழி செய்யலாம்......''

மெல்போர்ன் நகரில் உள்ள டாக்டர் சுப்பையா அவர்களிடமிருந்து சமீபத்தில் எனக்கு வந்த கடிதத்தின் ஒரு பகுதி இது.

பங்களாதேஷ் பற்றியும், சினிமாவைப் பற்றியும், தமிழ்ப் படங்கள் பற்றியும் பல விஷயங்களை அவர் எழுதியிருந்தார்.

'ஆஸ்திரேலியாவில் வாழும் தமிழர் இதில் எல்லாம் அக்கறை காட்டுவது நியாயம்தானே' என்று சொல்லலாம். ஆனால், ஆஸ்திரேலியர்கள் பலருக்கு நம்மைப்பற்றிய 'நினைப்பு' இருப்பதை, நான் எனது சுற்றுப் பயணத்தில் கண்டேன்.

ஒரு நாள் இரவு, 'கிங்க்ஸ் கிராஸ்'ஸில் சாலை ஓரத்தில் இருந்த ஒரு ரெஸ்டாரெண்டில் அமர்ந்து, காபி சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். என் எதிரே வந்து அமர்ந்தார் ஒருவர். பரஸ்பரம் நாங்கள் ஒருவரை ஒருவர் பார்த்துச் சிரித்துக் கொண்டோம். இது மேல்நாடுகளில் சர்வசாதாரணமான நிகழ்ச்சி.

காபியைக் குடித்து முடிந்ததும் அந்த ஆஸ்திரேலியர் என் பக்கத்து நாற்காலிக்கு வந்து அமர்ந்து கொண்டு, ''இந்த ஊர் ஆஸ்பத்திரியில் பணியாற்றும் டாக்டர்தானே நீங்கள்?'' என்று கேட்டார்.

''இல்லை...... நான் ஒரு டூரிஸ்ட்'' என்றேன்.

''அப்படியா? உங்களைப் போன்றே ஒருவர் இருக்கிறார். மான்டீஸ் டபிள் போல்...'' என்று சிரித்துக் கொண்டு கூறியவர், ''நான் சர்க்கார் இலாகாவில் பணியாற்றுகிறேன். நீங்கள் இந்த நாட்டுக்கு வந்து எவ்வளவு நாளாயிற்று?'' என்று கேட்டு, இன்னொரு கப் காபிக்கு ஆர்டர் கொடுத்தார்.

''கொஞ்ச நாள்தான் ஆகிறது'' என்றேன்.

''என்ன தொழிலோ?''

''பத்திரிகைக்காரன்......'' என்று கூறி, அவர் மேலும் கேட்பதற்கு முன், என்னைப் பற்றிய விவரங்களை யெல்லாம் கூறினேன்.

''ஐஸீ'' என்றவர், ''அப்படியானால் எல்லாவற்றையும் சரியாகப் பாருங்கள். எங்கள் தேசத்தை இப்படி யெல்லாம் பார்த்தால் புரிந்து கொண்டுவிட முடியாது. இதன் 'ஆத்மா'வை தரிசிக்கப் பாருங்கள். இந்த நாட்டின் ஒரு கோடிக்கும் மேற்பட்ட மக்களின் 'ஆத்மா'வை புரிந்து கொள்ள முயலுங்கள்......'' என்றார்.

''நீங்கள் சொல்வது போல் முழுமையாகப் புரிந்துகொள்ள வேண்டுமானால், நான் இங்கேயே குடியிருக்க வேண்டியதுதான்......'' என்றேன் சிரித்துக் கொண்டே.

''யூ ஆர் வெல்கம்... உங்களைப் பார்த்தால் புத்திசாலியாகத் தெரிகிறது. நாங்கள் பிறநாட்டுத் திறமைசாலிகளை இரு கை கொண்டும் வரவேற்கிறோம்.''

''உங்கள் பெயர் என்ன என்று தெரிந்து கொள்ளலாமா?''

''டேவிட் ஜோன்ஸ்......''

''உங்கள் பெயரில்......''

''யெஸ்... இங்கு என் பெயரில் ஒரு பெரிய டிபார்ட்மெண்ட் ஸ்டோர்ஸ் இருக்கிறது. அதற்கும் எனக்கும் சம்பந்தமில்லை'' என்றார் சிரித்துக் கொண்டே.

''உங்கள் நாட்டின் 'ஆத்மா'வை நீங்கள்தான் கொஞ்சம் காட்டுங்களேன்'' என்றேன் நான்.

''ஷ்யூர்...முடிந்த அளவு காட்டுகிறேன். முதலில் எங்கள் நாட்டைப் பற்றிச் சில விவரங்களைத் தெரிந்து கொள்ளுங்கள். இது ஒரு இளைஞர்கள் நாடு'' என்றார்.

''இளைஞர்கள் நாடா? அப்படி யென்றால்?...'' என்றேன் நான் புரியாமல்.

''இந்த நாட்டின் பாதி ஜனத்தொகை 25 வயதுக்குக் கீழ்ப்பட்டவர்கள். அதனால்தான் இளைஞர்கள் நாடு என்றேன். ஒரு கோடிக்கு மேற்பட்ட மக்களில், எழுபது லட்சம் பேருக்குமேல் நகரவாசிகள். நியான் விளக்குகள், 'பாப்' இசை, தினசரிப் பால், செய்தித்தாள் இவற்றுடன் வாழ்க்கை நடத்துகிறவர்கள். மக்களில் பெரும்பான்மையோர் இந்த 'நியூஸௌத்வேல்ஸ்' பகுதியிலும், விக்டோரியாவிலும் குடியிருக்கிறார்கள். இதை விட்டால், மெல்போர்ன், பெர்த், டார்வின், அடிலெய்ட்தான்! எனவே, நகரத்தில் வாழும் இளைஞர்கள் மிகுந்த நாடு இது என்பதை, நீங்கள் முதலில் புரிந்து கொள்ள வேண்டும்... இட் ஈஸ் அ யங் நேஷன்......'' என்றார்.

மிஸ்டர் டேவிட் மிக உற்சாகமாகவும், ஆர்வத்துடனும் பேசினார். தன் நாட்டைப் பற்றிய சரியான 'இமேஜை' என்னிடம் ஏற்படுத்த வேண்டும் என்ற அக்கறையுடன் பேசினார்.

இதற்குள் அவருக்குக் காபி வந்தது. எனக்கும் இன்னொரு காபி ஆர்டர் செய்தார்.

''உங்கள் நாட்டைப் பற்றியும் எனக்குத் தெரியும். மேடம் காந்தி, பார்லிமெண்டைக் கலைத்துவிட்டார் என்ற செய்தியைப் படித்தேன். இட் ஈஸ் எ குட் மூவ் (நான் அவரைச் சந்தித்தது, இந்த ஆண்டு ஜனவரியில்). வயதானவர்கள்தான் உங்கள் நாட்டு அரசியலில் அதிகமாக இருக்கிறார்கள். எனக்கென்னமோ, மேடம் காந்தி மீண்டும் மகத்தான வெற்றி பெறுவார் என்று தோன்றுகிறது......'' என்றார்.

''தேர்தலைப் பற்றிய ஜோசியங்கள் எங்களுக்குச் சரியா யிருப்பதில்லை'' என்றேன்.

''இருக்கலாம்...... ஆனால், இளைஞர்களுக்கு உங்கள் நாட்டில் அளிக்கும் வாய்ப்புக்கள் போதாது என்பேன். இந்த விதத்தில் இப்போது 'சீனு' முன்னேறி யிருக்கிறது'' என்று, அவரும் 'சீனு'வின் புகழ்பாட ஆரம்பித்தார்.

''எங்கள் பிரச்னை மகத்தானது. வெகு நேரம் பேச வேண்டும். காபி டேபிளில் அமர்ந்து அதை விமரிசனம் செய்து, முடிவெடுத்துவிட முடியாது'' என்றேன் நான்.

''ஒப்புக் கொள்கிறேன். ஆனால் எந்த விஷயத்திற்கும் இரண்டு கண்ணோட்டங்கள் உண்டு அல்லவா? உள்நாட்டுக் கண்ணோட்டம், வெளி நாட்டுக் கண்ணோட்டம் என்று இரண்டு உண்டு. வெளிநாட்டுக்காரனின் கண்ணோட்டப்படி பார்த்தால், உங்கள் நாட்டில் இளைஞர்களுக்குப் போதிய வாய்ப்பு அளிக்கப்படுவதில்லை என்பது புரிகிறது....'' என்றவர், ''எனக்கு இதெல்லாம் எப்படித் தெரியும் என்று கேட்கிறீர்களா? இந்திய நண்பர்கள் எனக்கு நிறைய உண்டு. மிக புத்திசாலியான பேராசிரியர் ஒருவர் என் நண்பர். 'ஏனய்யா இந்தியாவை விட்டு விட்டு வந்தீர்?' என்று அவரைக் கேட்டேன். 'இந்தியாவில் எனக்குப் பேராசிரியர் பதவி கிடைக்கவில்லை. அதற்கு வயதாகவில்லை என்று சொல்லி விட்டார்கள். எங்கள் நாட்டில், இதற்கெல்லாம் முதல் தகுதி 'வயது'தான். எங்கள் பல்கலைக் கழகங்களில் நரைத்த முடிக்குத் தான் நிறைய மதிப்பு!' என்று கூறினார். அவருடன் பேசிக் கொண்டிருந்தபோது, உங்கள் ஊரில், கால் நூற்றாண்டு காலம்கூட ஒருவரே வைஸ்சான்ஸலராக இருக்க முடியும் என்ற அதிசயத்தைப் புரிந்து கொண்டேன்......'' என்றார்.

''உங்கள் கேள்வியில் இரண்டு விஷயங்கள் இருக்கின்றன. ஒன்று வயது, இன்னொன்று திறமை. இளைஞர்களில் திறமைசாலிகள் இருப்பது போல், வயதானவர்களிலும் இருக்கலாம். எனவே, அதைத் தவறாக நினைக்க வேண்டாம்......'' என்றேன்.

''ஸாரி, எங்கள் நாட்டைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்து உங்கள் நாட்டைப் பற்றிப் பேசுகிறேன். எங்கள் சரித்திரம் உங்களுக்குத் தெரியும் என்று நினைக்கிறேன். 1788-ல், 194 மாலுமிகள், 736 சிறைக் கைதிகளுடன் ஆரம்பித்த தேசம் இது. 1901-ல் பெடரேஷன் அமைந்தது. பெரும்பான்மையான ஆஸ்திரேலியர்கள் நகரத்திலிருந்து தள்ளி 'சபர்'பில் வசிக்கிறார்கள். காரணம், சொந்த வீட்டில் வசிக்க வேண்டும் என்ற ஆசைதான். சின்ன வீடு, சிறிய தோட்டம் இவற்றில் ஆஸ்திரேலியனுக்குத் தனி ஆசை உண்டு. வேலையிலிருந்து வந்ததும், தோட்டத்தில் வேலை செய்து கொண்டிருப்பான் அவன்'' என்றார்.

''ஓகோ, அதனால்தான் உங்கள் ஸிட்னியில் நிறைய 'ரியல் எஸ்டேட்' காரர்கள் இருக்கிறார்கள் போலும்'' என்றேன்.

''இருக்கலாம்.... எங்கள் நாட்டுத் தொழிலிலும் மகத்தான புரட்சி நடந்திருக்கிறது. அறுபது எழுபது வருடங்களுக்கு முன்னால், பத்தில்

மூன்று ஆஸ்திரேலியர்கள் சுரங்கத் தொழிலாளியாக இருந்தார்கள். ஆஸ்திரேலியா என்றவுடன், சுரங்கங்கள் நினைவுதான் பலருக்கும் வரும். இப்போது நிலைமை வேறு. பத்தில் ஒருவர்தான் சுரங்கத் தொழிலாளி. பெருவாரியானவர்கள் பாங்குகளிலும், டிபார்ட்மெண்டல் ஸ்டோர்களிலும், இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகளிலும், கம்யூனிகேஷன் நெட் ஒர்க்கிலும், மற்ற தொழில்களிலும் வேலை செய்கின்றனர். வேலைக்குப் போகும் பெண்களின் எண்ணிக்கையும் அதிகரித்து வருகிறது......'' என்றார்.

''பெண்கள் வேலைக்குப் போவது சரியான கணவனைத் தேர்ந்தெடுக்கத்தானே...'' என்று, முன்பு என்னிடம் ஒரு பெண் சொன்னதை வைத்துக் கொண்டு கேட்டேன்.

''அப்படிச் சொல்லிவிட முடியாது. எங்கள் பெண்கள் சிறந்த உழைப்பாளிகள், சிறந்த மனைவிகள்! தேசப்பற்று மிக்கவர்கள். ஆஸ்திரேலியா முன்னேற வேண்டும் என்பதில் எங்கள் பெண்களுக்கு அதிக அக்கறை உண்டு. எனவே, உழைக்க முன் வருகிறார்கள். 'ஐ லவ் எ ஸன்பர்ன்ட் கன்ட்ரி' என்ற பாடல் தெரியாத பெண்ணே இருக்கமாட்டாள்'' என்றார்.

''அதுதான் உங்கள் தேசிய கீதமோ?'' என்று கேட்டேன்.

''எங்களுக்கென்று தனியாக தேசிய கீதம் கிடையாது. ஆனால், தேசப் பற்றைத் தூண்டிவிடும் பாடல் உண்டு. அதுதான் 'ஐ லவ் எ ஸன் பர்ன்ட் கன்ட்ரி' என்ற பாடல்.

I Love a Sunburnt Country,
A Land of Sweeping Plains,
Of Rugged Mountain Ranges,
Of Droughts and Flooding Rains,
And this wide Brown Land for Me.

என்று அதைப் பாடிக் காட்டினார். பிறகு தேசிய கீதம் இல்லாவிட்டாலும் தேச விவகாரங்களில் அக்கறை குறைந்தவர்கள் அல்ல. தேர்தலின் போது ஓட்டுப் போடாவிட்டால், எங்கள் ஊரில் அபராதமே உண்டு...... தெரிந்து கொள்ளுங்கள்......'' என்றார்.

இதற்குள் நாங்கள் காபி சாப்பிட்டு முடித்து விட்டோம். ''வாருங்களேன், கொஞ்சம் நடந்து கொண்டே பேசலாம்......'' என்றார் டேவிட்.

''சரி'' என்று புறப்பட்டேன்.

''உங்கள் சென்னையைப் பற்றி நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். இந்தியாவிலேயே அதுதான் சிறந்த நகரமாம்'' என்றார் டேவிட்.

''அப்படி யார் சொன்னார்கள்?'' என்று கேட்டேன்.

''அங்கு பல காலம் வாழ்ந்த ஒரு நண்பர் சொன்னார். சிறந்த சீதோஷ்ண நிலை உள்ள நகரம் அது என்றார். எல்லை மீறிய வெயில், எல்லை மீறிய குளிர், எல்லை மீறிய மழை என்றெல்லாம் இல்லாமல்,

மிதமான சீதோஷ்ண நிலை உள்ள நகரம் சென்னை. அத்துடன் நகரத்தின் சௌகரியங்களும், கிராமத்தின் இதமும் (Advantage of a City Life and Comfort of a Village Life) சென்னையில் கிடைப்பது போல் பம்பாயிலோ, டெல்லியிலோ கிடைக்காது என்றார் அவர். அவர் சொன்னதைக் கேட்டதிலிருந்து சென்னைக்கு வர வேண்டும் என்ற ஆசை எனக்கு ஏற்பட்டு விட்டது......'' என்றார்.

''தாங்க்யூ......'' என்று சென்னை மக்கள் சார்பில் அவருக்கு நன்றி சொன்னேன்.

''உங்களுக்கு எந்த விளையாட்டில் விருப்பம் உண்டு?'' என்று கேட்டார் டேவிட்.

''விளையாட்டிற்கெல்லாம் எனக்கு நேரமே இல்லை...'' என்றேன்.

''அப்படிச் சொல்லவே கூடாது. ஒரு மனிதனுக்கு விளையாட்டு மிகவும் முக்கியமானது. அதுதான் அவனை 'அலெர்ட்'டாக வைத்திருக்கிறது என்பேன். எங்கள் நாட்டில், விளையாட்டிற்கு நிறைய 'ஸ்கோப்' உண்டு'' என்றார்.

''இங்கு என்ன விளையாட்டு பாபுலர்? கிரிக்கெட்தானே'' என்று அவருடைய அபிப்பிராயம் என்னவென்று தெரிந்து கொள்ளும் ஆர்வத்தில் கேட்டேன்.

''ஸரிபிங், ஸ்கின் டைவிங், போட்டிங், ஹன்டிங், யாட்சிங், கிரிக்கெட், புட்பால், டென்னிஸ், பௌல்ஸ், பேஸ்பால், ஹாக்கி, கார் ரேஸிங்...'' என்று அடுக்கிக் கொண்டே போனவர், ''இவ்வளவிற்கும் இங்கே வழியுண்டு. ஆனால், ஏனோ ஆஸ்திரேலியா என்றால் கிரிக்கெட்டும் டென்னிஸும்தான் எல்லோருடைய நினைவுக்கும் வருகிறது'' என்றார்.

கொஞ்ச தூரம் நடந்த பிறகு, ''வாருங்கள், திரும்பிப் போவோம். என் காரில் உங்களை உங்கள் ஓட்டலில் கொண்டு போய் விடுகிறேன்'' என்றார்.

ஓட்டல் வாசலில் இறக்கிவிட்டவர், ''நிறையப் பேரிடம் பேசுங்கள். அப்போதுதான் இந்த நாட்டின் ஆத்மா புரியும்...'' என்று கூறிவிட்டு விடை பெற்றார்.

# 14

நான் ஆஸ்திரேலியாவுக்குப் புறப்படுமுன், அங்குள்ள தமிழ் நண்பர்கள் சிலருக்குக் கடிதம் எழுதி, ''நான் அங்கே என்னென்ன பார்க்க வேண்டும் என்று அபிப்பிராயப்படுகிறீர்கள். எனக்குச் சாப்பாட்டு விஷயத்தில் நீங்கள் எப்படியெல்லாம் உதவ முடியும்?'' என்று விளக்கம் கேட்டிருந்தேன். நான் எழுதிய கடிதத்திற்கு முதல் பதில், நண்பர் முத்துசாமியிடமிருந்துதான் வந்தது.

''ஆஸ்திரேலியாவும் வளர்ந்துவிட்ட மேலை நாடுகளைப் போல் ஒன்றுதான். எந்தெந்த விஷயங்களில் உங்களுக்கு விருப்பம் இருக்கிறதோ, அவற்றைப் பார்க்கலாம். ஆனால் குறிப்பாக, 'வேஸைட் சாப்ப'லுக்கு (Wayside Chapel) நீங்கள் போக வேண்டும். சஞ்சலத்துடன் வளர்ந்துவரும் இன்றைய இளம் சமுதாயத்தினரின் எல்லாக் கேள்விகளுக்கும்'டெட் நாஃப்ஸ்' (Ted Noffs) என்ற பாதிரியார் சிறப்பாகப் பதில் சொல்லி வருகிறார். அவர் நடத்தி வரும் 'சர்ச்'சே புதுமையானது. இன்றைய ஸிட்னியில் அவர் பணி மகத்தானது......'' என்று குறிப்பிட்டிருந்தார்.



'என்ன இது, எல்லாவற்றையும் விட்டுவிட்டு, ஒரு புதுமையான பாதிரியாரைப் பார்க்கச் சொல்கிருரே' என்று எண்ணினேன். ஸிட்னி நகரை அடைந்த பிறகு, பல பேரிடம் 'டெட் நாஃப்ஸ்' அவர்களைப் பற்றியும், அந்த 'வேஸைட் சாப்பல்' பற்றியும் விசாரித்தேன். அதைப் பற்றி ஒவ்வொருவரும் ஓர் அபிப்பிராயம் சொன்னர்கள். சரி, அது எப்படித்தான் இருக்கிறது என்று பார்த்து விடுவோமே என்ற முடிவுடன், ஒரு நாள் 'டெட் நாஃப்ஸ்' அவர்களிடம் டெலிபோன் மூலம் 'எங்கேஜ்மெண்ட்' ஏற்பாடு செய்துகொண்டு புறப்பட்டேன்.

சர்ச்சின் வாசலில் சென்று நின்று, அதை ஒரு முறை பார்த்தேன். அங்கு இருந்த ஓர் இளைஞனிடம் ''இந்தச் சர்ச்சைப் பற்றி உங்கள் கருத்து என்ன?'' என்று கேட்டேன்.

''ரெவரண்ட் டெட் நாஃப்ஸ்ஸின் (Rev - Ted Noffs) இந்த சர்ச், மெதடிஸ்டுகளின் மத போதனையில் ஒரு புது முயற்சி. இது சர்ச்சுகளின் வழக்கமான நிபந்தனைகளுக்கு உட்பட்ட ஒன்று அல்ல. இதில் வந்து போகிறவர்கள் தீவிரமாகப் பிரார்த்தனை செய்கிறவர்களும் அல்ல. இது எங்கே இருக்கிறது பார்த்தீர்களா? சர்ச்சுகள் ஊருக்கு ஒதுக்குப்புறத்தில் தானே இருக்கும். இது ஒரு புதுமையான வரவேற்கத் தகுந்த முயற்சி. இது பற்றி மேலும் விவரம் தெரிய வேண்டுமானல், உள்ளே சென்று விசாரியுங்கள்'' என்ருர்.

டெட் நாஃப்ஸ்ஸின் காரியதரிசி என்னை அன்புடன் வரவேற்ருர். ஓர் அறைக்கு அழைத்துச் சென்று, ''இங்கே உட்காருங்கள்; மிஸ்டர் நாஃப்ஸ் இப்போது வந்து விடுவார்'' என்று இன்முகத்துடன் கூறினர்.

நான் அந்த அறையைச் சுற்றுமுற்றும் பார்த்தேன். ஏதோ ஒரு கல்லூரி பிரின்சிபாலின் அறை போல்தான் அது எனக்குத் தோன்றியது. கருணையே வடிவான ஏசுநாதரின் முகத்தையே பார்த்து, அதில் லயித்துக் கொண்டிருந்தபோது, ''குட் ஈவினிங். வெல்கம் டு யு......'' என்ற குரல் கேட்டது. திரும்பிப் பார்த்து எழுந்து நின்றேன். என் எதிரே, கருணையே வடிவமாக ஒருவர் நின்று கொண்டிருந்தார்.

அவரையே உற்றுப் பார்த்தேன். பிறகு என்னை அறியாமல் என் கண்கள் ஏசுநாதரின் படத்தின்மீது சென்றன.

''ஐயாம் டெட் நாஃப்ஸ்...இந்த ஆலயத்தைப் பற்றி அறியத் தாங்கள் விரும்பியதற்கு என் நன்றி...'' என்று கூறி, கையை நீட்டினர்.

''ஐயாம் மணியன்...'' என்று கரம் நீட்டினேன் நான்.

பாதிரியார் என்றவுடன், நான் எதிர்பார்த்த உருவம் வேறு. எல்லோரையும் போல் சாதாரணமான உடை உடுத்தி, என் எதிரே மிகவும் எளிமையாக—கவர்ச்சியான கண்கள் உடையவராக—நின்று கொண்டிருந்த அவரைப் பார்த்ததும், சில கண நேரம் எனக்குப் பேச்சே எழவில்லை.

''நீங்கள் செய்வது ஒரு சோதனைதானே?'' என்று கேட்டுவிட்டு, மீண்டும் அமர்ந்தேன் நான்.

''வாழ்க்கையே ஒரு சோதனைதானே... தினசரி வாழ்க்கையும் சோதனைதான். சோதனை செய்வதில்தான் வாழ்க்கைச் சக்கரமே உருள்கிறது'' என்றார் அவர் சிரித்துக் கொண்டே.

''புரிகிறது... ஆனால், நான் கேட்க வந்தது...''

''அது எனக்குப் புரிகிறது... பல கால சிந்தனைக்குப் பிறகு நான் இந்தச் சோதனையில் ஈடுபட்டேன். இன்றைய இளைஞர் உலகம் போகும் போக்கைக் கண்டு, அவர்களுக்கு ஏதாவது செய்ய வேண்டும் என்ற முடிவுடன், நான் துணிவுடன் எடுத்துக் கொண்ட முயற்சி இது. 1964-ல் தான் இந்த நாட்டு 'மெதடிஸ்ட் சர்ச் நிறுவனம்' இந்தச் சோதனையைத் தொடங்க எனக்கு அனுமதி அளித்தது. இந்த சர்ச் இருக்கும் இந்தப் பகுதியைப் பற்றி உங்களுக்குத் தெரியுமா? இது 'கிங்க்ஸ் கிராஸ்!' வாருங்கள், கொஞ்சம் வெளியே நின்று இதைப் பார்ப்போம்'' என்றார்.

''நான் பலமுறை இந்தப் பகுதியில் சுற்றி இருக்கிறேன்'' என்று கூறி, அவருடன் வெளியே வந்தேன்.

''ஸிட்னி நகரிலேயே மிகவும் நெரிசலான இடம் இதுதான். தியேட்டர்கள், கடைகள், பொழுதுபோக்கு 'பார்'கள் போன்ற சுகபோகங்கள் நிறைந்த இடம் இது. அதோ பாருங்கள், சிலர் மது போதையில் தள்ளாடுகிறார்கள். இகபோக இன்பம் முழுவதும் இங்கே உண்டு!'' என்றார்.

நான் சிரித்தேன்.

''இப்போதும் பார்க்கிறேன், இதற்கு முன்பும் பார்த்திருக்கிறேன். ஆமாம், இந்த இடத்திலா புனித போதனை? இங்கேயா இதயம் நெகிழும் பிரார்த்தனை?'' என்று கேட்டேன்.

நாஷ்ப்ஸ் கண்களை மூடி, தலையை மேலும் கீழும் அசைத்தார். பிறகு, ''இந்தச் சந்தேகம்தான் பலருக்கும் எழுந்தது. மதத் தலைவர்கள் பலர் இதைத் தீவிரமாக எதிர்த்தார்கள். அங்கே 'மெதடிஸ்டுகளே' இல்லை, அங்கே எதற்காக சர்ச் என்றார்கள். நான் என்ன பதில் சொன்னேன் தெரியுமா? 'எனக்குத் தெரிந்தவரை இங்கே ஒரு லட்சம் மக்கள் இருக்கிறார்கள். அந்த இதயங்கள் நமக்காகக் காத்துக் கொண்டிருக்கின்றன; அவை போதும். அவை 'மெதடிஸ்டு'களினுடையனவா என்று நாம் ஏன் பார்க்க வேண்டும்?' என்றேன் துணிவுடன். வானோங்கி வளர்ந்திருக்கும் கட்டடங்கள் நிறைந்த இந்தப் பகுதியில், நிமிர்ந்த நெஞ்சோடு இந்த சர்ச்சைத் தொடங்கினேன். என் முதல் சோதனை இந்த 'மெக்ளே தெரு'வில் ஒரு இடம் வாடகைக்குக் கிடைப்பதில்தான் இருந்தது. 1964-ம் ஆண்டு இந்தச் சோதனை ஆரம்பமாயிற்று. பலன்? இதுவரை ஒரு லட்சம் மக்களுக்கு மேல் இதில் வந்து கலந்து கொண்டிருக்கிறார்கள்...'' என்றார் அடக்கத்தோடு.

நாங்கள் மீண்டும் 'சர்ச்'சுக்குள் நுழைந்தோம்.

''பொது மக்களிடமிருந்து உங்களுக்கு உதவி கிடைத்ததா?'' என்று கேட்டேன்.

''கிடைத்தது. தமது பெயரை வெளியிட விரும்பாத தம்பதியிடமிருந்துதான் முதல் உதவி வந்தது. இந்த சர்ச்சை நான் எப்படி அமைக்க வேண்டும் என்பதற்கு 'ஐடியா' கொடுத்தவர் ஒரு அமெரிக்க இளைஞர். ஐடியாவென்றால் என்னிடம் நேரில் வந்து அவர் எதுவும் சொல்லவில்லை. அவர் கொள்கை ஒன்று எனக்கு 'ஐடியா'வைத் தந்தது. இந்த விட்னி பாலத்திற்கு அருகே, திறந்த நீர்வெளியில், ஒரு படகில், ஒரு விளையாட்டு இடம் தொடங்கினார் அவர். 'ஹேயெஸ் கார்டன்' என்ற அந்த இடத்திற்கு அவர் விளம்பரம் செய்தது 'யார் வேண்டுமானாலும் இங்கே வரலாம். திறந்த வெளியில் சுதந்திரமாக உட்கார்ந்து நட்சத்திரங்களைப் பார்த்துக் காப்பி அருந்தலாம்' என்பதுதான். இருநூறு பேர் உட்காரக்கூடிய அந்த இடத்திற்கு ஏகப்பட்ட போட்டி. இதைக் கவனித்தேன் நான். இந்த 'சர்ச்'சுக்கு மக்கள் வருவதற்கும் இப்படி ஏதாவது செய்யவேண்டும் என்ற முடிவுக்கு வந்தேன். இந்த 'சர்ச்'சின் மாடியிலேயே ஒரு 'காபி ஹவுஸ்' வைத்தேன். சிற்றுண்டியும், காபியும் கிடைக்க ஏற்பாடு செய்தேன். இங்கே வந்து விரும்பியதைச் சாப்பிடலாம். சாப்பிடாமல் வெறுமனே உட்கார்ந்து பேசலாம். 'செஸ்' விளையாடலாம், நடனம் ஆடலாம், பியானோ பழகலாம். இந்த சர்ச், சர்வ சுதந்திரமான ஒரு இடம் என்றேன்...இப்படி நான் அறிவித்ததும், 'நீங்கள் இப்படியெல்லாம் சொன்னால், 'பீட்னிக்'குகள் வந்துவிடுவார்களே என்று சிலர் அங்கலாய்த்தார்கள். 'வரட்டுமே! அவர்களுக்கும் என் வாசல் திறந்திருக்கிறது. கடவுளுக்கு எல்லோரிடமும் அக்கறை உண்டு. அவர் அக்கறை காட்டும் மனிதர்கள் வாயிலாகத்தான் நாம் கடவுளைத் தெரிந்து கொள்ளப் போகிறோம். இதை நீங்கள் எல்லோரும் உணர்ந்து கொள்ள வேண்டும்'...என்று கூறி, காரை எடுத்துக் கொண்டு போய், பீட்னிக்குகளை இந்த ஆலயத்திற்கு அழைத்து வந்தேன். அவர்கள் வருகையால் எனது எண்ணங்கள் பல ஈடேறின'' என்றார்.

ஒரு பத்திரிகைக்காரன் என்ற முறையில் ஒரு கேள்வி: ''உங்கள் திட்டத்திற்குப் பத்திரிகைகளின் ஆதரவு எப்படி இருந்தது?'' என்று கேட்டேன்.

''செய்திப் பத்திரிகைகள் எல்லாம் படம் வெளியிட்டு செய்தியைப் பிரகரித்தன. அதிக 'சர்க்குலேஷன்' உள்ள ஒரு சஞ்சிகை, சிறப்புக் கட்டுரை வெளியிட்டது. அதைப் படித்துவிட்டு வயதான ஒரு 'போஹீமியன்' என்னை நாடிவந்து, 'டெட், நீங்கள் ஒரு பயங்கரச் சோதனையில் இறங்கி யிருக்கிறீர்கள். மூன்று மாதம்தான் உங்களுக்குக் கெடு' என்றார். அவர் பயமுறுத்தல் எனக்குப் புரியவில்லை. 'ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்' என்று கேட்டேன். 'சமூகத்தில் புண்பட்ட மனம் கொண்டவர்களுக்கு நீங்கள் உங்கள் வாசல்களைத் திறக்கிறீர்கள். அவர்கள் நெஞ்சில் மிருக வெறி ததும்பிக் கொண்டிருக்கிறது. அவர்கள் வாழ்க்கையில் கூண்டில் அடைத்ததுபோல் உலவிக்கொண்டிருப்பவர்கள்.

நீங்கள் கூண்டைத் திறந்து அவர்களை உள்ளே விடுகிறீர்கள். நீங்கள்தான் முதல் பலியாவீர்கள்' என்ருர். அந்தப் பொஹிமியன் உண்மையைத் தான் சொன்னுர். அத்தகைய மக்களைத்தான் நான் நாடிச் சென்றேன். ஆனுல் நான் 'பலி'யாகவில்லை; 'பலி'யானது அந்தப் புதிய சமூகத்தின் சில தேவையற்ற போக்குகள்தான்.

''இளைஞர்களும், இளம்பெண்களும் இந்த காபி ஹவுசுக்கு 'இன்பம் துய்க்கும்' எண்ணத்துடனேதான் வந்தார்கள்... வந்தவர்கள் திரும்பிப் போகும்போது, அவர்களிடம் ஒரு மாறுதல் இருந்தது. பலதரப்பட்ட மனிதர்கள் இங்கு வந்தார்கள், ஒன்ருகப் பழகினுர்கள். அவர்களிடையே கட்டுப்பட்டிருந்த ஒரு உணர்ச்சிக்கு மடை திறந்தாற்போல் உணர்ந்தார்கள். இந்தச் 'சமூகம்' அவர்களை ஒதுக்கியது; எங்கள் 'ஆலயம்' அவர்களை இரு கரம் கொண்டு வரவேற்றது. மனிதன் சுபாவத்தில் மிகவும் நல்லவன். இது என்னுடைய அசைக்க முடியாத நம்பிக்கை.

''இந்த ஆலயத்திற்கு வந்தவர்களில் கவிஞர்கள் இருந்தார்கள், ஒவியர்கள் இருந்தார்கள். இவர்கள் எல்லோரும் மதத்தையும் பிரார்த்தனையையும் நம்புகிறவர்கள் அல்ல. 'இந்தக் கூட்டத்தினுல் உங்களுக்கு என்ன உபயோகம்?' என்று என் நண்பர்கள் கேட்டார்கள். 'ஏன், இவை அனைத்தும் மறைமுகமாக இறைவனுக்குரிய பிரார்த்தனை அல்லவா? கற்பனையிலிருந்தும், கலை விழிப்புடனும் வெளிப்படும் இந்த உணர்ச்சி வெளியீடுகள் எல்லாம் ஒருவகையில் உண்மையைத் தேடி அலையும் முயற்சிகள் அல்லவா? வாழ்க்கையில் நித்தியமான ஒன்றுக்காக ஏங்கும் உள்ளங்கள்தானே அத்தனையும்! ஆகவே, அவை அனைத்தும் இறைவனுக்குப் பிரியமானவையே' என்றேன்.

''இவர்களை நான் நுட்பமாகக் கண்காணித்து வந்தேன். இவர்களிடம் ஏற்படும் மாறுதலைக் கவனித்து வந்தேன். சாதாரண காபி ஹவுசுக்கு வருவது போல் வந்து போனவர்கள், கொஞ்சம் கொஞ்சமாக, சர்ச் வாசலில் கண நேரம் நின்று தொப்பியைக் கழற்றிவிட்டுப் போனுர்கள். இந்த 'சர்ச்'சில் வழக்கமான 'பாணி' எதுவும் கிடையாது. எதுவும் 'கன்பர்ம்ட்' இல்லை. எனவே, 'ஞன் கன்பர்மிஸ்ட்டு'கள் அதை விரும்பினுர்கள். இங்கே மக்களுக்குள்ளாகவே பாதிரியாரும் இருந்தார். ஒருவருக்கொருவர் பேசத் தடையாக எந்தவிதக் கட்டுப்பாடும் இல்லை. டெலிபோன் மூலம் ஏற்பாடு செய்துகொண்டு பிரார்த்தனைக்கு வந்தார்கள். எந்த நேரமும் கதவைத் தட்டி உள்ளே வர அனுமதிக்கப்பட்டார்கள். யாரையும் நான் விவரம் கேட்பதில்லை, விலாசம் கேட்பதில்லை. கைதி, ஸோல்ஜர், பயம் கண்டவர்கள் - இப்படி எத்தனையோ விதம். காது கேட்காதவர்கள், ஊமைகள் கூட, பலகைகளில் எழுதிக் கழுத்தில் மாட்டிக் கொண்டு வந்தார்கள். யாருக்கும் இங்கே தடை இல்லை. எல்லா மதத்தினரும் இங்கே வரலாம்'' என்ருர்.

பிறகு, ''கொஞ்சம் இருங்கள். இப்போது ஒரு திருமணம் நடக்க வேண்டியிருக்கிறது. அதை முடித்துவிட்டு வந்து, உங்களை நானே இந்த 'சர்ச்' முழுவதும் அழைத்துச் செல்கிறேன்'' என்ருர்.

''இங்கே திருமணங்கள்கூட நடக்கின்றனவா?'' என்று கேட்டேன்.

''இதுவரை இரண்டாயிரம் திருமணங்கள் நடந்துள்ளன. எந்த அடிப்படையில் என்ற கேள்வி இல்லே. வந்த தம்பதியில் ஒருவரைக் குறிப்பிடுகிறேன். அவர்கள் இருபத்தாறு ஆண்டுகளாகக் கணவன் மனைவியாக வாழ்ந்து கொண்டிருப்பவர்கள். 'இப்போது எதற்கு உங்களுக்குக் கல்யாணம்?' என்று கேட்டேன். அவர்கள் சொன்ன பதில் என் நெஞ்சை உலுக்கி விட்டது. 'இவள் எங்கள் பெண். புற்று நோயால் மடிந்து கொண்டிருக்கிருள். சாவதற்கு முன்பு அவளுக்குச் சட்ட பூர்வமான ஒரு குழந்தை என்ற அந்தஸ்தைக் கொடுக்கவே நாங்கள் திருமணம் செய்து கொள்கிரேம்' என்று ஒரு பெண்ணைக் காட்டிச் சொன்னுர்கள். அவர்கள் மனம் எப்படிப்பட்ட மாறுதலே அடைந்திருக்கிறது பார்த்தீர்களா?''

திருமணத்தை நடத்தி வைக்க உள்ளே சென்ருர் டெட் நாஃப்ஸ்.

அவர் திரும்பிய பிறகு அந்த 'சர்ச்'சின் உள்ளே சென்று பார்க்கும் ஆவலில், அந்த அறையில் வியந்து போய் அமர்ந்திருந்தேன் நான்.



## 15

ஆஸ்திரேலிய நாட்டு 'டீன் ஏஜ்' பெண்கள்!

அனைவருக்கும் அடைக்கலம் அளிக்கும் அந்த ஆலயத்தில் அமர்ந் திருந்தபோது, என்னை அறியாமல் என் நெஞ்சில் ஒரு நிம்மதி பிறந்தது. 'அன்புப் பணிதான், ஆண்டவன் பணி' என்ற சொல்லுக்கு இவர்கள் இலக்கணம் வகுத்துக் கொண்டிருக்கிறார்களோ என்று எண்ணினேன்.

திருமணத்தை முடித்து வைத்துவிட்டு வந்த டெட் நாஃப்ஸ், ''என்ன யோசனையோ?'' என்றார் என்னைப் பார்த்து.

''எல்லாம் இந்தக் கோயிலைப் பற்றித்தான்......'' என்றேன் நான்.

''இது எல்லோரையும் சிந்திக்க வைக்கும் ஆலயம். உங்களையும் சிந்திக்க வைத்து விட்டது. வாருங்கள், உள்ளே போய்ப் பார்ப்போம்'' என்றார்.

அவரைப் பின்தொடர்ந்தேன்.



ஓர் அறையில் இரண்டு இளைஞர்கள் ஏதோ வரைந்து கொண்டிருந்தார்கள். இருவரும் நீண்ட முடியுடன் கூடிய 'ஹிப்பிகள்'. டெட்டைப் பார்த்ததும் 'ஹை' என்று கூறிவிட்டு, மேலே வேலையைத் தொடர்ந்தார்கள்.

இன்னொர் அறையிலே, நாடக ஒத்திகை ஒன்று நடந்து கொண்டிருந்தது.

''அவர்களை 'டிஸ்டர்ப்' செய்யாமல் மெல்லப் போய்விடலாம், வாருங்கள்'' என்றார் டெட்.

சத்தம் போடாமல் மெல்ல நடந்தோம். ஏதோ ஓர் ஆங்கில நாடகத்திற்கான ஒத்திகை அங்கே நடந்து கொண்டிருந்தது. இசைப் பயிற்சி நடக்கும் இடத்தைக் கடந்து, இன்னொர் இடத்தை அடைந்தோம்.

''இங்கே கொஞ்ச நேரம் இருங்கள், வருகிறேன்'' என்று கூறி, என்னைத் தனியே விட்டுச் சென்றார் மிஸ்டர் நாஃப்ஸ். எனக்கு அந்த இடம் பிடித்திருந்தது. எந்தவிதமான கட்டுப்பாடும் இல்லாத சுதந்திரப் பிரதேசம் அல்லவா அது?

அங்கிருந்த ஒரு நாற்காலியில் அமர்ந்தேன். சிங்கம் போல் தலைமுடி வளர்த்திருந்த ஓர் இளைஞன், அங்கே அமர்ந்து கொண்டிருந்தான். அவனைப் பார்த்தவுடன், அவனிடம் பேச வேண்டும் என்று தோன்றியது. எனவே, அவனை நெருங்கி ''ஹலோ...'' என்றேன்.

''ஹலோ..... '' என்றான் அவனும் பதிலுக்கு.

''என் பெயர் மணியன், நான் ஓர் இந்தியப் பத்திரிகைக்காரன்'' என்றேன்.

''ஓ......ஐஸீ'' என்றான் பதிலுக்கு.

சிறிது நேரம் மௌனம். பிறகு,

''உங்கள் பெயரைத் தெரிந்து கொள்ளலாமா?'' என்றேன்.

''வாட் ஈஸ் தேர் இன் எ நேம்?'' என்றான் அவன் அலட்சியமாக.

''பெயரில் ஒன்றுமில்லைதான். இருந்தாலும் நமக்கெல்லாம் பெயர் என்று ஒன்று இருக்கிறதே....''

''யெஸ்......'ஜான்' என்று என்னைக் கூப்பிடுங்களேன்'' என்றான்.

''தாங்க்யூ, மிஸ்டர் ஜான்......இந்த இடத்தைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''வாட் ஈஸ் தேர் டு திங்க்'' என்று பதில் வந்தது.

''இல்லை, இது ஒரு புது மாதிரியான சர்ச் இல்லையா?''

''யெஸ்......''

''இங்கு யாரும் வரலாம் இல்லையா?''

''யெஸ்......''

''கண்டபடி மயக்க மருந்துகள், எல். எஸ். டி. இப்படி சாப்பிடும் இளைஞர் சமூகம் இங்கே நிறைய வருகிறதாமே?......''

''யெஸ், அவர்களுக்கென்றே ஓர் இடம் இருக்கிறது. ஆனால் டெட் அவர்களை மாற்றுகிறார். 'புத்திசாலிகளுக்கு இவை தேவையில்லை. புத்தியில்லாதவர்களுக்கு இவற்றால் பயனில்லை?' என்று கூறுவார் அவர். இங்கு வரும் இளைஞர்களில் பெரும்பாலோர் யாராவது வழிகாட்ட மாட்டார்களா என்று ஏங்குபவர்கள். தங்கள் குறைகளை வெளியே சொல்லக் கூச்சப்படுகிறவர்கள். அவர்களை முதலில் மதிக்கிறார் மிஸ்டர் நாஃப்ஸ். சமூகம் சரியாக மதிக்காத அவர்களை, இவர் மதிப்பதே முதல் வெற்றி. அவர்களைக் கொஞ்சம் கொஞ்சமாக மாற்றி, கற்பனை செய்து எழுதுவது, ஓவியம் வரைவது, நடிப்பது, அரசியல் விவாதங்களில் ஈடுபடுவது என்று பல்வேறு விஷயங்களில் ஈடுபடச் செய்கிறார்...இந்தச் சேவைதான், இன்றைய இளம் சமூகத்திற்கு மிகவும் தேவை. முதலில் அவர்களை மதிக்க வேண்டும், பிறகு மாற்ற வேண்டும். பெரும்பாலோர் அவர்களை ஒதுக்குகிறார்கள். அதன் விளைவு, அவர்கள் சமூக சட்ட திட்டங்களை, ஒழுக்கங்களை ஒதுக்குகிறார்கள்......வாட் டு யூ ஸே......'' என்றான் ஜான்.

''ஒப்புக் கொள்கிறேன்'' என்றேன்.

''இதேபோல்தான், வாழ்க்கையில் நெறி தவறிய பெண்களுக்கும் இங்கே வரத் தடை இல்லை. அவர்கள் அந்த வகையில் 'தொழில்' செய்ய வேண்டிய அவசியம் எப்படி ஏற்பட்டது என்பதை விசாரித்துத் தெரிந்து கொள்கிறார் நாஃப்ஸ். கூடுமானவரை அந்தப் பின்னணியை மாற்றி அமைக்கப் பாடுபடுகிறார். இது மகத்தான வெற்றி அடைந்திருக்கிறது. ஒரே இரவில் 100 டாலர் சம்பாதித்த பெண், சில டாலர்களே பெற்று ஊழியம் செய்வதில் திருப்தி அடைந்திருக்கிறாள். இப்படிப் பல விநோதங்கள் நடக்கின்றன. 'கண்டபடி அலைந்த ஒருத்தியின் பெண், மிகவும் பொறுப்புள்ளவளாக மாறி விடுவாள்' என்று உறுதி கூறுகிறார் நாஃப்ஸ். சுருக்கமாகச் சொல்லப் போனால், இது ஒரு மனோதத்துவ மருத்துவசாலை'' என்றான்.

''வந்து......'' என்று அடுத்த கேள்வியைக் கேட்கப்போன என்னைத் தடுத்து நிறுத்திய ஜான், ''மேலும் சந்தேகங்கள் இருந்தால், ஞாயிற்றுக் கிழமை காலை எட்டரை மணிக்கு வாருங்கள். அப்போதுதான் 'கேள்வி நேரம்' துவங்குகிறது. எந்தவிதமான கேள்விக்கும் பதில் சொல்கிறார் டெட். கேட்க வருபவர்களில் நாத்திகர்கள் உண்டு, அரசியல்வாதிகள் உண்டு, எல்லா மதத்தினரும் உண்டு. இளம் உள்ளங்களுக்கு அந்தப் பதில்கள் மிகவும் பொருத்தமானவை'' என்றான்.

என்னால் அடுத்துவரும் ஞாயிற்றுக்கிழமை அன்று ஸிட்னியில் இருக்க முடியவில்லை. ஆனாலும் பிறரிடம் கேட்டு அந்தக் கேள்வி நேரத்தைப் பற்றித் தெரிந்து கொண்டேன்.

அங்கு கேட்கப்படும் கேள்விகளும், பதில்களும் சுவையாகத்தான் இருந்தன.

இதோ உதாரணத்திற்கு ஒன்று :

''பத்துக் கட்டளைகளை நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா?''

''ஆமாம்! ஆனால், இந்நாளைக்குரிய சில திருத்தங்களுடன்!''

''என்ன அது?''

'''பெற்றோரை மதிக்க வேண்டும்' என்பது ஒரு கட்டளை. 'உங்கள் குழந்தைகளின் உணர்ச்சிகளையும் மதியுங்கள், பொருட்படுத்துங்கள்' என்று நான் சேர்த்துக் கொள்கிறேன்.''

இந்தப் பதிலுக்கு உற்சாகமான வரவேற்பு இருந்தது என்று சொல்ல வேண்டுமா என்ன?

''டெட் நாஃப்ஸ் இப்போதெல்லாம் அடிக்கடி வெளியூர்களுக்குப் போக வேண்டியிருக்கிறது. அதனால் 'கேள்வி நேர'த்தை அவரால் தொடர்ந்து நடத்த முடியவில்லை. அந்தப் பொறுப்பை அவர் யாரிடம் ஒப்படைக்கிறார் தெரியுமா? இன்னொரு பாதிரியாரிடம் அல்ல; சார்லஸ் பேர்ச் என்ற விஞ்ஞானியிடம். ஸிட்னி பல்கலைக் கழகத்தில் உயிரியல் பேராசிரியர் இவர். இதிலிருந்தே அவருடைய போக்கு உங்களுக்குப் புரிந்திருக்குமே......'' என்றான்.

''ஐ அண்டர்ஸ்டாண்ட்......'' என்று கூறிவிட்டு, சிறிது தயக்கத்துடன் ''அப்படியானால், பாதிரியார்களால் இத்தகைய கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியாது என்கிறீர்களா நீங்கள்?'' என்று கேட்டேன்.

ஜான் என்னை உற்றுப் பார்த்தான். பிறகு ''ஆலயங்களைப் பற்றி என் கருத்து தனியானது. அதே போல் பாதிரியார்களைப் பற்றியும் தனிப்பட்ட கருத்து கொண்டவன் நான். கோயில் என்பது பொது நோக்குடையதாக இருக்க வேண்டும். அங்கே வந்தால் நிம்மதி பெறலாம் என்ற நம்பிக்கை மக்களிடம் ஏற்பட வேண்டும். ஒரு வேளை, ஆரம்ப காலத்தில் அது அப்படித்தான் இருந்ததோ என்னவோ, போகப் போகக் கோயில்கள், 'இன்ஸ்டிடியூஷ'னாக மாறி, கட்டுப்பாடுகள் மிகுந்து, அதன் மூல முக்கியத்துவம் மறைந்து விட்டதோ என்று தோன்றுகிறது... நான் சொல்வது உங்களுக்குப் புரிகிறதோ என்னவோ......?'' என்றான்.

''நன்றாகப் புரிகிறது......'' என்றேன்.

''உங்கள் நாட்டில் கோயில்கள் எப்படி?'' என்றான்.

''எங்கள் நாட்டில் கோயில் என்பதே சமூகத்துடன் ஒன்றிய ஒன்று தான். நானூறு, ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு,கோயில்தான் ஒவ்வொரு ஊரின் ஜீவநாடியாக இருந்தது. சிறு கிராமத்திலும் கோயில் உண்டு. அதுதான் அந்தக் கிராமத்தின் ஜீவன். அங்குதான் எல்லாமே நடக்கும். எங்கள் ஊர் ஆலயங்கள், அமைப்பில் உங்களின் ஆலயங்களிலிருந்து மாறுபட்டவை. பெரிய பெரிய பிராகாரங்கள் உண்டு. காலையில் எழுந்தவுடன் எல்லோரும் கோயிலை ஒரு முறை சுற்றி வருவார்கள். திறந்த வெளியில் உள்ள அந்தப் பிரமாண்டமான பிராகாரத்தைச் சுற்றுவது போன்ற சிறந்த தேகப் பயிற்சி எதுவுமே கிடையாது. பகல் வேளையில்,

பிராகாரங்கள்தான் கல்விக்கூடம். அங்குதான் வகுப்புக்கள் நடக்கும். மாலையில் கலை நிகழ்ச்சிகளும், உபன்யாசங்களும் நடக்கும் இடம் அதுதான். எங்கள் ஊரில் ஆலயங்கள் கலாசார நடவடிக்கையின் இருப் பிடமாகத் திகழ்ந்தன. அது மட்டுமல்ல, மனிதனுக்கு ஆலய கோபுரங்கள் வழிகாட்டியாகவும் இருந்தன. எந்த ஊரிலும் உயர்ந்த கட்டடம், ஆலய கோபுரமாகத்தான் இருக்கும். எங்கிருந்து பார்த்தாலும் அது தெரியும். தவறு செய்யும் நோக்குடன் ஒருவன் வெளியே புறப்பட்டால், அவன் கண்ணில் ஆலய கோபுரம் பட்டு, அவனை அந்தத் தவற்றிலிருந்து திருத்தும். சட்டத்தை மதிப்பவன்தான் மனிதன். ஆனால், சட்டத்தின் பிரதிநிதியைப் பார்த்தால்தானே, சட்டம் நினைவுக்கு வருகிறது. எங்க ளூரில் சைக்கிளில் 'டபிள்ஸ்' போவது குற்றம். ஆனால், போலீஸ்காரரைப் பார்த்தவுடன்தான்—சட்டத்தின் பிரதிநிதியைப் பார்த்தவுடன்தான்—பின் ஸீட்டுக்காரன் கீழே குதிப்பான். அதேபோல், மனிதன் மனிதனாக வாழவும் சில கோட்பாடுகள், நெறிமுறைகள் உண்டு. அந்த நெறிமுறை களின் பிரதிநிதியாகத்தான் ஆலயத்தை நினைக்கிறோம். எனவேதான் தவறு செய்யும் எண்ணம் எழும்போது, நம் கண்ணில் படவேண்டும் என்பதற்காகவே, ஆலய கோபுரங்களை மிக உயரமாகக் கட்டினார்கள்'' என்றேன்.

''மிக நல்ல கருத்து.....இப்போதும் அப்படியேதான் இருக்கிறதா?'' என்று கேட்டான் ஜான்.

''காலம் மாறுகிறதல்லவா? எல்லாவற்றிலும் மாறுதல் உண்டு. எங்கள் ஆலயங்களை, உங்கள் 'சர்ச்'களுடன் ஒப்பிட முடியாது. இரண் டின் அடிப்படை, அமைப்பு எல்லாமே மாறுபட்டவை. இரண்டும் மனிதன் தன்னைப் புனிதப்படுத்திக் கொள்ள ஏற்பட்டவை. நீங்கள் சொன்னது போல், இவையெல்லாம் 'இன்ஸ்டிடியூஷன்' களாக மாறும் போது, சில கட்டுப்பாடுகள் ஏற்பட்டு, ஆரம்ப நோக்கம் கொஞ்சம் மாறி விடத்தான் செய்கிறது. என்ன செய்வது? எல்லாத் துறைகளிலுமே இவை உண்டே'' என்றேன்.

''ஒப்புக் கொள்கிறேன். மாற்றம் செய்யும்போது, டெட் நாஃப்ஸ் போன்ற சிந்தனையாளர்களின் பணி மகத்தானதாக இருக்கிறது. என்னைப் பொறுத்தவரை, தூய்மையான உள்ளம்தான் மேன்மையான தேவாலயம்'' என்றான்.

இதற்குள் டெட் நாஃப்ஸ் திரும்பி வந்தார்; ஜான் அங்கிருந்து நகர்ந்தான்.

நாஃப்ஸ் அந்த ஆலயத்தின் மற்றப் பகுதிகளைக் காட்டிவிட்டு, ''வாருங்கள், நான் எழுதிய ஒரு நூலை உங்களுக்குத் தருகிறேன்'' என்று கூறி, சாலை ஓரத்தில் உள்ள ஒரு கடைக்கு அழைத்துச் சென்றார். அந்தக் கடைக்காரப் பெண்மணி டெட் நாஃப்ஸை மிகுந்த மரியாதை யுடன் வரவேற்றார்.

''என் நூல் ஒன்று விலைக்கு வேண்டும்'' என்றுகூறி, பணம் கொடுத்து ஒரு பிரதியை வாங்கி, அதில் கையொப்பம் இட்டு எனக்குக் கொடுத்தார்.

நான் அவரிடம் விடைபெற்று டாக்ஸியில் ஏறினேன்.

அப்போது என் மனத்தில் தோன்றிய கருத்து இதுதான்:

'மனித சமுதாயத்திற்கு ஒரு மனப்பூர்வமான தொண்டு, அமைதியாக நடத்து கொண்டிருக்கும் இடம் இந்த நடைபாதை ஒர சர்ச். அது மதத்திற்குப் புத்துயிர் அளிக்கும் சோதனை அல்ல; மனிதன் மிருகமாக மாறி விடாமல் காப்பாற்றி விட முடியுமா என்ற கேள்விக்குப் பதில் கண்டு பிடிக்க முயலும் ஓர் அபூர்வ, அரிய சோதனை.'

# 16

'ரெப்கோ' தொழிற்சாலையில்....

''நீங்கள் ஸிட்னியைவிட்டுப் புறப்படு முன் எங்கள் வீட்டிற்கு ஒருமுறை டீசாப்பிட வரவேண்டும்...உங்களிடம் நிறையப் பேச விரும்புகிறோம்...'' என்று, திருமதி டோனு கூறியிருந்தார்.

புத்தாண்டு பிறந்த இரவன்று, பிட்டரையும், டோனுவையும் நான் 'ஆல் நேஷன்ஸ் கிளப்'பில் சந்தித்திருந்தேன். பிட்டர், கட்டடக் கலை நிபுணர். டோனுவும் வேலை பார்க்கும் பெண்.

மறுநாள் நான் ஸிட்னியை விட்டுப் புறப்பட இருந்தேன். அன்றிரவு நண்பர் ராமாநுஜம் அவர்கள் வீட்டில் எனக்கொரு விருந்து ஏற்பாடு ஆகியிருந்தது. ஸிட்னியில் வாழும் தமிழர்கள் பலரையும் அங்கே சந்திக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அந்த விருந்தின்போது, கடல் கடந்து வாழும் தமிழர்கள், தாய்நாட்டைப் பற்றி அனைத்தையும் அறிந்து கொள்வதில் உள்ள ஆர்வத்தைக் காண முடிந்தது.

''தி. மு. க. எப்படி இவ்வளவு செல்வாக்குப் பெற்றது? தமிழ் மீடியம் வந்து விட்டால், வருங்கால சந்ததியின் வாழ்வு பாதிக்கப் படாதா? தமிழ் நாட்டில் கர்நாடக சங்கீதத்திற்கு மவுசு குறைந்து



கொண்டு வருகிறதாகக் கேள்விப்படுகிறோமே, உண்மையா?'' என்று பல கேள்விகளைக் கேட்டார்கள்.

இதற்கெல்லாம் எனக்குத் தெரிந்தவரை பதில் சொல்லி வைத்தேன். அந்த விருந்தை முடித்துக் கொண்டுதான், டோனுவின் வீட்டிற்குப் போவதாக ஏற்பாடு. நண்பர் முத்துசாமி, ராமாநுஜம் அவர்களின் வீட்டிற்கு வந்து அவர் காரில் என்னை அழைத்துச் சென்றார்.

குளுமையான அந்த இரவில், நானும் முத்துசாமியும் பல்வேறு விஷயங்களைப் பேசிக் கொண்டே காரில் பயணம் செய்தோம். விகடனைப் பற்றியும், தமிழ்ப் பத்திரிகைகளில் வெளியாகும் கதைகளைப் பற்றியும் பேசினார் முத்துசாமி.

''நான் ஒரு காலத்தில் எல்லாக் கதைகளையும் படித்துக் கொண்டிருந்தேன். இப்போது நேரமின்மையால் படிப்பது குறைந்து விட்டது. தமிழ்ச் சிறு கதைகள், தொடர் கதைகளின் தரம் இப்போதெல்லாம் முன்னேறியிருப்பதாகத்தான் எனக்குத் தோன்றுகிறது. கதைகளில் இன்னும் கொஞ்சம் 'டெப்த்' வேண்டும். நான் சமீபத்தில் ஒரு தொடர் கதை படித்தேன். சிவசங்கரி என்ற எழுத்தாளர் எழுதியது. 'எதற்காக' என்ற கதை. ஸ்டைல் நன்றாக இருந்தது. ஆனால், முடிவு? டிராஜடியாக முடித்தால்தான் மக்கள் மனத்தில் நிற்கும் என்ற எண்ணத்துடன் எழுதப் பட்டது போல் எனக்குத் தோன்றுகிறது. இதை நான் ஒரு குறையாகச் சொல்லவில்லை. ஐ என்ஜாய்ட் தட் ஸ்டோரி வெரி மச். இருந்தாலும், தமிழ் எழுத்தாளர்களிடையே இந்த 'டிராஜடி' மோகம் அநாவசியமாக வளர்ந்திருக்கிறதோ என்று நினைக்கிறேன். மற்றபடி, ஜர்னலிசம் ஸ்டாண்டர்டிலும் நாம் வளர்ந்துதான் இருக்கிறோம். இந்த நாட்டில், 'ஃபிக்ஷ'னுக்குப் பெரும் அளவு வரவேற்பு இல்லை. இங்கு பெண்கள் பத்திரிகை மிகவும் பாபுலர்'' என்று பல்வேறு விஷயங்களைச் சொல்லிக் கொண்டே வந்தார் முத்துசாமி.

வெகு நேர பயணத்திற்குப் பிறகு, டோனுவின் வீட்டை அடைந்தோம் நாங்கள். அது ஒரு நடுத்தர வர்க்கக் குடிமகனின் வீடுதான். என்னை இன்முகத்துடன் வரவேற்ற டோனு,வீட்டைச் சுற்றிக் காட்டினார். கணவனின் கை வண்ணத்தால் உருவான கதவுகளையும், சுவர்களையும் மிகுந்த உற்சாகத்துடன் விளக்கினார்.

டோனுவின் தாய் ப்ருஸ், அவள் கணவர், மற்றும் சிலர் அங்கே இருந்தனர். எனக்காக, ஏதேதோ செய்து வைத்திருந்தார்கள். ராமாநுஜத்தின் வீட்டில் நன்றாகச் சாப்பிட்டு விட்டதனால், என்னால் எதையும் சாப்பிட முடியவில்லை.

''மிஸ்டர் மணியன், மீட் மிஸ்டர் ஆலன். நியூசிலாந்திலிருந்து வந்துள்ள இளைஞர்'' என்று ஒருவரை அறிமுகப்படுத்தி வைத்தார் முத்துசாமி.

''உங்களைச் சந்திக்க வேண்டும் என்று மிகவும் ஆர்வமாக இருந்தேன்'' என்றார் ஆலன்.

''ஈஸ் இட்......?'' என்றேன் நான்; அது சம்பிரதாயத்திற்காகச் சொல்லப்படும் பேச்சு என்ற எண்ணத்துடன்.

என் குரலில் இருந்த 'சாதாரணத் தன்மை'யைப் புரிந்து கொண்ட முத்துசாமி, ''உண்மையிலேயே அவர் உங்களைச் சந்திப்பதில் துடிப்பாக இருக்கிறார். அவருக்கு உங்களிடமிருந்து ஒரு உதவி தேவை......'' என்றார்.

''உதவியா? என்னிடமிருந்தா? வாட் ஈஸ் தட்?'' என்றேன்.

''தப்பாக நினைக்கக் கூடாது! உங்களிடமிருந்து எனக்கு ஒரு பொருள் தேவை......'' என்றார் ஆலன்.

''பொருளா? என்னிடமிருந்தா?''

''ஆமாம், அதற்குரிய தொகையைக் கொடுத்து விடுகிறேன். எனக்கு வெகு நாளாக அதில் ஆசை. என்னை ஏமாற்றாமல் கொடுக்க வேண்டும். கொடுப்பீர்களா?'' என்றார்.

அவர் போட்ட பீடிகை எனக்குப் பயத்தைத் தந்து விட்டது. எதையாவது கொடுக்க முடியாததாகக் கேட்டுவிடப் போகிறாரே என்ற அச்சத்துடன், ''என்ன வேண்டும்? சொல்லுங்களேன்'' என்றேன்.

ஆலன் தன் கோரிக்கையை என்னிடம் சொன்னார்: அதைக் கேட்டதும், 'அப்பப்பா, இதற்கா இவ்வளவு பீடிகை' என்றுதான் தோன்றியது.

''ஒரு வேஷ்டியும், அங்கவஸ்திரமும் வேண்டும் எனக்கு. ரொம்ப நாளாக ஆசை'' என்றார் ஆலன்.

மறுநாள் என்னிடமிருந்த வேஷ்டியையும், அங்கவஸ்திரத்தையும் அவரிடம் கொடுத்தேன். ஏதோ பெறற்கரிய பொருளைப் பெற்றுவிட்ட மகிழ்ச்சி ஆலன் முகத்தில் நிலவியது.

டீயைக் குடித்துவிட்டுப் பொதுவாகப் பேசிக் கொண்டிருந்தோம் நாங்கள்.

டோனுவின் தாயார் ப்ரூஸ், ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டே, என் அருகில் வந்து அமர்ந்து, ''வெல்......ஆஸ்திரேலியா எப்படி இருக்கிறது?'' என்று கேட்டார்.

''பிரமாதமாக இருக்கிறது'' என்றேன் நான்.

''ஐஸி...!'' என்றார் அவர். அவர் குரலில் கேலி இழையோடியது.

''ஏன் அப்படிக் கேட்கிறீர்கள்?'' என்றேன் நான்.

''இங்கு என்ன பிரமாதத்தைக் கண்டீர்கள்? செழுமையான இடங்களாகப் பார்த்துவிட்டு, பிரமாதம் என்கிறீர்கள். இந்த தேசத்தில் இன்னும் வறுமை தாண்டவமாடுகிறது. அது தெரியுமா உங்களுக்கு?'' என்றார்.

''வறுமையா!'' என்றேன் வியப்புடன்.

''பின் என்ன? சிப்ஸ் ராபெர்ட்டியைப் பார்த்தீர்களாமே! அவர் சொல்வதை யெல்லாம் நம்பாதீர்கள். அவர் சொல்வதுதான் ஆஸ்திரேலியா என்று எண்ணி விடாதீர்கள். இது மிகவும் விரிந்து பரந்த தேசம். ஆனால், சரியாக நிர்வகிக்கப்படாத தேசம்'' என்றார்.

அவர் பேச்சைக் கேட்டு நான் சற்றே அதிர்ச்சி அடைந்தேன்.

''என்ன? 'ஷாக்'காக இருக்கிறதா? நகரத்தை மட்டும், அதிலும் செல்வம் நடமாடும் பகுதியை மட்டும் பார்த்துவிட்டு, இந்த தேசம் சுபிட்சமானது என்று எல்லோரும் எண்ணி விடுகிறார்கள். நீங்களும் அப்படி எண்ணிவிடக் கூடாது பாருங்கள். நீங்கள் ஒரு பொறுப்புள்ள பத்திரிகைக்காரர், நிறையப் பிரயாணம் செய்துள்ளவர், மக்களால் விரும்பப் படுகிறவர். உங்களுக்கு உண்மை தெரிந்திருக்க வேண்டும்...'' என்றவர், சற்றுப் பொறுத்து ''அது சரி, பல நாடுகளுக்கும் போய் இருக்கிறீர்களே, சீனாவுக்குப் போனதுண்டா?'' என்று கேட்டார்.

''இல்லை'' என்றேன்.

''போகும் ஆசையாவது உண்டா?''

''நான் எங்கும் போகத் தயார். ஆனால், சந்தர்ப்ப சூழ்நிலைகள் வேண்டாமா?''

''போய்ப் பாருங்கள். மிகப் பெரிய தேசம். நாணயமான மக்கள், அங்குள்ள 'கம்யூன்கள்' எல்லாம் பிரமாதமானவை......''

''நீங்கள் போயிருக்கிறீர்களா?''

''போகாமலா சொல்கிறேன்? பல நாடுகளுக்கும் சென்றிருக்கிறேன். எனக்கு மிகவும் பிடித்த நாடு சீனாதான்......'' என்றார்.

''ஐஸி......'' என்றேன்.

''உங்கள் குரலில் இருக்கும் 'தொனி' எனக்குப் புரிகிறது. இந்தியர் களுக்குச் சீனர்களைப் பிடிக்காது என்பதும் எனக்குத் தெரியும்......'' என்றார்.

''நோ......நோ......நோ......'' என்றேன்.

''பின் ஏன் ஒரு மாதிரியாக 'ஐஸி' என்றீர்கள்?''

''இல்லை, இந்த தேசத்தில் சீனப் பிரியர்கள் பலரைச் சந்தித்தேன். நீங்களும் அவர்களில் ஒருவர் என்பது புரிந்தது. அதனால் 'ஐஸி' என்றேன்.''

''பலரும் சீனப் பிரியர்களாக இருப்பதிலிருந்து என்ன புரிகிறது? சீனா சிறந்த நாடு என்பது புரியவில்லையா? இந்தியர்களுக்கும் இது புரிய வில்லை, எங்கள் அரசியல்வாதிகளுக்கும் இது புரியவில்லை. எங்கள் நாட்டின் கிராமப் புறங்களுக்குச் சென்று பாருங்கள், ஏழைமை தாண்டவ மாடுவது புரியும். பல இடங்களில் 'ஸ்லம்'களைக் காணலாம். சுபிட்ச மான தேசமாக இருந்தால் ஏன் இந்த நிலை?'' என்று கேட்டு நிறுத்தினார்.

''நீங்கள் எனக்குக் காட்டும் இந்தக் 'காட்சி'களை வேறு யாருமே காட்டவில்லையே, ஏன்?'' என்று கேட்டேன்.

''நீங்கள் கேட்டவர்கள் எல்லாம் அரசாங்க அதிகாரிகள்! 'ரோஸ் பிச்ச'ரைத்தான் போட்டுக் காட்டுவார்கள். இதை, பெரிய சுதந்திர நாடு என்கிறார்கள். ஆனால், எங்களால் சுதந்திரமாக இந்த அரசாங்கத் தைக் குறை கூற முடியாது; அது தெரியுமா உங்களுக்கு? அரசாங்கத்தை எதிர்த்துப் பேசினால், என்னைக் கைது செய்துவிடுவார்கள். அதனால்தான் நமக்கேன் வம்பு என்று பலபேரும் வாயை மூடிக் கொண்டிருக்கிறார்கள். மிகவும் செழுமையான தேசம், பற்றாக்குறை இல்லை என்றால், ஏன் 'ஸ்ட்ரைக்' எல்லாம் நடக்க வேண்டும். நீங்கள் கவனித்திருப்பீர்களே, இப்போது கூட 'குவான்டாஸ்' விமான ஸர்வீஸில் ஸ்ட்ரைக்! ஏன் இது? பாலும் தேனும் கொழிக்கும் நிலையென்றால், ஊதிய உயர்வு வேண்டும் என்ற கூக்குரலுக்கே இடம் இருக்கக் கூடாதே! இதையெல்லாம் நீங்கள் கவனத்தில் கொள்ள வேண்டும். கண்ணை மூடிக்கொண்டு விடாதீர்கள். 'சிப்ஸ்' சொல்வதெல்லாம் சரியென்று எடுத்துக் கொண்டு விடாதீர்கள்''... என்றார்.

அவருக்கு ஏனோ நடிகர் சிப்ஸ் ராபெர்ட்டி மீது அசாத்திய கோபம். அடிக்கொருதரம் அவரை வம்புக்கிழுத்துக் கொண்டிருந்தார்.

''எங்கள் ஊரில் கோதுமை நிறைய விளைந்திருக்கிறது. அதை வாங்க ஆளில்லை. சீனாக்காரனுடன் கொஞ்சம் நட்போடு இருந்தால், அங்கு பெரிய மார்க்கெட் உண்டு. அவர்களை ஒதுக்குகிறார்கள். பலன்? கனடாக் காரனுக்கு அடிக்கிறது யோகம். அவன் கோதுமைக்கு சீனாவில் சரியான கிராக்கி. இதன் பலன் என்ன தெரியுமா? ரொம்பப்பேர், விவசாயத் தொழிலிலிருந்து விலகுகிறார்கள். இது மிகவும் வருந்தத்தக்க நிலை. இதையெல்லாம் எடுத்துச் சொல்வார் இல்லை. சொல்ல பயம். எங்கும், எதற்கும் பயம்தான்.

''என் மகன் இன்கம்டாக்ஸ் கணக்குகளை சமர்ப்பிப்பதில்லை. ஏன் தெரியுமா? கணக்கைக் கண்டு பயம் இல்லை, இந்த வியட்நாம் போரைக் கண்டு பயம். கணக்குக் கொடுத்தவுடன், அந்தப் பிரஜைக்கு 'யுத்தத்திற் குப்போ' என்ற உத்தரவு வருகிறது. யாரோ யாருடனோ சண்டை போட, அப்பாவி ஆஸ்திரேலியன் பலியாகிறான். இந்த நிலைமை எதில் கொண்டு போய் விடுகிறது தெரியுமா? இந்த நாட்டு இளைஞர்களைத் திக்குமுக்காடச் செய்கிறது. அவனுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. இஷ்டப்படி செய்ய ஆரம்பிக்கிறான். 'ஹிப்பி'யாகிறான். 'லேஸி'யாகிறான். இதை யெல்லாம் மறைத்துவிட்டு, நாங்கள் ஒரு 'ஷோ' போடுகிறோம். வி ஆர் புட்டிங் எ ஷோ......எத்தனை நாளைக்கு இது நடக்கும்? எங்கள் இளைஞர் களின் எதிர்காலம் இருண்டு கிடக்கிறது. எனக்கு ஐம்பது வயதாகி விட்டது. என்னைப் பற்றிக் கவலையில்லை. நமக்கேன் வம்பு என்று நான் சும்மா இருக்கிறேன். ஏதோ, உங்களைப் பார்த்ததும் சொல்ல வேண்டும் என்று தோன்றியது; சொல்லிவிட்டேன். கூடிய விரைவில் சீனாவுக்குப் போய்ப் பாருங்கள், அப்போது புரியும். உங்கள் ஊரில் கூடத்தான் கம்யூனிஸ்ட் கட்சியை ஒடுக்கப் பார்க்கிறார்கள். எத்தனை நாளைக்கு ஒடுக்க முடியும்? நியாயம் ஒருநாளைக்கு வெடித்துக் கொண்டு கிளம்பும்...'' என்று தன் எண்ணங்களை யெல்லாம் கொட்டித் தீர்த்தார் ப்ரூஸ்.

நான் அவருக்குப் பதிலேதும் சொல்லவில்லை.

காலை ஒன்பது மணிக்கு அறையின் டெலிபோன் ஒலித்தது. ரிஸீவரை எடுத்தேன்.

"ஹலோ......கிரிப்பித் ஹியர்......குட் மார்னிங்......" என்றார், ரெப்கோ நிறுவனத்தைச் சேர்ந்த மிஸ்டர் கிரிப்பித்.

ஒன்பதரை மணிக்கு அவரைச் சந்திப்பதாக ஏற்பாடு. அதன்படி டாக்ஸியில் சரியாக ஒன்பதரைக்கு அவர் அலுவலகத்தை அடைந்தேன்.

'ரெப்கோ' நிறுவனம் ஆஸ்திரேலியாவில் உள்ள மிகப் பெரிய நிறுவனங்களில் ஒன்று. அதன் மகத்தான பணியைப் பற்றி, விரிவாகச் சொன்னார் கிரிப்பித்.

"பதினாலாயிரம் தொழிலாளர்கள் எங்கள் நிறுவனங்களில் பணி புரிகிறார்கள். 195 கிளைகள் உள்ளன. நாங்கள் ஒரிஜினல் எக்விப் மெண்ட்ஸ் தயார் செய்கிறோம்......எங்கள் இண்டர்நேஷனல் டைரக்டர் திரு. அவ்ரி அவர்களின் மேற்பார்வையில் எங்கள் ஸ்தாபனம் பெரு வளர்ச்சி அடைந்து வருகிறது" என்று கூறி, அவர்களின் வெளியீடுகள் சிலவற்றைக் காட்டினார்.

"உங்கள் தொழிலதிபர் சிவசைலம் அவர்களைப் பற்றி எங்களுக்கு நன்கு தெரியும். அவருடன் கூட்டுத் தொழில் செய்கிறோம் நாங்கள். சிவசைலத்தின் சகோதரர் கிருஷ்ணமூர்த்தி இங்கே வந்திருந்தார். ஹி ஈஸ் எ நைஸ் மேன்......" என்றார்.

"சிவசைலம் அவர்களின் உதவியால்தான் என்னால் உங்கள் நாட்டை சரியாகப் பார்க்க முடிந்தது. அவர்தானே உங்களை அறிமுகப்படுத்தி வைத்தார். உங்கள் விருந்தினனாக இல்லாவிட்டால், என்னால், இந்த தேசத்தில் இவ்வளவு சௌகரியங்களை அனுபவித்திருக்க முடியுமா? அவருக்கு நான் மிகவும் கடமைப்பட்டவன். அவரால் எங்கள் தமிழ் நாட்டின் தொழில் வளர்ச்சி பெருகுகிறது......" என்று கூறினேன்.

ரெப்கோ நிறுவனத்தைப் பற்றி மேலும் சில விவரங்களைக் கூறினார் கிரிப்பித். பிறகு, "உங்கள் நாட்டு உணவை, எங்கள் நாட்டுக்காரர் எப்படிச் செய்கிறார் என்று நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டாமா? வாருங்கள், ஒரு இடத்திற்கு அழைத்துச் செல்கிறேன்......" என்று கூறி, 'ராஜ்' என்ற ஓட்டலுக்கு என்னை அழைத்துச் சென்றார் கிரிப்பித்.

அங்கே, சாதம், பருப்பு, கறி, மாங்காய் ஊறுகாய் எல்லாம் கிடைத்தன. ஆனால், எதிலும் 'ருசி' இல்லை.

## 17

இந்தியக் குழந்தைகளுக்குப் பால் வழங்குபவர் திருமதி மோய்ரா டைனன்

'வென்ட் வொர்த்' ஓட்டலிலிருந்து புறப்பட்டு, விமான நிலையம் செல்ல, அந்த ஓட்டல் வாசலில் டாக்ஸிக்காகக் காத்திருந்தேன். அன்றோடு எனது ஆஸ்திரேலியப் பயணம் முடிவடைய இருந்தது. ஸிட்னியிலிருந்து விமானம் மூலம் புறப்பட்டு, மீண்டும் ஸிங்கப்பூரை அடைய திட்டம். இடையில் கொஞ்ச நேரம் 'பெர்த்' நகர விமான நிலையத்தில் தங்குவதாக ஏற்பாடு.

'வென்ட் வொர்த்' ஓட்டல் வாசலில் இருக்கும் வாயிற் காப்போன், குறுகிய காலத்தில் எனக்கு நன்கு பழக்கமாகி விட்டார். அவர் மூலம் நான் பல விஷயங்களைத் தெரிந்து கொண்டேன். டாக்ஸி கிடைக்காத வேளைகளில், எந்த பஸ்ஸில் சென்றால் சௌகரியமாக இருக்கும், எந்தக் கடைக்குச் சென்றால் என்ன பொருள் மலிவாகக் கிடைக்கும் என்பதுபற்றியெல்லாம் அவர்தான் எனக்கு விளக்கமாகச் சொல்லுவார்.

''போய் வருகிறேன்'' என்று அவரிடம் விடைபெற்றுக் கொண்டேன்.

''வாழ்த்துக்கள். எங்கள் ஊரில் நீங்கள் அதிக நாள் தங்கவில்லை. இந்த தேசத்தை சரியாகப் புரிந்து கொள்ள, நிறைய நாள் தங்க வேண்டும். இங்கிலாந்தின் 'கன்சர்வேடிவ்' மனப்பான்மையும், அமெரிக்காவின்



'லிபரல்' தன்மையும் கலந்த ஒரு நாடு இது. இங்கு வறுமையும் உண்டு, செழுமையும் உண்டு; துன்பமும் உண்டு, இன்பமும் உண்டு; வாழ்வும் உண்டு, தாழ்வும் உண்டு. வளர்ச்சி அடைந்த எல்லா நாடுகளைப்போன்றது தான் இதுவும். ஆனால், இங்கு செழிப்பான நிலவளம் மிகுந்து, மக்கள் தொகை மிகவும் குறைந்திருப்பதால், வளர்ச்சி பிரமாதமாகத் தெரிகிறது'' என்றவர், என்னை நெருங்கி, ''நீங்கள் ஒரு பத்திரிகைக்காரர் என்று முதல் நாள் சொன்னீர்கள். அதனால்தான் சொல்கிறேன். எங்களூர் பத்திரிகைகள் மூலம், எங்கள் மக்களை 'எடை' போட்டு விடாதீர்கள். எங்கள் பத்திரிகைக்காரர்கள் 'சென்சேஷனலிஸ'த்தை அதிகம் விரும்புகிறவர்கள். எனவே, பல விஷயங்களில் 'மிகை' உண்டு. நேற்றைய பத்திரிகையைப் பாருங்கள்: 'பத்து வயதுப் பெண்ணை ஒரு 'மேனியாக்' கற்பழித்து விட்டான். சாலை விபத்தில் பத்து பேர் மரணம்......' இந்தச் செய்திகளை யெல்லாம் பார்த்தால், சிறு பெண்கள் தெருவில் நடக்க முடியாது, பொது மக்கள் சாலையில் நடமாடுவது கஷ்டம் என்ற எண்ணம் தானே எவர் மனத்திலும் எழும்? உண்மை நிலை அதுவா? நீங்கள் இங்கே சில நாட்கள் தங்கி யிருந்திருக்கிறீர்கள். நிலைமை உங்களுக்கே புரிந்திருக்குமே...... எனவே, எங்கள் தேசத்தைப் பற்றி நன்றாக எழுதுங்கள்'' என்று கூறினார்.

''நிச்சயம் எழுதுகிறேன்'' என்று அவரிடம் கூறிவிட்டு, போர்ட்டிகோவில் வந்து நின்ற டாக்ஸியில் ஏறிக்கொண்டு, 'குவான்டாஸ்' விமான சர்விஸின் அலுவலகத்தை அடைந்து, அங்கிருந்து, அவர்கள் பஸ்ஸில் விமான நிலையத்தை நோக்கிப் பயணமானேன்.

பஸ் கொஞ்சம் கொஞ்சமாக ஸிட்னி நகரைக் கடந்து, வெளியே சென்று கொண்டிருந்தது. என் மனத்தில் கடந்த சில நாட்களுக்குள் எனக்கேற்பட்ட அனுபவங்கள் சுற்றிச் சுழன்று வந்தன. நான் சந்தித்த மனிதர்கள், பார்த்த நிகழ்ச்சிகள் எல்லாவற்றையும் யோசித்துப் பார்த்தேன். டெட் நாஃப்ஸ்ஸும், ப்ருஸும், முத்துசாமியும் என் நினைவில் சுற்றிச் சுழன்றார்கள்.

''ஆர் யூ கோயிங் டு மெல்போர்ன்?'' என்று என் அருகில் இருந்த ஒருவர் என்னைக் கேட்டார்.

''இல்லை......நான் சிங்கப்பூர் போகிறேன் '' என்றேன்.

''ஓ......உங்களை மெல்போர்னில் பார்த்த ஞாபகம். அதனால்தான் கேட்டேன்'' என்றார்.

''யெஸ்......நான் சமீபத்தில் மெல்போர்னுக்குப் போயிருந்தேன்.''

''பார்த்தீர்களா? உங்கள் முகம் மிகவும் பசுமையாக இருக்கிறது... மெல்போர்னில் 'டெஸ்ட் மாட்ச்' மைதானத்தில் நீங்கள் பலபேரைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தீர்கள், படம் எடுத்துக் கொண்டிருந்தீர்கள்......ஆம் ஐ ரைட்.........?''

''ஆமாம்......''

'' 'எய்ட் இண்டியா கிளப்'பைப் பற்றிக் கூட யாரிடமோ கேட்டுக் கொண்டிருந்தீர்கள்......''

''கரெக்ட்......நீங்கள் என்ன, ஏதாவது 'ஸ்பை'யா? என்னையே பின் தொடர்ந்திருக்கிறீர்களே?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டேன்.

''நான் விமான சர்விஸில் வேலை செய்கிறவன். வெள்ளைவெளே ரென்று நிறைய மக்கள் இருக்கும் இடத்தில், கொஞ்சம் கறுப்பான ஒருவர் வந்து, பலரிடம் பேச்சுக் கொடுத்து, படங்கள் எடுத்துக் கொண் டிருந்தால், அவர் மீது கவனம் விழுவது சகஜம் தானே! அப்போதே நான் உங்களிடம் பேச வேண்டும் என்று விரும்பினேன். கொஞ்சம் மழைத் தூறல் விழவே, நீங்கள் கூட்டத்தில் கலந்து மறைந்து விட்டீர்கள். இண்டியன் கிரிக்கெட் போர்டைச் சேர்ந்தவரா நீங்கள்?'' என்று கேட்டார்.

''நோ......நோ...நான் ஒரு இந்தியப் பத்திரிகைக்காரன்...... மெட்ராஸைச் சேர்ந்தவன். பெயர் மணியன். உங்கள் பெயர்?'' என்றேன்.

''தாமஸ்.........'' என்றார்.

''ஸோ......நான் கறுப்பாயிருந்ததால் உங்களுக்கு என்மீது கவனம் விழுந்தது, இல்லையா?'' என்றேன் புன்சிரிப்புடன்.

''நீங்கள் கொஞ்சம் மாறுபட்ட நிறத்தில் இருந்ததைக் குறிப் பிட்டேன். மற்றபடி 'கலர் பார்' எதுவும் இல்லை. எங்கள் 'ஒயிட் ஆஸ்ட்ரேலியன் பாலிஸி'க்கும் இதற்கும் சம்பந்தமில்லை......'' என்றார் அவரும் சிரித்துக் கொண்டே.

''தாங்க்யூ......இந்த உலகில் இன, நிற வேறுபாடுகள் இருக்கக் கூடாது என்பதுதான் எங்கள் கொள்கை......'' என்றேன்.

''நல்ல கொள்கைதான். ஆனல் நடைமுறையில் எல்லோர் மனத்தி லும் அது இருக்கத்தான் செய்கிறது. உங்கள் நாட்டில் நிறவேறுபாடு கிடையாது என்று உறுதியாகச் சொல்ல முடியுமா உங்களால்?'' என்று கேட்டார். அவர் கேள்வியே எனக்குக் கொஞ்சம் வியப்பாக இருந்தது.

''இந்தியாவில் நிற வேறுபாடா? என்ன சொல்கிறீர்கள் நீங்கள்?'' என்றேன்.

''யெஸ்...உங்கள் நாட்டிலும் அது இருக்கிறது......உங்கள் நாட்ட வர் ஒருவர்தான் எனக்கு அந்த உண்மையை எடுத்துக் காட்டியவர்...... அவரும் ஒரு ஸௌத் இண்டியன்......மெட்ராஸ்தான்'' என்று, பெரிய சஸ்பென்ஸ் ஒன்றை வைத்தார்.

''யாராவது தவறுகச் சொல்லி இருப்பார்கள். நிறவேறுபாடு எங்கள் ஊரில் கிடையவே கிடையாது'' என்றேன்.

''அப்படியா? திருமணத்திற்காக உங்கள் பத்திரிகைகளில் விளம்பரம் வரும் வழக்கம் உண்டா?'' என்று ஒரு கேள்வியைத் தூக்கிப் போட்டார் தாமஸ்.

''உண்டு......அதற்கும்......''

''அவசரப் படாதீர்கள். அந்த விளம்பரங்களில் 'வான்டட் ஃபேர் (Fair) எஜுகேடட் கேர்ல்' என்று போடுவதுண்டா?''

''உண்டு......''

''அந்த ஃபேர் (Fair) க்கு என்ன அர்த்தம்? நிறத்தைத்தானே குறிப்பிடுகிறீர்கள்? கல்யாண சமயங்களில் பெண் சிவப்பாக இருப்பாளா என்று கேட்பது உண்டாமே...... கறுப்பான பெண்களுக்குக் கல்யாண மாவது கஷ்டமாமே ......உங்கள் நண்பர் சொல்லித்தான் கேள்வி. இப்படி யெல்லாம் சொல்வது, 'நிறப் பிரிவினை' இல்லாமல் வேறு என்ன? மனிதன் அடி மனத்தில் இருக்கும் விஷயம் சார் இது. கறுப்பாகப் பிறந்தவன், 'ஐயோ, நாம் இன்னும் கொஞ்சம் சிவப்பாகப் பிறக்காமல் போனோமே!' என்று வருந்துவது நியாயம்தான். எங்களூரில் சிவப்பாக இருப்பவர்கள், அது அலுத்துப் போய், வெயிலில் காய்ந்து காய்ந்து கறுப்பாகப் பார்க்கிறார்கள். இப்படி யிருப்பவர்களுக்கு அப்படியிருந்தால் பிடிக்கும். இதெல்லாம் சகஜம்......அமெரிக்காவுக்குப் போய் வந்த உங்கள் நண்பர்களிடம், அவர்கள் எத்தனை நீக்ரோக்களிடம் நெருங்கிப் பழகினார்கள் என்று கேட்டுப் பாருங்கள், விஷயம் புரியும். நீங்கள் அமெரிக்கா போயிருக்கிறீர்களா?'' என்று கேட்டார்.

''போயிருக்கிறேன்'' என்றேன்.

''அந்த தேசத்தில் கிட்டத்தட்ட பத்து சதவிகிதத்தினர் நீக்ரோக் கள். நீங்கள் சந்தித்த மொத்த அமெரிக்கர்களில், ஒரு சதவிகிதம் கூட நீக்ரோக்களாக இருக்கமாட்டார்கள் என்று உறுதியாகக் கூறுவேன். தவறு உங்களுடையதல்ல. நீக்ரோக்காரர்களுக்கும் மற்றவர்களுடன் பழக ஏதோ ஒரு தயக்கம்......எனவே, இந்த 'கலர் பார்' பிரச்னையெல் லாம் எப்போதும் இருக்கத்தான் செய்யும்......'' என்றார்.

பேசிக்கொண்டே நாங்கள் விமான நிலையத்தை அடைந்து விட்டோம்.

''ஆகாய கங்கை அருகில் இந்த மங்கை குளிக்கும்போது, நானும் ஒளிந்து பார்க்க வேண்டும்.''

எம். எஸ். ஏ. விமானத்தில் பொருத்தியிருந்த இசைக் கருவி மூலம் எஸ். பி. பாலசுப்பிரமணியத்தின் குரலினிமையை ரசித்துக் கொண்டே, 'பெர்த்' நகரை நோக்கிப் பயணமாகிக் கொண்டிருந்தேன்.

விமான சர்விஸின் பணியாளர்களில் ஒருவர், என் அருகே வந்து அமர்ந்து கொண்டு, உபசாரத்திற்காகச் சில வார்த்தைகள் பேசினார். பொதுவாக முதல் வகுப்புப் பிரயாணிகளிடம் 'ஏர் ஹொஸ்டஸ்'ஸும், பணியாளர்களும் இன்முகத்துடன் பழகி, எதாவது பேசுவார்கள். பிரயாணிகளை மகிழ்ச்சியாக வைத்திருக்க, அவர்கள் கையாளும் முறை இது.

''சிங்கப்பூர் போய் அங்கிருந்து சென்னைக்கு நேராகப் பயணமா?'' என்று கேட்டார் பணியாளர்.

''இல்லை. சிங்கப்பூரில் சில தினம் தங்கப் போகிறேன்......'' என்றேன்.

''ஆஸ்திரேலியாவில் எல்லா நகரங்களுக்கும் போனீர்களா?''

''கூடியவரை போனேன்......''

''மெல்போர்ன்.''

''போயிருந்தேன்.''

''அங்கு உங்களைக் கவர்ந்தது என்ன?''

''பல விஷயங்கள். 'கங்காரு'வை அங்குதான் நான் பார்த்தேன். முக்கியமாக 'எய்ட் இண்டியா கிளப்' என்ற ஸ்தாபனத்தின் பணி என்னைக் கவர்ந்தது. இந்தியாவுக்குப் பலவிதங்களில் அவர்கள் உதவுகிறார்கள்....''

''ஓ!'' என்றார் அவர்.

''அவர்களுடைய பணி மகத்தானது! என்னுடைய இந்திய நண்பர் டாக்டர் நரசிம்மன் என்பவர்தான் என்னைத் திருமதி மோய்ரா டைனன் அவர்களிடம் அழைத்துச் சென்றார். இந்தியாவுக்கு எல்லாவிதங்களிலும் உதவ அவர்கள் எடுத்துக் கொள்ளும் முயற்சியை அறிந்து மகிழ்ந்தேன். எங்கள் நாட்டுக் குழந்தைகளுக்குப் பால் பற்றாக்குறை இருக்கிறது என்பதை அறிந்து, பால் பவுடர் வழங்கும் மகத்தான திட்டம் ஒன்றைப் பற்றி விளக்கினார். அந்தப் பால் பவுடரை இனமாகவே இந்தியாவுக்கு அனுப்ப, போக்குவரத்து ஸ்தாபனங்கள் உதவுகின்றன என்பதையும் எடுத்துச் சொன்னார். திருமதி டைனனைப் போன்ற சேவை மனப்பான்மை உள்ளவர்களால், ஆஸ்திரேலியாவுக்கே பெருமை ஏற்படுகிறது'' என்றேன்.

''நிச்சயமாக! தனி மனிதர்கள் சிலரின் தொண்டால் தேசத்திற்குப் பெருமை ஏற்படத்தான் செய்யும்......'' என்றவர், சிரித்துக் கொண்டே எழுந்து, அடுத்த பயணியிடம் பேச்சுக் கொடுக்கச் சென்றார்.

நான் திருமதி டைனனைப் பற்றி எண்ணினேன்.

மெல்போர்ன் நகரில் அவரைச் சந்தித்த அந்த நாள், பசுமையாக என் நினைவில் நின்றது.

அடக்கமும், அன்பும், பரிவும் நிறைந்த முகம் அவருடையது. இந்தியாவைப் பற்றிய சரியான 'இமேஜை' ஆஸ்திரேலியாவில் உருவாக்க அரும்பாடுபட்டு வருகிறார் அவர். இந்தியாவின் நிபுணர்களைக் கொண்டு, இந்தியாவின் வளர்ச்சியைப் பற்றிய கட்டுரைகளை அவ்வப்போது வெளியிட்டு வருகிறார். இந்தியாவின் நியமிக்கப்படாத தூதுவராகப் பணியாற்றி வருகிறார் திருமதி மோய்ரா டைனன்.

விமானம் சீரான வேகத்தில் பறந்து கொண்டிருந்தது. கால்களை நீட்டி, கொஞ்சம் குளிரைக் குறைத்துக் கொள்ள, கம்பளிப் போர்வை யைக் காலில் போர்த்திக் கொண்டேன். என்னை மறந்து கண்ணை மூடிய வேளையில் 'வில்' என்ற அலறல் சத்தம் கேட்டது. விமானத்தில் இப்படி யெல்லாம் சத்தம் கேட்டால், கொஞ்சம் கலக்கமாகத்தான் இருக்கும். எனவே, திடுக்கிட்டு சுற்றுமுற்றும் பார்த்தேன்.

ஒரு சின்னப் பையன் தாயிடம் அடம் பிடித்துக் கொண்டிருந்தான். அவன் எழுப்பிய அலறல் குரல்தான் அது.

அவனைப் பார்த்துச் சிரித்தேன். பிறகு தாயாரைப் பார்த்து ''நாட்டி (Naughty) பாய்''...என்றேன்.

இதைக் கேட்டுப் பையனின் தந்தையின் முகம் சற்றே கறுத்தது.

தப்பாக ஏதாவது சொல்லி விட்டோமோ என்ற அச்சத்துடன், முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டேன்.

பெர்த் நகரை விமானம் அடையும் போதுதான், அந்தத் தகப்பனர் என் அருகில் வந்து, ''இன்னொரு முறை ஆஸ்திரேலியரிடம் அந்தச் சொல்லை உபயோகிக்காதீர்கள். அதற்கு எங்கள் ஊரில் பொருளே வேறு......'' என்று கூறி, அந்தப் பொருளைச் சொன்னர்.

நான் திடுக்கிட்டேன்.

(அது என்னவென்று கேட்கிறீர்களா? எழுத்தில் சொல்ல முடியாத ஒன்று.)

அதன் பிறகு, ஆஸ்திரேலியரிடம் பேசும்போது மிகவும் ஜாக்கிரதை யாக இருந்தேன்.

நல்ல வேளை! பயணம் முடியும் நேரத்தில்தானே இந்த அனுபவம் ஏற்பட்டது என்று, என்னை நானே தேற்றிக் கொண்டேன்.

'பெர்த்' நகரில் விமானம் சிறிது நேரம் நின்றது. விமான நிலயத்தி லிருந்து வெளியே வந்து, ஊரின் காற்றைக் கொஞ்சம் சுவாசித்துவிட்டு, விமான நிலயப் புத்தகசாலேயிலிருந்து 'பெர்த்' நகரின் சில அழகிய கலர்ப் படங்களை வாங்கிக் கொண்டு, மீண்டும் விமானத்தில் ஏறிக் கொண்டேன்.

சில மணி நேரப் பயணத்திற்குப் பிறகு, சிங்கப்பூரை அடைந்தேன்.

சிங்கப்பூரில் என் நண்பர்கள் என்னைப் பார்த்ததும்—

''எப்படி இருந்தது ஆஸ்திரேலியா?'' என்று கேட்டார்கள்.

''மன நிறைவைத் தரும் மகத்தான ஒரு தேசம்'' என்று பதில் அளித்தேன்.

ஆஸ்திரேலியப் பயணக் கதை முற்றும்.

# 18

கிழக்கும் மேற்கும் தெற்கும் வடக்கும் சந்திக்கும் ஒரு நகரம்—

ஒரு நாடு—

ஒரு சின்னஞ் சிறு உலகம்.

சிங்கப்பூரைப் பற்றி இப்படித்தான் சொல்ல வேண்டும். உலகத்தைச் சுற்றிவிட்டு சிங்கப்பூருக்கு வரும் யாருக்கும் சிங்கப்பூரில் ஏற்படக் கூடிய அனுபவங்கள் முற்றிலும் புதுமையாகத்தான் தோன்றும்.

ஆசியாவில் நூற்றுக்கு நூறு அகில உலகத் தன்மை வாய்ந்த ஒரு நகரம் சிங்கப்பூர். இந்த சர்வதேசியத் தன்மையுடன் தென்கிழக்காசியாவின் இதயமாகவும், ஆசியாவின் முக்கியமான ஓர் அங்கமாகவும் திகழ்கிறது சிங்கப்பூர்.

சிங்கப்பூர் என்ற பெயரிலேயே இந்தியத் தன்மை இழையோடுகிறது. இந்தப் பெயரை இந்தியாதான் கொடுத்திருக்கிறது. 'பெயரையே கடன் வாங்கிக் கொண்டிருக்கிறோம்' என்று பிரதமர் லீ குவான் இயூ பெருமிதத்தோடு சொல்கிறார்.



நான் சிங்கப்பூருக்குப் பலமுறை சென்றிருக்கிறேன். ஒவ்வொரு முறை செல்லும்போதும் ஏதோ ஒரு புதிய ஊரைப் பார்ப்பது போன்ற பிரமையே எனக்கு ஏற்பட்டிருக்கிறது.

இந்தியாவுடன் பல நூற்றுண்டுக் காலத் தொடர்புடைய சிங்கப்பூர், நான்கு பெரிய கலாசாரத்தின் களஞ்சியம். சீனுவுக்குச் செல்லாமல் சீனக் கலாசாரத்தையும், சமூக வாழ்க்கை முறைகளையும் அறிந்து கொள்ள வேண்டுமா? இந்தியாவுக்கு வந்திராத ஒருவர் இந்திய மக்களின் பழம்பெரும் கலாசார, பண்பாட்டு மரபுகளை உள்ளபடியே உணர்ந்து கொள்ள வேண்டுமா? தெற்கு ஆசியாவின் பெரியதோர் இனத்தினரான மலாய், இந்தோனேசிய மக்களின் இதயங்களைப் புரிந்து கொள்ள வேண்டுமா? ஐரோப்பாவுக்குச் செல்லாமல் ஐரோப்பிய வாழ்க்கை முறைகளை, நவநாகரிகங்களைத் தெரிந்து கொள்ள விருப்பமா? சிங்கப்பூரைப் பார்த்தால் போதும். ஆசியாவில் மட்டுமல்ல, உலகில், சிங்கப்பூர் ஒன்றுக்கு மட்டுமே இத்தகைய சிறப்பு உண்டு. இதுவே சிங்கப்பூரின் தனித்தன்மை.

எல்லா மக்களும் இதயம் கலந்து பேசிக் கொள்கின்றனரே, எப்படி முடிகிறது என்று எண்ணினேன். சீனருடன் இந்தியர் சீன மொழியிலோ, இந்தியருடன் சீனர் தமிழ் மொழியிலோ பேசுவார் என்று எதிர்பார்க்க முடியுமா? அல்லது மலாய்க்காரர் சீனருடன் சீன மொழியிலும், இந்திய நண்பருடன் தமிழ் மொழியிலும் பேசுவார் என்று நினைக்க இயலுமா? என்றுலும் அவர்கள் மனம்விட்டுப் பேசிக் கொள்கிருர்கள், உறவு கொண்டாடுகிருர்கள். இது எப்படி சாத்தியமாகிறது என்ற வியப்பான கேள்விதான், முதன் முதலில் சிங்கப்பூருக்குச் சென்றபோது என் மனத்துள் எழுந்தது.

சிங்கப்பூரில் அரசாங்க அலுவலகங்களிலும், பொது இடங்களிலும் பெயர்ப் பலகைகளைப் பார்த்தேன். மலாய், சீனம், தமிழ், ஆங்கிலம் ஆகிய நான்கு மொழிகளிலும் அவற்றில் எழுதப்பட்டிருந்தன. கடல் கடந்த ஒரு நாட்டில் எத்தனை அழகாகத் தமிழ்ச் சொற்களும், வாக்கியங்களும் எழுதப்பட்டிருக்கின்றன என்று வியந்தேன். நான்கு மொழிகளுக்கும் சம அந்தஸ்து தரப்பட்டிருக்கிறது. அலைகடலுக்கு அப்பால் உள்ள நாட்டில், தமிழ்மொழி அரியணை மொழியாக இருப்பதை எண்ணிப் பூரித்தேன்.

தேசிய மொழியாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ள மலாய் மொழி, சிங்கப்பூர் மக்கள் அனைவரும் பேசக்கூடிய மொழி. மக்கள் விரும்பிக் கற்கிருர்கள், பேசுகிருர்கள். பல இன மக்களையும் இணைக்கும் பாலமாக அது விளங்குகிறது. அதே சமயம் உலக மொழி என்ற முறையில் ஆங்கிலத்தை ஆர்வத்துடன் சிங்கப்பூர் மக்கள் ஏற்றுக் கொண்டிருக்கிருர்கள். ஆங்கிலக் காற்று சிங்கப்பூரில் வேகமாகத் தவழ்ந்து கொண்டிருந்தாலும், சிங்கப்பூரின் தனித்தன்மை அதனுல் திரிந்து விடவில்லை.

மொழி, அரசியல் பிரச்னையாக சிங்கப்பூரில் கருதப்படவில்லை.

சிங்கப்பூரில் ஒரே கட்சி ஆட்சி நடக்கிறது என்று சொன்னர்கள். அது எப்படி ஒரு ஜனநாயகக் குடியரசு நாட்டில் சாத்தியமாகும் என்ற

கேள்வி என்னுள் எழுந்தது. சிங்கப்பூரில் ஏராளமான கட்சிகள் இல்லாம லில்லை. இப்போது ஆட்சி நடத்தும் பிரதமர் லீ குவான் இயூவின் மக்கள் செயல் கட்சி, பல கட்சிகளை எதிர்த்து நின்றுதான் துவக்கத்தில் ஆட்சியைக் கைப்பற்றியிருக்கிறது. ஆனால் கடந்த இரண்டு பொதுத் தேர்தல்களை சில முக்கியமான எதிர்க்கட்சிகள் புறக்கணித்து விட்டன. பார்லிமெண்டில் உள்ள 58 இடங்களையும் ஆளும் கட்சியே பெற்றிருக்கிறது. 'எதிர்க்கட்சி உறுப்பினர்கள் இல்லாமல் விவாதங்கள் எப்படி நடக்கும், மசோதாக்களை எப்படி நிறைவேற்றுவார்கள், எதிர்க்கட்சி இடங்கள் காலியாகத்தான் கிடக்குமா' என்பதையெல்லாம் நேரில் காண விரும்பினேன்.

பார்லிமெண்ட் கூட்டத்தைப் பார்க்கச் சென்றபோது அசந்து போய்விட்டேன். சபாநாயகர் உண்டு; ஆளுங் கட்சி உறுப்பினர்களில் ஒரு பகுதியினர் எதிர்க்கட்சி இடங்களில் அமர்ந்து கொள்கின்றனர். மசோதாவுக்குத் திருத்தங்கள் வருகின்றன. வெட்டுப் பிரேரணைகள், காரசாரமான விவாதங்கள், நகைச்சுவையான பதில்கள் எல்லாமே இடம் பெறுகின்றன. தமிழில் ஓர் உறுப்பினர் கேள்வி கேட்கிறார். தமிழே தெரியாத சீன இனத்தவரான அமைச்சர் ஆங்கிலத்தில் பதிலளிக்கிறார். உடனே மறு கேள்வி. தமிழ், சீனம், மலாய், ஆங்கிலம் ஆகிய நான்கு மொழிகளும் சரளமாகப் புழங்குகின்றன. உடனுக்குடன் மொழி பெயர்த்துச் சொல்வதற்கான வசதிகள் இருக்கின்றன.

குடியரசு நாட்டில், ஒரே கட்சி அரசாங்கம் பார்லிமெண்டரி ஜனநாயக முறையில் அப்பழுக்கின்றி இயங்க முடியும் என்பதற்குச் சிறந்த உதாரணம் சிங்கப்பூர் என்பதை உணர்ந்து கொண்டேன்.

மக்கள் நலத்தையே அரசாங்கம் பிரதானமாகக் கருதுகிறது. அவர்களின் வாழ்க்கைத்தரம் உயர்வதற்கு என்னென்ன செய்ய வேண்டுமோ, அவற்றையெல்லாம் ஆழ்ந்து சிந்தித்து அரசினர் திட்டமிடுகின்றனர்.

தங்களுக்கு நலந்தரும் திட்டங்களை அரசாங்கம் நிறைவேற்றி வருகிறது என்பதை மக்கள் உணர்ந்திருக்கின்றனர். இதனால் கட்சி அரசியலில் அவர்களுக்கு நாட்டம் இல்லை. எதிர்க்கட்சிகளைப் பற்றிய அக்கறையும் அவர்களிடம் காணப்படவில்லை. ஒரே கட்சி அரசு சிங்கப்பூரில் வெற்றி கண்டிருப்பதற்கு இதுவே அடிப்படைக் காரணம் என்பது என் கருத்து.

சிங்கப்பூரில் எல்லாமே வெற்றிக் கதைதான்.

பிரதமர் லீயின் அரசாங்கம் மேற்கொண்ட திட்டங்கள் வெற்றி பெறத் தவறியதாக வரலாறே இல்லை என்று சொன்னார்கள். உண்மைதான். எங்கும் எதிலும் அரசாங்கத்தின் வெற்றி முத்திரைகள் பளிச் சென்று தெரிகின்றன. 'சேதுவை மேடுறுத்தி வீதி சமைப்போம்' என்று பாரதி பாடினார். அலைகடலில் அழகு நகர் விரிவாக்கப்படுகிறது, சிங்கப்பூரில். வளர்ச்சிப் பணிகளுக்கு நிலம் போதாமல், கடலைத் தூர்த்து நிலமாக்கும் காட்சியைக் கண்டேன்.

திட்டங்கள் விரைவாக நிறைவேற்றப்படுவதற்குக் காரணம் கண்டறிய முற்பட்டேன். செயல் வேகம் மிக்க தலைமை நிலவுகிறது. ஊழல் தலை காட்டவே முடியாது. அரசாங்க அலுவல்களில் சிவப்பு நாடா என்ற பேச்சுக்கே இடமில்லை. ஒவ்வொரு துறைப் பணிகளையும் கவனிக்க ஒரு கழகம். அவற்றுக்கு அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. மக்கள் கழகம், வீடமைப்பு வளர்ச்சிக் கழகம், பொருளாதார வளர்ச்சிக் கழகம், பொதுப் பயனீட்டுக் கழகம்—இப்படி எத்தனையோ கழகங்கள். புதிய புதிய திட்டங்களை வகுத்து உடனுக்குடன் அவற்றை நிறைவேற்றுவது இந்தக் கழகங்களின் பணி.

மக்கள் அரசாங்கத்தை உருவாக்கியிருக்கிறார்களா, அரசாங்கம் மக்களை உருவாக்கி இருக்கிறதா என்ற சிந்தனைதான் சிங்கப்பூரைப் பார்த்ததும் எனக்கு ஏற்பட்டது. சுத்தமான, பசுமையான தோட்ட நகரமாக சிங்கப்பூர் ஆக்கப்பட்டிருக்கிறது. 'சாலைகளில் ஒரு குப்பையைக் கூடக் காண முடியவில்லை. வீதிகளெல்லாம் துப்புரவாக இருக்கின்றன' என்று சிங்கப்பூரைப் பார்த்துவிட்டு வருகிற அனைவரும் சொல்லுவார்கள். சாலையில் ஒரு பஸ் டிக்கெட்டையோ, அல்லது சிகரெட் துண்டையோ போட்டால் அபராதம் என்று சட்டம் இயற்றி, தவறு செய்பவர்களை சிங்கப்பூரில் தண்டிக்க முடிகிறது என்றால், எத்தகைய ஒழுங்கு சிங்கப்பூரில் நிலவுகிறது என்பதைச் சொல்லத் தேவையில்லை.

சிங்கப்பூர் மக்களிடம் அற்புதமான கலையுணர்ச்சியைக் கண்டேன். சீனர்கள், மலாய்க்காரர்கள், இந்தியர்கள்—இப்படிப் பல இனத்தவரும் தங்கள் இசை, நடன நிகழ்ச்சிகளை மரபுப்படி பேணி வருகின்றனர்.

இப்படி, எல்லாத் துறைகளிலும் சின்னஞ்சிறு சிங்கப்பூர், உலகுக்கு வழி காட்டிக் கொண்டிருக்கிறது.

'இருபத்தோரு லட்சம் மக்களைக் கொண்ட ஒரு சிறிய நாடுதானே சிங்கப்பூர். எனவே எந்தத் திட்டத்தையும் வெற்றிகரமாக நிறைவேற்றுவது சுலபம். கோடி கோடியாக மக்களைக் கொண்டுள்ள நாடுகளால் அது முடியாது. சிங்கப்பூரை மற்ற நாடுகளுடன் ஒப்பிடுவது பொருந்தாது' என்று பலர் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

சிங்கப்பூர் சிறிய நாடு என்பது உண்மைதான். இருபத்தோரு லட்சம் மக்களே உள்ளனர் என்பது சரியே. ஆனால், திட்டங்களை வகுத்து, அவற்றை நிறைவேற்றும் முறையிலும், பாணியிலும் சிறிய நாடு, பெரிய நாடு என்ற பிரச்னைக்கு இடமில்லை என்பது என் கருத்து. உலகில் எந்தப் புதிய கண்டுபிடிப்பும், சோதனைக் குழாயில்தான் (Test Tube) ஆரம்பத்தில் செய்யப்படுகிறது. சோதனைக் குழாயிலிருந்துதான் சாதனைகள் உலகுக்குக் கிடைக்கின்றன. இந்த முறையில் சிங்கப்பூர் திட்டங்களை வகுக்கிறது, சோதிக்கிறது, வெற்றிகரமாக முடிக்கிறது. அவற்றையே பெரிய நாடுகள் பெரிய அளவில் விரிவுபடுத்திக் கொண்டால், ஏன் வெற்றி பெற முடியாது?

இருபத்தோரு லட்சம் சிங்கப்பூர் மக்களின் இதயங்கள் எப்படியிருக்கின்றன? அவர்களின் இதயங்கள் இனி பேசும்.

# 19

''சலாமத் டாத்தாங் துவான் துவான்
டான் புவான் புவான்
கமி பெர்ஹராப் அண்டா அகான்
பெர்சின்னுங் ஹத்தி.''

இது என்ன என்று புரியாமல் விழிக்கிறீர்களா?

மலாய் மொழியில் எம். எஸ். ஏ. விமானத்தின் ஹோஸ்டஸ் நம்மை வரவேற்கிருர்.

''குட் ஈவினிங் லேடீஸ் அண்ட் ஜென்டில்மென், வி விஷ் யூ எ பிளெஸன்ட் ட்ரிப்'' என்று கூறித்தான் நம்மை சென்னையிலிருந்து சிங்கப்பூர் அழைத்துச் செல்கிருர்கள்.

நான் இதுவரை பல முறை சிங்கப்பூருக்குச் சென்றுள்ளேன். அநேகமாக எம். எஸ். ஏ. விமானத்தில்தான் பயணம் செய்வேன். உலகத்திலுள்ள பல்வேறு விமானங்களிலும் பயணம் செய்துள்ள எனக்கு, எம். எஸ். ஏ-யிடம் ஒரு தனிக் காதல்! காரணம், அவர்களின் பிரத்தியேகக் கவனிப்பும் உபசரிப்பும்தான்.



எந்த ஓர் இடத்திற்குப் பயணம் புறப்பட்டாலும், அந்த இடத்தின் சிறப்புக்கு நாம் செய்யும் பிரயாண முறை பேருதவி செய்கிறது என்பது என் கருத்து. எனது கிராமத்திற்குப் போக எனக்கு எப்போதும் விருப்பம் உண்டு. ஆனல், குண்டும் குழியுமாக உள்ள மண் சாலையில், மாட்டு வண்டியில், மண்டை இடிக்கப் பயணம் செய்ய வேண்டுமே என்ற பயத்தினலேயே நான் பலமுறை எனது பயணத்தைத் தள்ளி வைத்திருக்கிறேன். சிரமமின்றி, சௌகரியமாகப் பிரயாணம் செய்த பின்னர், ஓர் ஊரை அடையும்போது, அந்த ஊரின் சிறப்பே கொஞ்சம் அதிகமாகத் தான் தோன்றுகிறது.

எம். எஸ். ஏ. விமானம், முழுக்க முழுக்க சிங்கப்பூர், மலேசியாவைச் சேர்ந்தது. சமீப காலத்தில்தான் அவர்கள் அதைத் துவக்கி இருந்த போதிலும், பிரயாணிகளுக்கு என்னென்ன சௌகரியங்கள் தேவை என்பதை நன்கு புரிந்துகொண்டு அவற்றையெல்லாம் மிகச் சிறப்பாக செய்து வைத்திருக்கிருர்கள். (இப்போது எம். எஸ். ஏ. இரண்டு நிறுவனமாகப் பிரிந்து விட்டது.)

பயணத்தின் அலுப்பு தெரியாமல், நம்மை வெகு சுகமாக அழைத்துச் செல்கிருர்கள். அந்த விமான சர்வீஸார் திறமைக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கிருர்கள் என்பதை, அவர்கள் விமானிகளைப் பார்த்தாலே புரிந்துகொள்ளலாம். பல்வேறு நாட்டுச் சிறந்த பைலட்டுகள் பலரும், அந்த ஸ்தாபனத்தில் பணிபுரிகிருர்கள்.

'ஸீட்'டில் பொருத்தப்பட்டுள்ள இசைக் கருவியின் மூலம், தமிழ்த் திரைப் பாடலை ரசித்தவண்ணம் நான் பயணம் செய்து கொண்டிருந்தேன். என் மனைவி லலிதா, எங்கோ பார்வையைச் செலுத்தியபடி என் அருகே அமர்ந்திருந்தாள்.

''நல்ல பாட்டு! உனக்குப் பிடித்த எஸ்.பி. பாலசுப்பிரமணியத்தின் பாட்டு. கேளேன்......'' என்றேன் அவளிடம்.

''வேண்டாம்...'' என்று கூறிவிட்டு, சுவாரசியமாக வெறுமையைப் பார்த்துக்கொண்டிருந்தாள் அவள்.

''என்ன அவ்வளவு சுவாரசியமோ?'' என்று கேட்டேன்.

''கற்பனையில் சிங்கப்பூரைப் பார்க்கிறேன்...'' என்ருள்.

''என்ன இது! நீ என்ன சொல்கிருய்?'' என்று புரியாமல் கேட்டேன்.

''சிங்கப்பூரைப்பற்றிப் பலரும் சொல்லக் கேட்டிருக்கிறேன். அந்த ஊரில் எங்கெங்கு போக வேண்டும், என்னென்ன வாங்க வேண்டும் என்றெல்லாம் என் பிரண்ட் ஒருத்தி சொல்லி இருக்கிருள். 'சேஞ்ச் ஆலி' என்று ஓர் இடமாம். அங்கு போனல், எல்லா வெளிநாட்டு சாமான்களும் மலிவாகக் கிடைக்குமாம். அப்புறம் கோவிந்தசாமி பிள்ளை கடைக்குப் போய், நைலக்ஸ், நைலான், பிரமிலான் ஜார்ஜெட் புடவைகள் எல்லாம் வாங்க வேண்டும். என் சிநேகிதி சொன்ன அடையாளங்களைக் கொண்டு, அந்தக் கடைகள் எல்லாம் எப்படி இருக்கும், என்னென்ன கலர்களில் புடவைகள் 'செலக்ட்' செய்யலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன். அப்புறம் ரொம்ப நாளாக 'காப்பி பெர்க்குலேட்'டரும், 'பிரான் மிக்ஸி'யும் வாங்க வேண்டும் என்று ஆசை. அதைப் பற்றியும் யோசித்துக் கொண்டிருக்கிறேன்...'' என்ருள்

நான் அவளையே உற்றுப் பார்த்தேன்.

ஏதோ 'ஷாப்பிங்' செய்வதற்காகவே சிங்கப்பூர் போவது போல் பேசினாள் அவள்.

அவள் மீது தப்பு இல்லை.

அநேகமாக எல்லோரும் சிங்கப்பூருக்கு 'ஷாப்பிங்' செய்யவே போக விரும்புகிறார்கள். சிங்கப்பூரை ஒரு 'ஷாப்பிங் பாரடைஸ்' ஸாகத்தான் அனைவரும் கருதுகிறார்கள்.

ஆனால், சிங்கப்பூர் வெறும் வியாபார ஸ்தலம்தானா? வேறு சிறப்புகள் அங்கு கிடையாதா?

இந்தக் கேள்விக்கு விடை காணத்தான், நான் அந்த நாட்டு மக்களைச் சந்தித்துப் பேச விரும்பி, அதற்கென்றே பயணம் மேற்கொண்டிருந்தேன்.

நள்ளிரவில் புறப்பட்ட விமானம், நான்கு மணி நேரப் பயணத்திற்குப் பிறகு, சிங்கப்பூர் விமான நிலயத்தை அடைந்தது. நியாயமாக அப்போது மணி, காலை நாலரையாகத்தான் இருக்க வேண்டும். ஆனால் சிங்கப்பூர் சென்னையைவிட இரண்டு மணி நேரம் முந்தி இருந்தது. அப்போது மணி ஆறரை! நேரத்தில் மட்டுமல்ல, நேர்த்தியிலும் அது அப்படித்தான் முந்தி யிருந்தது.

விமான நிலயத்தில் இறங்கியவுடனேயே, ஒரு சர்வ தேசியத் தன்மையை சிங்கப்பூரில் உணர முடியும். பல்வேறு உலக நாட்டு விமானங்கள் ஆங்காங்கே கம்பீரமாக நின்று கொண்டிருப்பதையும், பல நாட்டு யாத்திரிகர்கள் 'கஸ்டம்ஸ்' சோதனைக்காகக் காத்திருப்பதையும் அங்கே காணலாம்.

'கஸ்டம்ஸ் சோதனை' மிகச் சுலபமாகவே முடிந்தது.

''ஏதாவது புடவைகள் வைத்திருக்கிறீர்களா?'' என்று ஒரு கேள்வி கேட்டார்கள்.

''கட்டிக் கொள்ள கொஞ்சம் வைத்திருக்கிறேன்...'' என்று பதில் சொன்னாள் லலிதா.

''புதிதாக ஒன்றுமில்லையே......'' என்று கேட்டார்கள்.

''இல்லை...'' என்றவுடன், ''ஒகே! போகலாம்...'' என்று கூறி விட்டார்கள்.

புதுப் புடவையில் ஏன் அவ்வளவு அக்கறை காட்டுகிறார்கள் என்று விசாரித்தேன். சென்னை வாசிகள் சிலர், பட்டுப் புடவைகளை விற்பதற்கென்றே அங்கே எடுத்துச் செல்கிறார்களாம்! அதைத் தடுக்கவே 'கஸ்டம்ஸ் இலாகாவினர் புடவை சோதனை' செய்கிறார்களாம்!

விமான நிலயத்தில், நண்பர்கள் காத்திருந்தார்கள். ஜமால், சாமி, பிள்ளை ஆகியோர் எங்களை அன்புடன் வரவேற்றார்கள்.

''ஹில்டன் ஹோட்டலில் இடம் ஏற்பாடு செய்திருக்கிறேன்...'' என்றார் பிள்ளை.

''வாருங்கள், நம் காரில் போவோம்...'' என்றார் ஜமால்.

''நீங்கள் சிரமப்பட வேண்டாம். இப்போது டாக்ஸியில் அழைத்துப் போய் விடுகிறேன். பிறகு அவரை நீங்கள் அழைத்துச் சென்று ஊரைக் காட்டுங்கள்...'' என்றார் பிள்ளை.

''அதுவும் நல்ல யோசனை...'' என்று நண்பர் ஜமாலிடம் கூறி விட்டு, டாக்ஸியில் புறப்பட்டேன்.

கார், சிங்கப்பூர் விமான நிலையத்திலிருந்து வெளியே சென்றது. நான் சுற்றுமுற்றும் பார்த்தேன்.

''வாட் ஈஸ் யுவர் பர்ஸ்ட் இம்ப்ரஷன் எபௌட் சிங்கப்பூர்?'' என்று கேட்டார் பிள்ளை.

''சொல்லுவதற்கில்லை...'' என்றேன் நான்.

''ஏன்?''—சற்றே திகைத்துப் போய்க் கேட்டார் அவர்.

''இதற்கு முன்பே நான் சிங்கப்பூருக்கு வந்திருக்கிறேன். எனவே என்னுடையது 'பர்ஸ்ட் இம்ப்ரஷ'னாக இருக்க முடியாது...'' என்றேன்.

பிறகு லலிதாவைப் பார்த்து, ''உன் 'இம்ப்ரஷன்' என்ன?'' என்று கேட்டேன்.

''விமான நிலையத்திலிருந்து மூன்று மைல்களுக்கு மேல் வந்து விட்டோம். இதுவரை பார்த்ததில், இது மிகவும் சுத்தமான, பசுமையான நகரம் என்று தோன்றுகிறது. இந்த ஊரின் சாலையில் குப்பை போட்டால் அபராதம் விதிப்பார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். சென்னையிலும் அப்படி ஒரு சட்டம் கொண்டு வரலாம் என்று தோன்றுகிறது...'' என்றாள் லலிதா.

''தாராளமாகக் கொண்டு வரலாம். சட்டம்தான் மனிதனை நல்லவனாக்குகிறது. இது சிங்கப்பூர் கற்றுத் தரும் பாடம்... எதிலும் ஓர் ஒழுங்கு, முறை, கட்டுப்பாடு வேண்டும் என்றால், அதை மீறினால் தண்டிக்கப்படுவோம் என்ற பயம் இருக்க வேண்டும். சிங்கப்பூர் முழுவதும் இப்படித்தான் சுத்தமாகவும் பசுமையாகவும் இருக்கும். எங்கள் 'லீ' அரசாங்கத்தின் மகத்தான சாதனையாக இதைக் கருதுகிறோம்'' என்றார் நண்பர் சாமி.

''மிஸ்டர் சாமி...'' என்றாள் லலிதா.

''என்னம்மா?'' என்றார்.

''நம் கார் இப்போது கோவிந்தசாமி பிள்ளை கடை வழியாகப் போகுமா?'' என்று கேட்டாள்.

''இல்லையே, அது சிராங்கூன் ரோடில் அல்லவா இருக்கிறது...... ஏன்?'' என்றார் சாமி.

''ஒன்றுமில்லை...... கேட்டேன்......'' என்றாள் லலிதா.

''மிஸ்டர் சாமி... அவள், ஒரே புடவைகள் கனவில் இருக்கிறாள். கோவிந்தசாமி பிள்ளை கடையைப் பற்றி நிறைய கேள்விப்பட்டிருக்கிறாள். கார் அந்த வழியாகப் போனால், இப்போதே பார்த்து விடலாம் என்ற துடிப்புத்தான்...'' என்றேன்.

''அப்படியா? நாளைக்குப் போவோம். கோவிந்தசாமி, செத்திவிநாயகர் என்று பல கடைகள் இருக்கின்றன...... நல்ல வெரைட்டி கிடைக்கும்......'' என்று உத்தரவாதம் அளித்தார் சாமி.

''மிஸ்டர் சாமி... ஒரு கேள்வி கேட்கிறேன், அதற்கு ஒரே வரியில் பதில் சொல்வீர்களா?'' என்றேன் சாமியைப் பார்த்து.

''கேளுங்கள், முயற்சிக்கிறேன்...'' என்ருர் சாமி.

''இந்த சிங்கப்பூர் இவ்வளவு செழிப்பானதற்கு என்ன காரணம் என்று சொல்ல முடியுமா?''

''அதுவா? ஒரே காரணம்தான்! இது கப்பல் தந்த செல்வம்...'' என்ருர் அவர்.

''கப்பல் தந்த செல்வமா? அப்படி யென்ருல்...''

''இந்த ஊருக்குத் தினசரி நூற்றுக்கணக்கான கப்பல்கள் வருகின் றன. அதில் சாமான்கள் வருவதும் போவதும் சொல்லி மாளாது. பல நாட்டு யாத்திரிகர்கள், பல நாட்டுச் சாமான்கள், பல நாட்டுப் பணங்கள்! இவை போதாதா, ஒரு நாடு செழிப்படைய. நீங்கள் ஹார்பருக்குப் போய்ப் பாருங்கள், புரியும். இந்த ஊரில் 'கப்ப பிடிக்கிற' வங்க நிறைய பேர் உண்டு. அதில் நானும் ஒருத்தன்... இந்த சிங்கப்பூர் செல்வத்திலே கொழிக்கிறதே, இந்தக் கப்பல்களால்தான்...'' என்ருர்.

எங்கள் கார், ஹில்டனை அடைந்தது. ''கொஞ்சம் ஓய்வெடுங்கள்'' என்று அறையில் எங்களை விட்டுவிட்டு நண்பர்கள் புறப்பட்டார்கள்.

ஹில்டன், மிக வசதியான ஓட்டல். அதன் உள்ளே நுழைந்து விட்டால், ஏதோ அமெரிக்காவில் இருப்பது போன்ற உணர்வுதான் ஏற்படும். அதன் அழகிய 'லாபி'யில் நிறைய அமெரிக்க யாத்திரிகர்களைக் காணலாம். மென்மையான இசை தவழ்ந்து விளையாடிக் கொண்டிருக்கும்.

சிங்கப்பூர் பயணத்தை நான் எப்போதும் விரும்புவேன். காரணம், அந்த ஒரு நாட்டில்தான், நான் விரும்பியபடி யெல்லாம் இருக்க முடிகிறது. மேல்நாட்டு நாகரிகத்தில் மூழ்கி சிறிது நேரம் நம்மை மறக்க வேண்டுமா? ஹில்டன் போன்ற ஓட்டல் 'லாபி'யில் அமர்ந்தால் போதும்.

சீன நாகரிகத்தை நுகர வேண்டுமா? சைனு டவுன் போய் விடலாம். இப்படி எந்தச் 'சூழ்நிலை'யையும் உடனுக்குடன் நாட சிங்கப்பூர் பெருதவி புரிகிறது. எல்லாவற்றையும் விட முக்கியமானது (என்னைப் பொறுத்த வரை) நமது சாப்பாடு. இட்லி, சாம்பார், தோசை வேண்டுமா? ஹில்டனிலிருந்து பத்து நிமிஷப் பயணத்தில், 'கோமள விலா'ஸை அடைந்து விடலாம். அங்கே போய்விட்டால் போதும், ஏதோ தமிழ் நாட்டில் இருப்பது போன்ற உணர்வே ஏற்பட்டு விடுகிறது. அழகாக இலை போட்டுப் பரிமாறுகிருர்கள்!

நானும் லலிதாவும், கொஞ்சம் ஓய்வெடுத்துக் கொண்ட பிறகு, காலை உணவுக்காக 'கோமள விலாஸ்' சென்ரேம்.

ஓட்டல் வாசலில் சிங்கப்பூர் நண்பர் ஒருவர் எங்களைச் சந்தித்து விட்டார்.

''என்ன, தண்ணி சாப்பிடவா?'' என்று அவர் கேட்டதும், லலிதா வுக்கு என்னவோ போல் ஆகிவிட்டது.

''ஆமாம்......'' என்றேன் நான்.

அவர் போன பிறகு ''என்ன இது? தண்ணி சாப்பிடவா ஓட்டலுக்கு வந்தோம்?...'' என்று என்னிடம் கேட்டாள் லலிதா.

''இங்கெல்லாம் 'என்ன தண்ணி சாப்பிடறீங்க' என்று கேட்டால், 'காப்பியா, டீயா' என்றுதான் பொருள்'' என்று எனக்குத் தெரிந்த சிங்கப்பூர் பாஷையை விளக்கினேன்.

''தண்ணி என்ற சொல்லுக்கு எப்படியெல்லாம் அர்த்தம் ஏற்பட்டு விட்டது பார்த்தீர்களா?'' என்று வியப்படைந்தாள் லலிதா.

''ஆமாம், நம் ஊரில்கூட குடித்துவிட்டுத் திரிபவனை 'தண்ணி போட்டுட்டு ஆடறான்' என்று சொல்வதில்லையா? அப்படித்தான்...'' என்றேன்.

டிபன் சாப்பிட்டு முடிந்ததும், ''லலிதா! நாமாக இந்த ஊரை ஒருமுறை சுற்றிப் பார்க்கலாம். நண்பர்கள் இல்லாமல் தனியாகச் சென்றால்தான், நமக்கென்று ஓர் அபிப்பிராயம் ஏற்படும்...'' என்று கூறி, ஒரு டாக்ஸியை நிறுத்தினேன். வழக்கப்படி, டாக்ஸி டிரைவரின் பக்கத்திலேயே அமர்ந்து கொண்டு, ''இந்த ஊரை ஒருமுறை சுற்றிக் காட்டு...'' என்றேன்.

அந்த சீன டிரைவர், முப்பத்திரண்டு பற்களும் தெரியச் சிரித்து விட்டு, ''ஓகோ'' என்று புறப்பட்டார்.

டாக்ஸி பல சாலைகளைக் கடந்தது. ஏதேதோ பெயர்களைச் சொல்லிக் கொண்டு வந்தார் அவர். அவர் குறிப்பிட்ட பெயர்களில், என் செவிகளில் அதிகமாக விழுந்தவை ஒட்டல்களின் பெயர்கள்தான்.

''இது ஹில்டன், இது மிங்க் கோர்ட்... இது ஒட்டல் மலேசியா, இது லயன்ஸிடி... இது அம்பாஸிடர், இது ஷாங்கிரில்லா...'' என்று நிறைய ஒட்டல்களின் பெயர்களையே சொன்னார்.

''என்ன இது, ஒட்டல்களின் பெயராக அடுக்கிக் கொண்டே போகிறீர்களே?...'' என்று கேட்டேன்.

''யெஸ்... இங்கு ஒட்டல்கள் ரொம்ப அதிகம். பீபிள் கம் ஹியர் டு என்ஜாய்! எனவே அவர்களுக்கு வசதிகள் வேண்டாமா? அதனால்தான் நிறைய ஒட்டல்கள் ஏற்படுத்த அரசாங்கம் உதவுகிறது. அதோ பாருங்கள், அந்தப் பிரமாண்டமான கட்டடத்தை. அதுதான் ஆசியாவின் மிக உயரமான ஒட்டலாக இருக்கப் போகும் 'மாண்ட்ரீன்'...'' என்று ஒரு கட்டடத்தைக் காட்டினார்.

முக்கால்வாசி கட்டப்பட்டிருக்கும் அந்த ஒட்டலை, நிமிர்ந்து பார்த்தேன். கழுத்து வலித்தது.

அந்த டிரைவர் ''சாங்கி பீச்'' பார்க்கலாம் என்று கூறி, அங்கே அழைத்துச் சென்றார்.

போகும் வழியில் ''அதோ பார்த்தீர்களா, அதுதான் இந்த ஊர் ஜெயில்...'' என்றார் ஒரு கட்டடத்தைச் சுட்டிக் காட்டி.

''ஓகோ! இருக்கட்டும், நான் அங்கே போக விரும்பவில்லை...'' என்றேன் சிரித்துக் கொண்டே.

இதைக் கேட்ட டிரைவர், சட்டென்று என்னைத் திரும்பிப் பார்த்து, ''யார் கண்டார்கள்! ஒரு வேளை நீங்கள் எனக்குப் பணம் கொடுக்கவில்லையென்றால், நானே உங்களை அங்கு அழைத்துச் செல்ல நேரிடலாம்...'' என்று கூறிவிட்டு, 'கடகட'வென்று உரக்கச் சிரித்தார்.

# 20

மலாய்க் கம்பத்தில் ஒரு வீடு

''மலாய்க் கம்பத்துக்குப் போவோமா?'' என்று கேட்டார் நண்பர் ஜமால்.

''கம்பமா? அது என்ன?'' என்று புரியாமல் கேட்டேன்.

''கம்பம் என்றால் கிராமம். மலாய் மொழியில் 'கம்போங்' என்கிறார்கள். மலாய்க்காரர்கள் கிராமங்களில் பெரும் எண்ணிக்கையில் வசிப்பது வழக்கம். நகர வாழ்க்கையைவிட, கிராமப்புற வாழ்க்கையில் தான் அவர்களுக்கு நாட்டம் அதிகம். ஆனாலும், சிங்கப்பூரைப் பொறுத்த வரையில் மலாய்க்காரர்களின் அந்த மனப்போக்கு மாறி விட்டது'' என்று விளக்கமாகக் கூறினார் ஜமால்.

''அப்படியா? எனக்குக் கிராமங்களைப் பார்ப்பதில் எப்போதுமே ஆசை. இங்கிருந்து எவ்வளவு மைல்கள் இருக்கும்? கையில் ஏதாவது டிபன் கட்டிக் கொள்ளலாமா?'' என்று கேட்டேன்.



''சே, சே! கிராமம் என்றால், சென்னையிலிருந்து தஞ்சாவூரிலுள்ள கிராமத்திற்குப் போவது என்று நினைத்துக் கொண்டீர்களா? சிங்கப்பூரே சின்ன ஊர்தானே சார்! இதற்குள் ஒரு கிராமம் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்'' என்றார்.

ஜமாலின் காரில் கிராமத்தை நோக்கிப் புறப்பட்டோம்.

''நாம் போகும் கிராமத்திற்கு ஏதாவது பெயர் உண்டா?''

''ஓ! 'சிக்லாப்' என்று பெயர்.''

எங்களுடன் வந்த நண்பர் சாலி, சிங்கப்பூர் கிராம வாழ்க்கையைப் பற்றிச் சில சுவையான விஷயங்களைச் சொல்லிக் கொண்டு வந்தார்.

தென்னை மரங்களும், ரம்பூத்தான் பழ மரங்களும் (இது சிங்கப்பூரில் பிரபலமான பழம்) நிறைந்த கிராமம் அது. அருகிலேயே கடற்கரை. அந்தக் கம்பத்து மலாய்க்காரர்கள் சிலர் மீனவர்கள் போலும்! மீன் பிடிக்கும் வலைகளை உலர்த்தி வைத்திருந்தார்கள். கோழிகள், மண் மேடுகளைச் சுற்றித் திரிந்து கொண்டிருந்தன. சிறுவர்கள் கோலிகுண்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

பரபரப்பும் சுறு சுறுப்பும் நிறைந்த சிங்கப்பூரில், இப்படி ஒரு பகுதியா என்று வியந்து போனேன்.

கிராமப்புறங்களுக்குரிய அமைதியும் இயற்கை அழகும் அங்கே நிறைந்திருந்தன. கம்பத்து வீடுகளும் அப்படித்தான் இருந்தன. செங்கல் கட்டடத்தையே பார்க்க முடியவில்லை. மரப் பலகைகளைக் கொண்டு கச்சிதமாக வீடு கட்டியிருக்கிறார்கள்.

''இந்த மாதிரி வீடுகளுக்கு 'அத்தாப்பு வீடு' என்று பெயர். கல், இரும்பு, சிமெண்ட் எதுவுமே தேவையில்லை'' என்று விளக்கம் தந்தார், ஒரு கம்பத்துக்காரர்.

''ஒரு வீட்டினுள் நுழைந்து பார்க்கலாமா?'' என்று கேட்டேன்.

''தாராளமாக'' என்று கூறிய நண்பர் அலி, (இவர்தான் எங்களுக்கு வண்டியோட்டியாகவும் இருந்தார்) மலாய் மொழியில் குரல் கொடுத்துக் கொண்டே நகர்ந்தார். சிறிது நேரத்தில் திரும்பி வந்து, ''என் சொந்தக்காரர் வீடே இங்கிருக்கிறது. வாருங்கள் போவோம்'' என்றார்.

மாடிப் படிகளில் ஏறி ஒரு வீட்டிற்குள் நுழைந்தேன். ரேழி போன்ற நீண்ட முன் அறையில், மேஜையும், நாற்காலிகளும் காணப்பட்டன.

உள்ளிருந்து ஒரு பெண் எட்டிப் பார்த்தாள். நண்பர் அலி, என்னை அந்தப் பெண்ணுக்கு அறிமுகப்படுத்தி வைத்தார்:

''அவள் பெயர் சித்தி ஜலிஹா......இவர் மணியன்.''

நான் அவளையே பார்த்தேன். லட்சணமான பெண் அவள். கைலியும் சட்டையும் போட்டிருந்தாள். அவள் முகத்தில் ஒரு தனிக் கவர்ச்சி இருந்தது.

அலி, மலாய் மொழியில் ஏதோ சொன்னார். அடுத்த கணம் அந்தப் பெண் உள்ளே சென்று விட்டாள்.

அவர் என்ன சொன்னார், அவள் ஏன் உடனே உள்ளே சென்று விட்டாள் என்று எனக்குப் புரியவில்லை. ஒருவேளை என் பார்வையைத் தவறாகப் புரிந்து கொண்டுவிட்டாரோ அலி என்ற சந்தேகம் எழுந்தது என்னுள். ஆனால், அடுத்த கணமே என் சந்தேகம் போய்விட்டது.

சித்தி ஜலிஹா, கைநிறைய இனிப்பு வகைகளைத் தூக்கிக் கொண்டு உள்ளே வந்து, ''சாப்பிடுங்கள்'' என்றாள்.

''இதெல்லாம் எதில் செய்தவை? நான் வெஜிடேரியன்'' என்றேன்.

''வெறும் மாவும் சர்க்கரையும் கலந்த பணியாரங்கள்தான். தாராளமாகச் சாப்பிடலாம்'' என்றார் ஜமால்.

உள்ளேயிருந்து ஒரு பெரிய பாட்டில் நிறைய சர்பத் வந்தது.

நான் அந்தப் பலகாரங்களைச் சாப்பிட்டுப் பார்த்தேன். சுவையாகத் தான் இருந்தன.

''இந்த விட்டைச் சுற்றிப் பார்க்கலாமா ?'' என்று கேட்டேன்.

''ஓ'' என்று கூறி, என்னை உள்ளே அழைத்துச் சென்றாள் ஜலிஹா.

ரேழியை அடுத்து ஒரு வரவேற்பறை, ஒரு படுக்கை அறை, இன்னோர் அறை, சாப்பாட்டு அறை, சமையல் அறை எல்லாம் மிகவும் சுத்தமாக இருந்தன.

சமையல் அறையில், இன்னொரு பெண் ஏதோ சமையல் வேலையில் ஈடுபட்டிருந்தாள். பீன்ஸ், தக்காளி, வெள்ளரிக்காய் போன்ற காய் கறிகள் நறுக்கி வைக்கப்பட்டிருந்ததும், என் கண்ணில் பட்டது.

மீண்டும் ரேழிக்கு வந்தேன். ஜலிஹாவைப் பார்த்து ''உங்களுக்கு இந்தக் கிராம வாழ்க்கை பிடித்திருக்கிறதா?'' என்று கேட்டேன்.

ஜலிஹா பதில் சொல்லவில்லை; சிரித்தாள்.

''நீங்கள் எதுவரை படித்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''எட்டு வருஷம் படித்திருக்கிறேன். என் தகப்பனார் கோலாலம்பூரில் இருக்கிறார். இது உறவினர் வீடு. உதவிக்காக வந்திருக்கிறேன்...'' என்றாள் ஆங்கிலத்தில்.

''உங்களுக்கு இந்தக் கிராமப்புற வாழ்க்கையைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும், அவ்வளவுதானே? அதற்கொரு ஆளைக் கொண்டு வருகிறேன், இருங்கள்'' என்று கூறி, வெளியே எழுந்து சென்றார் அலி.

''இங்கே யெல்லாம் சினிமா உண்டா?'' என்று ஜலிஹாவைக் கேட்டேன்.

''இங்கே கிடையாது. ஆனால் நான் போய்ப் பார்ப்பேன்.''

''சினைப் படமா?''

''இந்துஸ்தானி படமும் எனக்குப் பிடிக்கும். ஆனால் நல்ல கதை யிருக்க வேண்டும். பாட்டும் இனிமையாக இருக்க வேண்டும். எனக்குப் பிடித்த இந்தி நடிகர் ஷஷிகபூர், நடிகை பபிதா.''

ஜலிஹா பேசிக்கொண்டிருக்கும் போதே, மரப்படியேறி ஒரு தள்ளாத கிழவர் உள்ளே நுழைந்து கொண்டிருந்தார்.

அவரை வரவேற்க நான் எழுந்து சென்றேன்.

''இந்தக் கம்போங்கில் காலம் காலமாக வாழ்ந்து வரும் நபர்களில் இவர் ஒருவர். இவர் பெயர் சாலே பின் ராபு (Saleh bin rabu) என்று அறிமுகப்படுத்தி வைத்தார் நண்பர் அலி.

உடல் லேசாக ஆட, என் எதிரே அமர்ந்தார், பல் இல்லாத அந்தக் கிழவர்.

''மிகவும் வயதானவராக இருக்கிறுரே......'' என்றேன்.

''இன்னும் ஐந்தாறு ஆண்டுகளில் நூறை எட்டிவிடுவார்'' என்ருர் அலி. பிறகு அவரைப் பார்த்து ''இவர் கேட்கும் கேள்விகளுக்குத் தயங்காமல் பதில் சொல்லுங்கள். ஒன்றும் பாதகம் வந்து விடாது. இவர் அதிகாரி இல்லே'' என்று உரத்த குரலில் மலாய் மொழியில் கூறினுர்.

பொக்கை வாய் தெரிய, நீண்ட சுருட்டைப் புகைத்துக் கொண்டே சிரித்தார் அந்தக் கிழவர்.

''நான்தான் இந்தக் கிராமத்தில் மிகவும் வயதான மனிதன். பல சுக துக்கங்களைப் பார்த்தவன்......'' என்ருர்.

''இங்கு எத்தனை விடுகள் இருக்கும்?''

''முன்பு நிறைய இருந்தது. இப்போது பலரும் அடுக்கு மாடிக் கட்டடத்திற்குப் போய்விட்டார்கள். இப்போது அறுபது எழுபது வீடுகள்தான் இருக்கும். இதில் இருப்பவர்கள் எல்லாரும் சிங்கப்பூர் பிரஜைகள்தான். 95 சதவிகிதம் மலாய் மக்கள். அதில் பெரும்பாலோர் மீனவர்கள். ஆனுல், காலப்போக்கில் அதிலும் மாற்றம். இப்போது பரம்பரை வேலே குறைந்து வருகிறது. எங்கள் கம்பத்து இளைஞர்கள் பலர், வாத்தியார்களாகவும், போர்வீரர்களாகவும் பணி புரிகிறுர்கள். உலகம் வளர்ந்து கொண்டு போகிறது. நான்தான் இன்னும் பழைமையிலேயே இருக்கிறேன். சொன்னுல் நம்ப மாட்டீர்கள். சிங்கப்பூரைத் தாண்டி நான் எங்குமே போனதில்லே. பக்கத்தில் இருக்கும் ஜோஹூருக்குக் கூட நான் போனதில்லே'' என்ருர் அவர்.

''இப்போதும் மீன் பிடிக்கப் போகிறீர்களா நீங்கள்?'' என்று கேட்டேன்.

ராபு சிரித்தார்.

''நான் விடாத படகா? சொந்தமாக நானே கட்டின படகை வைத்துக்கொண்டு, படகு ரேஸில் பரிசெல்லாம் வாங்கி இருக்கிறேன். இன்னும் அந்தப் பரிசுக் கோப்பை இருக்கிறது. இப்போது வயதாகி விட்டது. வெளியில் போவதில்லே. வீட்டில் அமர்ந்தபடி குரான் படித்துக் கொண்டிருக்கிறேன். இந்தக் கம்பத்திற்குத் தனிப் பள்ளிவாசல் கூட இருக்கிறது'' என்ருர்.

அந்தக் குப்பத்தைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டேன்.

நாகரிகத்தின் உச்சியில் இருக்கும் சிங்கப்பூரின் ஒரு பகுதியா அது என்ற ஐயம் எனக்கு எழுந்தது. சாலைகள் கிடையாது, சாக்கடைக் குழாய்கள் கூடக் கிடையாது.

''இது சிங்கப்பூரின் பழைமையான பகுதி. பழைமை வேண்டும் என்றுதான் இன்னும் அதை வைத்திருக்கிறார்கள். இம்மாதிரி கிராமங்களையெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாகப் போக்கிக் கொண்டு வருகிறார்கள். இன்னும் பத்தாண்டுகள் கழிந்தால் இந்தமாதிரி 'கம்போங்'குகள் இல்லாமலே போய்விடும்......'' என்று விளக்கம் கொடுத்துக் கொண்டே வந்தார் ஒரு நண்பர்.

''வாழ்நாள் பூராவும் இங்கேயே கழித்துவிட்டேன். இறுதிவரை இங்கேயே இருக்க விரும்புகிறேன்'' என்று கிழவர் ராபு கூறியபோது, அந்த 'மண் மோகம்' எனக்கு நன்றாகப் புரிந்தது. என்ன இருந்தாலும் கிராமத்துப் பற்று தனிதானே! நம்மில் பலர் டெல்லி, பம்பாய் போன்ற நகரங்களில் வாழ்நாளில் பெரும் பகுதியைக் கழித்துவிட்டாலும், கடைசி காலத்தில் காவிரிக் கரையிலோ, தாமிரவருணியின் ஓரத்திலோ ஒரு குடிசை போட்டுக் கொண்டு வாழ வேண்டும் என்று விரும்புவதில்லையா? அப்படித்தான் அந்த ஆசையும்!

''நான் இப்படிச் சொல்வதற்காக என்னை மன்னிக்க வேண்டும். எனக்கு இந்த நவீன சிங்கப்பூர் பிடிக்கவில்லை. வாழ்க்கை இயற்கையோடு ஒட்டியிருக்க வேண்டும். முழுக்க முழுக்கச் செயற்கையாக இருந்து விட்டால் கஷ்டம்தான்! இயற்கைச் சூழலில், கொஞ்சம் வசதிகள் செய்து கொண்டு வாழ்வதுதான் உண்மையான வாழ்க்கை. மற்றதில் போலிதான் அதிகம்'' என்று கூறி மீண்டும் பொக்கை வாய் தெரியச் சிரித்தார் ராபு.

வழியில் வெள்ளரிக்காய் நிறையத் தென்பட்டது.

''வெள்ளரிக்காய் ரொம்ப மலிவோ இங்கே?'' என்று கேட்டேன்.

''முப்பது சென்ட்டுக்கு இரண்டு பெரிய வெள்ளரிக்காய்கள் கிடைக்கும்'' என்றார்.

''அரிசி, பருப்பெல்லாம் எப்படி விலையோ?''

''ஒரு கட்டி அரிசி (அதாவது ஒன்றரை பவுண்ட்) முப்பது சென்ட்! இங்கிருப்பவர்கள் பலரும் சொந்தமாகக் கோழிகள் வைத்திருப்பவர்கள்'' என்றார்.

கம்பத்து மக்கள் சிலரிடம் பேச்சுக் கொடுத்து, மேலும் சில விஷயங்களைத் தெரிந்து கொண்டேன். பிறகு, ஜலிஹாவிடமும், பெரியவரிடமும் விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டேன்.

சிங்கப்பூரில் நெடிதுயர்ந்து நிற்கும் அடுக்கு மாடி வீட்டுத் தொகுதிகளைப் பார்த்துவிட்டு, சிக்லாப் கிராமத்து அத்தாப்புக் குடிசைகளைப் பார்த்தபோது, ஒரு தனி உலகத்திற்கு வந்து விட்டாற் போல் இருந்தது. இவர்கள் அடுக்கு மாடி வீட்டுவாசிகளாக ஆக விரும்பவில்லையா என்ற கேள்விதான் உடனடியாக எழுந்தது.

''மக்களுக்கு வீட்டு வசதி அளிப்பதற்கென்றே, சிங்கப்பூரில் வீடமைப்பு வளர்ச்சிக் கழகம் பணியாற்றி வருகிறதே; அப்படியிருந்தும் குறைந்த வசதிகளுடன் கிராமப்புறங்களில் இவர்கள் ஏன் இருக்க வேண்டும்?'' என்று நண்பர் சாலியைக் கேட்டேன்.

''ஒரு சில கிராமத்து மக்கள் அடுக்குமாடி வாசத்தை விரும்பவில்லை. ஒரு சிறு காய்கறித் தோட்டம் போடவோ, அல்லது இரண்டு கோழிகளை வளர்க்கவோ, மீன் பிடிக்கும் வலையை உலர வைக்கவோ ஒரு கிராமவாசி விரும்புகிறான். கிராமப்புறங்களில் இது முடியும்! ஒரு மாடி வீட்டில் முடியாதல்லவா?'' என்றார் சாலி.

நம் ஊரிலும் இத்தகையவர்கள் இருப்பதைப் பார்க்கிறோமே! ஹவுஸிங் போர்டு அளிக்கும் 'பிளாட்'களை விரும்பாதவர்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள்!

''வீடு என்றால் ஒரு காம்பவுண்ட் வேண்டும் சார். சின்னத் தோட்டம், சாயங்கால வேளைகளில் பிரம்பு நாற்காலியைப் போட்டுக் கொண்டு உட்கார ஒரு சின்னப் புல்வெளி இவையெல்லாம் இருக்க வேண்டாமா? பிளாட் ஸிஸ்டத்தில், எந்தச் சுவர் யாருக்குச் சொந்தம் என்று கூடத் தெரியாத நிலையில் வாழ்வது ஒரு வாழ்க்கையா?'' என்று கூறுபவர்களை நாம் சந்தித்திருக்கிறோம் அல்லவா?

குடிசைவாசிகளை அடுக்குமாடி வீடுகளில் அரசாங்கம் குடியேற்றிக் கொண்டிருக்கிறது. வெகு வேகமாக வளர்ந்துவரும் சிங்கப்பூரில் குடிசைவாசிகள் என்ற பிரிவினர் இருப்பதை அரசாங்கம் விரும்பவில்லை.

அடுக்கு மாடி வீடுகள் சிலவற்றையும் நான் பார்த்தேன். அங்கே குடியிருப்புக்கான எல்லா வசதிகளும் இருக்கின்றன. எந்த மாடிக்கு வேண்டுமானாலும் போவதற்கு 'லிப்ட்' உண்டு. மின்சாரம், தண்ணீர், 'காஸ்' எல்லாம் கொடுக்கப்படுகின்றன. ஆனால் இதற்கும் அப்பாற்பட்டு மனிதனுக்கு ஏதோ ஒன்று தேவைப்படுகிறதே! மனிதனின் வாழ்க்கை, மெடீரியல் தேவைகளுடன் நின்று விடுவதில்லையே!

''அடுக்கு மாடி வீடுகள் மனிதனின் சமூகத் தேவைகளைப் பூர்த்தி செய்யக் கூடியவையாக இல்லை. கைதிகள் போல் அடுக்கு வீடுகளில் அடைபட்டுக் கிடக்கிறார்கள். உடனடியாக இவர்கள் விடுதலை செய்யப்படவேண்டும்!'' என்று சிங்கப்பூருக்கு வந்த அமெரிக்கர் ஒருவர் கூறினாராம்.

இந்தக் கருத்தை நான் ஆதரிப்பதாக எடுத்துக் கொள்ளக் கூடாது. அரசாங்கத்தின் அடுக்கு மாடி வீடுகளில் லட்சக்கணக்கான மக்கள் வசிக்கும்போது, சில ஆயிரம் பேர் மட்டும் பழைமையை விட்டு விலகாதவர்களாக வாழ விரும்புகின்றனர்.

''அடிப்படைத் தேவைகளை இங்கேயும் நிறைவேற்றிக் கொள்ள முடிகிறது'' என்று, நான் சந்தித்த கிராமத்து மக்கள் என்னிடம் கூறினார்கள்.

# 21

குடும்பத்துடன் டாக்டர் ராமசாமி

"விக்டோரியா தியேட்டரில் இன்றிரவு நாட்டிய நிகழ்ச்சி ஒன்று இருக்கிறது. நீங்கள் அவசியம் வரவேண்டும்" என்றார் நண்பர் சாலி.

"நாட்டிய நிகழ்ச்சியா? எவ்வளவு நேரம் நடக்கும்?" என்று கேட்டேன்.

"இரண்டரை அல்லது மூன்று மணி நேரம்..."

"நல்ல கூட்டம் வருமா?"

"நிறைய வரும். இந்தியர்கள் குடும்பத்துடன் வருவார்கள். சீனர்கள், மலாய்க்காரர்கள், ஐரோப்பியர்கள் எல்லோரும் வருவார்கள்."

இதைக் கேட்டு நான் சற்று வியந்தே போனேன். சென்னையில்தான் தினந்தோறும் சங்கீதமும், நாட்டியமும், நாடகமும் நடந்து கொண்டிருக்கிறது என்றால், சிங்கப்பூரில்கூட அப்படித்தானே என்று நினைத்தேன்.

"பரத நாட்டியமும், சங்கீதமும் அன்றாட நிகழ்ச்சியாக இல்லாவிட்டாலும், சிங்கப்பூரின் எந்த ஒரு பகுதியிலாவது ஏதாவது ஒரு கலை நிகழ்ச்சி நடந்து கொண்டுதான் இருக்கிறது. பல இன மக்களைக் கொண்ட சமூகமாக சிங்கப்பூர் இருப்பதே இதற்குக் காரணம்" என்று விளக்கம் கூறினார் நண்பர் சாலி.



உலகின் பல பாகங்களிலும் நான் தமிழ் மக்களைச் சந்தித்து உரையாடி இருக்கிறேன். அவர்கள் எல்லோருக்கும் சென்னை மீது ஒரு தனி மோகம். அந்த மோகத்திற்கு முக்கிய காரணம், இங்கு நடக்கும் கலை நிகழ்ச்சிகள்தான்.

''என்ன சார் வாழ்க்கை இது? பணம் காசு இருந்துவிட்டால் போதுமா? காரில் போய்விட்டால் எல்லாம் தீர்ந்து விட்டதா? செம்மங்குடியை, மதுரை சோமுவைக் கேட்டு அனுபவிக்க முடியவில்லையே! 'சோ'வின் ஸடையரையும், மனோகரின் நாடகத்தையும் பார்க்க முடியவில்லையே! எம்.ஜி.ஆர்., சிவாஜி படங்களை ரசிக்க முடியவில்லையே! ஆயிரம் சொன்னாலும் சென்னை சென்னைதான் சார்... பகலெல்லாம் உழைத்த பிறகு, சாயங்காலம் ஆனால், நிம்மதியாக சினிமாவோ, டிராமாவோ பார்க்க சென்னை ஒன்றில்தான் சிறந்த சௌகரியம் இருக்கிறது. டெல்லி-பம்பாயில்கூட அவ்வளவு இல்லை...'' என்று குறைப்பட்டிருக்கிறார்கள்.

''கலை ரசனை தமிழ் மக்களின் ரத்தத்துடன் ஊறிய ஒரு விஷயம். பத்து தமிழர்கள் ஒன்றுகூடினால், ஒரு சங்கம் உருவாகும். பிறகு அங்கே விழாக்கள் இடம் பெறும். கலைஞர்கள் வரவழைக்கப் படுவார்கள். தாயகத்தைவிடச் சிறப்பான முறையில், அதிக ஈடுபாட்டுடன் எல்லாம் நடைபெறும்'' என்று ஒருமுறை நண்பர் விசுவநாதன் நியூயார்க்கில் என்னிடம் கூறினார். உண்மையான வார்த்தை அது. நான் நியூயார்க் நகரில் இருந்தபோது துவக்கப்பட்ட பாரதியார் சங்கம், இன்று ஒரு பெரிய தமிழ்ச் சங்கமாக மாறி, அதிலிருந்து பல கிளைச் சங்கங்கள் தோன்றி இருக்கின்றன. மேற்கு—கிழக்கு கலைப் பரிவர்த்தனைக்கென்று உருவான ஒரு புதிய சங்கம், அண்மையில் லால்குடியை அமெரிக்காவிற்கு அழைத்திருக்கிறது. தமிழ் இனத்தின் தனிப் பெருமை இந்தக் கலாரசனைதான் என்பதை எடுத்துக் காட்டவே, இதை யெல்லாம் இங்கே குறிப்பிடுகிறேன்.

சிங்கப்பூரில், பல கலைச் சங்கங்கள் இயங்கி வருகின்றன. சிங்கப்பூர் தமிழர்கள், முழுக்க முழுக்க சிங்கப்பூர் பிரஜைகளாக வாழ்ந்த போதிலும், தமிழகத்தின் நுண்கலையை மிகச் சிறப்பாகப் பேணிப் பாதுகாத்து வருகிறார்கள்.

டாக்டர் ராமசாமி, சிங்கப்பூர் தமிழர்களில் முக்கியமான ஒருவர். தொழில் முறையில் டாக்டர் என்ற போதிலும், கலை இலக்கியத்தில் அதிக ஈடுபாடு கொண்டவர் அவர். சொந்தமாகப் பத்திரிகை நடத்தியவர். தமிழ் நாட்டிலிருந்து கலைஞர்களும், எழுத்தாளர்களும் சிங்கப்பூர் சென்றால், அவர்களை இவர் சந்திக்காமல் இருக்க மாட்டார்.

ஒருநாள் காலை, என் ஓட்டல் அறையில் டெலிபோன் ஒலித்தது. ரிஸீவரை எடுத்தேன்.

''மிஸ்டர் மணியன், என் பெயர் ராமசாமி. என்னை உங்களுக்குத் தெரியாது; உங்களை எனக்குத் தெரியும். நானும் ஒரு பத்திரிகைக்காரன்.

உங்களைச் சந்திக்க விரும்புகிறேன். என் மனைவி, உங்கள் கதைகளையெல்லாம் படித்திருக்கிறாள். உங்களை நேரில் சந்தித்துப் பேச விரும்புகிறாள். வெறும் பாராட்ட மட்டுமல்ல; சில குறைகளைக் கூறவும் விரும்புகிறாள். நீங்கள் 'சைவர்' என்பது எனக்குத் தெரியும். ஒருமுறை வீட்டுக்கு வாருங்கள். நல்ல சைவ உணவு தருகிறோம்'' என்று 'மடமட'வென்று அடுக்கிக் கொண்டே போனார்.

அவர் பேசிய தோரணை என்னை வியப்பில் ஆழ்த்தியது. பல ஆண்டுகள் பழக்கப்பட்ட நண்பர் ஒருவரிடம் பேசுவது போல் மிகவும் சகஜமாகப் பேசினார். 'இவரைக் கண்டிப்பாகச் சந்திக்க வேண்டும்' என்ற முடிவுக்கு அக்கணமே வந்தேன்.

''நிச்சயம் உங்களைச் சந்திக்கிறேன். இன்றே மாலை சந்திப்போம்'' என்றேன்.

மாலையில் குறிப்பிட்ட நேரத்திற்கு வந்தார் டாக்டர் ராமசாமி.

''முதலில் வீட்டுக்குப் போகலாமா?'' என்று கேட்டார்.

''இல்லை, இங்கு இண்டியன் பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டி இருக்கிறதாமே, அங்கே அழைத்துச் செல்லுங்கள்'' என்றேன்.

''நான் அதன் துணைத் தலைவர்... வாருங்கள் போவோம்...'' என்றார்.

அவர் காரில் புறப்பட்டோம். டிரைவிங் 'ஸீட்'டின் அருகே நிறைய 'டேப்'கள் காணப்பட்டன. வண்டி புறப்பட்டவுடன், ஒரு 'டேப்'பைப் போட்டார். பாலசந்தரின் வீணை இசை எழுந்தது.

''எனக்கு வீணை ரொம்பப் பிடிக்கும். பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டிக்காக வந்த ஓர் அம்மையாரிடம் வீணை சிட்சை பெற்றுக் கொண்டேன். அந்த அம்மாள், மீண்டும் தமிழ் நாட்டுக்குப் போய் விட்டார்கள்'' என்றார்.

பேசிக் கொண்டே, இண்டியன் பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியை அடைந்தோம். அங்கே, இசைப் பயிற்சியும், நாட்டியப் பயிற்சியும் நடந்து கொண்டிருந்தன. ஏதோ, மயிலாப்பூரில் உள்ள ஒரு சங்கீத வித்யாலயத்திற்குள் நுழைந்துவிட்ட உணர்வுதான் எனக்கு ஏற்பட்டது.

''சிங்கப்பூர் மக்கள் உரம் வாய்ந்தவர்களாக இருக்க வேண்டும்; உழைப்பாளிகளாக இருக்க வேண்டும். அதே சமயம் கலை உணர்ச்சியும் அவர்களிடம் இருக்க வேண்டும் என்று அரசாங்கம் விரும்புகிறது'' என்று நண்பர் சாலி, அன்று காலை என்னிடம் சொல்லியிருந்தார். அதற்கு விளக்கமாக அந்தக் கலைக்கூடம் அப்போது திகழ்ந்து கொண்டிருந்தது.

கலைஞர்களைச் சந்தித்துப் பேசிய பிறகு, ''சிங்கப்பூரைச் சுற்றிக் காட்டவா?'' என்று கேட்டார் டாக்டர் ராமசாமி.

''ஊரைப் பார்ப்பதில் ஒன்றுமில்லை. ஊர் மக்களின் தன்மையைக் காட்டுங்கள். இங்குள்ள தமிழர்கள் எப்படி வாழ்கிறார்கள் என்பதைக் காட்டுங்கள்......'' என்றேன்.

''இங்கு இரண்டுவிதமான தமிழர்கள் வாழ்கிறார்கள். இந்தியப் பிரஜையாகவே இருந்து கொண்டு, மனைவி மக்களை இந்தியாவில் வைத்துக் கொண்டு, இங்கு வியாபாரம் நடத்திப் பொருள் சேர்த்துக் கொண்டு, இரண்டாண்டுக்கு ஒருமுறை தாயகம் திரும்பி, ஆறு மாதங்களை அங்கு கழித்துவிட்டு, மீண்டும் வந்து தொழில் செய்பவர்கள் ஒரு ரகம். இன்னொரு ரகம், இந்த மண்ணையே நம்பிக் கொண்டு வாழ்பவர்கள். இதில் எந்த ரகத்தைப் பார்க்க வேண்டும்?'' என்று கேட்டார்.

''இந்த மண்ணையே எல்லாமாகக் கொண்டுள்ள ஒரு ரகத்தைக் காட்டுங்களேன்...'' என்றேன்.

''அப்படியானால் என் வீட்டிற்கு வாருங்கள்...'' என்று கூறி, என்னை அவர் வீட்டிற்கு அழைத்துச் சென்றார்.

டாக்டர் ராமசாமி வசித்து வந்த பிளாரிடா தெரு, சென்னை அடையாறு போன்ற ஓர் அமைதியான பகுதியில் இருந்தது. அங்கே அவர் சொந்தமாக வீடு கட்டிக் கொண்டு வாழ்கிறார்.

''வாங்க, வாங்க...'' என்று, சரோஜினி ராமசாமி முகமலர்ச்சியுடன் என்னை வரவேற்றார்.

''என் மனைவிக்குப் பத்திரிகைக்காரர்கள் என்றால் ரொம்பவும் பிடிக்கும்! 'தமிழ் மலர்' என்ற ஒரு பத்திரிகையை நாங்கள் கொஞ்ச காலம் நடத்தினோம்... அதில் என் மனைவி மிகவும் ஈடுபாடு கொண்டிருந்தாள். நிறைய நஷ்டம் ஏற்பட்டதால், நான் அதிலிருந்து விடுபட்டு விட்டேன்...''—பேசிக் கொண்டே போன கணவரைத் தடுத்து நிறுத்திய அம்மையார், ''என் புகழ் போதுங்க...'' என்றார்.

அந்த வீட்டைச் சுற்றிப் பார்த்தேன். அழகிய வரவேற்பறை. ஒருபுறம் டெலிவிஷன் ஸெட்! அந்த டெலிவிஷனுக்கு முன்னால் ஒரு பட்டுப்பாய் விரிக்கப்பட்டிருந்தது.

''எதற்காக இந்தப் பாய்?'' என்று கேட்டேன்.

''கொஞ்சம் பொறுங்கள், புரியும்'' என்றார் டாக்டர்.

ஐந்து நிமிஷத்திற்குள், டெலிவிஷனில் ஏதோ ஓர் ஆங்கிலப் படம் ஆரம்பமாயிற்று. டாக்டரின் மூன்று குழந்தைகளும், அந்தப் பாயில் மல்லாந்து படுத்துக் கொண்டார்கள். விரல் நகங்களைச் சுவைத்தபடியே, அந்த நிகழ்ச்சியில் அவர்கள் ஒன்றிப்போன விதம் என்னை மிகவும் கவர்ந்தது.

''இந்த ஊரில் எல்லா வீடுகளிலும் இப்படி ஒரு காட்சியைக் காணலாம். 'த்ரில்'லர் நிகழ்ச்சிகளைக் குழந்தைகள் மிகவும் விரும்புகிறார்கள். சில சமயம் நல்ல தமிழ் நிகழ்ச்சிகளும், இங்கிலீஷ் நாடகங்களும் சேர்ந்தாற் போல் வந்துவிடும்...அப்போதுதான் கஷ்டம். ஆனால் நாங்கள் அதற்கும் ஒரு வழி செய்து விட்டோம்'' என்று கூறி, டைனிங் டேபிள் அருகில் இருந்த ஒரு குட்டி டெலிவிஷனைக் காட்டினார். ஆமாம்! சின்னஞ்சிறு ரேடியோ பெட்டி அளவில் ஒரு டெலிவிஷனும் அவர் வைத்திருந்தார்.

எனக்கென்று அருமையான தோசை தயார் செய்திருந்தார் திருமதி ராமசாமி.

''இது ப்ளெண்டரில் அரைந்த மாவு. கல்லில் அரைத்தது போலவே இருக்கிறது பார்த்தீர்களா? இந்தியாவில் இன்னும் ஆட்டுக் கல்லைக் கட்டிக் கொண்டு அழுகிறார்கள். ஊருக்குப் போகும்போது கண்டிப்பாக ஒரு ப்ளெண்டர் வாங்கிக் கொண்டு போங்கள்...'' என்றார் திருமதி ராமசாமி.

சாப்பிட்ட பிறகு அவர்கள் வீட்டுச் சமையல் அறையைச் சுற்றிக் காட்டினார். ''இதுதான் சிங்கப்பூரில் ஒரு பெரிய சௌகரியம். எல்லா 'குக்கிங்காட்ஜெட்'டுகளும் கிடைக்கும். இதோ பார்த்தீர்களா, இந்தப் பாத்திரத்தில் சூடாக சமையல் செய்து வைத்துவிட்டால் மணிக்கணக்கில் சூடாக இருக்கும்...புதிதாக வந்துள்ள இது... 'காட்ஜெட்''' என்று ஒரு பாத்திரத்தைக் காட்டினார்.

அதை யெல்லாம் பார்த்தபோது, 'நல்லவேளை, லலிதாவை இங்கு அழைத்து வராமல் போனேமே' என்று நினைத்துக் கொண்டேன். அவள் அதை யெல்லாம் பார்த்து, அவை வேண்டும் என்று கேட்டு, நானும் ஒரு 'வீக் மூமெண்ட்'டில் வாங்கிவிட்டால், சென்னை கஸ்டம்ஸுக்கு யார் பதில் சொல்வது?

ஹாலில் அமர்ந்து கொண்டோம். டாக்டர் அவர் சகோதரியை அறிமுகப்படுத்தி வைத்தார்.

''என்னம்மா, சிங்கப்பூர் வாழ்க்கை பிடித்திருக்கிறதா?'' என்று திருமதி ராமசாமியைக் கேட்டேன்.

''எங்களுக்கு ரொம்பவும் பிடித்திருக்கிறது. கொஞ்ச நாள் இருந்து விட்டுத் திரும்பிப் போக வேண்டும் என்று நினைத்துத்தான் முதலில் வந்தோம். ஆனால் இப்போது அந்த எண்ணம் இல்லை. இந்த 'மண்' எங்களுக்கு மிகவும் பிடித்து விட்டது. வீட்டிற்குள் வந்து விட்டால், தமிழ் நாட்டில்தானே இருக்கிறோம். நம் வீட்டுக்குள் அந்தச் 'சூழ்நிலை'யை உருவாக்கிக் கொள்கிறோம்.

''குழந்தைகளுக்கு நல்ல கல்வி கிடைக்கிறது இங்கே. அட்மிஷனுக்கும், வேலைக்கும் தமிழ் நாட்டில் படுவது போல் அல்லல்பட வேண்டாம். சிபாரிசு கிடையாது, லஞ்சம் கிடையாது. எல்லாம் 'மெரிட்'படி நடக்கிறது. என்னைக் கேட்டால், எல்லாத் தமிழர்களும் இப்படித்தான் ஒன்றிப் போய் வாழ வேண்டும் என்பேன். 'இங்கொரு கால், அங்கொரு கால்' என்பது சரியல்ல. வெறும் பணம் சம்பாதிக்கும் இடமாக இதை நினைத்துக் கொள்ளக்கூடாது என்பது என் கருத்து...'' என்றார்.

''உங்கள் கருத்தை ஒப்புக் கொள்கிறேன். ஆனால், நான் வேறு சிலரிடம் பேசிக் கொண்டிருந்தபோது, அவர்கள் சில கருத்துக்களைத் தெரிவித்தார்கள். தண்ணீர் கூட இல்லாத ஊராம் சிங்கப்பூர். குடி தண்ணீருக்குக் கூட, மலேசியாவை நம்பி இருக்க வேண்டிய நிலையாம். தவிர, ஒரு குறிப்பிட்ட வயது வந்தவுடன் பிள்ளைகளுக்குக் கட்டாய மிலிட்டரி ட்ரெயினிங் உண்டாம். இப்படிப் பல சிக்கல்கள் இருப்பதால் தான், தாய் நாட்டிற்குப் போக விரும்புகிறோம் என்றார்கள் சிலர்.''—

தயங்கித் தயங்கி நான் சிலரிடம் கேட்டறிந்த விஷயத்தை வெளியிட்டேன்.

டாக்டர் ராமசாமி குறுக்கிட்டார்:

''இதெல்லாம் சின்ன விஷயங்கள் சார். எல்லாம் அவரவர்கள் மனநிலையைப் பொறுத்தது. என்னைக் கேட்டால் ஒன்று சொல்வேன்: எந்த நாட்டில் வாழ்வதாக இருப்பினும், அந்த மண்ணுக்கு நன்றியுடன் வாழ வேண்டும். அந்த 'மண்'ணின் மூலம் சாப்பிடும்போது, அந்த 'மண்'ணின் வளத்திற்கும் பாடுபட வேண்டும்...'' என்றார்.

அதற்கு மேல் அதைப் பற்றிப் பேச விரும்பவில்லை என்பது அவர் குரலில் தெரிந்தது. எனவே, பேச்சை மாற்றினேன்:

''உங்கள் ஊரில் நடைபெறும் கலைத் தொண்டைப் பற்றிச் சொல் லுங்கள்... நடனம், சங்கீதம் கற்றுக் கொள்ள உங்கள் குழந்தைகளைத் தமிழ் நாட்டுக்கு அனுப்புகிறீர்களா?'' என்று திருமதி ராமசாமியைக் கேட்டேன்.

''சிங்கப்பூரிலேயே நிறைய வசதி இருக்கும்போது தமிழ் நாட்டிற்கு ஏன் அனுப்ப வேண்டும்? பல கலைஞர்களை வரவழைத்து, நாங்கள் இங்குள்ள தமிழ்க் குழந்தைகளுக்கு நடனம், வீணை, வாய்ப்பாட்டு எல்லாம் சொல்லிக் கொடுக்கிறோம். இங்கேயே சில கலைஞர்கள் நடனம் கற்றுக் கொடுக்கிறார்கள். இசை, நாட்டியம் கற்றுத் தருவதற்கென்றே சங்கங்கள் இருக்கின்றன'' என்றார்.

''இப்போதுதான் பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டிக்கு இவரை அழைத் துப் போயிருந்தேன்...'' என்றார் ராமசாமி.

எங்கள் பேச்சு, தமிழ் நாட்டுப் பத்திரிகைகளைப் பற்றியும், சினிமாக் களைப் பற்றியும் திரும்பியது.

திருமதி சரோஜினி, மொத்தமாக தமிழ்ப் பத்திரிகைகளைக் குறை கூறினார்: ''சினிமா, சினிமா என்று ஏன்தான் இந்தப் பத்திரிகைகளும் சினிமாவைக் கட்டிக் கொண்டு அழுகின்றனவோ, தெரியவில்லை. சங்கராசாரிய ஸ்வாமிகளின் வேண்டுகோளைக் கூட, சினிமா நடிகை மூலம் வெளியிட ஆரம்பித்து விட்டார்கள். உள்ளவற்றில் உங்கள் பத்திரிகை ஒன்றுதான் தேவலை. நீங்களும் சில சமயம் ரொம்பவும் அசடு வழிகிறீர்கள்! தமிழ் நாட்டிலிருந்து தள்ளி இருக்கும் எங்களுக்கு, தமிழ்ப் பத்திரிகை களைப் பார்க்கும்போது, தமிழ் நாட்டில் சினிமா விஷயங்களைத் தவிர வேறொன்றுமே நடப்பதில்லையோ என்று எண்ணத் தோன்றுகிறது... அப்புறம் இந்தச் சிறு கதைகள் விஷயம்! அதற்கு ஓவியர்கள் படம் போடும் அபத்தம்...'' என்று ஆரம்பித்து, அலசித் தீர்த்து விட்டார்.

திருமதி சரோஜினியின் பேச்சு என்னை வெகுவாகக் கவர்ந்தது. 'வீட்டிற்கு விருந்தாளியாக அழைத்து விட்டோமே, இப்படி யெல்லாம் பேசலாமா?' என்று தயங்காமல், மனத்தில் பட்டதை மறைக்காமல் பேசிய அவரை, நான் மனதாரப் பாராட்டினேன்.

# 22

சிங்கப்பூர்—மலேசியா இணைப்புப் பாலம்

''நான் இங்கே சில காலமாகக் கலைப் பணி ஆற்றி வருகிறேன். என் பெயரிலேயே ஒரு அகாடமியையும், பரத நாட்டியக் கழகம் என்ற பெயரில் ஒரு கலை நிறுவனத்தையும் நடத்தி வருகிறேன். என் வீட்டிலேயும் வகுப்புக்கள் நடக்கின்றன. எனக்குத் துணையாக என் மனைவி இருக்கிறாள்......'' என்று தம்மைப் பற்றிக் கூறிக் கொண்டே, காரை அவர் வீட்டை நோக்கி ஓட்டிக் கொண்டிருந்தார் பரதக் கலைஞர் பாஸ்கர்.

'சிங்கப்பூரில் பரத நாட்டியக் கலையைப் பரப்பிவரும் கலைஞர்களுள் பாஸ்கர் குறிப்பிடத் தக்கவர். இவர் பணியை நீங்கள் நேரில் சென்று பார்க்க வேண்டும்' என்று நண்பர்கள் சொல்லி இருந்தார்கள். பாஸ்கர் அவர்களும் என்னை அவர் வீட்டுக்கு வரும்படி அழைத்திருந்தார். எனவே, போட்டோகிராபர் சுந்தரத்துடன் அவர் வீட்டுக்குப் புறப்பட்டேன்.

''தமிழர்கள் தவிர சீனக் குழந்தைகளும், மலாய்க் குழந்தைகளும் பரத நாட்டியம் கற்றுக் கொள்கிறார்களா?'' என்று கேட்டேன் பாஸ்கரை.



''வெகு குறைவுதான். சில இந்தியர்கள் சீனக் குழந்தைகளைத் 'தத்து' எடுத்து வளர்க்கிறார்கள். அந்தக் குழந்தைகள் பரத நாட்டியம் பயில்கின்றன...'' என்றார் அவர்.

எங்கள் கார், பாஸ்கரின் வீட்டை அடைந்தது. அவர் மனைவி எங்களை வரவேற்றார்.

''இந்த ஹாலில்தான் பயிற்சி நடக்கும். சிங்கப்பூர் தவிர, 'ஜோஹூர்பாரு'விலும் நான் சில வகுப்புக்கள் நடத்துகிறேன். இன்று ஜோஹூரில் ஒரு கலை விழா இருக்கிறது. நீங்கள் வந்து பாருங்களேன்...'' என்றார்.

நான் சுந்தரத்தைப் பார்த்தேன்.

''போக வேண்டியதுதான். எல்லாவற்றையும் பார்க்கத்தானே நாம் புறப்பட்டிருக்கிறோம்...'' என்றார் சுந்தரம்.

''ஜோஹூர்பாரு எவ்வளவு தூரம் இருக்கிறது?'' என்று கேட்டேன்.

''பக்கத்தில்தான். பதினைந்து மைல்கள் இருக்கும்...''

''அவ்வளவுதானா? அப்போது தயார்...''

''உங்கள் 'பாஸ்போர்ட்'டைக் கையோடு வைத்திருக்கிறீர்களா?'' என்று ஒரு கேள்வியைத் தூக்கிப் போட்டார் பாஸ்கர்.

''இருக்கிறது. எதற்காகக் கேட்கிறீர்கள்?''

''ஜோஹூர், மலேசியாவைச் சேர்ந்தது. அங்கு போக பாஸ்போர்ட் வேண்டும்...''

இதைக் கேட்டுக் கொஞ்சம் வியப்படைந்தேன் நான்.

பதினைந்து மைலுக்குள் இருக்கும் ஓர் ஊருக்குப் போக பாஸ்போர்ட் வேண்டுமென்றால்...... அதாவது சென்னையிலிருந்து தாம்பரம் போவதற்கு பாஸ்போர்ட் தேவைப்பட்டால் எப்படியோ அப்படி!

சிங்கப்பூரின் கலை நிலையைப் பற்றி விமரிசித்துக் கொண்டே, காரை 'ஸ்டார்ட்' செய்தார் பாஸ்கர். அழகான—சுத்தமான—அகலமான—நீண்ட சாலையில் வண்டி போய்க் கொண்டிருந்தது. அந்தச் சாலையில் கண்மூடித்தனமான வேகத்தில் சில கார்கள் பறந்து கொண்டிருந்தன.

''அப்பப்பா... என்ன வேகம்...'' என்றேன் நான், ஒரு கார் வேகமாக எங்களைக் கடந்தபோது.

''சில இளைஞர்கள் இப்படித்தான் கண்மூடித்தனமான வேகத்தில் போகிறார்கள். தினம் பேப்பரை எடுத்தால் விபத்துதான்...'' என்றார் பாஸ்கர்.

சிறிது நேரம் மௌனமாகச் சென்றோம். பாஸ்கர் பேச்சைத் தொடர்ந்தார்:

''இந்த ஊரில் நிறைய யாழ்ப்பாணத் தமிழர்கள் இருக்கிறார்கள். அவர்கள் கலைக்கு மிகச் சிறந்த சேவை செய்கிறார்கள். இங்கு கலாசார அமைச்சகம் சிறந்த பணியாற்றுகிறது. யாழ்ப்பாணத் தமிழர்களால் தமிழும், நடனமும் நன்கு செழிக்கின்றன. அவர்களில் யாரும் கூலி வேலை செய்வதில்லை. அநேகமாக எல்லாரும் படித்தவர்கள்தான்...''

''மிஸ்டர் பாஸ்கர், நேற்று டெலிவிஷனில் நான் சில நடன நிகழ்ச்சிகளைக் கண்டேன். சினிமாப் பாட்டுக்களுக்கு ஏற்ப சிலர் நடனமாடினார்கள். பரத நாட்டியத்தைப் பார்க்க முடியவில்லை. இங்கு இருப்பவர்கள் நடனம் கற்றுக் கொள்வதே, டெலிவிஷனுக்காகத்தானோ என்று எண்ணத் தோன்றியது... நான் இப்படிச் சொல்வது தவறாயிருந்தால் என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்...'' என்றேன்.

பாஸ்கர் இதற்குப் பதில் சொல்லவில்லை; சிரித்துக் கொண்டார்.

இதற்குள் எங்கள் கார், ஒரு பெரிய பாலத்தின்மீது சென்றது.

''அதோ தெரிகிறதே, அதுதான் ஜோஹூர்'' என்றார் பாஸ்கர்.

பாலத்தைத் தாண்டியதும், கார்கள் நிறுத்தப்பட்டு விட்டன.

சாலையின் குறுக்கே 'பெட்டி'யைப் போன்ற 'காபின்'களில், சுங்க அதிகாரிகளும், போலீஸ்காரர்களும் இருந்தனர். ஒவ்வொரு காரும் நிறுத்தப்பட்டது. 'பாஸ்போர்ட்'டை வாங்கிப் பார்த்தார்கள். காரின் 'டிக்கி'யைத் திறந்து சோதனை போட்டார்கள். ஆட்களை ஏற இறங்கப் பார்த்தார்கள். பிறகு, பாஸ்போர்ட்டில் முத்திரை வைத்து, வழி அனுப்பினார்கள்.

''சிங்கப்பூரைவிட மலேசியாவில் கொஞ்சம் கஸ்டம்ஸ் கெடுபிடி அதிகமோ?'' என்று கேட்டேன் பாஸ்கரை.

''கொஞ்சம் அதிகம்தான். பொருளாதாரத்துறையில் சிங்கப்பூர் அளவுக்கு வளர்ச்சி அடைய வேண்டும் என்ற ஆர்வத்தினால், சில கட்டுப்பாடுகள் வைத்திருக்கிறார்கள்...'' என்றார்.

கார், ஜோஹூர் நகரச் சாலையில் சென்று கொண்டிருந்தது.

''அதோ தெரிகிறதே, அதுதான் ஜோஹூர் சுல்தானின் அரண்மனை'' என்று ஒரு கட்டடத்தைக் காட்டினார் பாஸ்கர்.

''சிங்கப்பூருக்கும் இதற்கும் நிறைய வித்தியாசம் தெரிகிறது, இல்லையா சார்?'' என்றார் சுந்தரம்.

அவர் சொன்னது உண்மை! சிங்கப்பூர் எல்லையை விட்டுப் பத்தடி தாண்டியதுமே, ஒரு புது நாட்டில் இருக்கிற உணர்வு எனக்கு ஏற்பட்டது.

எங்கள் கார் ஒரு சிறிய கோவிலை ஒட்டிய காம்பவுண்டுக்குள் நுழைந்தது.

''இது ஒரு மாரியம்மன் கோவில். சிங்கப்பூர் கோவிந்தசாமி பிள்ளையின் உபயம். இந்தக் கோவிலை ஒட்டிய மண்டபத்தில்தான் இன்றைய கலை நிகழ்ச்சி நடைபெறப் போகிறது. வாருங்கள், உள்ளே போவோம்'' என்றார் பாஸ்கர்.

செருப்பைக் கழற்றி வைத்துவிட்டு அந்த மண்டபத்திற்குள் நுழைந்தோம். நாங்கள் சற்று முன்னதாக வந்து விட்டோம் போலும்! கூட்டம் அதிகமாக இல்லை. ஆனால், சின்னச் சின்னக் குழந்தைகள் 'மேக்கப்' போட்டுக் கொண்டு இப்படியும் அப்படியும் அலைந்து கொண்டிருந்தன.

''நிகழ்ச்சி ஆரம்பமாக நேரமாகும் போல் இருக்கிறதே, அதற்குள் ஊரைச் சுற்றிப் பார்த்துவிட்டு வருவோமே'' என்றார் சுந்தரம்.

''அதுவும் நல்ல ஐடியாதான்...'' என்றேன் நான்.

''என்னுடன் வாருங்கள். ஏதாவது கொஞ்சம் ஆகாரம் சாப்பிட்டு விட்டு, உங்களை ஊரைச் சுற்றிக் காட்ட ஒரு நண்பரையும் பிடிக்கிறேன்'' என்றார் பாஸ்கர்.

திருமதி பாஸ்கரை மட்டும் மண்டபத்தில் விட்டுவிட்டு, நாங்கள் மீண்டும் புறப்பட்டு, கேரளத்தைச் சேர்ந்த ஒருவர் நடத்தும் ஓட்டலுக்குச் சென்றோம். இதற்குள் பாஸ்கர் ஒரு நண்பரைப் பிடித்து விட்டார்.

''இவர்தான் மிஸ்டர் விஜயன். டிராக்டர்கள் சம்பந்தப்பட்ட என்ஜினீயர். சிங்கப்பூரில்தான் வேலை. ஆனால், இங்கே வசிக்கிறார்......'' என்று ஓர் இளைஞரை எங்களுக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். சிரித்த முகத்துடன் கூடிய ஓர் இளைஞர் எங்களைப் பார்த்து ''ஹலோ'' என்றார்.

''மிஸ்டர் விஜயன், இவர்களைக் கொஞ்சம் ஊரைச் சுற்றிக் காட்டி விட்டு மண்டபத்திற்கு அழைத்து வந்துவிடுங்கள். ப்ளீஸ்'' என்றார் பாஸ்கர்.

''ஓகே'' என்று ஒப்புதல் அளித்த விஜயன், தன்னுடைய காரின் கதவைத் திறந்து என்னை ஏறிக் கொள்ளச் சொன்னார். சுந்தரமும் நானும் ஏறிக் கொண்டோம். வெகு வேகமாகக் கிளம்பியது கார்.

''கொஞ்சம் மெதுவாக...'' என்றேன் நான்.

''டோன்ட் ஒர்ரி...'' என்று சிரித்த அவர், ''எங்கே போகலாம்?'' என்று கேட்டார்.

''சும்மா ஊரைக் காட்டுங்களேன்'' என்றேன்.

''என்ன பெரிய ஊர்...? கல்தான் மாளிகை, கடைவீதி அவ்வளவு தான்'' என்றவர், ''டான்ஸ் பார்க்க வந்தீர்களா?'' என்றார்.

''ஆமாம், நீங்களும் பார்க்கிறீர்கள் அல்லவா?''

''ஊம்ம்ம்...'' என்று இழுத்தவர், ''இதில் எனக்கு அதிக இன்ட்ரஸ்ட் கிடையாது. நானும் தமிழ் நாட்டைச் சேர்ந்தவன்தான். இருந்தாலும் மலேசியாவிலே அதிக நாள் தங்கி விட்டதால், பரத நாட்டியம் போன்ற டான்ஸ்களில் ஆர்வம் அதிகம் இல்லை'' என்றார்.

''அப்படியானால் வேறு டான்ஸ்களில் ஆர்வம் உண்டோ?''

''ஊம்... சில 'நைட் கிளப்'புகளுக்குப் போவேன்...''

''இங்கே 'அது' எப்படி இருக்கிறது என்று பார்ப்போமே......'' என்றேன் சுந்தரத்திடம்.

இந்த மறைமுக வேண்டுகோளைப் புரிந்து கொண்ட விஜயன், என்னைப் பார்த்துச் சிரித்தார். பிறகு கடிகாரத்தைப் பார்த்து விட்டு ''இன்னும் ஏழரை மணிகூட ஆகவில்லை. இந்த இரவு நடனங்களெல்லாம் ஆரம்பிக்கவே ஒன்பதாகும். இருந்தாலும் போய்ப் பார்க்கலாம்...'' என்று கூறி, காரை வேகமாக ஓட்டினர்.

''மெதுவாக...'' என்றேன் நான் மீண்டும்.

''பயப்படாதீர்கள்'' என்று கூறி, அதே வேகத்தில் ஓட்டினர் விஜயன்.

கார், ஒரு மேட்டுப்பாங்கான இடத்திற்குச் சென்றது. 'மூன்ருவது கியரில்' வண்டி முக்கி முக்கி மேலே ஏறியது.

மர்மக் கதைகளில் வருவது போன்ற இருண்ட, மரங்கள் அடர்ந்த ஓர் இடம். 'மினுக் மினுக்'கென்று விளக்கொளி. மரங்களின் அடியில் நிறைய கார்கள். கையில் ஒரு விளக்குடன் ஓர் உருவம் எங்களை நெருங்கியது. விஜயனைப் பார்த்ததும் ''ஹலோ'' என்று கூறியது.

விஜயன் காரைவிட்டு இறங்கினர். . நாங்கள் அவரைப் பின் தொடர்ந்தோம்.

மரங்களின் பின்னணியில் இருந்த அந்தச் சிறிய பங்களாவை நெருங்கி, முன் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தார் விஜயன்.. அங்கே ஒரு சிறிய 'பார்' இருந்தது. அதைக் கடந்து உள்ளே சென்ருேம். மிக மங்கிய விளக்கொளி.

அது பெரிய ஹால். ஒருபுறம் மேஜை நாற்காலிகள், வாத்தியக் கருவிகள், நடனமாட தளம் எல்லாம் இருந்தன. இன்னெருபுறம், நிறைய நாற்காலிகள். அந்த நாற்காலிகளில் நிறைய இளம் பெண்கள்.

நாங்கள் மூவரும் ஒரு மேஜை அருகே அமர்ந்து கொண்டோம். வயதான ஒரு பெண்மணி எங்களை நெருங்கினள். விஜயனிடம் மலாய் மொழியில் ஏதோ பேசினள். அடுத்த நிமிஷம் ''ஹலோ'' என்று கூறியபடி ஒரு பெண்மணி எங்களிடம் வந்தாள்.

வந்தவள் என்னை ஒட்டி இடித்தாற்போல் அமர்ந்து கொண்டு, அரைகுறை ஆங்கிலத்தில் ஏதோ பேசினள். இதற்குள் நான்கு கோப்பைகளில் மது வந்து சேர்ந்தது.

''நாங்கள் மது அருந்துவதில்லை...'' என்ருேம்.

''சரி, கோகோ கோலா சாப்பிடுங்கள். ஆனல் இங்கு இரண்டிற்கும் ஒரே விலைதான்...'' என்ருர் விஜயன்.

நான் அந்தப் பெண்ணையே உற்றுப் பார்த்தேன். அவள் என்னைப் பார்த்துச் சிரித்தாள். அந்தச் சிரிப்பு நன்ருக இல்லை. 'ஒரு மாதிரி' இருந்தது.

விஜயன் அவளிடம் மலாய் மொழியில் ஏதோ சொன்னர். ''ஓ...'' என்று கூறி, என்னைப் பார்த்து மீண்டும் சிரித்தாள் அவள். இந்த முறை அவள் 'ஈறு' தெரிந்தது.

நான் சுற்றுமுற்றும் பார்த்தேன். நிறைய இளைஞர்கள், யுவதிகளுடன் நெருங்கி உரசி அமர்ந்து உலகை மறந்து கொண்டிருந்தார்கள். என் பார்வை போகும் போக்கைப் பார்த்த விஜயன், ''என்ன, வேறு ஏதாவது பெண் வேண்டுமா?'' என்று கேட்டார்.

''அப்படியென்றால்......'' என்றேன் புரியாமல்.

''இந்த 'கிளப்'பில் அது ஒரு சிறப்பு. இப்படி வெளிநாடுகளில் நிறைய 'கிளப்'புகள் நீங்கள் பார்த்திருக்கலாம். இங்கு நிறையப் பெண்கள் இருப்பார்கள். அவர்களில் யாரை வேண்டுமானாலும் நீங்கள் உங்கள் 'பார்ட்'னராக எடுத்துக் கொள்ளலாம். அவர் உங்களுடன் அமர்ந்து கொண்டு பேசுவார், மது அருந்துவார், நடனம் ஆடுவார். ஷி வில் கீப் கம்பெனி வித் யூ... அவ்வளவுதான்...'' என்றார்.

''அவ்வளவுதானா?'' என்று கேட்டேன்.

என்னை ஒரு மாதிரியாகப் பார்த்த விஜயன், ''எனக்குத் தெரிந்து அவ்வளவுதான்...'' என்றார்.

நான் அந்தப் பெண் பக்கம் திரும்பினேன். தமிழில் நாங்கள் பேசிக் கொள்வது புரியாமல் அசட்டுச் சிரிப்பு சிரித்துக் கொண்டிருந்தாள் அவள். நான் அந்தப் பெண்ணிடம் பேச்சுக் கொடுத்து சில விஷயங்களைத் தெரிந்து கொள்ள விரும்பினேன்.

''என்ன சார் இது... பரத நாட்டியம் பார்க்கப் புறப்பட்டுவிட்டு, இந்த நாட்டியத்திற்கு வந்து விட்டோமே'' என்றார் சுந்தரம்.

''எல்லாம் அனுபவங்கள்தானே! இப்படி எல்லாவற்றையும் பார்த்தால் தான் ஒரு நாட்டைப் புரிந்து கொள்ள முடியும்'' என்றேன் நான்.

இதற்குள் விஜயன், அந்தப் பெண்ணை அழைத்துக் கொண்டு, நடனம் ஆடப் புறப்பட்டார்.

# 23

''என் பெயர் என்னவாக இருந்தால் என்ன? நான் ஒரு பெண். இங்கு வரும் இளைஞர்களுக்கு 'கம்பெனி' கொடுக்கும் பெண். இதற்காக எனக்குத் தினம் சம்பளம் கொடுக்கிறார்கள். மற்ற தொழில்களைப் போன்றதுதான் இதுவும். இதில் நீங்கள் நினைப்பது போல் எதுவும் இல்லை. என்னைப் பேட்டி கண்டால், எதுவும் சுவாரஸ்யமாக எழுதிவிட முடியாது. காரணம், சுவாரஸ்யமான விஷயங்களை யெல்லாம் என்னால் சொல்ல முடியாது...''— ஜோஹூர் நைட் கிளப்பில் நான் சந்தித்த பெண் என்னிடம் இப்படிக் கூறினாள்.

விஜயனுடன் நடனமாடிவிட்டு வந்து அமர்ந்த அவளிடம், மெல்லப் பேச்சுக் கொடுத்தேன் நான். என்னை ஒரு பத்திரிகைக்காரன் என்று விஜயன் அறிமுகப்படுத்தியதன் விளைவு, அவள் வாய் கட்டுப்பட்டுவிட்டது. இருந்தாலும் நான் விடவில்லை.

''உங்கள் வீட்டில் உள்ள பெரியவர்களுக்கெல்லாம் நீ இப்படி வேலை செய்வது தெரியுமா?'' என்று கேட்டேன்.



''எனக்கு யாரும் கிடையாது. அதனால் யாருக்கும் தெரியாது. இங்குள்ள பெண்களில் பல ரகம் உண்டு. பெரியவர்களுக்குத் தெரிந்து வருபவர்கள், தெரியாமல் வருபவர்கள், துணிந்து வருபவர்கள்...அநேகமாக வாழ்க்கைக்காகத்தான் பெரும்பாலோர் வருகின்றனர். உலகில் நாம் எல்லாரும் வாழ்வதே, சந்தோஷமாக இருக்க வேண்டும் என்பதற்காகத்தானே! என்னால் இன்னொருவரைச் சந்தோஷப்படுத்த முடியும் என்றால், அதைவிடப் பெரிய பணி வேறொன்றும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. எனக்கு எந்தவிதத் தீங்குமின்றி, மற்றவர்களைச் சிறிது நேரம் சந்தோஷப்படுத்துகிறேன், அவ்வளவுதான்...'' என்றாள்.

''இந்த மாதிரி 'கிளப்'புகளில் நீ பணியாற்றுவதால், உன்னுடைய வருங்காலம் பாதிக்கப்படாதா? உன் திருமணத்திற்கு ஏதாவது தடங்கல் வராதா?'' என்று கேட்டேன்.

''சில சமயம் இந்த வேலை, எங்கள் திருமணத்திற்கு உதவுகிறது என்றே சொல்வேன். எங்களிடம் பல சிறப்புகளைப் பார்த்த சில இளைஞர்கள், எங்களை மணக்கவே முன்வருகிறார்கள்'' என்றவள், ''நீங்கள் மலேசியாவைப் பற்றி உங்கள் பத்திரிகையில் எழுதப் போகிறீர்களா?'' என்று கேட்டாள்.

''ஆமாம்......'' என்றேன்.

''மலேசியாவில் எழுதுவதற்கு எவ்வளவோ விஷயங்கள் இருக்கின்றன. அவற்றை விட்டுவிட்டு என்னைப் பற்றி எழுதுவானேன்? நான், இந்த 'நைட் கிளப்' இதெல்லாம் சாதாரண விஷயங்கள். எங்கள் நாட்டு சுல்தான்களைப் பற்றி எழுதுங்கள், எங்கள் 'ரப்பர் பிளான்டேஷன்'களைப் பற்றி எழுதுங்கள். எங்கள் 'மலாய்' இனத்தைப் பற்றி எழுதுங்கள். எங்கள் இனத்தாரின் முன்னேற்றத்துக்காகப் பாடுபடும் சங்கமான 'மாரா' (Mara) வைப் பற்றி எழுதுங்கள். எங்களைப் பற்றி எழுதி, 'ஏதோ மலேசியாவில் 'நைட் கிளப்'புகள் மட்டும்தான் இருக்கின்றன என்ற எண்ணத்தை ஏற்படுத்தி விடாதீர்கள்......'' என்றாள்.

அவளுடைய சாமர்த்தியமான பேச்சு என்னை வெகுவாகக் கவர்ந்தது. அவளையே உற்றுப் பார்த்தேன்.

''வாருங்கள், நடனம் ஆடலாம்......'' என்று என்னை அழைத்தாள்.

''இல்லை, எனக்கு இந்த நடனம் தெரியாது...'' என்றேன்.

''பிறக்கும்போதேவா நாம் எல்லாவற்றையும் தெரிந்து கொண்டு வந்து விடுகிறோம்! நான் கற்றுக் கொடுக்கிறேன், வாருங்கள்...'' என்றாள்.

''மன்னிக்க வேண்டும்...'' என்று கூறிவிட்டு, சுந்தரத்தைப் பார்த்து ''என்ன, போவோமா?'' என்றேன்.

''நான் எப்போதோ தயார்......'' என்றார் அவர்.

''எங்கள் மாஜிப் பிரதமர் துங்கு அப்துல் ரஹ்மானைப் பற்றி மறக்காமல் எழுதுங்கள்... அவரால் மலாய் இனம் மிகவும் முன்னேறி இருக்கிறது......'' என்றாள் அவள், எனக்கு விடை கொடுக்கும்போது!

''நிச்சயம் எழுதுகிறேன்...'' என்று கூறி, அவளிடமிருந்து விடை பெற்றேன்.

மீண்டும் இருட்டில் நடந்து, மரத்தடியில் நின்றிருந்த காரை அடைந்து, அங்கிருந்து புறப்பட்டோம்.

'விர்'ரென்று வெகு வேகமாகக் காரை ரிவர்ஸில் ஸ்டார்ட் செய்தார் விஜயன்.

''மெதுவாக...... மெதுவாக...... இவ்வளவு வேகமாக நீங்கள் வண்டி ஓட்டக் கூடாது'' என்றேன் விஜயனிடம்.

''வேகமாக வண்டி ஓட்டாவிட்டால், வண்டி ஓட்டுவதில் 'குஷி'யே இல்லையே...'' என்றார் விஜயன்.

நான் இதற்குப் பதில் சொல்லவில்லை.

மீண்டும் பாஸ்கரின் நடன நிகழ்ச்சியைப் பார்க்கப் புறப்பட்டோம்.

''எப்படி இந்த 'கிளப்'?'' என்று கேட்டார் விஜயன்.

''இதைப் போல் நிறைய 'கிளப்'புகள் நான் பார்த்திருக்கிறேன். வேண்டுமென்றேதான் நான் இந்த மாதிரி 'கிளப்'புகளை நாடிச் செல்கிறேன். இன்றைய உலகில், இளைஞர் உலகம் எப்படியெல்லாம் இயங்குகிறது என்று அறிந்து கொள்ள எனக்கு ஆசை உண்டு. நியூயார்க்கில் ஒரு பேராசிரியர் என்னிடம் 'இளைஞர்களுக்கு ஓரளவுக்கு உல்லாச வாழ்க்கைக்கு இடம் அளித்தால்தான், அவர்கள் சக்தி விபரீதமான வழியில் போகாமல் இருக்கும். இப்போது உலகெங்கும் 'ஸ்டுடெண்ட் அன்ரெஸ்ட்' அதிகமாக இருக்கிறது என்று சொல்கிறார்கள். மாணவர்களுக்குப் பொழுதுபோக்கு இடங்கள் இல்லாவிட்டால், அரசியலில் புகுந்து விடுகிறார்கள். கேளிக்கைகளிலும் அவர்களை ஈடுபடுத்துங்கள், 'அன்ரெஸ்ட்' குறையும்'' என்றார். அவர் சொன்னதில் எவ்வளவு தூரம் விஷயம் இருக்கிறது என்பது வேறு விஷயம்.

''அது ஒரு கருத்து. இந்தியாவில் இப்படிப்பட்ட இடங்கள் குறைவு. சமீபத்தில் சில இடங்களில் 'கிளப்'புகள் உருவாகி இருக்கின்றன. சென்னையில் கூட ஒரு பெரிய ஓட்டலில், 'டிஸ்கொதே' ஏற்பாடாகி இருக்கிறது. மாணவிகளும், மாணவர்களும் மங்கிய விளக்கொளியில் நடனமாட அங்கே வசதி இருக்கிறது...... இத்தகைய கேளிக்கைகள் நமக்குத் தேவைதானா என்று நான் புரிந்து கொள்ளவே எல்லா இடங்களிலும் இத்தகைய 'கிளப்'புகளுக்குப் போகிறேன்......'' என்றேன்.

''என்ன மணியன் சார், உங்கள் மனைவியிடம் நான் இதைச் சொல்ல வேண்டும் என்பதற்காக விளக்கம் தருகிறீர்களா? சும்மாப் போங்க சார்... நம் ஊரில் பார்க்க முடியாத விஷயங்களைப் பார்க்கத்தானே வெளியூருக்கே போகிறோம்! அப்புறம் அதற்கு வேறு விளக்கம் எதற்கு?'' என்று போட்டோகிராபர் சுந்தரம் சிரித்துக் கொண்டே என்னைக் கேட்டார்.

நான் அவருக்குப் பதில் சொல்லவில்லை. அதுதான் அவருக்கு முதல் வெளிநாட்டுப் பயணம். அப்படிப் புறப்படுகிறவர்களுக்கு, இதை யெல் லாம் பார்க்க வேண்டும் என்ற துடிப்பு இருக்கத்தான் செய்யும். ஆனால் என் நிலை அதுவல்லவே!

''சிங்கப்பூரிலும் இது மாதிரி 'கிளப்'புகள் இருக்கின்றனவா?'' என்று கேட்டேன்.

''இருக்க வேண்டும். நான் போனதில்லை......'' என்றார் விஜயன்.

மதுபானம் அருந்தும் கடைகள் சிலவற்றில், மதுவையும் கொடுத்து விட்டு, 'கம்பெனி'யும் கொடுக்க சில பெண்கள் சிங்கப்பூரில் இருக்கிறார் கள். இவர்களையும் நான் சந்தித்தேன். சிங்கப்பூரின் இளைஞர்களையும், யுவதிகளையும் பற்றி அறிய முற்பட்டபோது, நண்பர் ஒருவர், 'இளம் ஜோடி'கள் சந்திக்கும் ஒரு தனி இடத்திற்கு என்னை அழைத்துச் சென்றார். 'ஸீ வ்யூ' என்ற ஒட்டலுக்குப் பின்புறம், கடற்கரை ஓரமாக, மணல் வெளியில், மங்கிய இருளில், மனம் விட்டுப் பழகும் சில ஜோடிகளை ஒரு நாள் இரவு நான் கண்டேன். அந்த அனுபவம் சற்றுப் புதுமையாகவே இருந்தது. அதைப் பற்றிப் பின்னால் எழுதுகிறேன்.

வெகு விரைவில், எங்கள் கார் மாரியம்மன் கோவிலை ஒட்டிய மண்டபத்தை அடைந்து விட்டது.

இரவு நேரமாகியும் அங்கே நடன நிகழ்ச்சி தொடங்கவில்லை.

''என்ன விஷயம்?'' என்று கேட்டேன்.

''இன்னும் கோவிலில் பூஜை முடியவில்லை'' என்றார்கள்.

''கோவில் பூஜைக்கும் நடனத்திற்கும் என்ன சம்பந்தம்?'' என்று கேட்டேன்.

''இது கோவிலை ஒட்டிய மண்டபம். அங்கே பூஜை முடிந்த பிறகு தான் இங்கே கலை நிகழ்ச்சி தொடங்குவோம். இதுதான் வழக்கம். தெய்வம் முதலில், கலை பின்னர்......'' என்றார்கள்.

எனக்கு மெய் சிலிர்த்தது. கடல் கடந்து சென்றாலும், தமிழர்களின் சில தனிப் பண்புகள் அவர்களுடன் வாழ்ந்து கொண்டுதான் இருந்தது போலும்!

பாஸ்கரின் தயாரிப்பில் குழந்தைகளின் கலை நிகழ்ச்சி சிறப்பாக இருந்தது. ஏதோ ஓர் உயர்நிலைப் பள்ளியின் ஆண்டு விழா கலை நிகழ்ச்சி யைப் போல் இருந்தது அது. என்னால் அந்த நிகழ்ச்சி முழுவதும் இருக்க முடியவில்லை. எனவே, பாஸ்கரிடம் ''நான் புறப்படுகிறேன்'' என்று விடை பெற்றுக் கொண்டேன்.

''எப்படிப் போவீர்கள்?'' என்று கேட்டார் அவர்.

''எப்படியாவது 'மானேஜ்' பண்ணிக் கொள்கிறேன்...'' என்றேன்.

''என்ன இது, மயிலாப்பூரிலிருந்து திருவல்லிக்கேணி போவதாக நினைப்பா? ஒரு நாட்டை விட்டு இன்னொரு நாட்டுக்கு வந்திருக்கிறீர்கள்

ஐயா......'' என்றவர், ''மிஸ்டர் விஜயன், இவர்களை சிங்கப்பூர் ஹில்டன் ஓட்டலில் விட முடியுமா?'' என்று கேட்டார்.

''ஓ......ஷ்யூர்! எனக்கும் ஒரு 'ட்ரைவ்' ஆயிற்று'' என்று மகிழ்ச்சியுடன் ஒப்புக்கொண்டார் விஜயன்.

கார் வெகு வேகமாகப் புறப்பட்டது. 'இவரிடம் காரின் வேகத்தைப் பற்றி இனியும் சொன்னால், நம்மைத் தவறாகப் புரிந்து கொள்வார்' என்ற எண்ணத்துடன், பேசாமல் அமர்ந்திருந்தேன். ஆனால், அந்த வேகத்தில் பயணம் செய்வதும் கொஞ்சம் பயமாகத்தான் இருந்தது.

மீண்டும் கஸ்டம்ஸ் பரிசோதனை யெல்லாம் முடித்துக்கொண்டு, சிங்கப்பூருக்குள் நுழைந்து விட்டோம். ஜோஹூரைத் தாண்டியவுடன், சாலை ஓரத்தில் நடைபாதைக் கடைகள் நிறையக் காணப்பட்டன.

''இங்கே நடைபாதைகளில் பர்மனென்ட் கடைகள் உண்டோ?'' என்று கேட்டேன்.

''இல்லை. இரவில் மட்டும்தான் கடை போடுவார்கள். எல்லாம் ரொம்பவும் மலிவாகக் கிடைக்கும். இதே போல் 'பாசார் மாலம்' என்று இரவுக் கடைகள் சிங்கப்பூரில் நிறைய உண்டு. ஒவ்வொரு நாள் ஒவ்வொரு இடத்தில் கடைகள்போடுவார்கள். பளிச்சென்ற விளக்கொளியில், வரிசையாக இருக்கும் அந்தக் கடைகள் பார்த்தாலே பிரமாதமாக இருக்கும். வீட்டுக்கு வேண்டிய எல்லா சாமான்களும் அங்கே மலிவாகக் கிடைக்கும். சிங்கப்பூரில் இருக்கும்போது ஒரு முறை ஏதாவது ஒரு இடத்தில் இந்த 'பாசார் மாலம்' பார்த்து விடுங்கள்......'' என்றார்.

சிங்கப்பூர் வாழ் நண்பர் நடராஜனின் மனைவி திருமதி லட்சுமி, என்னை ஒருநாள் 'பாசார் மால'முக்கு அழைத்துச் சென்றார். என்னவோ ஏதோ என்று நினைத்துக்கொண்டு போனேன். சென்னையில் உள்ள பர்மா பஜாரும், மூர்மார்க்கெட்டும் கலந்த ஒரு கடை வீதி அது.

பத்து டாலர் விலை சொல்கிறார்கள், கடைசியில் பேரம் பேசி ஒரு டாலருக்கு அதை வாங்க முடிகிறது. திருமதி லட்சுமி நடராஜன் மிக நன்றாகப் பேரம் பேசினார். அதுதான் நம் பெண்களுக்கே கைவந்த கலையாயிற்றே!

எங்கள் கார், 'ஹில்டன் ஓட்டலை' நெருங்கிக் கொண்டிருந்தது. இரவில் சிங்கப்பூர் ஜகஜ்ஜோதியாக ஜொலித்துக் கொண்டிருந்தது. சாலைகளில் வெள்ளை வெளேரென்ற விளக்குகள். இடை இடையே மஞ்சள் நிற விளக்குகளும் காணப்பட்டன.

''எதற்கு சில இடங்களில் மஞ்சள் நிற விளக்குகள் போட்டிருக்கிறார்கள்?'' என்று கேட்டேன்.

''அது ஒருவித 'இண்டிகேஷன்!' தூரத்திலிருந்து பார்த்தாலே மஞ்சள் நிற விளக்குகள் தெரிகிறதல்லவா? மஞ்சள் நிற விளக்கு இருக்குமிடம், ஒரு ஜங்ஷனாகவோ, டிராபிக் சிக்னல் இருக்கும் இடமாகவோ இருக்கும். தொலைவிலிருந்தே அது தெரிந்துவிட்டால், வண்டியின்

வேகத்தைக் குறைத்துக் கொள்ளலாம் அல்லவா? வண்டிகளின் வேகத்தைக் குறைக்க 'மஞ்சள் விளக்கு'கள் உதவுகின்றன......'' என்ருர்.

ஆனல், விஜயனின் வண்டியின் வேகம் குறையவே இல்லை. ஏதோ 'போயிங் விமானம்' போல் வெகு வேகமாக எங்களை 'ஹில்டன்' ஓட்டலில் கொண்டு சேர்த்தார்.

''தாங்க் யூ......மிஸ்டர் விஜயன். உங்கள் உதவிக்கு நன்றி. சென்னைக்கு வந்தால் சொல்லுங்கள்......உங்களை என் காரில் ஊரைச் சுற்றிக் காட்டுகிறேன்......'' என்றேன்.

[ஆனல்............

அந்த வாய்ப்பே எனக்கு இல்லாமல் போய்விட்டது. நான் பயந்தது நடந்து விட்டது. 'மெதுவாக ஓட்டுங்கள், மெதுவாக ஓட்டுங்கள்' என்று பல முறை விஜயனிடம் அடித்துக் கொண்டேன். அவர் கேட்கவில்லை. அண்மையில், பயங்கரமான மோட்டார் விபத்துக்கு அந்த இளம் அன்பர் உள்ளானர் என்ற செய்தி கேட்டு மிகவும் வேதனைப்பட்டேன்.]

அன்றிரவு டாக்டர் ராமசாமிக்கு போன் செய்து, என் ஜோஹூர் அனுபவத்தைச் சொன்னேன்.

''நாளை மாலை என்னுடைய ரேடியோ நிகழ்ச்சி ஒன்று இருக்கிறது. 'டாக்டரின் பதில்' என்ற தலைப்பில் அஞ்சலாகிறது. மறக்காமல் கேளுங்கள்.........'' என்ருர்.

''சிங்கப்பூரில் நம் டாக்டர்களுக்கு நல்ல பிராக்டீஸ் உண்டா டாக்டர்?'' என்று அவரைக் கேட்டேன்.

''அதிருஷ்டம் வேண்டும்! எந்த இடத்தில் பிராக்டீஸ் செய்கிருர்கள் என்பதையும் பொறுத்தது அது. ஆனல், டாக்டர்களின் வளர்ச்சிக்கு சிங்கப்பூர் அவ்வளவாக ஏற்றதல்ல'' என்ருர்.

''என்ன சொல்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''இருப்பதே இருபது லட்சம் பேர்தானே! திரும்பத் திரும்ப ஒரே மாதிரி வியாதிகள்தான். சில அபூர்வமான வியாதிகள் லட்சத்தில் ஒன்று, பத்து லட்சத்தில் ஒன்றுதான் வரும். புது வியாதிகள் வந்து, புதிய மருத்துவம் செய்து, புதிய வெற்றிகள் காண்பதுதான் டாக்டர்களின் வளர்ச்சிக்கு அழகு. இங்கே மக்கள் தொகை குறைவாக இருப்பதனல், புதிய வியாதிகளும் குறைவு. அந்த விதத்தில், இந்தியா தான் சிறந்தது. அது 'டாக்டர்ஸ் பாரடைஸ்?''' என்ருர்.

இதைக் கேட்டு நான் சிரித்துக் கொண்டேன்.

'இந்தியாவை எந்தக் கண்ணேட்டத்தில் பார்க்கிருர் இவர்' என்ற எண்ணம், எனக்குச் சிரிப்பை ஏற்படுத்தியது.

# 24

'உன் பெயர் என்னம்மா?'

நாங்கள் சிங்கப்பூரைச் சுற்றிப் பார்ப்பதற்கும், பலதரப்பட்ட மக்களைச் சந்தித்துப் பேசி, அந் நாட்டைப் புரிந்து கொள்வதற்கும் உதவியாக நண்பர் ஜமால், அவருடைய காரை எங்கள் உபயோகத் திற்கென்று கொடுத்திருந்தார். அந்தக் காரை அவருடைய நண்பர் ஒருவர் ஓட்டினார். அவர் பெயர் அலி. முழுப் பெயர் முகமத் அலி.

''இந்த சிங்கப்பூர் ரொம்ப சின்ன ஊர் சார். ஆனால் இங்குள்ள மக்கள் ரொம்பப் பெரியவங்க. சுக துக்கம், கஷ்ட நஷ்டங்களை யெல்லாம் பார்த்தவங்க! அடுத்த வீட்டுக்காரன் வேற்று இனத்தவனாக இருந்த போதிலும், அவனுடன் ஒற்றுமையாக இருப்பது எப்படி என்ற கலையை நன்கு கற்றவங்க! பல இனங்கள் கூடி, ஒரு குடும்பம் போல் வாழ்வதை இங்குதான் காணலாம். கிட்டத்தட்ட இது ஒரு குட்டி ஐ. நா. சபை'' என்று சுவையாக விளக்கம் கொடுத்துக் கொண்டே, அன்று காலை காரை ஓட்டினார் அலி. அவர்தான் என்னை மலாய் கம்பத்திற்கும், மற்ற இடங் களுக்கும் அழைத்துச் சென்றவர். என் தேவை என்ன என்பதை நன்கு புரிந்து கொண்டு, அதற்கேற்ப செயல் புரிந்தார்.



அலி, வாழ்க்கையில் மிகவும் கஷ்டப்பட்டவர்.

''என் கதை ரொம்ப சோகமானது சார்! சிங்கப்பூரில் பலருக்கு என்னைப் போன்ற சோகக் கதைகள் இருக்கும். இளமையில், ஜப்பான் யுத்தத்தில் தந்தையை இழந்தவன் நான். 1941-ல் சாப்பாடு இல்லாமல் கஷ்டப்பட்டோம். சயாமிலிருந்து அரிசி வந்தால்தான் உண்டு. அதைத் தவிர, எங்கள் கடலில் கிடைக்கும் மீன்தான் உணவு. அப்போது நாங்கள் பட்டிருக்கும் பாடு சொல்லத் தரமன்று. உங்களாலெல்லாம் அதைப் புரிந்து கொள்ள முடியாது. உங்கள் நாட்டில் யுத்தமே கிடையாதே. அதுவும் சென்னை மக்களுக்குக் குண்டு எப்படி இருக்கும் என்று கூடத் தெரியாதே......'' என்றார்.

''இல்லையப்பா! எம்டன் குண்டு போட்டதைப் பற்றி இன்றும் சொல்லிக் கொண்டிருக்கிறோம் நாங்கள்'' என்றேன் நான்.

''வெயிலில் இருந்தால்தான் நிழலின் சுகம் தெரியும் என்பார்கள். அதைப் போல், யுத்தத்தைப் பார்த்து, அதில் கஷ்டப்பட்டிருந்தால்தான், சமாதான காலத்தில் கிடைக்கும் சுகம் புரியும். திடீரென்று சுதந்திரம் கிடைத்து விட்டால், குறை சொல்லிக் கொண்டு திரிபவர்களின் எண்ணிக்கைதான் அதிகமாகும்...'' என்று கூறி, சிங்கப்பூர், மலேசியா வின் சரித்திரத்தை விளக்கினார். டச்சுக்காரன் வசமிருந்த அவை, எப்படி சுதந்திரம் பெற்றன என்றும், இந்தோனேஷியாவைப் பற்றியும் விளக்கினார். பிறகு, தங்களது பிரதமர் 'லீ குவான் யூ'வைப் பற்றிச் சிறப்பாகக் கூறிவிட்டு, ''ஒரே ஒரு கருத்து. என் சொந்தக் கருத்து: எங்கள் அரசாங்கம் 'டிபென்'ஸுக்கு கொஞ்சம் அதிகம் செலவழிக்கிறதோ என்று நினைக்கிறேன். எங்கள் அண்டை நாட்டுக்காரர்கள் நல்லவர்கள். எனவே, ராணுவச் செலவு இவ்வளவு தேவையில்லை என்பது என் கருத்து......'' என்றார்.

''பேசிக் கொண்டே ஊரைச் சுற்றிக் கொண்டிருந்தால் எப்படி? கோமள விலாசுக்குப் போங்கள், ஏதாவது டிபன் சாப்பிடலாம்......'' என்றேன் நான்.

''இட்லி தோசைதானே! வாருங்கள், இன்னொரு இடத்திற்கு அழைத்துச் செல்கிறேன்'' என்று கூறி, ஜாலான் சுல்தான் என்ற தெருவில் இருந்த ஒரு சாலை ஓரத் தோசைக் கடைக்கு அழைத்துச் சென்றார்.

அங்கே, சாலையை ஒட்டி, தமிழர்கள் ஒரு தோசைக் கடை வைத்திருந்தார்கள். நம் ஊரில் தெருவோரங்களில் சிறு கல் அடுப்பை வைத்துக் கொண்டு சட்டியில் தோசை சுட்டுப் போடுவார்களே, அதேபோல் தான். இது கொஞ்சம் பெரிய ஸ்கேல்!

பெரிய அடுப்புகளில் தோசைக் கல் காய்ந்து கொண்டிருந்தது. சாதா தோசை, முட்டை தோசை, மசாலா தோசை என்று சுடச் சுடப் போட்டுக் கொண்டிருந்தார்கள். தெருவோரத்தில் போடப் பட்டிருந்த 'பெஞ்சு'களில் அமர்ந்து, சீனர்களும், மலாய்க்காரர்களும், தமிழர்களும் அதைச் சுவைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.

'தெருவோரக் கடையாயிற்றே, சுகாதாரக் குறைவாக இருக்குமே..' என்றெல்லாம் யோசிக்கிறீர்களா? சிங்கப்பூரில் அந்த யோசனைக்கே இடமில்லை. எங்கே பார்த்தாலும் இப்படிச் சாலையோரக் கடைகள் நிறைய இருந்தன. வீதியில் அமர்ந்து விருந்து சாப்பிடும் வழக்கம் சீனர்களுக்கு அதிகம் போலும். அதிலும் சில கடை வீதிகளில், சீனர்களின் சாப்பாட்டுக் கடைகள்தான் நிறைந்திருக்கும். எரியும் அடுப்பும், புகையும் எண்ணெயு மாக அவர்கள் சமைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருப்பார்கள். அவர்கள் உபயோகப்படுத்தும் ஒருவித எண்ணெய், பழக்கமில்லாதவர்களுக்குக் குடலைப் புரட்டும்!

'சாதா' தோசையைத் தின்றுவிட்டுப் புறப்பட்டேன்.

''ஒரு அரை மணி, ஜமால் வீடுவரை போய்விட்டு, பிறகு வெளியே போகலாமா?'' என்று கேட்டார் அலி.

''அங்கே என்ன விசேஷம்?'' என்றேன்.

''டெலிவிஷனில் 'அலி' குத்துச் சண்டை இருக்கிறது. அதைப் பார்த்தாக வேண்டும்'' என்றார்.

''யெஸ் யெஸ்...... அலி சண்டையை இன்றைக்குப் போடுகிறார்கள் அல்லவா? கண்டிப்பாகப் பார்த்தாக வேண்டும்'' என்று துடித்தார் நண்பர் சாலி.

''சரி......'' என்று ஜமால் வீட்டிற்குச் சென்றோம்.

அங்கே, டெலிவிஷன் முன்னால் எல்லோரும் பயபக்தியுடன் அமர்ந்தனர். குத்துச் சண்டையைப் பார்ப்பதிலே அவ்வளவு ஆர்வம். குறிப்பாக முஹமத் அலியின் குத்துவீச்சை, மலாய் மக்கள் மிகவும் விரும்பிப் பார்க்கிறார்கள்!

சண்டை முடிந்ததும், ''எங்கே போகலாம்?'' என்று கேட்டார் அலி.

''பல இன மக்கள் ஒன்றாக வாழ்ந்து, ஒரு புதிய சமுதாயத்தை உருவாக்குவதாகச் சொன்னீர்களே, அப்படி ஒரு இடத்திற்கு அழைத்துச் செல்லுங்கள்......'' என்றேன்.

''எங்கே போகலாம்?......'' என்று அவர்கள் பேசிக்கொண்டார்கள். பிறகு, ''சந்திரன் வீட்டிற்கு அழைத்துப் போகலாம்......'' என்றார்கள்.

''சந்திரனை டாக்டர் ராமசாமிக்கு நன்றாகத் தெரியும்......'' என்றார் சாலி.

''அவரையே அழைத்துக் கொண்டு போவோம்......'' என்றார் அலி.

''யார் இந்தச் சந்திரன்?'' என்று கேட்டேன்.

''மிஸ்டர் பி. சந்திரன். ஜாலான் கம்பீராவில் இருக்கிறார்......''

''கம்பீராவில் இருப்பதுதான் அவரிடமுள்ள சிறப்பா?''

''இல்லை, இல்லை. தமிழ் சீன நல்லுறவுக்கு அவர் ஒரு சின்னமாகத் திகழ்கிறார். அவரைப் பார்த்தால், இந்த நாட்டின் ஒரு சிறப்பு உங்களுக் குப் புரியும்...'' என்று கூற, டாக்டர் ராமசாமியைத் தேடிச் சென்றோம்.

பிறகு, அவருடன் ஜாலான் கப்பிராவுக்குப் போனோம் நாங்கள்.

[அது என்ன 'ஜாலான் கம்பிரா' என்று குழம்புகிறீர்களா? அது ஒரு தெருவின் பெயர், அவ்வளவுதான்!]

அழகிய வீடு அது. வாயிற் கதவைத் திறந்து கொண்டு நாங்கள் உள்ளே நுழைந்தவுடன், சந்திரன் எங்களை வரவேற்று, வரவேற்பறைக்கு அழைத்துச் சென்றார்.

டெலிவிஷனில் ஏதோ நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது.

"'நாதமும் கீதமும்' நிகழ்ச்சி அஞ்சலாகப் போகிறது" என்றார் சந்திரன்.

"அப்படியா?" என்றேன்.

அடுத்த கணம் 'அம்மா என்பது தமிழ் வார்த்தை' என்ற பாடல் ஒலிபரப்பாகியது. எல்லோரும் அதை ரசித்துக் கேட்டனர்.

"எங்கள் சிங்கப்பூரில் பதினாறு மணி நேரம் தமிழ்ப் பாடலைக் கேட்க முடியும். உங்கள் ரேடியோவில் கூட அந்த சௌகரியம் கிடையாது..." என்றார் நண்பர் சாலி.

"ஒப்புக் கொள்கிறேன். சிங்கப்பூர், தமிழுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கிறது என்பதை, பல விஷயங்கள் மூலம் நான் புரிந்து கொண்டு வருகிறேன். கடல் கடந்த நாட்டில் தமிழ் அரியணை ஏறி இருக்கிறதே, அதுவே பெரிதாயிற்றே..." என்றேன்.

நாங்கள் பேசிக் கொண்டிருக்கும்போதே, ஒரு சிறுமி, "வணக்கம்" என்று சொல்லிக் கொண்டு வந்தாள்.

நான் பதில் வணக்கம் சொல்லிவிட்டு அவளைப் பார்த்தேன்.

அந்தக் குழந்தையின் முகம்......அது தமிழ் முகமாகத் தெரியவில்லை. சீன முகமாகத் தெரிந்தது.

டாக்டர் ராமசாமி என்னை ஒரு நிமிஷம் வெளியே வரும்படி அழைத்தார். நாங்கள் இருவரும் வராந்தாவை அடைந்தோம்.

"மிஸ்டர் மணியன்! சந்திரன் ஒரு சீனப் பெண்ணைத் தத்து எடுத்து வளர்க்கிறார். இப்போது அந்தப் பெண் ஏறக்குறைய தமிழ்ப் பெண் தான். இருந்தாலும் 'வளர்ப்புப் பெண்' என்ற வார்த்தையை இங்கே உபயோகிக்க வேண்டாம். அந்தப் பிஞ்சு மனம், இவர்களைத் தங்கள் சொந்தப் பெற்றோர் போல்தான் நினைத்துக் கொண்டிருக்கிறது. எனவே, 'தத்து' என்ற வார்த்தையை உபயோகிக்காமல் அந்தப் பெண்ணிடம் பேசுங்கள்......" என்றார்.

"சரி" என்று கூறி, மீண்டும் உள்ளே நுழைந்து அந்தச் சிறுமியை அருகில் அழைத்து "உன் பெயர் என்னம்மா?" என்று கேட்டேன்.

"சாந்தி!"—பற்கள் தெரியச் சிரித்தபடி சொன்னாள் அவள்.

''நீ எந்த வகுப்பில் படிக்கிறாய்?''

''4B—இங்கிலீஷ் தமிழ் இரண்டும் படிக்கிறேன்......''—சுத்தமான தமிழ் பேசினாள் சாந்தி.

''பள்ளிக்கூடத்தில் டான்ஸ், பாட்டு எல்லாம் கற்றுக்கொள்கிறாள்'' என்று, மகளைப் பற்றிய விவரங்களைக் கூறினாள் திருமதி சந்திரன்.

''ஓ, பாட்டு வருமா? ஒரு பாட்டுப் பாடேன்......'' என்றேன்.

''சங்கீதமா?'' என்று கேட்டாள்.

''நமது கர்நாடக சங்கீதத்தைத்தான் சங்கீதம் என்கிறாள். மற்றதைப் பாட்டு என்கிறாள்......'' என்று விளக்கம் சொன்னார் சந்திரன்.

உண்மைதானே! சங்கீதம் என்ற சொல்லுக்குக் கர்நாடக சங்கீதம் ஒன்றுதானே ஏற்றது!

''ஆமாம், சங்கீதம்தான்'' என்றேன்.

'வரவீணா' என்று ஆரம்பித்து, இனிமையாகப் பாடினாள் அந்தச் சிறுமி.

''ஆறே மாதத்தில் கீதம் வரை வந்து விட்டாள். மிகவும் புத்திசாலிப் பெண். பத்மா என்ற டான்ஸ் டீச்சரிடம் நடனம் கற்றுக் கொள்கிறாள்...''-தாயார் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, சாந்தி குறுக்கிட்டு, ''நான் டி. வி. யில் கூட டான்ஸ் ஆடி இருக்கிறேன்'' என்றாள் பெருமையோடு.

அந்தக் குழந்தையிடம் கொஞ்ச நேரம் பேசிவிட்டு வெளியே வந்தோம். சந்திரன் என்னிடம் சில விஷயங்களை விளக்கினார். அவர் 'எஸ்ஸோ' கம்பெனியில் பணியாற்றுபவர்.

''எனக்கு சிங்கப்பூர் மிகவும் பிடித்த ஊர். என் மனைவி சிங்கப்பூரிலேயே பிறந்தவள். எங்களுக்குக் குழந்தைகள் இல்லை. எங்களைப் போன்று குழந்தைகள் இல்லாதவர்களுக்கு, அநாதைக் குழந்தைகளைத் தத்து எடுத்துக் கொள்ள அரசாங்கமே உதவுகிறது. அநேகமாக சீனக் குழந்தைகள்தான் தத்துக்குக் கிடைக்கின்றன. சிங்கப்பூரில் இப்படிப் பல தமிழர் குடும்பங்களில் சீனக் குழந்தைகளைப் பார்க்கலாம். சாதி-மத-பேதம் மட்டுமல்லாமல், இனங்களையும் கடந்த ஒரு புதிய சமுதாயத்தை உருவாக்க இத்தகைய செயல்கள் உதவும் என்பது என் கருத்து. சாந்தி எங்கள் மீது உயிரையே வைத்திருக்கிறாள். மிக புத்திசாலிப் பெண்'' என்றார்.

சந்திரன் வீட்டிலிருந்து புறப்பட்டோம்.

''உலக மக்கள் அனைவரும் ஒன்றாக வாழ வேண்டும் என்ற குறிக்கோளுடன் சென்னைக்கு அருகில் பாண்டிச்சேரியில் அரவிந்தர் ஆசிரமத்தினர் 'ஆரோவில்' என்ற உலக நகரம் ஒன்றை உருவாக்குகிறார்களாம்! அந்த நகரத்திற்கும் எங்கள் சிங்கப்பூர்தான் முன்னோடி என்பேன் நான். இது ஓர் உலக நகரம்'' என்று பெருமையுடன் சொன்னார் சாலி.

உண்மைதான்! அது ஓர் உலக நகரம்தான்.

"எங்கள் எம். எஸ். ஏ. விமானங்கள் எப்படி இயங்குகின்றன, எப்படிப் பழுது பார்க்கப்படுகின்றன என்றெல்லாம் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும் மிஸ்டர் மணியன். அதையெல்லாம் பார்த்த பிறகு உங்கள் கருத்தைச் சொன்னீர்களானால், எங்கள் பத்திரிகையில் அதை வெளியிடுவோம். இதோ, எங்கள் பத்திரிகையின் பிரதிநிதி. அவரே உங்களை விமான தளத்திற்கு அழைத்துச் செல்வார். போய் வந்து உங்கள் அபிப்பிராயத்தைச் சொல்லுங்கள்—" என்று என்னிடம் கூறினார், எம். எஸ். ஏ. நிறுவன பப்ளிக் ரிலேஷன்ஸ் மானேஜர் மேரி ஸோ.

பொதுஜனத் தொடர்புக்கு ஏற்ற ஆபீசர் அவர். முகம் சுளிக்காமல் சிரித்துச் சிரித்துப் பேசிக் கொண்டே, காரியங்களைச் செய்பவர். "வாட் மேன், வாட் மேன்..." என்று கேட்டுக் கொண்டே, டெலிபோனில் பேசியவாறு இருக்கும் அவரைச் சந்திப்பதில், எனக்கு எப்போதுமே தனி விருப்பம் உண்டு.

## 25

மிஸ் மேரி ஸோவுடன் . . .

மிஸ் மேரி ஸோ ஒரு சீனப் பெண்மணி. நான் சிங்கப்பூருக்குப் போகும்போதெல்லாம் அவரைச் சந்திப்பேன். இந்த முறை, அவரிடம் கொஞ்சம் பேசி, சிங்கப்பூர்வாழ் சீன மக்களைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆசை எழுந்தது.

''மிஸ் மேரி, எம். எஸ். ஏ.வைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு முன்னுல், உங்களைப் பற்றித் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்...'' என்றேன்.

''மி! நோ, நோ! நான் ரொம்ப சாதாரணம்'' என்ருர் அவர்.

''எனக்கு சாதாரண மக்களைப் பார்ப்பதில்தான் பிரியம் அதிகம். உங்கள் மூலம் சீன மக்களைப் புரிந்து கொள்ள விரும்புகிறேன்...'' என்றேன்.

''என் ஒருத்தியிடம் பேசி அதைப் புரிந்து கொள்ள முடியாது. பெரிய முதலாளியிலிருந்து, எளிய டீ விற்கும் மக்கள் வரை பலரைச் சந்திக்க வேண்டும் நீங்கள்...'' என்ருர் அவர்.



''அப்கோர்ஸ். உங்களைப் போன்ற நடுத்தர வர்க்கத்தினரையும் தெரிந்து கொள்ள வேண்டாமா? நீங்கள் என்ன படித்திருக்கிறீர்கள்? இந்தத் தொழிலுக்கு எப்படி வந்தீர்கள்...?''

''நான் மார்க்கெட்டிங் கோர்ஸ் படித்தவள். செக்ரெடேரியட் கோர்ஸிலும் பட்டம் பெற்றேன். இந்த வேலை கிடைத்தது, வந்து விட்டேன்...''

''உங்கள் சீன மக்களைப் பற்றி ஏதாவது சொல்லுங்களேன் ..''

''இன்றைய சிங்கப்பூரில் வாழும் இளம் தலைமுறையினர், மிகச் சிறந்த உழைப்பாளிகள். எங்களுக்குச் சிறந்த சர்க்கார் இருக்கிறது. அரசியலைத் தவிர, மற்ற துறைகளில் இங்கு 'பாலிடிக்ஸ்' கிடையாது. 'டு யூ அண்டர்ஸ்டாண்ட்?' மொழிச் சண்டை, இனச் சச்சரவு எதுவும் எங்கள் நாட்டில் கிடையாது. சீன மக்கள்தான் இங்கு பெரும்பான்மை யினர். ஆனால் மலாய் மொழி, தேசிய மொழி. இருப்பினும் நோ பிராப்ளம்! எல்லா மொழிகளும் அரசாங்க மொழி. வி ஹாவ் நோ ஸெண்டிமெண்ட்ஸ்... உங்கள் ஊரின் நிலைமையும் எனக்குத் தெரியும். உங்கள் நாட்டில் இந்த மொழி விஷயத்தில்தான் எவ்வளவு சச்சரவுகள்! மிஸ்டர் மணியன், என்னைக் கேட்டால், அரசியலைத் தவிர மற்ற எதிலும் அரசியலே இல்லாத நாடுதான் மகிழ்ச்சியாக இருக்க முடியும் என்பேன். அதுதான் சிங்கப்பூர்...'' என்றார்.

''மிஸ் மேரி...நான் கேள்விப்பட்ட ஒரு விஷயத்தைச் சொல்கிறேன். தவறாக எடுத்துக்கொள்ளக் கூடாது, இந்த அரசாங்கத்தில் கட்டுப்பாடுகள் அதிகம் இருப்பதாகவும், சுதந்திரம் குறைவு என்றும் சிலர் சொல்லிக் கொண்டார்கள். அப்படிச் சொன்னவர்கள், 'தயவு செய்து எங்கள் பெயரைப் போட்டு விடாதீர்கள்' என்றும் குறிப்பிட்டார்கள். இந்தக் கட்டுப்பாட்டுக்கெல்லாம் காரணமே, பீகிங் சைனாதான். சிங்கப்பூர் சரியாகப் பரிபாலிக்கப்படாவிட்டால், இது மூன்றாவது சைனாவாக மாறி, தொல்லைகள் ஏற்படும் என்று நினைத்துதான் கண்டிப்பாக இருப்பதாகவும் சொன்னார்கள். அதனால்தான் கம்யூனிஸ்டுகளிடம் இந்த அரசாங்கம் கடுமையாக இருக்கிறது என்றும் குறிப்பிட்டார்கள். இதைப் பற்றி உங்கள் கருத்து என்ன? உங்கள் சுதந்திரம் பாதிக்கப்பட்டிருக்கிறதா இங்கே...?'' என்று கேட்டேன்.

''தயவுசெய்து என்னிடம் அரசியலைப் பற்றிப் பேசாதீர்கள்...'' என்று ஒரே வார்த்தையில் பதில் சொல்லிவிட்டார் மிஸ் மேரி ஸோ.

''அரசியல் வேண்டாம்... இந்தக் கட்டுப்பாடுகள் பற்றி......''

''கட்டுப்பாடு மனிதனுக்குத் தேவை. சட்டம், ஒழுங்கு இருந்தால் தான் மனிதன் மனிதனாக வாழ்வான். தெருவில் குப்பை போடக்கூடாது என்று ஒரு சட்டம். இதன் பலன் என்ன? எங்கள் ஊர் மிகவும் சுத்தமாக இருக்கிறது. மனிதனுக்குத் தேவை, நிம்மதியான வாழ்க்கை! அது கிடைக்க இந்த அரசாங்கம் பாடுபடுகிறது, வேறு என்ன வேண்டும்?'' என்றார். பிறகு மேலே பேச விரும்பாமல், ''டியோ, இவரை ஏர்போர்ட்டுக்கு அழைத்துச் செல்...'' என்றார்.

நியோ என்ற இளைஞருடன், காரில் விமான நிலையத்திற்குப் புறப்பட்டேன்.

''மிஸ்டர் மணியன், நான் ஒரு 'குட்டி ஜர்னலிஸ்ட்.' இருந்தாலும் உங்களைப் போன்ற ஒரு பெரிய ஜர்னலிஸ்டைப் பேட்டி காணும் வாய்ப்பு எனக்குக் கிடைத்திருக்கிறது. விமான நிலையத்தை அடையும் முன் உங்களிடம் சில கேள்விகள் கேட்கலாமா?'' என்றார்.

''கோ ஆன்'' என்றேன்.

என்னைப் பற்றியும், இந்தியாவில் உள்ள பத்திரிகைகள் பற்றியும், மக்கள் ரசனை பற்றியும் ஏதேதோ கேட்டார். வெளிநாட்டில் 'ஜர்னலிஸம்' படித்தவர் அந்த இளைஞர். புத்தகத்தில் படித்த விஷயங்களைப் பற்றி,'டெக்னிக்'குகளாக ஏதேதோ கேட்டார். பொறுமையாகப் பதில் சொல்லிக் கொண்டு வந்தவன், கடைசியில், ''மிஸ்டர் நியோ, ஒரு எழுத்தாளனுக்கு உலகம்தான் பள்ளிக்கூடம். அதை நன்றாகப் 'பார்க்க' வேண்டும். அந்தப் பள்ளியில் படித்துத் தேர்ச்சி அடைந்த பிறகுதான், அவன் உண்மையான எழுத்தாளன் ஆவான். வயது ஏற ஏற, அனுபவங்கள் ஏற்பட ஏற்பட, உங்கள் எழுத்தில் முதிர்ச்சி ஏற்படும்...'' என்று கூறிவிட்டு, ''நீங்கள் சொல்லுங்கள், உங்கள் ஊர் சீன மக்களைப் பற்றி...'' என்றேன்.

''எங்கள் ஊரில் சீன மக்களே கிடையாதே...'' என்றார் அவர்.

''வாட் டு யூ மீன்...'' என்றேன்.

''இங்கிருப்பவர்கள் அனைவரும் சிங்கப்பூர் மக்கள். 'வி ஆர் சிங்கப்பூரியன்ஸ்'! இதில் சீனர்கள், மலாய்க்காரர்கள், இந்தியக்காரர்கள் என்றெல்லாம் கிடையாது. இந்தத் தத்துவத்தைத்தான் எங்கள் லீ குவான் இயூ பரப்பி வருகிறார். சிங்கப்பூர் போன்ற ஒரு சிறிய நாடு சிறப்பாக இயங்க வேண்டும் என்றால், இந்தக் குறுகிய இனப் பற்று போக வேண்டும். அதோ பார்த்தீர்களா, அந்தக் கடையை. அதன் முதலாளி சீனக்காரர். அவருடைய உதவியாள் மலாய்க்காரர்! அங்கே வியாபாரம் செய்பவர் இந்தியாக்காரர். இதேபோல் பல இடங்களைப் பார்க்கலாம். விமான நிலையம் போகும் வழியில், ஒரு கடை இருக்கிறது. என் இந்திய நண்பர் ஒருவர் அழைத்துச் சென்றார். அங்கே உங்கள் நாட்டுத் தோசை கிடைக்கும். நீங்கள் போயிருக்கிறீர்களா?'' என்று கேட்டு நிறுத்தினார்.

''யெஸ்......ஜமால் என்ற நண்பர் என்னை எப்போதும் அங்கேதான் அழைத்துச் செல்வார்......''

''அந்தக் கடையில் ஒரு சிறப்பு என்ன தெரியுமா? அது ஒரு சீனக்காரரின் கடை. அங்கே சீன உணவு கிடைக்கிறது. கடையில் நுழைவாசலில், இருபுறமும் இரண்டு சிறிய கடைகள். ஒன்று, தமிழ் பேசும் இந்தியர் கடை! இன்னொன்று, மலாய்க்காரர் கடை! நான் அடிக்கடி அங்கே போவேன். எல்லா நாட்டு உணவும் அங்கே கிடைக்கும்....ஒரு நாட்டு மனிதனை இன்னொரு நாட்டவனிடமிருந்து நாம் எப்படிப் பிரிக்கிறோம்?

உணவு, நிறம், பழக்க வழக்கங்கள் இவற்றைக் கொண்டுதானே! இவற்றைக் கலந்து விட்டால், பிறகு ஏது பிரிவு......'' என்று கேட்டுவிட்டு, ''அது சரி, எங்கள் ஊர் இளம் பெண்களைச் சந்தித்துப் பேசி இருக்கிறீர்களா நீங்கள்?'' என்று கேட்டார் அவர்.

''ஓ யெஸ்......'' என்றேன்.

''எங்கே?''

''நான் தங்கியிருக்கும் ஹில்டன் ஓட்டல் மாடியில் ஒரு கடை இருக்கிறது. ஒரு நாள், நண்பர் ஒருவருக்காகக் காத்திருந்தபோது, பொழுது போகாமல் மாடிக்குச் சென்றேன். அங்கே அழகாக—ஸ்மார்ட்டாக—ஒரு பெண் நின்றிருந்தாள். என்னையும், என்னுடன் இருந்த நண்பர்களைக் கண்டதும், அவள் புன்முறுவல் பூத்தாள். அவளிடம் பேச வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. உள்ளே சென்றேன். 'ஹலோ' என்றேன். அங்குள்ள சில பொருள்களைப் பற்றிப் பேசிவிட்டு, எங்களைப் பற்றிச் சொல்லிக் கொண்டேன். 'எனக்கு இந்தியா பிடித்த தேசம்' என்றாள் அவள். 'போயிருக்கிறாயா?' என்று கேட்டேன். ' இல்லை, ஒரு நாள் போவேன்......' என்றாள். 'எங்கள் விருந்தாளியாக வருகிறாயா?' என்று கேட்டேன். 'ஸாரி! நானாக சம்பாதித்து, சேர்த்து வைத்து, பிறகுதான் போவேன். உழைத்த பணத்தில் உல்லாசமாக இருந்தால்தான் முழுமையான இன்பம் கிடைக்கும். இன்னொருவர் தயவில் எதையுமே அனுபவிக்கக் கூடாது. அதுதான் நான் சிங்கப்பூரில் கற்றுக் கொண்ட விஷயம்...' என்றாள். அவள் பெயர் மர்லின் லோ. அவள் பேச்சு, போக்கு, சிந்தனையெல்லாம் என்னைக் கவர்ந்தது. நானும் நண்பர்களும் அவளைப் பற்றிப் பல முறை பேசிக் கொண்டோம். சிங்கப்பூர் வாழ் சீனப் பெண்களுக்கு அவள் ஒரு சிறந்த உதாரணமாக விளங்குகிறாள்—'' என்று கூறி முடித்தேன்.

எல்லாவற்றையும் கேட்டுக் கொண்ட தியோ, ''அவள் கல்யாணமானவளா?'' என்று கேட்டார்.

நான் அவரை ஒரு 'மாதிரி'யாகப் பார்த்து, ''ஏன் இந்தக் கேள்வி?'' என்றேன்.

''சும்மா கேட்டேன்......'' என்றார்.

''இல்லை, ஏதோ நோக்கம் இருக்கிறது......'' என்றேன் சிரித்துக் கொண்டே.

''இருந்தாலும் தப்பில்லையே! நல்ல குணம் கொண்ட பெண்ணைப் பற்றி ஒரு பிரம்மசாரி விசாரிப்பது தப்பா என்ன?'' என்று கூறினார்.

பேசிக் கொண்டே நாங்கள் விமான நிலையத்தை அடைந்து விட்டோம். அங்கே எம். எஸ். ஏ. நிறுவனத்தார் பிரமாண்டமான தொழிற்கூடம் ஒன்றை நிறுவியிருக்கிறார்கள். விமானம் எந்த அளவுக்குக் கவனமாகப் 'பார்த்து'க் கொள்ளப்படுகிறது என்பதை விளக்கமாகச் சொன்னார்கள். எனக்குப் புரியாத பல விஷயங்களை விளக்கினார்கள்.

நான் புரிந்தது போல் தலையை ஆட்டி வைத்தேன்.

ஓர் இடத்தில் பெரிய விமானம் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. அதைக் கடந்து செல்ல நான் முற்பட்டபோது, அவசர அவசரமாக என் கையைப் பிடித்து இழுத்தார்கள். ''என்ன?'' என்று பதறிப் போய்க் கேட்டேன்.

''அந்த விமானத்தை 'எக்ஸ்ரே' எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். நீங்கள் குறுக்கே போகக் கூடாது'' என்றார்கள்.

''போனால் என்ன? எனக்கும் வெகு நாளாக 'எக்ஸ்ரே' எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசை உண்டு'' என்றேன்.

''இந்த 'பவர்புல்' எக்ஸ்ரேயின் முன்னால் சென்றால், அது உங்களை எக்ஸ்ரே எடுக்காது. எமலோகத்திற்கு அனுப்பி விடும்'' என்றார்கள் சிரித்துக் கொண்டே.

''இப்போது மணி ஒன்றாகி விட்டது. உங்களை உங்கள் நாட்டு ஓட்டல் ஒன்றில் விட்டுவிட்டு, நான் ஆபீஸ் போகிறேன்......'' என்றார்.

''ஏன், வேறு ஓட்டல்களில் நான் சாப்பிடக் கூடாதா?'' என்று கேட்டேன்.

''உங்களைப் பார்த்தால் எனக்கென்னவோ அப்படித் தோன்றியது. உங்கள் உணவு கிடைக்கும்போது வேறு உணவைச் சாப்பிட்டுக் கஷ்டப் படுவானேன்? கிடைக்காவிட்டால் சரி, கிடைக்கும்போது சாப்பிடலாமே! இந்த சிங்கப்பூரில், தமிழ்ச் சாப்பாடு கிடைக்கும் ஓட்டல்கள் பல இருக் கின்றன. இப்போதெல்லாம் சீன மக்களும், மலாய் மக்களும்கூட உங்கள் சாப்பாட்டை ருசித்துச் சாப்பிடுகிறார்கள். எனக்கு இன்னொருவருடன் 'லஞ்ச்' அப்பாயின்ட்மெண்ட்! இல்லாவிட்டால் உங்களுடன் வருவேன்'' என்று கூறி, ஓர் ஓட்டலில் என்னை இறக்கி விட்டார்.

ஓட்டலில், எனக்கு 'சர்வ்' செய்து கொண்டிருந்த இளைஞர் என்னையே உற்றுப் பார்த்து, ''சார், நீங்கள் மணியன்தானே!'' என்றார்.

''ஆமாம்......'' என்றேன்.

''இந்த ஊரைப் பற்றி எழுதப் போகிறீர்களா?''

''ஆமாம்!''

''அப்படியே இன்னொரு விஷயமும் எழுதுங்கள்.''

''என்ன?''

''இரண்டு வருஷம் மனைவி மக்களை யெல்லாம் மறந்துவிட்டு, இங்கு உழைத்துச் சம்பாதித்து, ஏதோ கொஞ்சம் பொருள்களை வாங்கிக் கொண்டு இந்தியா சென்றால், துறைமுகத்தில் இந்திய கஸ்டம்ஸ் அதிகாரிகள் எங்களை ரொம்பவும் துன்புறுத்துகிறார்கள். ஏதோ திருடனைச் சோதிப்பது போல் சோதிக்கிறார்கள். நாங்கள் கொண்டு போகும் பழைய துணிகளுக்கெல்லாம் 'தீர்வை' விதிக்கிறார்கள். ரொம்பவும் கொடுமைப் படுத்துகிறார்கள். அதற்கொரு வழி செய்யச் சொல்லுங்கள் சார். உழைத்துச் சம்பாதித்த பணத்தில்தான் நாங்கள் சாமான்கள் வாங்கு கிறோம். திருட்டுப் பணம் இல்லை சார்... மனைவி மக்களைப் பார்க்க

வேண்டும் என்று ஆசை வரும்போது, கஸ்டம்ஸ் ஆபிசர்களின் முகம் கண் முன்னால் தோன்றி, எங்கள் ஆசையை அமுத்தி விடுகிறது'' என்று குறைப்பட்டுக் கொண்டார் அவர்.

''உங்கள் பெயர் என்ன?'' என்று கேட்டேன்.

''வேண்டாம் சார்! அதைப் போட்டால், அடுத்த முறை என் மீது அதிகக் கண்டிப்புக் காட்டுவார்கள். அதனால், பொதுவாக எழுதுங்கள்..'' என்றார்.

''நண்பரே, நான் பல நாடுகள் போயிருக்கிறேன்; பல கஸ்டம்ஸ் பரிசோதனைகளுக்கு உள்ளாகி யிருக்கிறேன்; அந்த அனுபவத்தில் சொல் கிறேன்: சென்னை கஸ்டம்ஸ் அதிகாரிகள் மிகவும் தன்மையுடன்தான் நடந்து கொள்கிறார்கள். சட்டம் என்று ஒன்று இருக்கிறதல்லவா? அதற்குட்பட்டுத்தான் அவர்கள் பணியாற்ற வேண்டும்......'' என்றேன்.

''ஒருவேளை விமானத்தில் போகிறவர்களிடம் சரியாக நடந்து கொள் கிறார்களோ, என்னவோ? கப்பல் பிரயாணிகளின் கஷ்டம் சொல்லத் தரமன்று......'' என்று கூறி, 'என்னிடம் பேசிப் பயனில்லை' என்ற முடிவுடன் அப்பால் சென்று விட்டார் அந்தத் தமிழர்.

''இவ்வளவு அதிகமான பக்கங்களுடன் சிங்கப்பூரில் தமிழ் தினசரிப் பத்திரிகைகள் வெளி வருகின்றனவே, எப்படி முடிகிறது?'' என்று நண்பர் சாலியைக் கேட்டேன்.

உண்மையிலேயே எனக்கு ஆச்சரியம்தான். சிங்கப்பூர் தமிழ்ப் பத்திரிகைகள் கைக்குக் கனமாக இருக்கின்றன; சிறந்த விஷயத்தோடும் இருக்கின்றன.

''லாப நோக்கத்தில் இங்கு தமிழ்ப் பத்திரிகை நடத்த முடியாது. ஏதோ ஒரு லட்சியத்தோடுதான் வெளியிட்டுக் கொண்டிருக்கிறார்கள். சிங்கப்பூரில் ஆயிரக்கணக்கான தமிழர்கள் இருக்கின்ற போதிலும், தமிழ்ப் பத்திரிகை படிப்பவர்களின் எண்ணிக்கை குறைந்து வருகிறது. ஆனாலும் தமிழ் மக்களின் நலனைக் கருதி, நஷ்டத்தைப் பொருட்படுத் தாமல் சிலர் தினசரிப் பத்திரிகைகள் நடத்தி வருகிறார்கள்...'' என்றார் நண்பர் சாலி.

''பத்து பேருக்கு ஒரு பிரதி வாங்குவதாக இருந்தால் கூட விற்பனை நன்றாக இருக்குமே'' என்றேன்.

''இல்லையே! என்ன செய்வது? சிங்கப்பூரிலேயே 'ஸெட்டில்' ஆகிவிட்ட தமிழ்க் குடும்பங்கள் தமிழ்ப் பத்திரிகைகளில் அதிகக் கவனம் செலுத்துவ தில்லை. சிங்கப்பூருக்கும் தமிழ் நாட்டுக்கும் போய்வந்து கொண்டிருப்ப வர்கள்தான், பத்திரிகை படிக்கிறார்கள். அதற்குக் காரணம், இந்தியச் செய்திகளை, குறிப்பாகத் தமிழ் நாட்டுச் செய்திகளைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம்தான். உள்ளூர்த் தமிழ்க் குடும்பங்களில் வயதானவர்கள் தமிழ்ப் பத்திரிகை பார்க்கிறார்கள். இளைஞர்களிடம் அந்த ஆர்வம் இல்லை. ஆங்கிலக் கல்வி முறைதான் அதற்குக் காரணம்'' என்றார்.

''அது ஒன்றுதான் காரணமாக இருக்க முடியாது. வேறு ஏதாவது காரணம் இருக்க வேண்டுமே'' என்றேன் நான்.

''இருக்கிறது. தமிழ் நாட்டுப் பத்திரிகைகள் தமிழ் நாட்டில் வெளியாகும் சமயங்களிலேயே இங்கு வந்துவிடுகின்றன. தினசரிப் பத்திரிகைகளின் விமானப் பதிப்பும் கிடைக்கின்றன. இதனால்தான் சிங்கப்பூரில் ஒரு மாத இதழோ, வாரப் பத்திரிகையோ வெற்றிகரமாக நடத்த முடியவில்லை. தமிழ் நாட்டுப் பத்திரிகைகளுடன் போட்டி போட முடியாத ஒரு நிலைமை...''

சாலி இப்படிச் சொன்னதும், தமிழ் நாட்டுப் பத்திரிகைக்காரன் என்ற முறையில்எனக்குப் பெருமையாக இருந்தது. தொழில்துறையிலோ, கட்டடக் கலையிலோ சிங்கப்பூருடன் தமிழ் நாடு போட்டி போட முடியாவிட்டாலும், இலக்கியத்திலாவது அதை மிஞ்சி நிற்கிறதே என்ற பெருமைதான்.

சிங்கப்பூரிலும், மலேசியாவிலும் தமிழ் முரசு, தமிழ் மலர், தமிழ் நேசன் என்ற பெயரில் மூன்று தினசரிப் பத்திரிகைகள் வெளி வந்து கொண்டிருக்கின்றன. பலவிதமான செய்திகளையும் அந்தப் பத்திரிகைகளில் கண்டேன். உலகச் செய்திகளை அதிகமாகத் தருபவை, சிங்கப்பூர் தமிழ்ப் பத்திரிகைகள்தான் என்ற எண்ணம் எனக்கு ஏற்பட்டது.

நான் ஒவ்வொரு முறை சிங்கப்பூர் போகும்போதும் வி.ஐ.பி. ஆகிவிடுவேன். நண்பர்களுடன் எங்காவது வெளியே புறப்பட்டால் போதும், முன்பின் தெரியாதவர்கள் என்னைப் பார்த்துச் சிரிப்பார்கள், ''சௌக்கியமா?'' என்று விசாரிப்பார்கள்.

''சார், நீங்கள் வந்திருப்பதாகத் தமிழ் முரசில் செய்தி வெளியிட்டிருந்தார்கள். உங்கள் பிரயாணத் திட்டம் பற்றியும் அதிலிருந்துதெரிந்து கொண்டோம்'' என்று, சிராங்கூன் ரோட்டில், மார்க்கெட் ஸ்ட்ரீட்டில், அல்லது தஞ்சம்பகாரில் யாராவது ஒரு தமிழ்ச் சகோதரர் என்னிடம் சொல்லுவார். அதற்குப் பிறகுதான், தமிழ் முரசு, அல்லது வேறு தினசரிகளைப் பார்த்து என்னைப் பற்றி வெளிவந்த செய்திகளைக் கவனிப்பேன்.

முதல் பக்கத்தில், மூன்று அல்லது நான்கு 'கால' தலைப்பில் போட்டோவுடன் செய்தி வந்திருக்கும்.

நம் நாட்டில் அமைச்சர்களைப் பற்றியோ, அரசியல்வாதிகளைப் பற்றியோ முதல் பக்கத்தில் வெளியாகும் செய்திகளைப் பார்த்துப் பார்த்துப் பழகிப் போன எனக்கு, சிங்கப்பூர் செய்திப் பத்திரிகைகளின் இந்தச் செயல், சற்று வியப்பையே அளித்தது. என்னைப் பற்றி மட்டுமல்ல, தமிழ் நாட்டிலிருந்து பத்திரிகையாளர்கள், எழுத்தாளர்கள், கலைஞர்கள், அரசியல்வாதிகள் யார் சென்றாலும் சிங்கப்பூர் பத்திரிகைகள் முக்கியத்துவம் கொடுக்கின்றன. தமிழ் உணர்ச்சியும், பிணைப்பும்தான் இதற்கு முக்கிய காரணம் என்பதைப் புரிந்து கொண்டேன்.

இப்படி நஷ்டப்பட்டுக்கொண்டு பத்திரிகை நடத்தும் லட்சியவாதிகளைச் சந்திக்க வேண்டும் என்ற ஆவல் எனக்கு எழுந்தது.

யாரைச் சந்திக்கலாம் என்று விசாரித்தபோது, தமிழ்ப் பத்திரிகைத் துறைக்கு முன்னேடியாக இருக்கும் 'தமிழவேள்' அவர்களைச் சந்தியுங்கள் என்ற பதில் கிடைத்தது.

என்னை முதன் முதலில் 'தமிழவேள்' அவர்களிடம் அழைத்துச் சென்றவர், நண்பர் சாலிதான்.

மலேசியத் தமிழ் மக்கள் அன்புடனும், மதிப்புடனும் அழைக்கும் தமிழ்ப் பெருமகன், தமிழவேள் கோ. சாரங்கபாணி அவர்களை, அதன் பிறகு பல முறை சந்தித்திருக்கிறேன். ஓர் உயர்ந்த மனிதரைச் சந்திக்கிறோம் என்ற பெருமிதம் ஒவ்வொரு முறையும் எனக்கு ஏற்பட்டிருக்கிறது.

தமிழவேள் சாரங்கபாணி உயர்ந்த மனிதர்தான். நெடு நெடுவென்று வளர்ந்தவர். உயரத்திற்கேற்ற உடல்வாகு. செக்கச் சிவந்த மேனி, தலைமை தாங்கி நடத்திச் செல்லத் தகுதி படைத்தவர். தெளிந்த பேச்சு, புன்னகை பூத்த முகம். சிங்கப்பூர்த் தமிழ் சமூகத்தின் சரித்திரமாகவே தான் அவர் திகழ்கிறார் என்று எனக்குத் தோன்றியது.

திரு. சாரங்கபாணி, சிங்கப்பூர் தமிழ் மகன் என்றாலும், அவர் பிறந்தது திருவாரூரில்தான்.

"சிங்கப்பூருக்கு 1924-ல் வந்தேன். அதிலிருந்து எல்லாமே சிங்கப்பூர் தான். இடையில் ஒரு முறை மட்டும் இந்தியாவுக்கு வந்திருந்தேன்" என்று சொன்னார் அவர்.

"பத்திரிகைத் தொழிலில் நீங்கள் ஈடுபட்டதற்குக் காரணம் என்ன?" என்று கேட்டு, அவரிடமிருந்து விஷயங்களைக் கிரகிக்க முயன்றேன்.

"சிங்கப்பூர், மலாயா தமிழர்களுக்குத் தமிழ்ப் பத்திரிகை அவசியம் என்னும் நிலைமை அந்தக் காலத்தில் இருந்தது. இதனால் 1929-ல் 'முன்னேற்றம்' என்ற வாரப் பத்திரிகையைத் துவக்கினோம். பிறகு அதுவே வாரம் மூன்று முறை வெளி வந்தது. தினசரிப் பத்திரிகை ஒன்று தேவை என்பதை உணர்ந்தோம். 'தமிழ் முரசு' தினசரி துவங்கியது. ஆரம்பத்தில் 'தமிழ் தூதன்' என்னும் தினசரியையும் நடத்தியதுண்டு" என்றார் கோ. சா.

"ஆங்கிலப் பத்திரிகைகளையும் நீங்கள் நடத்தியதாகக் கேள்விப் பட்டேனே!"

"'சீர்திருத்தம்' என்ற பெயரில் ஒரு மாதப் பத்திரிகை நடத்தினோம். அதன் ஆங்கிலப் பதிப்பும் வந்தது. பெயர் 'ரிஃபார்ம்' (Reform). 'இந்தியன் டெய்லி மெயில்' என்ற ஆங்கில தினசரியைப் பல வருஷம் நடத்தினோம். நாற்பது ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு சிங்கப்பூர், மலாயா தமிழர்களிடம் விழிப்பு உணர்ச்சி இல்லை. வெள்ளையர்கள் ஆண்ட காலம். தமிழர்களைச் சீர்திருத்தம் செய்ய வேண்டிய தேவை இருந்தது. 1932-ல் 'தமிழர் சீர்திருத்த சங்க'த்தை ஏற்படுத்தினோம். ஏழு வருஷங்களுக்குப்

பிறகு, 1939-ல் அகில மலாயா தமிழர் மாநாடு ஒன்றைக் கூட்டினேம். சிங்கப்பூரிலிருந்த எல்லாத் தமிழ்ச் சங்கங்களேயும் இணைத்து, 'தமிழர் பிரதிநிதித்துவ சபை' என்ற அமைப்பு ஏற்படுத்தப்பட்டது'' என்று, பழைய நிகழ்ச்சிகளை யெல்லாம் நினைவு கூர்ந்து சொன்னர் திரு. சாரங்கபாணி.

''சிங்கப்பூரில் தமிழ், ஆட்சி மொழியாக இருக்கிறதே, இதற்காகத் தமிழ்ச் சமூகம் அந்தக் காலத்தில் போராடியிருக்கிறதா?'' என்று கேட்டேன்.

''இல்லே. பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் பெருந்தன்மையுடன் தமிழ் மொழிக்கு அந்தத் தகுதியை அளித்தார்கள். அதைக் கட்டிக் காப்பதற்கும், தமிழ் மொழி, தமிழ்க் கல்வியை வளர்ப்பதற்கும் இயன்ற பணிகளை நாங்கள் செய்தோம். பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பிரிவு அமைக்கப் பாடு பட்டோம். பலன் கிடைத்தது. தமிழ்ப் பிரிவு இப்பொழுது மலாயா பல்கலைக் கழகத்திற்கு மாற்றப்பட்டு விட்டது. சிங்கப்பூர் பல்கலைக் கழகத்திலும் தமிழ்ப் பிரிவு வேண்டும் என்று கோரி வருகிறோம். பட்டப் படிப்பிலும் தமிழ்க் கல்வி கற்கப்பட வேண்டும் என்று விரும்புகிறோம்'' என்றார் கோ. சா.

''தனியாகத் தமிழ்ப் பிரிவு ஏற்படுத்தினல், போதுமான மாணவர்கள் கிடைப்பார்களா?'' என்று கேட்டேன்.

''நிச்சயம் கிடைப்பார்கள். சிங்கப்பூரில் தமிழ் படிக்கும் மாணவர்கள் சுமார் 15,000 பேர் இருக்கிறார்கள். தமிழ் உயர்நிலைப் பள்ளி இருக்கிறது. பல்கலைக் கழகத்தில் தமிழ் படிக்க அவர்கள் விரும்பினல், சிங்கப்பூரைவிட்டு வெளியே போய்வர வேண்டிய நிலே இருக்கிறது. பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பிரிவு வேண்டும் என்பதைப் பெருமையின் அடையாளமாக நாங்கள் கேட்கவில்லை. இதைப் பிரதமர் லீ யிடமும் முன்பே கூறியிருக்கிறோம்'' என்றார் திடமான குரலில்.

திரு. கோ. சாரங்கபாணி 'தமிழர் திருநாள்' என்ற புதிய விழாவைச் சிங்கப்பூரிலும், மலாயாவிலும் ஏற்படுத்தி வெற்றிகரமாக நடத்தியவர் என்றும் சொன்னர்கள். இதுபற்றி அவருடன் பேசிக் கொண்டிருந்தேன்.

''இருபது வருஷங்களுக்கு முன்பு தமிழர் திருநாளைத் துவக்கினேம். மலாயாவிலும், சிங்கப்பூரிலும் குடியேறியிருந்த தமிழ் மக்கள் எதிர் காலத்தைப் பற்றி நிர்ணயிக்க முடியாத நிலையில் அப்பொழுது இருந்தார்கள். இந்த நாட்டையே நிலையான தாயகமாக்கிக் கொள்ள வேண்டும் என்பதில் அவர்கள் ஒரு முடிவுக்கு வர முடியாமல் இருந்தார்கள். அந்த மனப் போக்கை மாற்ற முயன்றோம். தமிழர்கள் இந்த நாட்டிலேயே வேரூன்றும்படிச் செய்யும் பணிதான், தமிழர் திருநாளின் அடிப்படை நோக்கம். 'இந்த நாடு நமது சொந்த நாடு' என்ற மனப்பான்மையைத் தமிழர்களிடம் தோற்றுவிப்பதில் தமிழர் திருநாள் வெற்றி பெற்றிருக்கிறது.

"வெவ்வேறு மதங்களைக் கடைப்பிடிக்கிற தமிழர் அனைவரும் ஆண்டுதோறும் ஒரு நாளில் ஒன்றுகூடும் பொருட்டு, மதச்சார்பற்ற அடிப்படையில் தமிழர் திருநாள் ஏற்படுத்தப்பட்டது. தங்கள் எதிர் காலத்தை ஆராய்ந்து திட்டமிடவும், குடிமக்கள் என்ற முறையில் நாட்டி லுள்ள மற்ற சமூகத்தினருடன் இணைந்து முன்னேறிச் செல்வதற்குத் தேவையான திருத்தம் எதையும் செய்து கொள்ளவும், தமிழர் திருநாள் வாய்ப்பு அளித்தது. கல்வித் துறையில் தமிழர்களின் போக்கை மாற்று வதில் இந்த விழா பெரிதும் வெற்றி பெற்றிருக்கிறது" என்றெல்லாம் விளக்கமாகக் கூறினர்.

சிங்கப்பூர் தமிழர்களைப் பற்றி, மொழியைப் பற்றி, கல்வியைப் பற்றி திரு. சாரங்கபாணி அவர்களிடமிருந்து பலவற்றைத் தெரிந்து கொண் டேன். சிங்கப்பூரிலும், மலேசியாவிலும் தமிழ் மொழியை வளர்ப் பதிலும், தமிழ் எழுத்தாளர்களை உருவாக்குவதிலும் 'தமிழ் முரசு' எந்த அளவுக்குப் பெரியதொரு சக்தியாக இருந்திருக்கிறது என்பதை உணர்ந் தேன். தமிழ் முரசில் பணி புரிந்த பலர், இன்று பத்திரிகை ஆசிரியர்களா கவும், ரேடியோ, டெலிவிஷன், தகவல்துறை அதிகாரிகளாகவும் விளங்குவதைக் கண்டேன். 'தமிழ் நேசன்' ஆசிரியர் திரு. முருகு சுப்பிர மணியம், 'தமிழ் மலர்' தினசரியின் ஆசிரியர் திரு. செல்வகணபதி முதலான பத்திரிகையாளர்களை நான் சந்தித்தபோது, தமிழ் முரசில் பணியாற்றியதை நினைவு கூர்ந்தார்கள்.

# 26

தமிழவேள் திரு. கோ. சா. அவர்களுடன்...

**த**மிழவேள் சாரங்கபாணி புதுமையான ஒரு மனிதர். வெள்ளை வெளேரென்று வேட்டியும் முழுக்கைச் சட்டையுமாக எப்பொழுதும் இருக்கிறார். நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக சிங்கப்பூரில் இருக்கும் அவர், மற்ற இன மக்களாலும் மதிக்கப்படுகிறார். பல நாட்டு மக்கள் ஒன்று சேர்ந்து வாழும் சிங்கப்பூர் சமுதாயத்திற்கு அவர் ஓர் உதாரணம். அவருடைய மனைவி ஒரு சீனப் பெண்மணி.

ஒரு நாள் சாரங்கபாணி அவர்களின் வீட்டிற்குச் சென்றிருந்தேன். திருமதி சாரங்கபாணி வரவேற்றார். அழகாக ஆங்கிலத்தில் பேசினார். வீட்டில் அவர்கள் உரையாடுவதெல்லாம் ஆங்கிலத்தில்தான். மலாய் மொழியும் பேசுகிறார்கள். கலகலப்பாக அந்த அம்மணி பேசினார்:

''என்ன சாப்பிடுகிறீர்கள்?''

''ஒன்றும் வேண்டாம். உங்கள் வீட்டிற்கு வந்து எல்லோரையும் பார்க்க வேண்டும் என்ற ஆசை. அவ்வளவுதான்.''

''வீட்டிற்கு வருபவர்களை உபசரிக்காமல் அனுப்பும் பழக்கம் எங்கள் நாட்டில் கிடையாது. ஏதாவது 'டிரிங்ஸ்' கொண்டு வருகிறேன்.''



''இப்பொழுதுதான் மெக்பர்ஸனில் உங்கள் ஊர் தோசையை ஒருகை பார்த்துவிட்டு வருகிறேன். கொஞ்சம் தண்ணீர் வேண்டுமானுல் கொடுங்கள்.''

''ப்ளெயின் வாட்டர் ஒன்லி? ஒகே...!'' என்று சொல்லிக்கொண்டு உள்ளே சென்ருர் திருமதி சாரங்கபாணி. அவர் உடுத்திக் கொள்வது சாரோங்-கெபாயா. அவரை ஒரு சீன மாதாக நான் பார்க்கவில்லை. சிங்கப்பூர் பெண்மணியாகவே கண்டேன்.

''ஐயா, நீங்கள் தமிழ் நாட்டிற்கு எப்பொழுது வருகிறீர்கள்? எங்களை யெல்லாம் 'முரசு' கொட்டி வரவேற்கும் உங்களை, தமிழ் நாட்டில் வரவேற்கும் ஒரு வாய்ப்பை அளிக்க மாட்டீர்களா?'' என்று கேட்டேன்.

''வரவேண்டும் என்ற விருப்பம்தான். ஆனுல்...'' என்று திரு. சாரங்கபாணி இழுத்தார்.

திருமதி சாரங்கபாணி குறுக்கிட்டுப் பேசினுர்:

''இவரைப் போய் அழைக்கிறீர்களே! வந்த மாதிரிதான் போங்கள். பக்கத்திலிருக்கும் கோலாலம்பூருக்குக் கூட நகரமாட்டேன் என்கிருர். இவர் வெளிநாட்டுக்கா வரப் போகிருர்!'' என்ருர்.

''அப்படிச் சொல்லாதீர்கள். நீங்களும் ஐயாவும் குடும்பமும் ஒரு முறை எங்கள் நாட்டுக்கு வரவேண்டும். என்ன சொல்கிறீர்கள்?''

''பார்க்கலாம். ஐயா அசைய வேண்டுமே! வீடு, ஆபீஸ், பத்திரிகை, புத்தகம் இதுதான் இவர் உலகம். இதோ பாருங்கள், இப்பொழுதுகூட கையில் புத்தகத்தைத்தான் வைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிருர். ஒரு சினிமா, நாடகம் என்று கிளம்புவதில்லை. சதா பத்திரிகையைப் பற்றித்தான் நினைப்பு. ஆஸ்க் மிஸ்டர் சாலி. ஹி நோஸ் ஹிம் வெல்!'' என்று சொல்லியவாறு சிரித்தார்.

சாலியும் சிரித்துக் கொண்டார். (தமிழ் முரசில் பல ஆண்டுகள் பணியாற்றிய திரு. சாலி, இப்பொழுது விகடன் குடும்பத்தில் ஒருவர்.)

கணவர்மேல் பிணக்கு ஏற்பட்டவர் போல் அந்த அம்மையார் அப்பொழுது பேசினுர். உண்மையில் அது அந்நியோந்நியமே! மனம் ஒன்றிய தம்பதியராக அவர்கள் நடத்திவரும் வாழ்க்கையைப் புரிந்து கொண்டேன்.

''உங்கள் குழந்தைகள்...?''

''ராஜாராமன் ஆஸ்திரேலியாவில். ஜெயராமனும், ஜானகிராம னும் லண்டனில். பலராமன் சிங்கப்பூரில் படித்துக் கொண்டிருக்கிருன்.''

சாரங்கபாணி தம்பதியருக்கு இரு புதல்விகள்.

கம்பீரமும், களையும் பொருந்திய திரு. கோ. சா. அவர்களின் முகத்தைப் பலமுறை கூர்ந்து பார்த்தேன். மனம்விட்டு அவர் பேசினுர். முகத்தில் புன்னகைச் சுவடு இருக்கிறது என்ற உணர்வு எனக்குப் புலப்பட்டது. ஆனுல் அதையும் மீறி ஒரு சோகம் அவருள்ளே மறைந்து கிடக்கிறது என்று நான் நினைத்தேன். அது சரியான அநுமானம் என்பதைப் பிறகுதான் புரிந்து கொண்டேன்.

சில வருடங்களுக்கு முன்பு நிகழ்ந்து போன ஒரு சோகத்தை அவரால் மறக்க முடியவில்லை.

ஒரு நாள் முற்பகலில், திரு. சாரங்கபாணி, அலுவலகத்தில் இருந்த போது, டெலிபோன் வந்தது. அதிர்ச்சியுடன் அவர், காரில் புறப்பட்டுப் போனார். அவருடைய மருமகன் டாக்டர் பாஸ்கரன், கார் விபத்தில் சிக்கி விட்டதாகச் செய்தி கிடைத்தது. விபத்தில் அந்த இளம் டாக்டர் உயிர் துறந்திருப்பார் என்று திரு. கோ. சா. எண்ணவில்லை. மருத்துவமனைக்குச் சென்ற போது கூட அவர் அப்படி நினைக்கவில்லை. வெள்ளைத் துணி போர்த்தப்பட்ட நிலையில் பாஸ்கரன் கிடத்தப்பட்டிருந்தார். 'டாக்டர் நம்மைவிட்டுப் போய்விட்டார்' என்று அங்கிருந்தவர்கள் கூறியபோது நிலைகுலைந்து, முதல் முறையாக அழுது துடித்தார் அந்தப் பெருமகன். குலையாத மன உறுதி படைத்த கோ. சா. அன்றுதான் அழுது புலம்பினார்.

பாஸ்கரன் இளம் டாக்டர். சென்னையில் படித்து முடித்ததும், சிங்கப் பூருக்கு அழைத்துக் கொண்டார். தமது புதல்வி ராதாவுக்கும் பாஸ்கர னுக்கும் சிங்கப்பூரில் சிறப்பாகத் திருமணம் நடத்தினார். இரண்டு ஆண் குழந்தைகளுக்கு டாக்டர் பாஸ்கரன் தந்தை. ஐந்து ஆண்டுகள் கூட வாழவில்லை; பாஸ்கரனின் கதை முடிந்து விட்டது.

இந்தச் சோகம் கோ. சா. அவர்களை எந்த அளவுக்கு அலைக்கழித் திருக்கிறது என்பதை நான் உணர்ந்து கொண்டேன்.

நான் சிங்கப்பூர் செல்லும் போதெல்லாம் பெரியவர் சாரங்கபாணியைச் சந்திக்கிறேன். அவர் சிங்கப்பூர் தமிழ் சமூகத்திற்கு முன்னோடி. திறன்மிக்க தலைவர். பண்பட்ட பத்திரிகையாளர், நல்ல குடும்பத் தலைவர்.

''தமிழ் நாட்டிற்கு வந்து செல்லுங்கள்'' என்று ஒவ்வொரு முறை யும் நான் அவரிடம் சொல்வதுண்டு. ஒரு நாள் அவர் வரக்கூடும் என்றே நினைக்கிறேன்.

''இருபத்தாறு நிமிஷங்களுக்கு ஒரு வீடு வீதம் கட்டி முடிக்க எங்கள் அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறதே, அது உங்களுக்குத் தெரியுமா மிஸ்டர் மணியன்?'' என்று கேட்டார் திரு. ராமலிங்கம்.

''என்ன புதிர் போடுகிறீர்கள்? குழந்தைகள் மண் வீடு கட்டி விளை யாடும் விஷயம் என்ற நினைப்போ? இருபத்தாறு மாதங்களில் கூட எங்கள் நாட்டில் சில வீடுகள் கட்டி முடிக்கப்படுவதில்லை என்பது உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டேன் நான்.

''உங்களுக்கு வேடிக்கையாகத் தோன்றலாம். நம்ப முடியாதது போல் இருக்கலாம். ஆனால், உண்மை அதுதான். வீடமைப்புத் துறையில் சிங்கப்பூருடன் எந்த நாடும் போட்டி போட முடியாது. அந்த அளவுக்கு அபிவிருத்தி கண்டிருக்கிறோம். முன்பு நாற்பத்தைந்து நிமிஷத்திற்கு ஒரு வீடு கட்டப்பட்டது. இப்போது சிங்கப்பூர் புதிய சாதனைக்குத் தயாராகிக் கொண்டிருக்கிறது.

காரை ஓட்டிக் கொண்டே நண்பர் ராமலிங்கம் அநாயாசமாகப் பேசினார். நான் அவரையே பார்த்தேன்.

"என்ன மிஸ்டர் மணியன், மௌனமாகி விட்டீர்கள்?" என்றார் அவர்.

"புள்ளி விவரங்களை நீங்கள் அள்ளி வீசுவதைப் பார்த்து அசந்து விட்டேன்" என்றேன்.

"புள்ளி விவரங்கள் எதையும் நான் இன்னும் கூறவில்லை. வேண்டுமானால் சொல்கிறேன். அதெல்லாம் இங்கு எல்லோருக்கும் அத்துப்படி" என்றார்.

சிங்கப்பூர் அரசாங்கம் இத்தனை வேகமாக எப்படி விடுகளைக் கட்டுகிறது? இந்த விடுகளிலெல்லாம் மக்கள் எப்படி வாழ்கிறார்கள்? போதிய வாழ்க்கை வசதிகள் அவற்றில் இருக்குமா? இதையெல்லாம் நேரில் பார்த்து அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் எனக்கு எழுந்தது. ஒரு ஹவுஸிங் எஸ்டேட்டுக்குச் சென்று, சில குடும்பங்களைச் சந்திப்பது பற்றி யோசித்துக் கொண்டிருந்தபோது, திரு. ராமலிங்கம், ஓட்டலுக்கு வந்தார். அவரிடம் விஷயத்தைச் சொன்னபோது, தாமாகவே ஓர் எஸ்டேட்டுக்கு அழைத்துச் செல்ல முன் வந்தார்.

27

பாம்புடன் விளையாடும் ராமலிங்கம்

ராமலிங்கத்தை அதற்கு முன் நான் பார்த்ததில்லை. பத்திரிகையில் என்னைப் பற்றி வெளியாகியிருந்த செய்தியைப் பார்த்துவிட்டு, என்னைச் சந்திக்க வந்தவர், நெடுநாள் பழகியவர் போல் பேச ஆரம்பித்து விட்டார். நானும் தஞ்சாவூர் ஜில்லாவாசி என்பது ஒரு காரணம். தான் கும்பகோணத்தில் படித்ததையும், காவிரியில் படகு விட்டதைப் பற்றியும் நினைத்து நினைத்து அசை போட்டார். நன்றாக ஆங்கிலம் பேசினார்.

''சிறப்பாக ஆங்கிலம் பேசுகிறீர்களே......கும்பகோணம் கல்லூரியில் படித்தீர்களோ?'' என்று கேட்டேன்.

''அங்கே காலேஜில் படித்து வந்த ஆங்கிலப் பயிற்சி அல்ல இது. பிரிட்டிஷ் விமான தளத்தில் எனக்கு வேலை. ஆங்கிலம் இல்லாமல் ஒன்றும் செய்ய முடியாது. இடையில் கொஞ்ச காலம் லண்டனில் இருந்தேன். அங்கு நான் பேசியதைப் பார்த்துவிட்டு 'நீங்கள் எந்த நாட்டைச் சேர்ந்தவர்கள்?' என்றார்கள். 'சிங்கப்பூர்' என்றதும் சிரித்துக் கொண்டார்கள்.



'ஓ, அதுதானே பார்த்தோம்! உங்கள் பேச்சில் லீ குவான் இயூவின் சிங்கப்பூர் வாடை வீசுகிறது' என்றார்கள்.''

ராமலிங்கம் சிரித்துக் கொண்டே பேசியபடி, காரை ஓட்டினார்.

மெக்பர்ஸன் சாலையில் கார் சென்று கொண்டிருந்தது.

''இப்போது எங்கே போய்க் கொண்டிருக்கிறோம்?'' என்று கேட்டேன்.

''நம் வீட்டுக்கு! ஓட்டலில் இருந்தபோதே, உங்களை வீட்டிற்கு அழைத்து வருவதாக என் மனைவிக்கு டெலிபோன் செய்து விட்டேனே, நீங்கள் கவனிக்கவில்லையா?'' என்றார்.

''இல்லை'' என்றேன். உண்மையில் நான் கவனிக்கவில்லை. என் அறையிலிருந்து நிறைய போன் செய்து கொண்டிருந்தார் ராமலிங்கம். நான் அதைக் கவனிக்கவில்லை. சென்னையாயிருந்தால் கவனித்திருப்பேன். ஒவ்வொரு 'காலு'க்கும் பணம் உண்டே. சிங்கப்பூரில் 'லோகல் காலு'க்குப் பணம் கிடையாது. டெலிபோன் இருந்தால், இனமாகப் பேசலாம்.

''அப்படி யென்றால், ஹவுஸிங் எஸ்டேட்டுக்கு நாம் போக வில்லையா?'' என்று கேட்டேன்.

''போய்க் கொண்டுதானே இருக்கிறோம்! மிஸ்டர் மணியன், என்னை பங்களாவாசி என்று நினைத்துக் கொண்டுவிட்டீர்களோ? நானும் 'பிளாட்' வாசிதான். அரசாங்கத்தின் அடுக்கு மாடி வீட்டில்தான் வசதியோடு வாழ்ந்து கொண்டிருக்கிறேன். என் வீட்டைப் பார்த்தால், மெக்பர்ஸன் எஸ்டேட்டைப் பார்த்த 'மாதிரிதான்'' என்று கூறியபோது, உற்சாக மடைந்தேன் நான்.

ஒரு துணை நகரம் போல் விளங்கும் மெக்பர்ஸன் வீடமைப்பு பேட்டைக்குள் கார் நுழைந்தது. சாலையின் இருபுறமும் பசும்புல் தரை; சிறு சிறு மரங்கள் வேறு.

''மிஸ்டர் மணியன், இதுதான் நமது பிளாக்!'' என்றவாறு, கார் பார்க்கில் வண்டியை நிறுத்தினார் ராமலிங்கம். அவ்வளவுதான், நாலைந்து சில இளைஞர்கள் அவரை நோக்கி ஓடி வந்தார்கள். நான் ஒரு கணம் பயந்து போனேன்.

ஓர் இளைஞன் ஒரு பாம்புக் குட்டியை அவரிடம் கொடுத்தான். கையில் வாங்கியவர் அதைத் தடவிப் பார்த்தார். தலையைப் பார்த்தார்.

''நோ குட் மேன்......நோ யூஸ்'' என்று சொல்லியபடி, பாம்புக் குட்டியைத் திருப்பிக் கொடுத்தார் அந்த இளைஞனிடம்.

''பாம்போடு விளையாடுகிறீர்களே'' என்றேன்.

''இது பல வருஷத்து விளையாட்டு'' என்று கூறியவாறு லிப்டில் ஏறினார். நான் பின்தொடர்ந்தேன்.

ராமலிங்கத்தின் பிளாட்டுக்கு வந்ததும், தித்திக்கும் பாடல் ஒன்று செவியில் மோதியது. 'தித்திக்கும் பாலெடுத்து தெய்வத்தோடு கொலு

விருந்து' என்ற பாடலுக்கு யாரோ நாட்டியமாடும் ஓசை கேட்டது. அடுக்கு மாடி விட்டில் நாட்டியமா? இதுவாவது பரவாயில்லை. இன்னொன்றைப் பார்த்ததும், இங்கே ஏன் வந்தோம் என்ற பயமே ஏற்பட்டது எனக்கு.

பாம்பு, பாம்பு, பாம்பு!

எங்கு பார்த்தாலும் பாம்புகள்.

'இது விடா, பாம்புப் பண்ணையா!' என்று எனக்குப் புரியவில்லை. அவரிடம் கேட்டே விட்டேன்.

''பயப்படாதீர்கள் மணியன். இதெல்லாம் எனக்குக் குழந்தைகள் மாதிரி. விசேஷ கவனத்துடன் வளர்த்து வருகிறேன்'' என்றார்.

சோபாவில் உட்காரவே எனக்கு நடுக்கம். அதற்குப் பின்னேயோ அடியிலோ பாம்பு இருக்குமோ என்ற பயம். காலைத் தூக்கி மேலே வைத்துக் கொண்டேன். அருகில் ஒரு பெரிய கண்ணாடித் தொட்டியில் ஒரு பாம்பு, வரிசையாக வைக்கப்பட்டிருந்த கண்ணாடி பீரோக்களில் பாம்புக் குட்டிகள். இன்னும் பாடம் செய்து வைக்கப்பட்டிருந்த பாம்புகள்! எதிரே பாம்புகளின் படங்கள். எந்தப் பக்கம் திரும்பினாலும் பாம்பு, அல்லது பாம்பின் படங்கள். நான் சிலையாக உட்கார்ந்திருந்தேன்.

தித்திக்கும் பாடலை என்னால் ரசிக்க முடியவில்லை. நான் அவஸ்தைப் படுவதைப் பார்த்து, ராமலிங்கம் சிரித்தார்.

''ஜெயா......ஜெயா'' என்று அவர் அழைத்ததும், அறைப் பக்கத்திலிருந்து வந்தார் ஒரு பெண்மணி. நல்ல வேளை, அவர் கையில் பாம்பு எதுவும் இல்லை.

''இவள்தான் என் மனைவி ஜெயலட்சுமி'' என்று அவரை அறிமுகப் படுத்தி விட்டு, ''பாம்புகளைப் பார்த்து மணியன் பயந்து விட்டார்'' என்றார்.

''படையே நடுங்கும் ஐயா'' என்றேன்.

உள்ளே பாட்டு நின்றது. இரண்டு பெண் குழந்தைகள் வெளியே வந்தார்கள்.

''இவள் மூத்த மகள் மலர்விழி. இவள் அருண்மொழி. அருண், பாம்பு விஷயத்தில் என்னைவிட எக்ஸ்பர்ட்'' என்று, இருவரையும் அறிமுகப்படுத்தினார். மூன்று நான்கு பேர் அந்த அறைக்குள் வந்து விட்டதால், எனக்கு பாம்பு பயம் சற்றே தெளிந்தது.

''விமான தளத்தில் வேலை பார்க்கும் உங்களுக்குப் பாம்பு விஷயத்தில் எப்படி ஈடுபாடு ஏற்பட்டது?'' என்றேன்.

''ஜெயலட்சுமிதான் காரணம். ஜெயா, கல்லூரியில் விலங்கு நூல் படித்துக் கொண்டிருந்த சமயம். பாம்பு சம்பந்தமாக சில தகவல்களைக் கேட்டாள். நான் ஒரு பாம்பையே பிடித்துக் கொண்டு வந்து கொடுத்தேன். அதிலிருந்து நான் பிடித்துள்ள பாம்புகளுக்குக் கணக்கே இல்லை. சிங்கப்பூரில் எங்காவது பாம்பு இருந்தால் எனக்கு போன் வரும்'' என்றார்.

''உங்கள் மனைவி மீது உங்களுக்குள்ள காதலின் வேகம் நன்ருகப் புரிகிறது. நல்ல வேளை, என் மனைவி இப்படியெல்லாம் கேட்பதில்லை. கொஞ்சம் 'ஆர்ட்டிபிஷியல் ஜ்வல்ஸ்' வாங்கிக் கொடுத்தால் போதும்; பாம்பு, தேள் ஒன்றும் கேட்கமாட்டாள்......'' என்றேன். ராமலிங்கம் சிரித்துக் கொண்டார்.

ஆறு வயதேயான அருண்மொழி, பாம்போடு விளையாடிக் கொண்டிருந்தாள். எனக்கென்னவோ அச்சமாகத்தான் இருந்தது.

''குழந்தைகளுக்கு விளையாடுவதற்குப் பொம்மை கொடுக்கிருேம் அல்லவா? அது மாதிரி என் மகளுக்கு இந்தப் பாம்புகளைக் கொடுத்திருக்கிறேன். அமெரிக்காவிலும் ஜப்பானிலும் அருண்மொழியைப் பற்றிய பேட்டிகள் பத்திரிகைகளில் வந்திருக்கின்றன.''

''உங்களுக்கு இதில் இன்ட்ரஸ்ட் உண்டா?'' என்று திருமதி ராமலிங்கத்தைக் கேட்டேன்.

''இல்லை, இல்லை. நான் இந்தப் பாம்புகளைத் திரும்பிக் கூடப் பார்ப்பதில்லை. ஒரு முறை மட்டும் தொட்டுப் பார்த்தேன். ஜப்பானிலிருந்து டெலிவிஷன் படம் எடுக்க வந்திருந்தார்கள். ஒரு பாம்பைத் தொட்டபடி நிற்கும்படி அவர்கள் கேட்டுக் கொண்டதால், தொட நேர்ந்தது.இவர் இதில் ஈடுபடுவது எனக்கு அடியோடு பிடிக்கவில்லை. வீடு நிறைய பாம்பு இருப்பதால், நண்பர்கள் கூட வீட்டிற்கு வரப் பயப்படுகிருர்கள்'' என்ருர் திருமதி ஜெயா. அவர் சென்னையில் பி. எஸ்ஸி., படித்தவர். சிங்கப்பூர் உயர்நிலைப் பள்ளியில் விஞ்ஞான ஆசிரியையாகப் பணியாற்றுகிருர்.

''பாம்பு ஆராய்ச்சி எதுவும் செய்கிறீர்களோ?'' என்று கேட்டேன் ராமலிங்கத்திடம்.

''மலேசியா, சிங்கப்பூர் பாம்புகளைப் பற்றி, தமிழ் முரசு பத்திரிகையில் ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதினேன். இப்போது ஒரு புத்தகம் எழுதிக் கொண்டிருக்கிறேன்.சிங்கப்பூர் டெலிவிஷனில் பாம்புகளைப் பற்றி டெமான்ஸ்ட்ரேஷன் செய்திருக்கிறேன். அமெரிக்கப் பாம்பு நிபுணர்கள் பலர் என்னைப் பார்த்துச் சென்றிருக்கிருர்கள். இனி,சிங்கப்பூரில் பாம்பு ஆராய்ச்சி செய்ய வாய்ப்பு இல்லை. குடும்பத்துடன் லண்டனுக்குக் குடியேறப் போகிறேன். இந்தப் பாம்புகளையும் எடுத்துப் போக வேண்டும்'' என்ருர்.

''பாம்புப் பண்ணையைப் பார்த்தது போதும், உங்கள் வீட்டைக் காட்டுங்கள்'' என்றேன்.

வீட்டைச் சுற்றிக் காட்டினுர். ''இது இரண்டு அறை வீடு. இதோ, இரண்டு அறைகள். பக்கத்தில் சமையல் கட்டு, அதற்கு அப்பால் இருப்பது பாத்ரூம். மூன்று நான்கு அறை வீடுகளும் உண்டு. ஹவுஸிங் போர்டு இப்போது கட்டுவதெல்லாம் 'இம்ப்ருவ்ட் டைப் பிளாட்ஸ்'! மூன்று அல்லது நான்கு அறை உள்ள வீடுகளையே இப்போது மக்கள் விரும்புகிருர்கள்.''

''இது சொந்த வீடா? இல்லை, வாடகை வீடா?''

''வாடகைக்குத்தான் ஆரம்பத்தில் குடியிருந்தோம். பிறகு, விலைக்கு வாங்கி விட்டோம். பிராவிடெண்ட் பண்டிலிருந்து வீடு வாங்கிக் கொள்ள அரசாங்கம் அனுமதிக்கிறது. அதைக் கொண்டுதான் இந்த வீட்டை வாங்கினேன். வேண்டாம் என்றால், வேறு யாருக்கும் மாற்றிக் கொடுத்து விட வசதி இருக்கிறது. சிறு குடும்பங்களுக்கு இந்த மாதிரி வீடு போதும்'' என்றார்.

அவரை அழைத்துக் கொண்டு அந்த வரிசையிலுள்ள சில வீடுகளைச் சென்று பார்த்தேன். எல்லா வீடுகளும் தாழிடப் பட்டிருந்தன. வாசலுக்குச் சென்று கூப்பிட்டால்தான், கதவைத் திறந்து விடுகிறார்கள், அதுவும் யார் என்று விசாரித்த பிறகு.

''அடுக்கு மாடித் தொகுதிகளில் வீட்டுச் சொந்தக்காரர்கள் மட்டுமின்றி, வெளியார் நடமாட்டமும் உண்டு. இதனால்தான் எல்லோரும் எச்சரிக்கையாக இருக்கிறார்கள்'' என்றார்.

இந்த வீடுகளில் போதிய பாதுகாப்பு இல்லை, பிரைவஸிக்கும் இடமில்லை. அடுக்கு மாடி வீடுகளில் உள்ளவர்களைக் 'கைதிகள்' என்று அமெரிக்கர்களில் ஒருவர் குறிப்பிட்டு, 'இந்தக் கைதிகளை விடுதலை செய்யுங்கள்' என்று சொன்னதை நினைத்துக் கொண்டேன்.

இருப்பினும் வீடமைப்புத்துறையில் சிங்கப்பூர் அரசு செய்துள்ள சாதனை மகத்தானது. போதிய அளவுக்கு நில வசதி இல்லாத நாட்டில் இதைவிடச் சிறப்பாக எதுவும் செய்து விட முடியாது. குடிசைகளில் குறைந்த வசதிகளுடன் இருப்பதைவிட, இந்த மாதிரி அடுக்கு மாடி வீடுகளில் இருப்பது ஆயிரம் மடங்கு மேல் என்று தோன்றியது.

சிங்கப்பூரின் வீடமைப்பு வளர்ச்சியையும், அவை நிர்வகிக்கப்படும் முறை, நிதி வசதிகள் ஆகியவற்றையும் கண்டறிந்து வருவதற்காக அண்மையில் சிங்கப்பூருக்குச் சென்று வந்த தமிழ் நாடு குடிசை மாற்று வாரியத்தின் தலைவர் திரு. ராம அரங்கண்ணலைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தேன்.

குடிசை மாற்று வாரியத்தின் பணிகளும், சிங்கப்பூர் வீடமைப்பு வளர்ச்சிக் கழகத்தின் பணிகளும் கட்டட நிர்மாண முறையைப் பொறுத்தவரையில் ஒரே மாதிரியானவை அல்ல என்று அவர் சொன்னார்.

''வீடமைப்புப் பிரச்னை உள்ள நாடுகள் உலகில் இரண்டே இரண்டு தான். ஒன்று சிங்கப்பூர், மற்றது இஸ்ரேல். சிங்கப்பூர் வெற்றிகரமாகப் பிரச்னையைத் தீர்த்துக் கொண்டிருக்கிறது'' என்று அரங்கண்ணல் குறிப்பிட்டார்.

''சிங்கப்பூர் முறைகளைக் குடிசை மாற்று வாரியம் பின்பற்றுமா?'' என்று நான் கேட்டேன்.

''அதற்கு அவசியம் இல்லை. 'உங்கள் நாட்டுக்கு எங்கள் முறை தேவையில்லை. உங்களிடம் நிரம்ப நிலம் இருக்கிறது. இடப் பற்றாக் குறையினால்தான் இத்தனை உயரமாக நாங்கள் அடுக்கு மாடி வீடுகளைக் கட்டிக் கொண்டு போகிறோம்' என்று சிங்கப்பூர் அதிகாரிகள் சொன்னார்கள்'' என்றார்.

“பத்து மாடி, இருபது மாடி என்று வீடுகளைக் கட்டும் உத்தேசம் இல்லை என்று சொல்கிறீர்கள், அல்லவா?” என்றேன்.

“ஆமாம். நாலு மாடிக்கு மேல் உயரமாக நாங்கள் கட்டப் போவதில்லை. சிங்கப்பூரில் அப்படிக் கட்டுகிறார்கள் என்றால், நிலப் பற்றாக் குறையே அடிப்படைக் காரணம் என்பதை மறந்து விடக் கூடாது. மற்றொரு விஷயம்...அவர்கள் ஒவ்வொரு வீடமைப்புப் பேட்டையையும் துணை நகரமாக (Satellite Town) உருவாக்கி விடுகிறார்கள். குடிசைகளை அகற்றி, குடிசை வாசிகளை அந்தத் துணை நகரங்களில் குடியேற்றி விடுகிறார்கள். நாம் அப்படிச் செய்யவில்லை. அவரவர் வசிக்கும் இடத்திலேயே வீடு கட்டிக் கொடுக்கிறோம். அவர்கள் எதை விரும்புகிறார்களோ, அதைக் கேட்டுக் கொள்கிறோம். ‘நீங்கள் சொல்லுங்கள், நாங்கள் கேட்கிறோம்’ என்பதே இப்பொழுது எங்கள் அரசின் கொள்கை. முன்பெல்லாம் ‘நாங்கள் சொல்கிறோம், நீங்கள் கேட்டுக் கொள்ளுங்கள்’ என்ற நிலைமை இருந்தது. அதை மாற்றி விட்டோம்” என்றார் அரசியல்வாதி அரங்கண்ணல்.

“சிங்கப்பூர் அடுக்குமாடி வீடுகளில் ‘பிரைவஸி’ இல்லை என்பதை நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா?” என்று வினவினேன்.

“உண்மைதான், மிஸ்டர் மணியன். அடுக்கு மாடி வீடுகளின் நீண்ட தாழ்வாரத்தை (Corridor) பார்க்கும்போது வீடு, வாசல்படி, கதவுகள் நமக்குத் தென்படுவதில்லை. ஏதோ ஒரு பொது இடத்தைப் பார்ப்பது போல் தோன்றும். இதனால் சிங்கப்பூரின் வீடமைப்பு அபிவிருத்தியைக் குறைத்து மதிப்பிட முடியாது. மற்ற வசதிகள் அங்கு அதிகம். அடுக்கு மாடி வீடுகள் எவ்வளவு உயரமோ, அந்த அளவுக்குக் கீழே விளையாட்டுக்கும் இதர தேவைகளுக்கும் நிலம் ஒதுக்கி யிருக்கிறார்கள்” என்றார் திரு. அரங்கண்ணல்.

“வீடுகள் ஒதுக்கீடு செய்வதில் சிங்கப்பூரில் சிபாரிசு, செல்வாக்கு எதுவும் செல்லுபடியாகாது என்று சொன்னார்கள். இதைப் பற்றிக் கேள்விப்பட்டீர்கள், அல்லவா?” என்று கேட்டு வைத்தேன். இக்கேள்வியின் பொருளைப் புரிந்து கொண்ட அரங்கண்ணல் சிரித்துக் கொண்டார். பிறகு—

“நிச்சயமாகக் குடிசை மாற்று வாரியமும் இந்த விஷயத்தில் மிகக் கண்டிப்பாக நடந்து கொள்கிறது. சிபாரிசுகளுக்கு நாங்கள் செவி சாய்ப்பதில்லை. வீடுகளை ஒதுக்கீடு செய்வதில் ஒரு திட்டவட்டமான முறையைப் பின்பற்றுகிறோம். முதலிலேயே சர்வே எடுத்து விடுகிறோம். அப்பொழுது வீடு கொடுக்கப்பட வேண்டியவரின் புகைப் படத்தை எடுத்து, ஒரு சிறு கைப் புத்தகத்தில் ஒட்டி வைத்து, விவரங்களைக் குறித்து விடுவோம். வரிசைப்படி அவர்களுக்கு வீடு கிடைக்கும். வாடகை வசூலிப்பது, அந்நியர்கள் குடியிருக்காமல் கண்காணிப்பது, இப்படி எல்லா விஷயத்திலும் கண்டிப்பாக நடந்து கொள்கிறோம்” என்று திரு. அரங்கண்ணல் கூறினார்.

# 28

'கண்ணன் நமது வழிகாட்டி' சங்கத்தில் ஒரு நாள்

''சிங்கப்பூர் பிரஜைகளான இந்துக்கள் எப்படி வாழ்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன். நாடு விட்டு நாடு போனாலும் சில மக்களின் நம்பிக்கைகள் மாறுவதில்லை என்பதைக் கவனித்திருக்கிறேன். அப்படி ஏதாவது ஒரு குடும்பத்தினரிடம் என்னை அழைத்துச் செல்வீர்களா?'' என்று டாக்டர் ராமசாமியைக் கேட்டேன் ஒரு நாள் மாலை.

''சரி, வாருங்கள்'' என்று கூறி டாக்டர் ராமசாமி, திரிஃப்ட் டிரைவ் என்ற இடத்திற்கு என்னை அழைத்துச் சென்றார்.

''இதுதான் மிஸ்டர் நடராஜனின் வீடு. அவர் ஒரு ஹைஸ்கூல் பிரின்ஸிபால். (ஹெட்மாஸ்டர் என்று சிங்கப்பூரில் அழைக்கப்படுவதில்லை.) இந்திய நுண்கலைச் சங்கத்தில் முக்கியமானவர்'' என்று சொன்னார் டாக்டர்.

அந்த வீட்டைச் சுற்றிலும் பார்த்தேன். இரண்டு மூன்று மாமரங்கள், தென்னை மரங்கள், மல்லிகை மாதிரி ஏதோ சில கொடிகள்.



ஆரவாரமில்லாத அந்தத் தெருவும், திரு. நடராஜனின் வீடும் மாம்பலத்தில் ஒரு பகுதியை நினைவுபடுத்துவது போல இருந்தன. ஆனால் சில வித்தியாசங்கள். பக்கத்து வீடுகளில் இந்தியர்கள் யாரும் கிடையாது. அத்தனை வீடுகளிலும் சீனர்களே இருந்தார்கள்.

திரு. நடராஜனும் திருமதி லட்சுமி நடராஜனும் எங்களை வரவேற்றார்கள். அவர்களைப் பார்த்ததும் எனக்கு ஒரு வியப்பு. பிரின்ஸிபால் என்றதும் சற்று வயதானவராக இருப்பார் என்று நினைத்து வைத்திருந்தேன். அப்படி இல்லாததால் எனக்கு மகிழ்ச்சியான ஓர் ஏமாற்றம்.

''என்ன யோசிக்கிறீர்கள்?'' என்றார் நடராஜன்.

''யோசனை என்ன? வாசலுக்கு வந்ததும் மாமரத்தைப் பார்த்தார். மாம்பலத்து நினைவு வந்து விட்டது போலிருக்கிறது'' என்றார் டாக்டர்.

வீட்டின் உள்ளேயும் அப்படித்தான் இருந்தது. ஒரு பக்கம் ஈசுவரனின் சிலை. எதிர்த்தாற்போல் கிருஷ்ணனின் சிலை. பாவை விளக்கு ஒரு பக்கம். ஒரு கண்ணாடி பீரோ நிரம்ப கலை, கை வேலைப்பாட்டுப் பொருள்கள்......தமிழ் நாட்டுச் சூழ்நிலையை அப்படியே அந்த இடத்திற்குக் கொண்டு வந்த மாதிரி இருந்தது.

''காபி சாப்பிடலாமே'' என்று டைனிங் டேபிளுக்கு அழைத்தார் நடராஜன். காபிக்காக உட்கார்ந்தபோது, லட்சுமி நடராஜன் எவர்சில்வர் தட்டுகளை வைத்தார்.

''ஓ, டிபன்கூட உண்டா?'' என்றேன் சிரித்துக் கொண்டே.

''கொஞ்சம் மாறுதலான டிபன்!'' என்றார் லட்சுமி. உள்ளபடியே எனக்கு ஆச்சரியம். களியைத் தட்டில் வைத்தார்.

''சிங்கப்பூரில் களிகூட ஒரு டிபனா? புதுமையாக இருக்கிறதே!'' என்றேன்.

''புதுமை ஒன்றுமில்லை. இன்றைக்கு திருவாதிரையல்லவா? களி பண்ணாமல் இருக்க முடியுமா?'' என்று அவர் சொன்னபோதுதான், எனக்கு நினைவுக்கு வந்தது. அன்றைக்குத் திருவாதிரை. சென்னையில் இருந்திருந்தால் வீட்டில் களி கிடைத்திருக்கும். சிங்கப்பூரிலும் அதை நான் மிஸ் பண்ணிவிடவில்லை என்பதில் ஒரே பெருமை. எப்போதுமே பண்டிகை, விசேஷ காலங்களில் வெளிநாடுகளில் நான் மாட்டிக் கொள்வதுண்டு. ஒருமுறை ஜப்பானில் இருந்தபோது விநாயக சதுர்த்தி வந்து விட்டது. அன்றைக்குப் பார்த்து திரு. பாலசுப்பிரமணியம் என்ற நண்பர் சாப்பிட அழைத்திருந்தார். கொழுக்கட்டை கிடைத்து விட்டது!

களியை ஒரு கை பார்த்துவிட்டுக் காபியைச் சாப்பிட்டேன். அதிலும் ஒரு வித்தியாசம் தெரிந்தது.

''இது மாட்டுப் பால் காபி மாதிரி இருக்கிறதே?'' என்றேன்.

''ஆமாம், மிஸ்டர் மணியன். வாடிக்கையாகப் பால் வாங்குகிறோம். காலையிலும் மாலையிலும் வங்காளிப் பால்காரர்கள் கொண்டு வந்து தருகிறார்கள். பால் தட்டுப்பட்டால் மட்டுமே 'கண்டென்ஸ்ட் மில்க்' உபயோகப்படுத்துவோம்......'' என்றார் நடராஜன்.

சிங்கப்பூரில் எங்கு போனாலும், 'தண்ணி' சாப்பிடச் சொல்லுவார்கள். தவிர்க்க முடியாது. காபியோ டீயோ குடித்தாக வேண்டும். மாட்டுப்

பால் கிடைப்பது அரிது. டின் பாலேயே பயன்படுத்துவதால், காபி பானகமாக இருக்கும்.

''சிங்கப்பூரில் இருந்து கொண்டு திருவாதிரையை மறக்காமல் இருக்கிறீர்களே?'' என்றேன் நான்.

''இதெல்லாம் மறந்துவிடக் கூடிய காரியம் அல்லவே. எங்கே வாழ்ந்தாலும் சடங்கு சம்பிரதாயங்களை விட்டுவிட முடிவதில்லை அல்லவா?'' என்றார் லட்சுமி.

அவர் சொல்லியதில் உண்மை இருந்தது. அமெரிக்காவில் தீபாவளியும், பிரிட்டனில் பொங்கலும் நம்மவர்கள் கொண்டாடும்போது, சிங்கப்பூரில் திருவாதிரையும், கார்த்திகையும், தைப் பூசமும் கொண்டாடுவதில் ஆச்சரியம் இருக்க முடியாதல்லவா?

''அச்சு பிசகாமல் அப்படியே தமிழ் நாட்டையே உங்கள் வீட்டிற்குக் கொண்டு வந்து வைத்திருக்கிறீர்கள்'' என்று சொன்னேன் நான்.

''தமிழ் நாட்டின் புறச் சூழ்நிலையைக் கொண்டு வந்து விட்டாலும் அக வாழ்வில் சில பிரச்னைகள் எங்களுக்கு உண்டு'' என்றார் நடராஜன்.

''சொல்லுங்களேன்'' என்றேன்.

''சிங்கப்பூர் பல இன மக்களின் நாடு. இந்த மாதிரி நாட்டில் சிங்கப்பூர்க்காரர்களாகவே நாங்கள் வாழ விரும்புகிறோம். ஆனால் கலை, கலாசார உறவுகளைப் பொறுத்தவரையில் தமிழ் நாட்டின் தொடர்பு இல்லாமல் இருக்க முடிவதில்லை. எத்தனை காலத்திற்கு இந்த விஷயத்தில் உங்களைச் சார்ந்திருப்பது என்று தெரியவில்லை'' என்றார் அவர்.

''இன்னும் கொஞ்சம் விளக்கமாகச் சொல்லுங்களேன்'' என்றேன்.

''குழந்தைகளை வளர்ப்பதிலும், கல்வி புகட்டுவதிலும் எங்களுக்கும் பிரச்னை இருக்கிறது. எங்கள் குழந்தைகளையே எடுத்துக் கொள்ளுங்கள். சோபனா, ஆங்கிலப் பள்ளிக்கூடத்தில் படிக்கிறாள். சுரேஷும் அப்படித்தான். வீட்டில் இருவரும் ஆங்கிலம் பேசிக் கொள்கிறார்கள். எங்களிடமும் அதையே பேசுவது இவர்களுக்குச் சுலபமாக இருக்கிறது. இப்படியே விட்டுவிட்டால், தமிழ் பேசுவதும் படிப்பதும் எப்படி?'' என்றார் நடராஜன்.

''இங்கிலிஷ் தவிர இன்னொரு மொழியையும் கட்டாயமாகப் பள்ளிக்கூடங்களில் படிக்க வேண்டும் என்று சொன்னார்களே?'' என்று நான் கேட்டேன்.

''உண்மைதான். பல பேர் மலாய் மொழியை இரண்டாவது மொழிப் பாடமாக எடுத்துக் கொண்டு விடுகிறார்கள். நம் குழந்தைகள் மலாய் மொழியையும் படிக்கிறார்கள். எங்களுடன் தமிழில்தான் பேச வேண்டும் என்று உத்தரவு போட்டு விட்டோம். வீட்டில் தமிழிலேயே இப்பொழுது பேசுகிறார்கள். தமிழ் ஸ்பெஷல் கிளாஸ் உண்டு. அந்த வகுப்புகளுக்குப் போய் வருகிறார்கள்'' என்று நடராஜன் கூறியது, சற்று வியப்பையே தந்தது.

சிங்கப்பூர்க்காரர்களாகவும் இருக்க வேண்டும், இந்துக்களாகவும் வாழ வேண்டும். பழக்க வழக்கங்களையும், கலை, கலாசாரங்களையும்

விட்டு விடாமல் பிடித்துக் கொள்ளவும் வேண்டும் என்று விரும்பும் இவர்களுக்கு உள்ள பிரச்னைகள் எனக்குப் புரிந்தன.

நடராஜன் சிங்கப்பூரில் பிறந்தவர் அல்ல. உறவினர்கள் அழைத்ததால் மலாயாவையும் சிங்கப்பூரையும் சுற்றிப் பார்க்க வந்தாராம். ஒரு கம்பெனியில் தாற்காலிகமாக வேலை பார்த்தவருக்கு, விஞ்ஞான ஆசிரியர் வேலை வந்தது! பிறகு, அரசாங்கப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்தார். இப்பொழுது பிரின்ஸிபால். ஆராய்ச்சி சம்பந்தமாக அமெரிக்கா, பிலிப்பைன்ஸ் போன்ற நாடுகளுக்குப் போய் வந்திருக்கிறார்!

''பதினைந்து வருஷத்திற்கு முன்பெல்லாம் இங்கே பிரஜாவுரிமை (Citizenship) கிடைப்பது சுலபமாக இருந்தது. அப்பொழுதே பிரஜையாகி விட்டேன்'' என்றார் அவர்.

சோபனாவும் சுரேஷும் அப்பொழுதுதான் வீட்டிற்கு வந்து கொண்டிருந்தார்கள். அவர்களை அறிமுகப்படுத்தினார் நடராஜன்.

''சோபனா டான்ஸ் கிளாசுக்குப் போய்விட்டு வருகிறாள். இவன் தமிழ் வகுப்புக்குப் போய் வருகிறான்.''

டான்ஸ் வகுப்பு பற்றி விசாரித்தேன். இந்திய நுண்கலைச் சங்கத்தைப் பற்றிப் பேச்சு வந்தது. அதன் துணைத் தலைவரான டாக்டர் ராமசாமியும் அருகிலேயே இருந்தார்.

''சங்கீதமோ நாட்டியமோ கற்றுக் கொள்ள வேண்டுமானால் இந்திய நுண்கலைச் சங்கம் இருக்கிறது. தனிப்பட்ட சிலரும் கற்றுத் தருகிறார்கள். ஆனால் இந்திய இசை, நடனக் கலை வளர்ச்சிக்கென்று ஒரு ஸ்தாபனமாக இயங்குவது இந்திய நுண்கலைச் சங்கம் ஒன்றுதான்'' என்று நடராஜன் கூறியபோது, டாக்டர் ராமசாமி அலுத்துக் கொண்ட மாதிரி தெரிந்தது.

''எவ்வளவோ செய்ய வேண்டும் என்று ஆசைதான். எங்கள் சிரமங்கள் உங்களுக்கு எப்படித் தெரியப் போகிறது?'' என்றார் டாக்டர் ராமசாமி.

''என்ன பிரச்னை என்று சொல்லுங்களேன் டாக்டர்'' என்றேன் நான்.

''சங்கத்திற்குக் கட்டடம் இருக்கிறது. எல்லா வசதிகளும் உண்டு. ஆனால் சங்கீதமும் நாட்டியமும் சொல்லித் தருவதற்கு ஆசிரியர் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. இந்தியாவிலிருந்து திறமையான ஆசிரியர்களை அழைக்கிறோம். இரண்டு மூன்று வருஷத்தில் திரும்பிப் போய் விடுகிறார்கள். இந்த மாதிரி நிலைமையில் நாங்கள் எப்படி இசையையும் கலையையும் வளர்க்க முடியும்? இருப்பினும் விடா முயற்சியுடன் நடத்திக் கொண்டுதான் வருகிறோம்.''

''நீங்கள் சொல்வதை நான் ஒப்புக்கொள்ளத் தயாராக இல்லை. சிங்கப்பூரில் சங்கீதமும் நாட்டியமும் கற்றுத் தருவதற்கு ஆசிரியர் தேவை என்று ஒரு விளம்பரம் கொடுத்துப் பாருங்கள். அதற்குப் பிறகு நீங்கள் அங்கலாய்த்துக் கொள்ள மாட்டீர்கள்'' என்று நான் சொன்னேன்.

''நாங்கள் இன்னொன்றையும் எதிர்பார்க்கிறோம். இங்கு வரும் ஆசிரியர்கள் கணவன்—மனைவியாக இருந்தால் எங்களுக்குச் சுலபமாக இருக்கும். இதற்கு முன் வந்தவர்கள் எல்லோரும் அப்படித்தான். மனைவி நடனம் சொல்லிக் கொடுப்பார், கணவர் நல்ல சங்கீதக் கலைஞராக இருப்பார். இப்படி அமைவதால் எங்களுக்கு வேலை குறையும்.''

''தமிழ் நாட்டிலிருந்து வரும் ஆசிரியர்கள் எத்தனை வருஷத்திற்கு இங்கு தங்கியிருக்க முடியும்?'' என்று கேட்டேன்.

''முதலில் மூன்று வருஷத்திற்குத் தங்கி யிருக்கலாம். இதற்கு அரசாங்க அனுமதி பெற்றுவிடுவோம். அதற்குப் பிறகு தங்கும் காலத்தை நீடித்துக் கொள்வோம். நானூறு சிங்கப்பூர் டாலருக்குக் குறையாத சம்பளம் (அதாவது ஆயிரம் ரூபாய்). அலவன்ஸ், வீட்டு வசதி உண்டு. ரேடியோவிலும், டெலிவிஷனிலும் அவர்கள் நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வதற்குக் கூட அனுமதிக்கிறோம். அவர்கள் சிங்கப்பூருக்கு வருவதற்கு செகண்ட் கிளாஸ் கப்பல் டிக்கெட்டும் நாங்களே எடுத்துக் கொடுக்கிறோம்'' என்று அவர் விளக்கிக் கொண்டே வந்தார்.

''எங்கள் நாட்டுப் பத்திரிகைகளில் விளம்பரம் கொடுத்துப் பாருங்களேன், பலன் தெரியும்'' என்று டாக்டரிடம் கூறிவிட்டு, நடராஜனைப் பார்த்து, நீங்கள் இந்தியாவுக்குப் போய் வந்து கொண்டிருக்கிறீர்களா?'' என்றேன்.

''குடும்பத்துடன் போக முடியவில்லை. இப்போதைக்கு இதற்குத் தடையாக இருப்பவன் சுரேஷ்தான். இவன் சிங்கப்பூரை விட்டு அசைய முடியாது. நகர வேண்டுமானால் ஐம்பதாயிரம் சிங்கப்பூர் டாலர் வேண்டும். இவன் விலை இப்பொழுது ஐம்பதாயிரம் டாலர்!''

என் வியப்பை அவர் புரிந்து கொண்டார்.

''சிங்கப்பூரில் இளைஞர்கள் அனைவருக்கும் கட்டாய ராணுவப் பயிற்சி (Compulsory Military Training) உண்டு. 18 வயதான இளைஞர்கள் இரண்டு வருஷம் ராணுவப் பயிற்சிக்குப் போக வேண்டும். பணக்காரப் பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளைத் தேசிய சேவைக்கு அனுப்புவதிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக, வெளிநாடுகளுக்குப் படிப்பதற்காக அனுப்பி விடுவார்கள். வருஷக் கணக்கில் பிள்ளைகள் வெளி நாட்டிலேயே இருந்து விட்டு ராணுவப் பயிற்சிக்குப் போக வேண்டிய வயதைக் கடந்ததும் சிங்கப்பூருக்குத் திரும்புவார்கள். அரசாங்கம் இதைக் கண்டு பிடித்து விட்டது. அப்புறம் கடுமையான சட்டம் போட்டுவிட்டது. வெளிநாடுகளுக்குப் பிள்ளைகளை அனுப்ப வேண்டுமானால், பெற்றோர் ஐம்பதாயிரம் டாலர் உத்தரவாதப் பணம் கட்டியாக வேண்டும். ராணுவப் பயிற்சிக்கு வரவேண்டிய தேதியில் தங்கள் பிள்ளைகளை சிங்கப்பூருக்கு அழைத்துக் கொண்டு வருவதாக உறுதி கூற வேண்டும். இப்பொழுது புரிகிறதல்லவா?'' என்றார் அவர்.

சுரேஷைப் பார்த்தேன். அவன் சிரித்துக் கொண்டான்.

''சோபனா எப்படி?'' என்று லட்சுமி நடராஜனிடம் விசாரித்தேன். அவர் கூறிய சில விஷயங்கள் சிந்திக்க வைத்தன. பல இன சமுதாயமான சிங்கப்பூரில் ஓர் இந்துப் பெண்ணை முழுக்க முழுக்க இந்துப்

பெண்ணாக வளர்த்து, ஆளாக்குவதில் எதிர்ப்படக் கூடிய பிரச்னைகள் அவருடைய பேச்சிலிருந்து புலப்பட்டன.

''சோபனா இந்த நாட்டில் பிறந்தாலும் அவளுக்குத் தமிழ் தெரிந்திருக்க வேண்டும் என்று விரும்புகிறோம். கொஞ்ச நஞ்சம் சங்கீதமும் நடனமும் தெரிந்திருக்க வேண்டும் என்றும் விரும்புகிறோம். சிங்கப்பூர் பிரஜையாகவும், அதே சமயம் ஒரு ஐடியல் இந்துப் பெண்ணாகவும் வளர வேண்டும் என்று ஆசைப்படுகிறோம். இப்படி உருவாக்க வேண்டிய அவசியம் எங்களுக்கு இருக்கிறது. இந்தியாவில் அப்படியல்ல. அவர்களாகவே உருவாகி விடுகிறார்கள்'' என்றார் திருமதி லட்சுமி.

இவர்களைப் போன்ற பெற்றோர்கள் எதையும் சாதித்துவிடலாம் என்பது சுரேஷையும் சோபனாவையும் பார்த்ததிலிருந்து எனக்குப் புரிந்தது. கொஞ்சம் அதிகப்படியான சுமையை இக் குழந்தைகள் தாங்கிக் கொண்டிருக்கிறார்கள். காலையிலிருந்து இரவுவரை இவர்கள் மீது கல்வியும், கலையும், நல்ல பழக்க வழக்கங்களும் திணிக்கப்படுகின்றன. லட்சுமி நடராஜன் தம்பதியரின் லட்சியத்தைப் புரிந்து கொண்டேன்.

''குழந்தைகளுக்கு மத போதனை அளிக்க சிங்கப்பூரில் ஏதாவது வழி இருக்கிறதா?'' என்று கேட்டேன் நான்.

'''கண்ணன் நமது வழிகாட்டி' என்ற பெயரில் ஒரு சங்கம் இருக்கிறது. குழந்தைகளுக்கு இந்து மத போதனைகளை அந்தச் சங்கத்தில் எடுத்துக் கூறுகிறார்கள். விடுமுறை நாட்களில் விசேடமாக வகுப்பு நடத்துகிறார்கள். இளம் உள்ளங்களில் மத நம்பிக்கைகளை வேரூன்றச் செய்வதற்கு இதுவும் ஒரு நல்ல வழிதான்'' என்றார் டாக்டர் ராமசாமி.

''வேறு சங்கங்கள் உண்டா?'' என்றேன்.

''எத்தனையோ இருக்கிறது. பிராமண சமாஜம்கூட சிங்கப்பூரில் உண்டு. பண்டிகைகளையும் விசேஷங்களையும் சமாஜம் சிறப்பாகக் கொண்டாடி வருகிறது. மும்மூர்த்தி விழா கூட சிங்கப்பூரில் நடத்தப்படுகிறது...'' என்று அவர் கூறினார்.

திரு. நடராஜன் குடும்பத்தைச் சந்தித்தது மனத்தில் பசுமையாக இருக்கிறது. ஒரு சிறு குடும்பம் சீராகவும் சிறப்பாகவும் சிங்கப்பூரில் வாழ முடியும் என்பதற்கு இவர்கள் சிறந்த உதாரணம்.

சில மைல்களுக்கு அப்பால் ஹில்டன் ஓட்டலில் தங்கியிருப்பேன். ஏழெட்டு டாலர் டாக்ஸிக்குச் செலவாகும். இருந்தாலும் அவர்கள் வீட்டிற்குச் செல்லாமல் போவதில்லை. அப்படி ஒரு பாசம், ஒரு பிணைப்பு. அந்த அளவுக்கு அவர்கள் பழகி விட்டார்கள். என் தாயுடன் பிறந்த சகோதரியை நினைவுபடுத்துவது போல் இருந்தார் லட்சுமி. அப்படி ஒரு முகச் சாயல். இதை நான் அவரிடம் சொல்லவில்லை. சென்னைக்கு வந்தால் அவர் புரிந்து கொள்ளக் கூடும்.

# 29

பரிசுச் சீட்டு விற்பனை செய்யும் ஒரு சீனப் பெண்மணி

ஒரு ஞாயிற்றுக்கிழமை காலை சிங்கப்பூர் தேக்கா பஜார் பக்கமாகச் சென்று கொண்டிருந்தபொழுது, அந்த மார்க்கெட் வாசலில் ஏகப்பட்ட கூட்டமாக இருந்தது. காய்கறி, பழம், மளிகை சாமான்களை வாங்கிக் கொண்டு சிங்கப்பூர் இந்தியர்கள் டிரைஷாக்களிலும், சைக்கிள்களிலும், கார்களிலும் போய்க் கொண்டிருந்தார்கள். இவர்களில் பெண்களே அதிகம். சுறுசுறுப்பாக இருந்த மார்க்கெட்டையும், இந்தியர்களின் நடமாட்டத்தையும் சில நிமிடம் உற்சாகத்துடன் பார்த்துக் கொண்டு நின்றேன்.

''இந்த தேக்கா பஜாரில் இந்தியர்களே அதிகமாகக் காணப்படுகிறார்களே, ஏன்?'' என்று என்னுடன் வந்த நண்பர் ஜமாலைக் கேட்டேன்.

''இது சிராங்கூன் ரோடு வட்டாரம். இங்கே இந்தியர்களும், இந்தியர் கடைகளும் அதிகம். இந்த மார்க்கெட் சிங்கப்பூர் மாரியம்மன் கோயிலுக்குச் சொந்தமான இடம். இதே வரிசையிலுள்ள பல கடைகளும் கோயில் சொத்துத்தான்'' என்று சொன்னார் அவர்.



பக்கத்தில் மரத்தடியில் ஒரு சிறு 'பூத்' இருந்தது. அதைச் சுற்றிப் பலர் நின்றிருந்தார்கள். டோட்டோ (Toto) என்று எழுதியிருந்தது. அதைச் சூழ்ந்து நின்றவர்கள், பால் பாயின்ட் பேனுவினல் எதையோ குறித்துக் கொண்டிருந்தார்கள். என்னவென்று அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தில் அருகே போனேன்.

''என், டோட்டோ மேல் ஆசை வந்துவிட்டதா? டோட்டோ பிடிக்கிறீர்களா?'' என்று கேட்டார் நண்பர். (பிடிக்கிறீர்களா என்பது சிங்கப்பூர் தமிழ்.)

''நமக்குத் தெரிந்ததெல்லாம் போட்டோதான். டோட்டோ என்பது என்னவென்றே தெரியவில்லையே?'' என்றேன் நான்.

டோட்டோ பூத்தில் உட்கார்ந்திருந்த இளம் பெண்ணிடமிருந்து ஒரு கூப்பனை வாங்கி வந்தார் அவர். டோட்டோ என்பது ஒரு பந்தயம். இதன் மறு பெயர் லாட்டரி. சூதாட்டம் என்று ஏன் அழைக்கக் கூடாது என்று நினைத்துக் கொண்டேன். அந்தக் கூப்பனில் ஒன்று முதல் 49 வரை எண்கள் இருக்கின்றன. இதேமாதிரி இரண்டு பகுதி உண்டு. இந்த 49 எண்களில் ஐந்து எண்களை 'எக்ஸ்' மார்க் செய்துவிட வேண்டும். மூன்று எண்களில் வட்டக்குறி (O) இடலாம். இதற்குக் கட்டணம் 50 காசு. கூப்பனின் மறு பகுதியையும் இப்படியே பூர்த்தி செய்யலாம், விரும்பினல். இரண்டு பகுதியையும் பயன்படுத்தலாம். அதற்குக் கட்டணம் ஒரு சிங்கப்பூர் டாலர்.

டோட்டோ 'பூத்'களில் (Booth) கூப்பனையும் கட்டணத்தையும் செலுத்தியதும் கூப்பனின் டூப்ளிகேட்டை ஒரு பதிவு எண்ணுடன் திருப்பிக் கொடுக்கிருர்கள். அதைப் பத்திரமாக வைத்திருந்தால்தான் பரிசு பெற முடியும். மறுநாள், அதற்கடுத்த நாள் டோட்டோ கம்பெனி பலர் முன்னிலையில் அதிருஷ்டக் குலுக்கு நடத்துகிறது. அப்பொழுது எடுக்கப்படும் எண்களே பரிசு எண்கள். ஐந்து எண்களையும் சரியாகக் குறிப்பிட்டவர்களுக்கு முதல் பரிசு கிடைக்கும். ஒரு லட்சம் டாலருக்கு மேல் உண்டு. நான்கு எண்களோ, மூன்று எண்களோ சரியாக இருந்தா லும் பரிசு உண்டு. வட்டக் குறி போட்டவர்களுக்கும் தனிப்பட்ட பரிசு தருகிருர்கள்.

ஐந்து எண்களும் சரியாக அமைவது மிக அரிது.

''இதை நடத்துவது யார்?'' என்று கேட்டேன் நான்.

''அரசாங்கமே ஒரு கம்பெனி அமைத்து அதன் மூலமாகவே நடத்தி வருகிறது. தேசிய விளையாட்டு அரங்கம் ஒன்று சிங்கப்பூரில் கட்டப் பட்டு வருகிறது. அதற்கு நிதி திரட்டும் நோக்கத்திலேயே டோட்டோ பந்தயத்தை ஆரம்பித்தார்கள். பல்கேரியாவிலிருந்து இதற்கென்று ஆலோசகர்கள் அழைக்கப்பட்டார்கள்'' என்று சொன்னுர் நண்பர்.

('இவ்வளவு நாட்களுக்குள் இந்த சூதாட்டமும் நம் நாட்டில் வந்திருக்க வேண்டுமே' என்று நீங்கள் கேட்பது என் காதில் விழுகிறது. விரைவில் இது வந்து விடலாம்!)

''வேண்டுமானல் உங்கள் அதிருஷ்டத்தைச் சோதித்துப் பாருங்களேன்'' என்ருர் மற்ருெரு நண்பர்.

நான் சிரித்துக் கொண்டேன். டோட்டோ பந்தய முறையைப் புரிந்து கொள்வதற்கென்றே ஒரு கூப்பனைப் பூர்த்தி செய்து பார்த்தேன். பரிசு கிடைத்ததா என்று கேட்டு விடாதீர்கள். பரிசு கிடைத்தது என்ற தகவலைத் தலைகீழாக நின்ருலும் மற்றவர்கள் சிங்கப்பூரிலே தெரிந்து கொள்ள முடியாது.

டோட்டோ பூத்களில் பெரும்பாலும் பெண்களே இருக்கிருர்கள். தேக்கா பஜார் ஓரமாக இருந்த அந்த பூத்தில் உட்கார்ந்திருந்தவர் தமிழ்ப் பெண்ணாக இருந்ததால், போட்டோ எடுத்துக் கொண்டு அவரைப் பற்றி ஏதாவது எழுதலாம் என்று நினைத்தேன். போட்டோகிராபர் சுந்தரம் நான் சொல்வதற்கு முன்பே அந்தக் காரியத்தைச் செய்து முடித்து விட்டார். அவ்வளவுதான். அந்தத் தமிழ்ப் பெண் ஒரேயடியாக ஆங்கிலத்தில் திட்ட ஆரம்பித்து விட்டார். அனுமதி இல்லாமல் எப்படிப் படம் எடுக்கலாம் என்ற கோபமாக இருக்குமோ என்று நினைத்தேன். இதைவிடப் பெரியதாக அந்தப் பெண் எதையாவது நினைத்திருப்பாரோ என்றும் எண்ணிப் பார்த்தேன். இருக்கலாம். தமிழ்ப் பெண்கள் லாட்டரி கூப்பன் விற்கிருர்கள் என்பதையோ, அரசாங்கம் டோட்டோ பந்தயம் நடத்துகிறது என்பதையோ தன் மூலமாக வெளிப்படுத்துவதை விரும்பாமல் ஒரு வேளை அந்தப் பெண் அப்படிப் பேசி யிருக்கலாம்.

டோட்டோ மட்டுமல்ல, வேறு பல லாட்டரிகளும் சிங்கப்பூரிலும் மலேசியாவிலும் உண்டு. குதிரைப் பந்தயங்களுக்குக் கேட்கவே வேண்டியதில்லை. இத்தனை லாட்டரி இருந்தும், பெரிய பரிசுகள் யாருக்குக் கிடைக்கின்றன என்பதை ரகசியமாகவே வைத்திருக்கிருர்கள். மாதத்திற்கு மாதம் லட்சாதிபதிகள் இதன் மூலம் உண்டாக்கப்பட்டாலும், அந்த அதிருஷ்டக்காரர்களை மற்றவர்கள் அடையாளம் கண்டு கொள்ள முடியாது. இது, நாமும் பின்பற்ற வேண்டிய ஒரு விஷயமாக எனக்குப் பட்டது.

நம் நாட்டிலும் பரிசுச் சீட்டு நடத்தப்படுகிறது. மாதந்தோறும் சிலர் பணக்காரர்களாக்கப்படுகிருர்கள். அப்பொழுது அவர்களுடைய பூர்வோத்திரமெல்லாம் அம்பலப்படுத்தப்படுகிறது. பரிசுச் சீட்டு ஆரம்பித்த சமயத்தில் சில பட்டாணிக் கடலை வியாபாரிகள் லட்சாதிபதியானுர்கள் என்ற செய்தி வந்ததும், பலர் பட்டாணி வியாபாரத்தையே இங்கே ஆரம்பித்து விட்டார்கள். அந்த அளவுக்கு மக்களுக்கு ஒரு நம்பிக்கை, ஒரு வேகம். பரிசு பெற்றவர்களின் பெயர்களை சிங்கப்பூரில் ரகசியமாக வைக்கப்பட்டிருப்பது, பலவிதங்களில் நல்லதாகவே எனக்குத் தோன்றுகிறது.

ஒரு லட்சம், ஐந்து லட்சம் என்று பெரிய பெரிய பரிசுகள் கிடைக்கும்போது, அத்துடன் ஆபத்தும் தொடர்கிறது. எந்த நேரத்திலும் தனக்கு அபாயம் ஏற்படலாம் என்று அஞ்ச வேண்டிய ஒரு நிலைமை அங்கே உண்டு. நம் நாட்டில் அப்படி இல்லையென்ருலும், ஒருவர் பரிசு

பெற்றதும், 'இவனுக்குக் கிடைத்து விட்டது. நாமும் எவ்வளவு செலவு செய்தேனும் பரிசு பெற்றுக வேண்டும்' என்ற அசுர வேகம் மற்றவர்களுக்கு ஏற்பட்டு விடுகிறது. இது ஆபத்தான மனப்போக்கு.

'சிங்கப்பூர் போன்ற வளர்ந்துவிட்ட சமுதாயத்திற்கு லாட்டரிப் பரிசு ஏற்றதாக இருக்கலாம். நம்மைப் போன்ற வளருகின்ற சமுதாயத்திற்கு லாட்டரிகள் ஏற்றதல்ல' என்பது என்னுடைய தனிப்பட்ட கருத்து. உழைக்காமலேயே பெரும் பணத்தைச் சம்பாதித்து விடலாம் என்ற எண்ணம் மக்களில் ஒரு பகுதியினரிடம் வளர்வதற்கு, லாட்டரி துணை செய்கிறதே! ஆனால், அரசாங்கத்தின் நோக்கத்தைக் குறைத்துச் சொல்வதற்கில்லை. சமூக நல அபிவிருத்திப் பணிகளில் செலவிடுவதற்காக சிங்கப்பூரில் லாட்டரி நடத்தப்படுகிறது என்று சொன்னார்கள். இங்கேயும் வளர்ச்சிப் பணிகளுக்காகவே நடத்தப்படுகிறது என்பது தெரிந்ததுதான். ஆகவே அவசியமான ஒரு தீமை (Necessary evil) என்று திருப்தியடைவதைத் தவிர வேறு எதுவும் தோன்றவில்லை.

இந்தச் சிந்தனையுடன் தேக்கா வட்டாரத்தில் நான் நின்று கொண்டிருந்தபோது, ஒரு சீனச் சிறுவன் என்னை அழைத்தான்.

''அண்ணே ஆப்பிள்... ஆப்பிள்...'' என்று என்னிடம் அவன் சொன்னபோது, நான் அசந்து விட்டேன். வண்டி நிறைய ஆப்பிள் பழங்களைக் குவித்து வைத்துக் கொண்டு விற்றுக் கொண்டிருந்தான். அவன் தமிழ் பேசிய உற்சாகத்தில் நானும் தமிழிலேயே கேட்டேன், என்ன விலை என்று.

''வெள்ளிக்கு 18 ஆப்பிள் அண்ணே'' என்றவாறு இரு கையிலும் அள்ளி நீட்டினான். எனக்கு மேலும் ஆச்சரியம்.

''ஒரு வெள்ளிக்கு (இரண்டரை ரூபாய்) 18 ஆப்பிள் பழமா? சிங்கப்பூரில் ஆப்பிள் விளைச்சலே கிடையாது. அப்படியிருந்தும் இவ்வளவு மலிவாக எப்படி விற்கிறார்கள்?'' என்று கேட்டேன். ''இதெல்லாம் சீனாவிலிருந்து வரும் ஆப்பிள். மலிவாகவே கிடைக்கும்'' என்று விளக்கம் சொன்னார்கள். நான் புரிந்து கொண்டேன். அந்நியச் செலாவணி சம்பாதிக்கவே சீனா கொள்ளை மலிவாகத் தனது பொருட்களை வெளி நாடுகளுக்குத் தாராளமாக அள்ளி விடுகிறது என்பதற்கு இது ஓர் உதாரணம். (சீனாவிலுள்ள மக்களுக்கு இந்தப் பழங்கள் கிடைக்கும் என்று நான் நினைக்கவில்லை.)

ஆப்பிள் வியாபாரியான அந்த சீனச் சிறுவனிடம் நான் பேசிக் கொண்டிருந்தபோது நண்பர் சாலி, எதிர்ச் சாரியிலிருந்து ''மிஸ்டர் மணியன், மிஸ்டர் மணியன்'' என்று அழைத்துக் கொண்டே வந்தார். நான் திரும்பிப் பார்த்தேன். அவருடன் ஒரு சாமான்யமான தமிழர் காணப்பட்டார்.

''இவர்தான் திரு. பி. கோவிந்தசாமி, எம். பி.'' என்று என்னை அவருக்கு அறிமுகம் செய்து வைத்தார் சாலி. சிங்கப்பூர் நாடாளுமன்ற உறுப்பினரான திரு. கோவிந்தசாமியைப் பற்றி முன்பே கேள்விப்பட்டிருந்தேன். ஆனால், சந்தித்திருக்கவில்லை.

''தேக்கா பஜாரில் நாம் சந்திக்கிறோம். இன்று மாலை உங்கள் இடத்திற்கே வருவதாக இருந்தேன்'' என்று நான் அவரிடம் கூறிய போது, ''அதனால் என்ன, நீங்கள் வருகிறபடி வாருங்கள். இப்போது எதிர்பாராத முறையில் சந்தித்திருக்கிறோம். இது மார்க்கெட் சந்திப்பு... இந்த மாதிரி சந்திப்புக்கள் மறக்க முடியாததாக அமைந்து விடுவதுண்டு'' என்று சிரித்துக் கொண்டே கலகலப்பாகப் பேசினார் திரு. கோவிந்தசாமி.

''ஞாயிற்றுக்கிழமைகளில் தேக்கா பஜாருக்கு வருவது வழக்கம். உங்கள் நாட்டில் எம். பி.க்கள் காய்கறி மார்க்கெட்டுக்கு வருகிறார்களோ என்னவோ எனக்குத் தெரியாது'' என்றார் அவர்.

''நின்று கொண்டே பேசுகிறோமே! வாருங்களேன், டிபன் ஏதாவது சாப்பிடலாம்'' என்றேன் நான்.

''இல்லை. வீட்டிலேயே பசியாறிவிட்டுத்தான் மார்க்கெட்டுக்கு வந்தேன். வேண்டுமானால் எல்லாருமாக கோப்பி சாப்பிடலாமே'' என்றார் திரு. கோவிந்தசாமி.

(பசியாறிவிட்டு — கோப்பி எல்லாம் இவ்வளவு நேரம் வாசகர்களுக்கும் பழக்கமான சொற்களாகி யிருக்குமே.)

கோமள விலாஸ் ரெஸ்டாரெண்டுக்கு வந்தோம். சிங்கப்பூரில் நமது சாப்பாடு கிடைக்குமா என்ற கவலையே வேண்டியதில்லை. சிராங்கூன் ரோடு, சிலிகி ரோடு, மார்க்கெட் ஸ்ட்ரீட் போன்ற இடங்களில் நல்ல தமிழ்ச் சாப்பாடு கிடைக்கும்.

ரெஸ்டாரெண்டின் ஏர்கண்டிஷன் அறைக்கு திரு. கோவிந்தசாமி அழைத்துச் சென்றார். வெளிநாட்டுப் பயணிகள் இட்லி, தோசை, வெஜிடேரியன் சாப்பாடு என்று வருவதால், ஏர்-கண்டிஷன் அறை வைத்திருக்கிறார்கள்.

பார்லிமெண்டு உறுப்பினரான திரு. கோவிந்தசாமி, அரசாங்க ஊழியராக இருந்து ஓய்வு பெற்றவர். தென் ஆற்காடு மாவட்டத்திலுள்ள விருத்தாசலத்தைச் சேர்ந்த அவர், 1927-ல் சம்பாதிக்கும் நோக்கத்தில் சிங்கப்பூருக்கு வந்தவர். பஸ் கம்பெனி ஒன்றில் சேர்ந்து சில காலம் கண்டக்டராக இருந்தவர். பிறகு தபால் இலாகாவில் பியூனாகச் சேர்ந்து படிப்படியாக இன்ஸ்பெக்டர் பதவிக்கு வந்தார். தொழிற்சங்க ஈடுபாடு இருந்ததால், தொழிலாளர்களிடையே பிரபலமடைந்தார். 1965-ல் வேலையிலிருந்து ஓய்வு பெற்றார்.

''உங்களுக்கு அரசியல் ஈடுபாடு எப்படி ஏற்பட்டது?'' என்றேன் நான்.

''தொழிற்சங்க ஈடுபாடு தொடக்கத்தில் இருந்தது. எங்கள் பிரதமர் லீ குவான் இயூ கூட தொழிற் சங்கங்களுக்குச் சட்ட ஆலோசகராக இருந்தவர்தான். மக்கள் செயல் கட்சியில் எனக்குத் தொடர்பு இருந்தது. திரு. லீ குவான் இயூ என்னைத் தேர்தலில் நிற்கும்படி கூறினார். நான்

சம்மதித்தேன். ஆன்சன் என்ற தொகுதியில் நான் போட்டியிட்டேன். வெற்றி கிடைத்தது. மூன்றுவது முறையாக இப்பொழுது எம். பி.யாக இருக்கிறேன்.''

நாங்கள் பேசிக் கொண்டிருந்தபொழுது கோமள விலாஸ் உரிமையாளர் உள்ளே வந்தார். இடையிடையே அவரும் சிலவற்றைச் சொல்லிக் கொண்டு வந்தார். ''காபி சாப்பிடுங்களேன்'' என்றேன். காபி வந்தது.

''சிங்கப்பூரில் ஒரே கட்சி அரசாங்கம் நடத்துகிறது. பார்லிமெண்ட் உறுப்பினர் என்ற முறையில் இது பற்றி உங்களிடம் சில கருத்துக்களை அறிய விரும்புகிறேன்'' என்றேன் அவரிடம்.

திரு. கோவிந்தசாமி தமது அரசாங்கத்தின் கொள்கைகளை எடுத்துக் கூறினர். சில கேள்விகளுக்குப் பதில் கூறுவதில் தயக்கம் காட்டினர். என்னுடைய கேள்விகளைக் கிரகித்துக் கொள்வதில் அசாதாரணமான விழிப்பு உணர்ச்சி காட்டினர். மேற்போக்காக அவர் பதில் சொல்லிவிடவில்லை. கேள்வி கேட்டால் சரமாரியாகப் பதில் சொல்லும் நம் நாட்டு அரசியல்வாதிகளைப் பார்த்துவிட்டு, சிங்கப்பூரில் தயக்கத்துடன் அரசியல் பேசும் ஒரு எம். பி.யைப் பார்த்ததில் எனக்குப் பெரிய ஆச்சரியம். அரசியல்வாதிகளுக்கு எந்த அளவுக்கு நிதானம் தேவை என்பதை உணர்த்துகிற மாதிரி, திரு. கோவிந்தசாமி நடந்து கொண்டார்.

''சிங்கப்பூரில் ஒரே கட்சி அரசாங்கம் நடத்துகிறது என்று மக்கள் குறை கூறவோ, சலித்துக் கொள்ளவோ இல்லை. தியாகமும் கடின உழைப்பும் எங்கள் ஒவ்வொருவரிடமும் இருக்கிறது. மக்கள் நன்மைக்காகவே பாடுபட்டுக் கொண்டிருக்கிறோம்'' என்று பல விஷயங்களை விளக்கிச் சொன்னர்.

பிரதமர் லீ குவான் இயூவிடம் திரு. கோவிந்தசாமிக்கு அசாத்தியமான பக்தி இருப்பதைப் புரிந்து கொண்டேன்.

''திரு. லீ முற்போக்கான அரசியல்வாதி. உழைப்பால் உயர்ந்தவர். ஒரு கடிகாரக் கம்பெனி ஊழியரின் பிள்ளை அவர். அபாரமான அறிவாற்றல். அந்த அளவுக்குத் தியாக உணர்ச்சியும் உண்டு. அவர் குறைவான சம்பளமே வாங்கிக் கொள்கிறர். சட்டத் தொழிலில் ஈடுபட்டிருந்தால், இன்று லட்சம் லட்சமாக அவர் சம்பாதித்திருக்க முடியும்'' என்றர் திரு. கோவிந்தசாமி.

'' 'ஆசிய அரசியல் நீரோட்டத்தில் சின்ன மீன் பெரிய மீன் என்ற பேதம் இருக்கக் கூடாது' என்பது எங்கள் பிரதமரின் ஆணித்தரமான அபிப்பிராயம். சின்ன மீனைப் பெரிய மீன் விழுங்க முடியும். சிறிய நாடு பெரிய நாடு என்ற பேதமில்லாமல் ஒரு சமத்துவம் ஆசியாவிலும், உலகிலும் இருக்க வேண்டும். இலங்கை சிறிய நாடு என்று இந்தியா நினைக்கவில்லை. ஜவஹர்லால் நேரு காட்டிய அரசியல் சமத்துவத்தை திரு. லீ பலமுறை சுட்டிக் காட்டியிருக்கிறர்'' என்று அவர் குறிப்பிட்டது எனக்கு மிகவும் பிடித்தது.

''சிங்கப்பூர் போன்ற பல இன சமுதாயத்தில் ஒருவர் மற்றவரோடு பழகுவதில் சிரமங்களோ, தடைகளோ இருப்பதாகக் கருதுகிறீர்களா?'' என்று அவரிடம் வினவினேன்.

திரு. கோவிந்தசாமி சிரித்துக் கொண்டார்:

''இந்த வகையில் உலகுக்கே நாங்கள் உதாரணமாக இருக்கிறோம்'' என்று நிதானமாகச் சொன்னார் அவர்.

''இங்கே எல்லா இன மக்களும் வாழ்கிறோம் என்பது உங்களுக்குத் தெரியும். சீனர்கள் பெரும்பான்மையினர். ஒரு சீனருடன் தமிழர் பழகுவதிலோ, பேசுவதிலோ எவ்விதத் தடையுமில்லை. மொழிப் பிரச்னை இருந்தால்தானே? இருவரும் ஆங்கிலத்திலோ, மலாய் மொழியிலோ பேசிக் கொள்கிறார்கள். தமிழ் மொழியில் சீனர் தன்னிடம் பேச வேண்டும் என்று எதிர்பார்க்க முடியுமா? ஆனால் ஒன்று. சீன மொழியை நாமும் பேசினால் என்ன? கொஞ்சமாவது கற்றுக் கொள்ள வேண்டும் என்ற அளவுக்கு ஒரு மனத் தூண்டுதல் எனக்கு ஏற்பட்டிருக்கிறது. ஒவ்வொரு இனத்தவரும் மற்றவர் மொழிகளைக் கொஞ்சம் அறிந்து வைத்திருக்கவே விரும்புகிறார்கள். இத்தகைய ஒரு மனநிலை தோன்றிவிட்டால், பிரச்னை கிடையாது என்றே அர்த்தம்'' என்றார் அவர்.

''உங்களுக்கு என்னென்ன மொழிகள் தெரியும்? சீன மொழி கற்றுக்கொள்ள உங்களால் முடியுமா?'' என்று கேட்டேன்.

''சிங்கப்பூரில் தமிழ் உள்பட நாலு ஆட்சி மொழிகள் இருப்பது உங்களுக்குத் தெரிந்ததுதான். நான் இந்த நாலு மொழிகளையும் பயன் படுத்த ஒரு முயற்சி செய்திருக்கிறேன். என் தொகுதியில் ஒரு விழா நடப்பதாக வைத்துக் கொள்ளுங்கள். நான் நாலு மொழியிலும் அந்த நிகழ்ச்சியில் பேசுவேன். தமிழ், ஆங்கிலம், மலாய் மொழி ஆகிய மூன்று மொழிகளையும் பேசி விடுவது சுலபம். சீன மொழிப் பேச்சை ஆங்கில எழுத்தில் வைத்துப் படித்து விடுவேன். இது எனக்குப் புதுமையாகப் பட்டது. தொகுதி மக்களுக்கு இது மகிழ்ச்சியாகவும் இருக்கும். அதே சமயம் ஒரு பல இன சமுதாயத்தில் பயனுள்ள குடிமகனாக நாம் இருக்கிறோம் என்ற திருப்தியும் நமக்கு ஏற்படும் அல்லவா?'' என்று திரு. கோவிந்தசாமி வினவினார்.

திரு. கோவிந்தசாமி, சிங்கப்பூர் வீடமைப்பு வளர்ச்சிக் கழகத்தின் அடுக்கு மாடி வீடுகளை மக்களுக்கு ஒதுக்கீடு செய்து கொடுக்கும் குழுவின் தலைவராகவும் இருந்து வருகிறார்.

''இதில் சலுகை எதுவும் காட்டுவீர்களா?'' என்றேன்.

''பிரதமரே சிபாரிசு செய்தால் கூட அது நடக்காது. அவ்வளவு கண்டிப்பு. ஊழல் இல்லாத அரசாங்கம் எங்கள் அரசாங்கம் என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். லஞ்சம், ஊழல் என்று தகவல் கிடைத்தால், 24 மணி நேரத்தில் சீட்டு கிழிக்கப்பட்டுவிடும். அவ்வளவு ஸ்ட்ரிக்ட்'' என்றார் அவர்.

இது நூற்றுக்கு நூறு உண்மை. சிறிய நாடான சிங்கப்பூர், மற்ற நாடுகள் பின்பற்றும் அளவுக்குச் சிறப்பாகக் காரியங்களை நடத்தி வருவது பெருமைதானே!

சிங்கப்பூர் பார்லிமெண்டில் 58 உறுப்பினர்கள் இருக்கிறார்கள். சிங்கப்பூர் தமிழர்கள் ஐந்து பேர். இவர்களில் இருவர் இலங்கைத் தமிழ்ச் சமூகத்தினர்.

சாலையில் சந்தித்த எம். பி.யை ரெஸ்டாரெண்டில் பேட்டி காண்பது என்பது சிங்கப்பூரில்தான் முடியும். அத்தனை எளிமையாக அவர்கள் நடந்து கொள்கிறார்கள். அட்க்கமான அரசியல்வாதிகளாக இருந்து கொண்டு, இவர்கள் நாட்டு நலனுக்காக எவ்வளவோ செய்கிறார்கள்.

# 30

''சிங்கப்பூரைப் பற்றிப் பேசுங்கள். அதன் வளர்ச்சியைப் பற்றிக் கூறுங்கள். அதன் உயர்வைப் பற்றி விளக்குங்கள்...''

சென்னையிலுள்ள முருக தனுஷ்கோடி மகளிர் உயர்நிலைப் பள்ளிக்கும், கல்யாணம் பெண்கள் உயர்நிலைப் பள்ளிக்கும் சமீபத்தில் ஒரு விழாவுக்கு நான் சென்றிருந்தபோது, மாணவிகள் என்னைக் கேட்ட கேள்விகள் இவை.

அவர்களிடம் பல விஷயங்களை நான் எடுத்துச் சொன்னேன். தொழில்களைப் பற்றிக் கூறினேன். பிரமாண்டமான அடுக்கு மாடி வீடுகளைப் பற்றி விளக்கினேன். தூங்காத துறைமுகத்தைப் பற்றித் தெரிவித்தேன். ஆனால் சிங்கப்பூரின் வளர்ச்சி இவற்றோடு இருந்து விடவில்லை. இன்னொரு பெரிய வளர்ச்சியும் அங்கே உண்டு. பார்த்த மாத்திரத்தில் அதை அடையாளம் கண்டு கொள்ள முடியாது.

'தமிழ் மலர்' என்ற பத்திரிகையின் ஆசிரியர் திரு. செல்வகணபதியுடன் ஒரு நாள் பேசிக் கொண்டிருந்தேன். அவர் சொன்னார்:



''உங்கள் நாட்டில் தொழில்களைத் தேசிய மயமாக்குகிறீர்கள். ஆனால், சிங்கப்பூரில் தனி நபர்களையே தேசியமாக்கி வருகிறோம். வி நேஷனலைஸ் இன்டிவிஜுவல்ஸ். (We nationalise individuals).''

எனக்கு அது ஏதோ புதிர் போல இருந்தது.

''தனி நபர்களைத் தேசியமயமாக்குவதா? இது என்ன, புதுமையான வார்த்தையாக இருக்கிறதே; அதுவும் ஒரு ஜனநாயக நாட்டில்...'' என்றேன்.

''ஜனநாயக நாடாக இருப்பதால்தான் அதைச் சாதிக்க முடிகிறது. இதற்கு அடக்குமுறை தேவையில்லை. கெடுபிடி அவசியமில்லை. மக்கள் தாங்களாகவே தேசிய மனப் பக்குவம் பெற்றுவிடுகிறார்கள்'' என்றார் அவர்.

''சட்டம், கட்டுப்பாடு இல்லாமல் இதைச் சாதிக்க முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை'' என்றேன் நான்.

''மிஸ்டர் மணியன், நீங்கள் சொல்ல நினைப்பது எனக்குப் புரிகிறது. தனி நபர்கள், இனம் இனமாக, பிரிவு பிரிவாக ஒதுங்கி நின்றால், தேசியத் தன்மையை உருவாக்க முடியாது என்பதை ஒப்புக் கொள்கிறீர்கள் அல்லவா?''

''ஒப்புக் கொள்கிறேன்.''

''இதற்குச் சட்டம் தேவையில்லை. சட்டம் தேவைப்படக்கூடிய சில அம்சங்களையும் நான் மறுக்கவில்லை. தனி மனிதர்களைத் தேசிய மயமாக்குவது என்றுதான் நான் சொன்னேன். இதில் பழக்க வழக்கங்கள், பயிற்சி முறைகளும் அடங்கும். உதாரணமாகத் தேசிய சேவையை எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று அவர் ஆரம்பித்தார்.

''நான் சொல்ல வந்ததும் இதுதான் மிஸ்டர் செல்வகணபதி'' என்றேன் சிரித்துக் கொண்டே.

''இளைஞர்களுக்குக் கட்டாய ராணுவப் பயிற்சி கொடுப்பதும், பொது இடத்தில் குப்பை போடக் கூடாது, எச்சில் துப்பக்கூடாது, சினிமா தியேட்டரில் சிகரெட் பிடிக்கக் கூடாது என்பதற்கெல்லாம் சட்டம் கொண்டு வரப்பட்டிருப்பதும் மக்களைத் தேசிய மயமாக்கும் சில வழி முறைகள்தான்'' என்று அவர் குறிப்பிட்டார். அவர் கூறியது முற்றிலும் உண்மை. சிங்கப்பூர் பிரஜைகள் அனைவரும் தேசியமயமாக்கப் படுவதை நான் நேரில் கண்டேன்.

சிங்கப்பூரைப் பற்றிப் பல சிறப்புகளை எடுத்துச் சொன்னார் செல்வகணபதி.

''சிங்கப்பூர் மிக மிகச் சிறிய நாடு. வெளிநாடுகளில் இதற்குப் பெரிய அளவில் விளம்பரம் செய்திருக்கிறோம்'' என்றார்.

இப்படி அவர் கூறியபோது, 'இந்தியா பெரிய நாடாக இருந்தும் போதிய அளவுக்கு விளம்பரப் படுத்தப்படவில்லையே' என்று அவர் சுட்டிக் காட்டுவது போல் இருந்தது.

''அதிகப்படியான விளம்பரத்தினுல் பலன் அதிகமாகக் கிடைத்திருக்கிறதா?'' என்று கேட்டேன்.

''விளம்பரத்தைப் பார்த்துவிட்டு டூரிஸ்டுகள் அதிகமாகவே சிங்கப்பூருக்கு வருகிறார்கள். இங்கே அட்ராக்ஷன் அதிகமாக இருக்கும் என்று எதிர்பார்த்து வருகிறார்கள். அதில் சிலருக்கு சற்று ஏமாற்றமாகக் கூடப் போய்விடுகிறது'' என்றார் அவர் சிரித்துக்கொண்டே.

பல வருஷங்களுக்கு முன் சிங்கப்பூர் மக்கள் படகு கட்டும் நிலையில் கூட இல்லை. படகு கட்டவும் தெரியாது. அவர்கள் இப்பொழுது எல்லா நாடுகளுக்கும் கப்பல் கட்டிக் கொடுக்கும் நிலையில் இருக்கிறார்கள். பல நாட்டுக் கப்பல்களைப் பழுது பார்த்துக் கொடுக்கிறது சிங்கப்பூர். இது ஒன்று போதாதா சிங்கப்பூரின் வளர்ச்சியைக் காட்ட?

புதுமையான வளர்ச்சிகளுக்கு வழி திறந்து விட்டிருக்கும் சிங்கப்பூர், பழமையையும் விட்டுவிடவில்லை. ஜோசியப் பைத்தியம் நம் நாட்டில்தான் அதிகம் என்று நினைத்திருந்தேன். சிங்கப்பூரிலும் அதற்குப் பஞ்சமில்லை. 'இந்தியர்கள் அங்கு இருப்பதால் ஜோசியப் பித்து ஏற்றுமதியாகி யிருக்குமோ' என்று முதலில் நினைத்தேன். பிறகு தான் புரிந்தது; சீனர்கள் ஜோசிய விஷயத்தில் ஒருபடி மிஞ்சி நிற்கிறார்கள் என்பது.

குருவி ஜோசியம் மட்டுமல்ல; குச்சி ஜோசியம், சக்கர ஜோசியம், ரேகை ஜோசியம் எல்லாமே சிங்கப்பூரில் இருக்கிறது. ஒரு நாள் புத்தகயா ஆலயத்திற்குச் சென்றிருந்த சமயம் இவற்றை யெல்லாம் வேடிக்கை பார்த்தேன். வழிபாட்டுக்காக வருபவர்களை எத்தனை சீக்கிரத்தில் இந்த ஜோசியப் பைத்தியம் பிடித்துக் கொண்டு விடுகிறது என்பதைக் கண்கூடாகக் கண்டேன்.

ஆலயத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு வெளியே வந்த நான், ''ஐயா, வாங்க'' என்ற குரல் கேட்டதும் திரும்பிப் பார்த்தேன். புத்தர் கோயில் வாசலில் ஒரு ஜோசியர் உட்கார்ந்திருந்தார். தமிழராக இருக்கிறாரே என்று அருகில் போனேன்.

''நீங்கள் ஊருக்குப் புதிசு போல் தெரிகிறதே'' என்றார் அவர்.

''அது எப்படித் தெரியும்? உங்கள் ஜோசியம் காட்டிக் கொடுத்து விட்டதோ?'' என்றேன் நான்.

''ஐயாவுக்குத் தஞ்சாவூர் ஜில்லா போல் தெரிகிறது'' என்றார் அடுத்து.

''நன்றாக ஜோசியம் சொல்வீர்கள் போல் தெரிகிறது'' என்று நான் சொன்னதும் அவர் சிரித்துக் கொண்டார்.

''நானும் தஞ்சாவூர்க்காரன்தான். என் பெயர் கோதண்டபாணி. திருவிடைமருதூர் நான் பிறந்த ஊர். ஆனால், அதை மறந்து எவ்வளவோ காலம் ஆகிவிட்டது. ஏதோ ஜோசியம் பார்க்கிறேன். இது எனக்குப்

பிழைப்பில்லே. ஒரு பொழுதுபோக்கு மாதிரிதான் வச்சிருக்கேன்...'' என்று சுவாரசியமாகப் பேச ஆரம்பித்துவிட்டார் கோதண்டபாணி.

''இது உங்களுக்கு குடும்பத் தொழிலா, அல்லது இடையில் கற்றுக் கொண்டீர்களா ?'' என்று கேட்டேன்.

''சோழியர்கள் என்று கேள்விப்பட்டிருப்பீர்களே, சோழியர்களுக்கு ஜோசியம் தெரியும். நான் ஒரு சோழியன். வேளாளர் குடும்பத்தைச் சேர்ந்தவன். ஜோசியம் சுலபமாக எங்களுக்கு வரும்.''

''மறுபடியும் எப்பொழுதாவது திருவிடைமருதூருக்குப் போக வேண்டும் என்று நினைக்கிறீர்களா?'' என்று கேட்டேன் அவரிடம்.

''அந்த ஆசை இல்லே. ஒவ்வொரு சமயத்தில் திருவிடைமருதூரை நினைத்துக் கொள்வேன். அதோடு சரி. எதற்காக அங்கே போகணும்? இங்கே குடியும் குடித்தனமுமா ஆயிட்டேன். நான் ஜோசியம் பார்க்க ணுங்கிற அவசியமில்லே. என் பிள்ளைகள் பெரியவர்களாகி உத்தியோகம் பார்க்கிறார்கள். பேரப் பிள்ளைகள் பல பேர் இருக்கிறார்கள். இருந்தாலும் பொழுது போக வேண்டுமே, அதற்காக வருகிறேன்.''—உற்சாகத்துடன் பேசினார் கோதண்டபாணி.

''தினமும் எத்தனை மணி நேரம் இங்கே ஜோசியம் பார்க்கிறீர்கள்?''

''அது இஷ்டத்தைப் பொறுத்தது. காலேயில் பசியாறிவிட்டு ஒரு கோப்பி குடிச்சிட்டு ஒன்பது மணிக்கு வருவேன். ஒரு மணிக்கு சாப்பாட்டுக்குப் போவேன். கொஞ்ச நேரம் தூங்கி எழுந்துவிட்டு, நாலு மணிக்கு வருவேன். அநேகமா அலட்டிக் கொள்றதில்லே. தினமும் பத்து வெள்ளி வரை வரும்படி உண்டு.''

''ரொம்ப காலமாக சிங்கப்பூரில் இருக்கிறீர்களே, இங்கே இருக்கிற பெரிய மனிதர்களை யெல்லாம் தெரியுமா?'' என்று கோதண்டபாணி சோழியரைக் கேட்டேன். அவ்வளவுதான்! பொழிந்து தள்ளிவிட்டார்:

''யாரைத் தெரியாது? ஜவுளிக்கடை வச்சிருக்கிற கோவிந்தசாமிப் பிள்ளை, லாயர் ஆபீசில் கிராணியாயிருந்த பக்கிரிசாமி பிள்ளை, ஒரு காசு விலேயிலே பேப்பர் ஆரம்பிச்ச சாரங்கபாணி எல்லாரையுமே தெரியும். என்னை அவங்களுக்குத் தெரியுமான்னு கேட்டுடாதீங்க. கோவிந்தசாமிப் பிள்ளை இப்போ ஜவுளிக்கடையும், வங்குசா கடையும் வச்சிருக்கார். அந்தக் காலத்திலே இவர் வேலே பார்த்தது ராமசாமி நாடார் கிட்டே தான்...?'' என்று அநாயாசமாகச் சொல்லிக் கொண்டே போனார். செல்வாக்குள்ளவர்களைப் பற்றி சாதாரணமாகப் பேசுவதில் ஒரு சிலருக்குக் குஷி உண்டல்லவா? அந்த ரகம் அவர்!

''ராமசாமி நாடார் செல்வாக்கு மிருந்தவரா?'' என்று கேட்டேன்.

''அவருக்கு அந்தக் காலத்திலே ரொம்பப் பேரும் புகழும் உண்டு. அவர் மருமகன் ஆதித்தன், பாரட்லா படிச்சிட்டு, இங்கே கொஞ்ச நாள் லாயரா உத்தியோகம் பார்த்தார். அப்புறம் ஊருக்கே போயிட்டார்.''

எனக்கு ஆச்சரியம். அத்தனை பேரின் ஜாதகமும் இவர் கையில் இருக்கும் போலிருக்கிறதே என்று நினைத்துக் கொண்டேன். (அவர் ஆதித்தன் என்று குறிப்பிட்டது அமைச்சர் சி.பா. ஆதித்தனார் அவர்களைத்தான். பார்-அட்-லா படித்துவிட்டு அவர் சிங்கப்பூரில்தான் முதலில் தொழில் புரிந்திருக்கிறார்.)

என்னுடைய ஜாதகத்தையும் அவர் தெரிந்து கொண்டுவிட வேண்டாம் என்பதற்காக, அவரிடமிருந்து மெதுவாக நழுவினேன். நல்ல வேளையாக சில சீனர்கள் ஜோசியம் பார்ப்பதற்காக அப்பொழுது வந்து நின்றனர்.

கோவிந்தசாமிப் பிள்ளையின் பெயர் சிங்கப்பூருக்கு வருகிறவர்களின் காதில் விழாமலிருக்க முடியாது. சிங்கப்பூருக்குப் போய் வருகிற யாரும் இரண்டு மூன்று புடவை, துணிமணிகளை வாங்கிப் பெட்டியில் போட்டுக் கொள்ளத் தவறுவதில்லை. நைலக்ஸ், நைலான், ஜார்ஜட், ஷிபான் புடவைகளைப் பற்றி நினைத்தால் கோவிந்தசாமிப் பிள்ளையையும் (சிங்கப்பூரில்) நினைக்க வேண்டியிருக்கும்.

நான் ஒவ்வொரு முறையும் சிங்கப்பூருக்குப் போகும்போது, 'மறக்காமல் கோவிந்தசாமிப் பிள்ளையின் கடைக்குப் போய் வாருங்கள்' என்று மறக்காமல் சொல்லுவாள் என் மனைவி லலிதா. அந்தக் கடையில் வியாபாரம் செய்யும் சிப்பந்திகளும் மிகவும் சாமர்த்தியசாலிகள். ஒரு புடவை வாங்க வருபவரை, வண்ண வண்ணப் புடவைகளைக் காட்டி இரண்டு மூன்று வாங்க வைத்து விடுகிறார்கள்.

பெரிய ஜவுளிக் கடையையும், மளிகைக் கடையையும் நடத்திக் கொண்டிருக்கும் கோவிந்தசாமிப் பிள்ளை, வயதிலும் பெரியவர். சிங்கப்பூர் தமிழர்களில் வயதில் மூத்தவர் அவர்தானாம்.

ஜோசியர் கோதண்டபாணியுடன் பேசிக் கொண்டிருந்துவிட்டு சாலையில் இறங்கியபோதே, 'அதுதான் கோவிந்தசாமிப் பிள்ளை கல்யாண மண்டபம்' என்று நண்பர்கள் ஒரு கூடத்தைச் சுட்டிக் காட்டினார்கள். சிங்கப்பூர் தமிழர்கள் விசேடங்களை நடத்துவதற்காக அவர் கட்டிக் கொடுத்திருக்கும் மண்டபமாம் அது.

கோவிந்தசாமிப் பிள்ளையைச் சந்திப்பதற்காக சிராங்கூன் ரோடிலுள்ள கடைக்குச் சென்றேன். மளிகைக் கடையில் உட்கார்ந்திருந்தார். வயதினால் ஏற்பட்ட தளர்ச்சியைவிட, வர்த்தகச் சுறுசுறுப்பினால் ஏற்பட்ட கிளர்ச்சியே அவரிடம் மிகுதியாக இருந்தது. 84 வயதான அவர், 24 வயது சிப்பந்தியைப் போலவே வியாபாரத்தில் கவனம் செலுத்திக் கொண்டிருப்பதைப் பார்த்தேன். அவரிடம் பேசிக் கொண்டிருந்த சிறிது நேரத்தில், சிங்கப்பூரில் மளிகை வியாபாரம் நடைபெறும் அழகையும் கவனித்தேன்.

''என்ன பார்க்கிறீர்கள்?'' என்றார் கடைச் சிப்பந்தி ஒருவர்.

''சாமான்கள் பளிச்சென்று துப்புரவாக இருக்கின்றனவே'' என்றேன் வியப்புடன்.

''ஆமாம். இங்கே கலப்படம் கிடையாது. சாமான்களில் கல்லும் மண்ணும் இருக்காது'' என்று அவர் கூறியதை, மானசீகமாக நம் நாட்டில் இருந்துகொண்டு நினைத்துப் பார்த்தேன்.

# 31

திரு. ஜமால்

சிங்கப்பூரில் இருக்கும்போது ஒரு வெளிநாட்டில் இருக்கிறோம் என்ற உணர்ச்சி எனக்கு எப்போதுமே ஏற்பட்டதில்லை. இதற்குப் பல காரணங்கள் உண்டு. மக்களில் முக்கால்வாசிப் பேர் சீனர்களாக இருந்தாலும், விமான நிலையத்தில் இறங்கியதுமே தமிழர்களைச் சந்திக்கக் கூடிய ஒரு நாடு சிங்கப்பூர்தான்.

நான் சிங்கப்பூருக்குப் பலமுறை சென்றிருக்கிறேன். அந்தப் பயணத்தில் ஒருமுறை, ஒருநாள் அதிகாலையில் எம்.எஸ்.ஏ. விமானத்தில் சிங்கப்பூர் போய்ச் சேர்ந்தேன்.

இருள் பிரியாத நேரம். நான் அந்த விமானத்தில் வருவது சில நண்பர்களுக்குத் தெரியும். இவ்வளவு அதிகாலையில் அவர்கள் எனக்காக வரவேண்டியிருந்திருக்குமே என்று சற்று வேதனைப்பட்டேன்.

இமிக்ரேஷன் சோதனை முடிந்து வெளியே வந்ததும், ''நீங்கள் தானே மிஸ்டர் மணியன்?'' என்று கேட்டவாறு அருகில் வந்தார் ஒரு நண்பர்.

''ஆமாம், நீங்கள்...?'' என்றேன் நான்.

''என் பெயர் ஜமால்.''—தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார்.

''நான் வருவது உங்களுக்கு எப்படித் தெரியும், மிஸ்டர் ஜமால்?'' என்று கேட்டேன்.



''நேற்றிரவே தெரியும். உங்களுக்குப் பழக்கமான நண்பர்களின் சார்பில், பழக்கமில்லாத நான் முதலில் வரவேற்கிறேன். என்னுடன் வாருங்கள். உங்கள் நண்பர்கள் சில நிமிஷத்தில் வந்து விடுவார்கள்'' என்ருர் அவர்.

அதிகாலையில் இப்படி ஒரு கனிவான வரவேற்பா என்று எண்ணி மகிழ்ந்துபோய் ஜமாலைப் பின்தொடர்ந்தேன்.

''இதுதான் நம் கடை'' என்று சுட்டிக் காட்டியவாறு, பாசஞ்சர் டெர்மினல் கட்டடத்தினுள்ளே யிருந்த ஒரு கடைக்கு அழைத்துச் சென்ருர் அவர்.

அந்த வரிசையில் ஐந்தாறு கடைகள் இருந்தன. ஒன்றிரண்டைத் தவிர மற்ற கடைகளைத் தமிழர்களே நடத்துகிருர்கள் என்பதைச் சில நிமிஷத்தில் தெரிந்து கொண்டு விட்டேன்.

ஜமால் காபி வரவழைத்தார். போட்டோகிராபர் சுந்தரம் காபியை விழுங்கியவாறு என்னைப் பார்த்தார். ''காபி எப்படி?'' என்றேன்.

''என்ன சார், ஒரே கறுப்பாக இருக்கு. கலரைப் பார்த்ததும் வேறு ஏதாவதாக இருக்குமோ என்று நினைத்து விட்டேன்...'' என்று இழுத்தார் சுந்தரம்.

''பயப்படாதீர்கள். இது சீனர்கள் போடும் காபி. கலர் அப்படித் தான் இருக்கும். இன்னும் ஒரு மங்கு காபி குடிக்கிறீர்களா?'' என்ருர் ஜமால்.

''போதும் இந்த மங்கு, இதுவே பிரமாதம்'' என்று சொல்லித் தப்பித்தேன்.

நாங்கள் பேசிக் கொண்டிருக்கும்போது, 'லிடி'யிலிருந்து சாலி வந்து சேர்ந்தார்.

ஹோட்டலுக்குப் புறப்பட்டோம். ஜமால் தனது காரை எடுத்தார்.

''இந்தக் காபி உங்களுக்குப் பிடிக்கவில்லை. ஹோட்டலுக்குப் போகும் வழியில் தோசையுடன் காபி சாப்பிடுவோம்'' என்றவாறு, ஜமால் காரைச் செலுத்தினர்.

ஓரிடத்தில் காரை நிறுத்திய ஜமால், ''இதுதான் மெக்பர்ஸன் மார்க்கெட்... இங்கே டிபன் சாப்பிடுவோம்'' என்ருர்.

''மறுபடியும் கறுப்பு கோப்பியோ?'' என்ருர் சுந்தரம்.

ஒரு சீனர் கடைக்குச் சென்ருேம். சீனர் கடையென்ருலும் எங்களை வரவேற்றவர்கள் தமிழர்கள்தான். அந்தக் கடையில் ஒரு பகுதியில் தமிழர்கள், தோசை போட்டுக் கொண்டிருந்தார்கள்.

நண்பர் ஜமால் அளித்த காலை வரவேற்பையும், காபி தோசை உபசரிப்பையும் என்னல் மறக்கவே முடியவில்லை.

''இவருடைய சுபாவமே இப்படித்தான். நம் நாட்டிலிருந்து யார் வந்தாலும், ஏர்போர்ட்டில் இவரைக் கடந்துதான் வரவேண்டும். எல்லோருக்கும் உதவி, ஒத்தாசை, உபசாரம் 'செய்வார்'' என்றார் சாலி.

உண்மைதான். எல்லோருக்கும் இனியவராக ஏர்போர்ட்டில் உட்கார்ந்திருக்கிறார் ஜமால்.

ஒருமுறை தம் வீட்டுக்கு அழைத்துச் சென்றார் அவர். ஏர்போர்ட்டுக்குச் சமீபமாக இருக்கும் ஒரு 'கம்ப'த்தில் அவருக்கு வீடு. 'பெரிய வியாபாரம் செய்கிறார், வசதியான பெரிய வீடாக வைத்திருப்பார்' என்று நினைத்தேன். மரப்பலகையால் தடுக்கப்பட்ட நீளமான ஒரு வீட்டின் பகுதியில் அவரும் அவருடைய கடையைச் சேர்ந்தவர்களும் தங்கி யிருந்தார்கள்.

''இன்னும் வசதியான வீடுகள் சிங்கப்பூரில் கிடைக்குமே'' என்றேன் நான்.

''கிடைக்கிறது. இரவும் பகலும் ஏர்போர்ட்டில் இருக்க வேண்டியவர்கள் நாங்கள். இதுமாதிரி சமீபத்தில் வீடு இருந்தால்தான் நினைத்த நேரத்தில் போக வர இருக்க முடியும்'' என்று பதில் சொன்னார் ஜமால்.

கப்பல் 'பங்க்' மாதிரி அடுக்கடுக்காகப் படுக்கைகள் போடப்பட்டிருந்தன. அதில் அவருக்கு ஓர் இடம்.

''நீங்கள் முதலாளி மாதிரி நடந்து கொள்வதில்லை போல் தெரிகிறது'' என்றேன்.

''அதற்கு அவசியமில்லை. நான் வயதில் பெரியவனுமல்ல. நானும் தொழிலாளியாக இருந்தவன்தான். சிகரெட் பிடிப்பதானால்கூட சேர்ந்தேதான் பிடிப்போம்'' என்றார்.

பாயலேபார் என்ற பெயர் கொண்ட அந்தப் பகுதிக் கம்பத்தில், ஒரு சிறிய வீட்டில் ஒரு சமத்துவ உலகத்தைப் பார்த்தேன்.

டொரியான், ரம்புத்தான், மங்குஸ்தான் போன்ற பழங்களை எனக்கு முதலில் அறிமுகப்படுத்தியவர் நண்பர் ஜமால்தான்.

''நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள். சிங்கப்பூரில் பொதுவாக எல்லா வியாபாரிகளும் மகிழ்ச்சியோடுதான் இருப்பதாகத் தோன்றுகிறது. இதற்கு என்ன காரணம், ஜமால்?'' என்று கேட்டேன்.

''சுதந்திரமாக வியாபாரம் செய்ய சிங்கப்பூர் அரசாங்கம் அனுமதிக்கிறது. விற்பனை வரித் தொல்லை கிடையாது. சேல்ஸ் டாக்ஸ் அதிகாரி மிரட்ட வருவார் என்ற பயம் இல்லை. யாரும் பொய்க் கணக்கு வைத்துக் கொள்ள வேண்டிய அவசியமும் இல்லை. லஞ்சம் கொடுக்க வேண்டிய கட்டாயம் இல்லை'' என்று அடுக்கிக் கொண்டே போனார் அவர்.

இளம் வயதினர், திறமையான வியாபாரிகளாக சிங்கப்பூரில் இருக்க முடிகிறது. நண்பர் ஜமால் இதற்கு நல்ல உதாரணம். அவர் நல்ல வியாபாரி மட்டுமல்ல; நல்ல மனம் படைத்தவர். வியாபார வேலைகளுக்கு இடையிலும் அவர் தொழுகையை விடாமல், கடைப்பிடித்துக் கொண்டிருக்கிறார்.

தஞ்சோங் பகார் ரோடில் ஒருநாள் சென்று கொண்டிருந்தபோது சற்று வித்தியாசமான ஒரு காட்சியைப் பார்த்தேன். வித்தியாசம் என்பது வேறொன்றுமில்லை. சென்னையில் சாதாரணமாகக் காண முடியாத ஒரு காட்சியாக இருந்ததால், இப்படிச் சொல்கிறேன். லுங்கியும் தாவணியும் அணிந்த சில மாதர்கள் அந்தப் பகுதியில் நடமாடிக் கொண்டிருந்தார்கள்.

''இவர்கள் யார்?'' என்று என்னுடன் அப்போது வந்த நண்பர் பஷீரைக் கேட்டேன்.

''முஸ்லிம் மாதர்கள். தமிழ் நாட்டைப் பூர்விகமாகக் கொண்டவர்கள்தான்! இங்கேயே வழிவழியாகத் தங்கிவிட்டவர்கள். தென்காசி, கடையநல்லூர் பகுதியைச் சேர்ந்தவர்கள்'' என்று சொன்னார்.

''இப்படி சிங்கப்பூரிலேயே வேரூன்றிவிட்ட தமிழ்நாட்டு முஸ்லிம்கள் நிறையப் பேர் இருக்கிறார்களா?'' என்றேன் ஆர்வத்துடன்.

''ஓரளவுக்கு இருக்கிறார்கள். இவர்கள் ஒரு சாரார். தென்காசி முஸ்லிம்கள் சிங்கப்பூர் வாழ்க்கையை விரும்புகிறார்கள்'' என்று அவர் கூறினார்.

சிங்கப்பூரில், தமிழ்நாட்டு முஸ்லிம்கள் வளமாகவே இருக்கிறார்கள். சிறுசிறு ஒட்டுக் கடை (பெட்டிக் கடைக்கு சிங்கப்பூரில் இப்படிப் பெயர்) முதல், பெரிய பெரிய ரெஸ்டாரண்டுகள், ஜவுளிக் கடைகள் வரை ஏராளமாகவே வைத்திருக்கிறார்கள். அநேகமாக ஒவ்வோர் ஊரைச் சேர்ந்தவர்களும் தங்கள் ஊர் பெயரில் சங்கம் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். சிங்கப்பூர் தமிழ் முஸ்லிம் யூனியன் என்பது ஒரு பெரிய சங்கம். அதன் செயலாளர் திரு. இஸ்மாயில் ஜின்னாவை ஒரு நாள் சந்தித்தேன்.

''நீங்கள் சிங்கப்பூர் பிரஜைதானே?'' என்றேன் அவரிடம். அவர் சிரித்துக் கொண்டார்—

''நிச்சயமாக! இரண்டு காலையும் இங்கேதான் வைத்திருக்கிறேன். என் குடும்பம் இந்த நாட்டில்தான் இருக்கிறது'' என்றார் இஸ்மாயில் ஜின்னா.

'ஒரு காலா, இரண்டு காலா?' என்பது சிங்கப்பூரில் ஒரு சகஜமான கேள்வி. ஆற்றில் ஒரு கால், சேற்றில் ஒரு கால் என்று சொல்வோம் இல்லையா? அது மாதிரி ஒரு சர்ச்சை இது. சிங்கப்பூர் பிரஜையாக இல்லாமல், நம் நாட்டுக்குப் போக வர இருப்பவர்களின் நிலையைத்தான் இப்படித் தமாஷாகச் சொல்கிறார்கள். நான் சிங்கப்பூரில் இரு தரப்பினரையும் சந்தித்தேன்.

''சிங்கப்பூர் பிரஜைகள் மட்டுமே உங்கள் சங்கத்தில் உறுப்பினர்களாக இருக்க வேண்டுமா?'' என்று நான் கேட்டேன்.

''இல்லை. தமிழ் பேசக் கூடிய சிங்கப்பூரிலுள்ள முஸ்லிம்கள் அனைவருக்கும் உரிய ஒரு கலாசார ஸ்தாபனமாகவே எங்கள் சங்கம் இயங்கி வருகிறது. இது அரசியல் ஸ்தாபனம் அல்ல. சமூகப் பணிகளைத்

செய்து வருகிறோம். இலக்கியக் கூட்டங்கள், திருக்-குர்ஆன் மாநாடு, நினைவு விழாக்கள் போன்றவற்றை அவ்வப்போது நடத்தி வருகிறோம்'' என்று இஸ்மாயில் ஜின்னு சொன்னார்.

''நீங்கள் முழு நேரமும் இந்த யூனியன் அலுவல்களையே கவனிக்கிறீர்களா?''

''இல்லை, இல்லை... இது ஒரு கௌரவப் பணிதான். நான் பஸ் கண்டக்டராக இருக்கிறேன். யூனியன் பொறுப்பாளர்களும், உறுப்பினர்களும் வெவ்வேறு தொழில் துறைகளில் ஈடுபட்டிருப்பவர்கள்.''

''உங்களுக்கென்று பத்திரிகை எதுவும் நடத்துகிறீர்களா?''

''வெற்றிகரமாகத் தினசரி பத்திரிகையை நடத்திய காலமும் இருந்தது. இப்பொழுது 'சாந்திச் சுடர்' என்ற பெயரில் ஒரு பிரசுரத்தை வெளியிட்டுக் கொண்டிருக்கிறோம்'' என்றவாறு சாந்திச் சுடர் பிரதிகளைக் கொடுத்தார், திரு. இஸ்மாயில் ஜின்னு.

''சிங்கப்பூரில் பொதுவாக முஸ்லிம்களின் வாழ்க்கை வசதிகள் எப்படி?'' என்று கேட்டேன்.

''எல்லா உரிமைகளுடன் வாழ்கிறோம். கடமைப் பற்றை உணர்ந்து வாழ்கிறோம். மத சுதந்திரம் இங்கே உண்டு. எல்லா இன மக்களும் மத அனுஷ்டானங்களுடன் வாழ்வதற்கு சிங்கப்பூர் சிறந்த இடம். அனைவரையும் பாதுகாக்கும் அரசாங்கம் எங்கள் அரசாங்கம்'' என்று பெருமிதத்துடன் அவர் கூறினார்.

நல்ல தமிழ் ஆசிரியர்களாக இருந்து கொண்டு, தமிழுக்குச் சமமாக ஆங்கிலத்தையும் அறிந்திருக்கும் ஆசிரியர்களை சிங்கப்பூரில் சந்தித்தேன். இவர்கள் சரளமாக ஆங்கிலம் பேசுகிறார்கள். ஆங்கிலப் பத்திரிகைகளையும், சஞ்சிகைகளையும் படிக்கிறார்கள். தமிழ்ப் பத்திரிகைகளையும் அவர்கள் புறக்கணிப்பதில்லை. இது ஓரளவுக்கு வியப்பையே எனக்குத் தந்தது. 'சிங்கப்பூர் அரசாங்கத்தின் கல்விக் கொள்கைதான் இதற்குக் காரணம்' என்று விளக்கம் கொடுத்தார்கள்.

''சிங்கப்பூர் கல்வி முறையைப் பற்றிக் கொஞ்சம் தெரிந்து கொள்ள வேண்டும்'' என்றேன் நண்பர் சாலியிடம்.

''அதற்கு ஒரு நபர் இருக்கிறார். வாருங்கள், போவோம்'' என்று கல்வி இலாகாவைச் சேர்ந்த தமிழ்ப் பள்ளிகளின் இன்ஸ்பெக்டர் திரு. என். கருப்பையா என்பவரிடம் என்னை அழைத்துச் சென்றார்.

''தென்கிழக்காசியாவில் தமிழ்க் கல்வி கற்பதற்கு ஒரே ஒரு உயர்நிலைப்பள்ளிதான் உண்டு. அது எங்கள் நாட்டில்தான் இருக்கிறது'' என்று பெருமிதத்துடன் பேச்சை ஆரம்பித்தார் திரு. கருப்பையா.

அவர் குறிப்பிட்ட உமறுப் புலவர் உயர்நிலைப் பள்ளி, தனியார் சிலரின் முயற்சியினால் தோன்றியது. அந்தப் பள்ளி, அரசாங்க உதவியுடன் நடந்து கொண்டிருக்கிறது.

''சிங்கப்பூரில் எத்தனை தமிழ்ப் பள்ளிகள் இருக்கின்றன?'' என்று கேட்டேன்.

''தமிழைப் பாடமொழியாகக்கொண்ட பள்ளிக்கூடங்கள் 15 உண்டு. இவற்றில் சுமார் 1,400 பேர் படிக்கிறார்கள். இவை தவிர, 85 அரசாங்க, தனியார் ஆரம்பப் பள்ளிகளிலும், 13 உயர்நிலைப் பள்ளிகளிலும் தமிழ் கற்பிக்கப்படுகிறது. மொத்தமாகத் தமிழ் படிக்கும் பிள்ளைகள் இன்றைக்கு 16,000 பேர்'' என்று திரு. கருப்பையா கூறியபோது எனக்குப் பெருமை பிடிபடவில்லை.

''உங்கள் கல்விக் கொள்கையைப் பற்றிச் சொல்ல முடியுமா?'' என்றேன்.

''மிஸ்டர் மணியன், சிங்கப்பூரில் நான்கு மொழிகள் இருப்பது உங்களுக்குத் தெரியும். ஒவ்வொரு பிள்ளையும் உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடிக்கும்போது, குறைந்தபட்சம் இரண்டு மொழிகளிலாவது தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும் என்பது முக்கியமான ஒரு நோக்கம்.''

''அப்படி யென்றால் இரண்டு மொழிகளுக்குமேல் மாணவர்கள் தெரிந்திருக்க முடியுமல்லவா?'' என்று அவரிடம் கேட்டேன்.

''அப்படித்தான். தமிழ் படிக்கும் ஒரு மாணவன், ஆங்கிலத்தைக் கட்டாயமாகப் படிக்கிறான். இந்த இரண்டு மொழியல்லாமல் மலாய் மொழியையும் விருப்பப் பாடமாக எடுத்துப் படிக்கிறான். ஆக, மூன்று மொழி அறிவு ஏற்படுகிறது'' என்று திரு. கருப்பையா விளக்கினார்.

''பாடப் புத்தகங்களை எங்கிருந்து பெறுகிறீர்கள்?'' என்றேன்.

''முன்பெல்லாம் தமிழ்ப் பாடப் புத்தகங்களைத் தமிழ் நாட்டிலிருந்தே வரவழைத்துக் கொண்டிருந்தோம். சிங்கப்பூர் தேசிய உணர்ச்சியை வளர்க்க அவை பயன்படவில்லை. சிங்கப்பூர் சூழ்நிலைக்கு ஏற்ற மாதிரி பாடப் புத்தகங்கள் இருக்க வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. இப்பொழுது சுமார் 12 வருடங்களாக உள்ளூரில் எழுதப்பட்ட புத்தகங்களையே ஆரம்பப் பள்ளிகளுக்குப் பயன்படுத்துகிறோம்.''

''இதனால் தேசிய உணர்ச்சியை வளர்க்க முடிகிறதா?''

''நிச்சயமாக! சிங்கப்பூர் சரித்திரத்தைப் படிப்பதற்குப் பதிலாக மற்ற நாட்டு சரித்திரங்களையே மாணவர்கள் படித்து வந்தார்கள். நான்கு மொழிகளிலும் சிங்கப்பூர் சரித்திரங்களைக் கல்வி இலாகா எழுதி வெளியிட்டது. இதோ பாருங்கள், எங்கள் சரித்திரத்தை'' என்றவாறு சில பிரதிகளை திரு. கருப்பையா தந்தார்.

''சிங்கப்பூர் பள்ளிகளில் வேறு சிறப்பு அம்சம் ஏதாவது உண்டா?'' என்று கடைசியாக ஒரு கேள்வியைக் கேட்டேன்.

''நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். வெறும் ஏட்டுக் கல்வியோடு நிற்காமல் தொழிற் கல்வியும் எங்கள் நாட்டுப் பள்ளிகளில் அளிக்கப்படுகிறது. ஒரு மாணவன் பள்ளிப் படிப்பை முடித்துவிட்டு வரும்போது ஒரு தொழிலையும் கற்றுக் கொண்டு வர வேண்டும் என்று எங்கள் அரசாங்கம் விரும்புகிறது. படிப்புடன் பயனுள்ள பிரஜைகளாகவும் மாணவர்களை உருவாக்கி விடுகிறோம்'' என்றார் திரு. கருப்பையா.

'இதில் பல விஷயங்களை நாம் பின்பற்றலாமே' என்ற எண்ணம்தான் எனக்கு அப்போது எழுந்தது.

# 32

நம்மை நாமே பார்த்துக் கொள்ளக்கூடிய டெலிவிஷன் நிகழ்ச்சி!

ஓட்டல் அறையில் சற்று ஓய்வாக உட்கார்ந்திருந்த நான், டெலிபோனைச் சுற்றினேன். மறு முனையில் ரிஸீவரை எடுத்தவர், ''ஹலோ'' என்றார்.

''சிராங்கூன் ரோடிலிருந்து பேசுகிறோம். இங்கே ஒரு பள்ளிக்கூடத்தில் மேஜிக் ஷோ நடத்த விரும்புகிறோம். நீங்கள் கலந்து கொள்ள முடியுமா?'' என்று கேட்டேன் நான்.

''ஓ, நிச்சயம் கலந்து கொள்கிறேன். எந்தப் பள்ளிக்கூடத்தில்? என்றைக்கு வைத்திருக்கிறீர்கள்?'' என்று ஆர்வத்துடன் கேட்டார் அவர்.

''எவ்வளவு பணம் கேட்கிறீர்கள் என்று தெரிவித்தால் வசதியாக இருக்கும்?'' என்று நான் மெதுவாகச் சொன்னேன்.

''அது உங்கள் இஷ்டம். பள்ளிக்கூடமாக இருப்பதால் நீங்கள் தருவதை வாங்கிக் கொள்கிறேன்.''

அதற்கு மேல் என்னால் பேச முடியவில்லை. சிரிப்பு வந்து விட்டது.

''நான் யார் தெரிகிறதா?'' என்றேன்.





''அடடா! நான் உங்கள் பெயரைக் கேட்கவில்லையே...... சொல்லுங்கள் சார், நீங்கள் யார்?'' என்று கேட்டார் அவர்.

''நீங்கள்தான் மெஜிஷியன் ஆயிற்றே! நான் யார் என்று சொல்லுங்களேன், பார்க்கலாம்.....''

''இதற்கெல்லாம் மேஜிக்கை நான் பயன்படுத்துவதில்லை.''

''பரவாயில்லை. என்னிடம் உங்கள் மேஜிக் பலிக்காது.''

''மேஜிக்கை விடுங்கள். நீங்கள் யார் என்று இப்பொழுதாவது சொல்லலாம் அல்லவா?'' என்று கேட்டார் அவர்.

நான் என் பெயரைச் சொன்னதும் அவருக்கு ஒரே மகிழ்ச்சி. அவரைப் பற்றி-அவர் பெயர் பஷீர்-நண்பர் ஜமால் முதல் நாள் சொல்லி விருந்தார். அவர் பெயரை மட்டும் தெரிந்து கொண்டு, போனில் அவரிடம் சற்று விளையாட்டாகப் பேசினேன் நான்.

பஷீர் ஒரு பதிப்பகத்தின் உரிமையாளர். தபால் மூலம் ஓவியம், மலாய் மொழி வகுப்புகளை சிங்கப்பூரில் நடத்தி வருபவர். நல்ல மேஜிக் நிபுணர். விளையாட்டாக நான் டெலிபோன் செய்யப் போய், அவரே காரை எடுத்துக் கொண்டு, ஒட்டலுக்கு வந்து விட்டார்.

அவருடன் ஜுபிபாட் என்ற பகுதியிலுள்ள பதிப்பகத்திற்குச் சென்றேன். மலாய் மொழிப் புத்தகங்களை அச்சிட்டுக் கொடுப்பதுடன், தபால் மூலம் அனுப்புவதற்கான பாடங்களையும் அவர் தயாரிக்கிறார்.

''இந்த வேலைகளுக்கிடையில் மேஜிக் நிகழ்ச்சிகளுக்கு எப்படிப் போக முடிகிறது?'' என்று பஷீரிடம் கேட்டேன்.

''இதில் ஒரு தனி உற்சாகம் இருக்கிறது. ஏழு வருஷமாக இந்தப் பழக்கம் உண்டு. வீட்டில் யாருக்கும் இது பிடிக்கவில்லை. எனக்கோ இதை விட்டுவிடப் பிடிக்கவில்லை'' என்றார் அவர்.

''இதைப் பொழுது போக்காகத்தான் நினைக்கிறீர்கள் அல்லவா?''

''ஆமாம். இதனால் சம்பாதிக்க வேண்டும் என்ற விருப்பம் கிடையாது. கிடைப்பதை யாருக்காவது கொடுத்து விடுவேன். மேஜிக் சம்பந்தமான சாமான்களை வாங்குவதற்கும் பயன்படுத்துவதுண்டு'' என்றார் பஷீர்.

''நீங்கள் யாரிடம் மேஜிக் கற்றுக் கொண்டீர்கள்?'' என்று கேட்டேன்.

''ஒரு சீன நண்பரிடம். அவர்தான் எனக்குக் குரு. சிங்கப்பூரில் தான் அவர் இருக்கிறார்'' என்று பஷீர் கூறினர்.

''சீனர்களிடம் மந்திரம், மாயாஜாலமெல்லாம் அதிகம் இருக்கும் போல் தெரிகிறதே'' என்றேன் நான்.

''பலவிதங்களில் தமிழர்களைப்போலத்தான் சீனர்களும். சிங்கப்பூரில் சுமார் 500 சீனக் கோவில்கள் உண்டு. தீ மிதி உண்டு. கடா வெட்டு சமயத்தில் தமிழர்கள் சாமி ஆடுவார்களே, அதே மாதிரி சீனர்களும் ஆடுகிறார்கள். அலகு பாய்ச்சிக் கொள்கிறார்கள். ஆணி மேல் நின்று கூத்தாடுவார்கள்'' என்று அடுக்கிக் கொண்டே போனர் பஷீர்!

''பேய் பிசாசு நம்பிக்கை யெல்லாம் எப்படி?'' என்று கேட்டு வைத்தேன்.

அவ்வளவுதான்! அடுக்கிக் கொண்டே போனுர் அவர்: ''நிறைய உண்டு. ஆவிகளை விரட்டுவதற்கு அவர்கள் கடைப்பிடிக்கும் ஒரு வழி என்ன தெரியுமா? சாமி வந்தவர் கத்தியால் நாக்கை அறுத்துக் கொள்வார்! அப்பொழுது சொட்டுகிற ரத்தத்தை ஒரு காகிதத்தில் ஏந்திப் பிடிப்பார்கள். குறிப்பிட்ட இடத்தில், குறிப்பிட்ட நேரத்தில் அதைக் கொளுத்தி, சாம்பலைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்; பேய், பிசாசு பயமுள்ளவர்கள் அந்தக் காகிதத்தை வீட்டு வாசலில் தொங்க விடலாம்; அல்லது சாம்பலைத் தாயத்தாகக் கட்டிக் கொள்ள லாம். பேய், பிசாசு அணுகாதாம்'' என்ருர்.

மேஜிக் நிபுணர் பஷீர், ஆவிகளை அழைத்து விடுவாரோ என்ற பயத்தில் மெதுவாக அங்கிருந்து நழுவினேன் நான்.

மிகக் குறுகிய கால இடைவெளியில் நான் பலமுறை சிங்கப்பூருக் குச் சென்றிருக்கிறேன். கிழக்குப் பக்க நாடுகளில் எதற்குச் செல்வதானு லும், சிங்கப்பூர்தானே நுழைவாசல். எனவே, போகும்போதும் வரும் போதும் சிங்கப்பூரைக் காணும் வாய்ப்பு எனக்குக் கிட்டும்.

ஒவ்வொரு முறை சிங்கப்பூரைக் காணும்போதும், அது ஒரு புதிய நகரமாகவே எனக்குத் தோன்றிக் கொண்டிருந்தது. புதிய சாலைகள், புதிய ஓட்டல்கள், புதிய கட்டடங்கள் என்று புதிது புதிதாகத் தோன்றிக் கொண்டே இருந்தன.

நண்பர்களுடன் சிங்கப்பூரிலுள்ள பலதரப்பட்ட மக்களையும் சந்தித்த பிறகு, தனியாக சில இடங்களைப் பார்க்க வேண்டும் என்று ஒருநாள் புறப்பட்டேன். ஒரு டாக்ஸியைக் கை காட்டி நிறுத்தி ஏறிக் கொண்டேன்.

'கடுகடு'வென்ற முகத்துடன் காணப்பட்ட அந்தப் பஞ்சாபி டிரைவரிடம் எப்படிப் பேச்சுக் கொடுப்பது என்ற கவலைதான் முதலில் எனக்கு ஏற்பட்டது. என்ன பாஷையில் அவரிடம் பேசலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தேன். மெதுவாக ஆங்கிலத்தில் பேச்சை எடுத்தேன். சரளமாக ஆங்கிலம் பேசினுர் அவர். பல வருஷங்களாக சிங்கப்பூரிலேயே வாழ்பவர் அவர்; சிங்கப்பூர் பிரஜை! ''எப்போதாவது தான் இந்தியாவுக்குப் போவேன்!'' என்ருர் அவர்.

''எங்கே போக வேண்டும்?'' என்று கேட்டார் அவர்.

''கொஞ்சம் ஊரைச் சுற்றிக் காட்டுங்களேன்...'' என்றேன்.

என்னை ஒருமுறை திரும்பிப் பார்த்துவிட்டு, வண்டியை ஸ்டார்ட் செய்தார் அவர்.

'''டைகர் பாம் கார்டன்' போகலாமா?'' என்ருர்.

''ஊம்.... போகலாம்... அத்துடன் வேறு சில இடங்களுக்கும் போகலாம்...''

''ஜேட் ஹவுஸ் (Jade House) போகலாம். மிக விலை உயர்ந்த கற்கள் அங்கே இருக்கின்றன. பிறகு சாங்கி பீச் போகலாம்...''—பேசிக் கொண்டே வண்டியை ஓட்டினார் அவர்.

ஹில்டன் ஓட்டலைத் தாண்டி வண்டி போய்க் கொண்டிருந்த போது, வானளாவும் வண்ணம் ஒரு கட்டடம் எழும்பிக் கொண்டிருந்ததைக் கவனித்தேன். நிமிர்ந்து பார்த்தேன். கழுத்தை வலித்தது.

''நியூ ஹோட்டல் கமிங்...'' என்றார் அவர்.

''நிறைய ஓட்டல்கள் வருகின்றன போலிருக்கிறதே...''

''எவ்வளவு ஓட்டல்கள் வந்தாலும் போதாதுதான்... அவ்வளவு டூரிஸ்டுகள்...''—பெருமிதத்துடன் பதில் சொன்னார் அந்த டிரைவர்: ''இப்போது பாருங்கள், காமன்வெல்த் பிரதமர்கள் மகாநாடு நடக்கப் போகிறது. அதற்காகச் சில ஓட்டல்களில் வசதிகளை அதிகரிக்கிறார்கள். பெரிய மகாநாடுகள், விழாக்கள் எல்லாம் ஒரு நாட்டிற்கு மிகவும் அவசியம். பெரிய பெரிய மகாநாடுகள், விழாக்கள், கண்காட்சிகள் இவை யெல்லாம் நடந்தால்தான், ஒரு நாடு முன்னேறும். ஜப்பான் மிகவும் முன்னேறிய நாடுதானே! அவர்கள் கூட தங்கள் முன்னேற்றத்தை மேலும் அதிகப்படுத்திக் கொள்ளத்தான் 'ஒலிம்பிக்' பந்தயங்களையும், 'எக்ஸ்போ'வையும் தங்கள் ஊரில் நடத்த முன் வந்தார்கள்.

'''எக்ஸ்போ' போன்ற பெரிய கண்காட்சியை ஏற்பாடு செய்ய முன் வந்ததால், புதிய ரயில் பாதைகள், புதிய துணை நகரங்கள் புதிய வசதிகள் எல்லாம் ஏற்பட்டன. ஓர் அவசியத்தை ஏற்படுத்திக் கொண்டால்தான், எந்த முன்னேற்றமும் விரைவில் வரும்... உங்கள் நாட்டில் கூட நீங்கள் ஒருமுறை 'எக்ஸ்போ' நடத்துங்கள். எல்லா நவீன முன்னேற்றங்களும் வந்து விடும். நியூ டெல்லியில் ஒரு ஒலிம்பிக்கோ, 'எக்ஸ்போ'வோ நடந்தால் எத்தனை வளர்ச்சிகள், வசதிகள் தோன்றிவிடும் தெரியுமா...?''

இந்த விஷயத்தை மிகச் சாதாரணமாக அந்த டாக்ஸி டிரைவர் சொல்லி விட்டார். அது என் சிந்தனையைப் பெருமளவு தூண்டியது. நாமே ஓர் அவசியத்தை ஏற்படுத்திக் கொண்டால்தானே, எதையும் சாதிக்க முடிகிறது. சாதாரணமாக வீட்டுக்கு வெள்ளையடிப்பது என்றால் கூட, ஒரு பொங்கல் என்று வந்தவுடன், நம்மை மீறிய ஒரு வேகம் ஏற்படுகிறதல்லவா?

ஒரு கணம் கற்பனை செய்து பார்த்தேன். புது டெல்லியில் சர்வதேச ஒலிம்பிக் பந்தயம்! சர்வதேசக் கண்காட்சி! அடேயப்பா! எத்தனை முன்னேற்றங்கள் ஏற்பட்டுவிடும்!

தோற்றத்திற்குக் கொஞ்சம் கடுமையானவராகத் தோன்றிய போதும், அந்த டிரைவர் மிகவும் விஷயம் தெரிந்தவராக இருந்தார்.

''சிங்கப்பூரில் இரவு வாழ்க்கை எப்படி?'' என்று கேட்டேன் அந்த டிரைவரை.

''குட்... ஆனுல், ஹாங்காங் அளவுக்கு இல்லே. பை தி பை... இரவு வாழ்க்கை என்ருல், நீங்கள் எதைக் குறிப்பிடுகிறீர்கள்?'' என்று கேட்டு, என்னே ஒரு மாதிரியாகப் பார்த்தார்.

''நைட் கிளப்புகள், மது விடுதிகள் இப்படித்தான்...'' என்றேன்.

''நிறைய 'பப்' (Pub)கள் உண்டு. அழகிய இளம் பெண்கள், மதுவைக் கொண்டு வந்து கொடுத்து, உங்களுடன் அமர்ந்து பேசிக் கொண்டிருப்பார்கள்.''

''வெறும் பேச்சுத்தானு?''

''அங்கு அவ்வளவுதான்...'' என்ருர் கண்ணேச் சிமிட்டிக்கொண்டே.

[நண்பர் பஷீருடன் ஒரு நாள் ஒரு சிறு மதுக் கடைக்குச் சென்றேன். எங்களுடன் இந்தோனேஷியாவில் வாழும் தமிழ் இளேஞர் ஒருவரும் வந்திருந்தார். மினி பிராக் போட்ட மலாய்ப் பெண் ஒருத்தி சிரிக்கச் சிரிக்கப் பேசி, உடல் மீது உரசிய வண்ணம் அமர்ந்து மது வழங்கிஞள். ''வெறும் கொக்கோ கோலாவைக் குடிக்கிறீர்களே, அதில் ஒரு 'கிக்' கிடைக்காதே'' என்று என்னேக் கேட்டு, கண் சிமிட்டிஞள். சற்றே இருள் சூழ்ந்த அந்த இடமும், மது நெடியும், அதில் மயங்கிக் கிறங்கிக் கிடந்த ஆண்களின் நிலேயும் 'ஒரு மாதிரி'யாகத்தான் இருந்தன.]

''நிறைய வெளிநாட்டு யாத்திரிகர்கள் வருகின்றனரே, அவர்களுக் கென்று நவீன நைட் கிளப்புகள் இருக்கின்றனவா?'' என்று கேட்டேன் பஞ்சாபி டாக்ஸி டிரைவரை.

''அப்கோர்ஸ்! டிராபிகானுவுக்குப் போய்ப் பாருங்கள்...'' என்ருர்.

[அங்கும் நான் சென்றேன். வளர்ச்சி அடைந்த எல்லா நாடுகளேயும் போல் அங்கும் 'ஸ்ட்ரிப்டீஸ்' நடன நிகழ்ச்சிகளும் இடம் பெற்றன. நிறைய ஜப்பானியப் பெண்கள் அங்கே காணப் பட்டார்கள்.]

டாக்ஸி டிரைவரின் யோசனேப்படி 'டைகர் பாம்' கார்டனுக்குச் சென்று பார்த்தேன். சிறு குழந்தைகளுக்கு வேண்டுமாஞல் அந்த இடம் பிடிக்கலாம். என்னுல் அங்கு பத்து நிமிஷத்திற்கு மேல் இருக்க முடிய வில்லே.

''சிங்கப்பூர் ரேடியோவில் நீங்கள் பேட்டி கொடுக்க வேண்டும்... மறுக்காமல் சம்மதம் தெரிவியுங்கள்...'' என்று டெலிபோனில் கேட்டார் ரேடியோ நிலேய அதிகாரி.

சிறிது நேர யோசனேக்குப் பிறகு நான் அதற்குச் சம்மதித்தேன்.

அது ஒரு வழக்கமான பேட்டியாகத்தான் இருந்தது. ஆனுல், அது என்னேப் பொறுத்தவரை மறக்க முடியாத நிகழ்ச்சி!

நானே டாக்ஸி பிடித்து ரேடியோ ஸ்டேஷனுக்குப் போனேன். டாக்ஸிக்காரர் தெருவில் நிறுத்தி விட்டார். மேட்டுப்பாங்கான இடத்தில் அமைந்திருந்த அந்த ரேடியோ ஸ்டேஷனுக்கு, நடந்து போய், பேட்டி முடிந்த பிறகு மீண்டும் நடந்து வந்து, டாக்ஸி எதுவும் கிடைக்காமல் திண்டாடி, கடைசியில் பஸ் பிடித்து ஓட்டலுக்கு வந்து சேர்ந்தேன்.

''விருந்தோம்பலுக்குப் பெயர் பெற்ற சிங்கப்பூரிலா இந்த நிலை?'' என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா?

உண்மைதான்.

'மறுக்காமல் பேட்டி கொடுக்க வேண்டும்' என்று என்னை வருந்தி அழைத்துவிட்டு, 'நீங்கள் எப்படி வருவீர்கள்?' என்று கூடக் கேட்காத சிங்கப்பூர் ரேடியோ நிலைய அதிகாரிகளை எண்ணி, நான் இன்றும் வியப்படைந்து கொண்டுதான் இருக்கிறேன்.



33

## கொல்லாபுரியுடன் பேட்டி

"கே. எல். போய் வந்தீர்களா, மிஸ்டர் மணியன்?''

சிங்கப்பூரில் நான் இருக்கும்போதெல்லாம் நண்பர்கள் இப்படிக் கேட்பது வழக்கம்.

கே. எல். என்றால்...? முதலில் எனக்குப் புரியவில்லை. புரியவில்லை என்பதைக் காட்டிக் கொள்ளவும் விரும்பவில்லை.

சாமர்த்தியமாக நான் கேட்டேன்:

''கே. எல். இங்கிருந்து எவ்வளவு தூரம்?''

''சுமார் இருநூற்றைம்பது மைல். ஃபிளைட்டில் 40 நிமிடத்தில் போய் விடலாம். ரயில், டாக்ஸி, பஸ் எதில் வேண்டுமானாலும் போகலாமே!''

''கே. எல்-லில் அப்படி என்ன விசேஷம் என்கிறீர்கள்?'' என்றேன்.

''என்ன, அப்படிக் கேட்டு விட்டீர்கள்? ஒரு நாட்டின் தலைநகரமாயிற்றே! அங்கே எவ்வளவோ மக்களை நீங்கள் சந்தித்துப் பேசலாமே! பல இதயங்கள் பேசுமே!''



இதற்கு மேல் எனக்கு விளக்கம் தேவைப்படவில்லை. கே. எல். என்பது வேறென்றுமில்லை; மலேசியாவின் தலைநகரமான கோலாலம்பூரைத்தான் அப்படிச் சுருக்கமாகச் சொல்கிறார்கள்.

கோலாலம்பூருக்கும், பினங்கு, ஈப்போ போன்ற மற்ற மலேசிய நகரங்களுக்கும் சென்று மக்களைச் சந்திக்க வேண்டுமென்ற ஆசை எனக்கு நெடுநாளாக இருந்து வந்தது. ஜப்பானுக்கோ, ஆஸ்திரேலியாவுக்கோ சென்று வரும் வழியில் கோலாலம்பூருக்குச் சுலபமாகப் போய் இருக்க முடியும். கோலாலம்பூரைத் தொடாமல் சிங்கப்பூர் வழியாகச் சென்னைக்கு வந்துவிட முடியுமாகையால், பலமுறையும் மலேசியாவுக்குப் போகாமலேயே திரும்பி இருக்கிறேன்.

சிங்கப்பூரும், மலேசியாவும் பக்கத்துப் பக்கத்து நாடுகள். மலேசியாவின் ஒரு பகுதியாகச் சில காலம் சிங்கப்பூர் இருந்திருக்கிறது. ஆகவே, இரண்டு நாடுகளுக்கும் அதிக வித்தியாசம் ஒன்றும் இருக்காது என்று நினைத்திருந்தேன். சிங்கப்பூரைப் பலமுறை பார்த்து விட்டதால், மலேசியாவும் கிட்டத்தட்ட அது மாதிரிதான் இருக்கும் என்ற எண்ணம் எனக்கு. இது சரியான அநுமானம் அல்ல என்பதை அந்த நாட்டைப் பார்த்த பிறகுதான் உணர்ந்து கொண்டேன். சிங்கப்பூரிலிருந்து சுமார் முக்கால் மைல் தூரம் கடற்பாலத்தைக் கடந்து போனால், மலேசியாவுக்கு வந்து விடுகிறோம். இந்த முக்கால் மைலைத் தாண்டிப் போவதற்கு இமிக்ரேஷன் சோதனை, சுங்கப் பரிசோதனை! பாஸ்போர்ட்டோ, அடையாளக் கார்டோ இல்லாமல் யாரும் மலேசியாவுக்குள் நுழைந்துவிட முடியாது. இவ்வளவும் நாலைந்து வருடங்களாகத்தான்.

இரண்டும் வெவ்வேறு நாடுகள் என்ற நினைப்பு அந்தப் பாலத்திலேயே ஆரம்பமாகி விடுகிறது. சிங்கப்பூரையும் மலேசியாவையும் பலவகையிலும் இணைத்து வைத்த இந்தப் பாலம், அரசியலினால் பிரித்து வைக்கும் பாலமாக இருப்பதையும், முதன் முறையாக அந்தப் பாலத்தைக் கடக்கும்போது புரிந்து கொண்டேன்.

புகைப்படக்காரர் சுந்தரமும் நானும் கோலாலம்பூருக்கு எம்.எஸ்.ஏ. விமானத்தில் புறப்பட்டோம். நாற்பது நிமிடமே பயணம் என்றாலும், அதற்குள் ஒரு 'ரெப்ரஷ்மெண்ட்!' சுந்தரத்துக்குக் கொண்டாட்டமாய்ப் போய் விட்டது. 'சாண்ட்விச்'சை ஒரு கை பார்த்தார். அவரை நான் வேடிக்கை பார்த்தேன். அவரைப் பார்த்துக் கொண்டிருந்த என்னை, அருகிலிருந்த ஒரு சீன நண்பர் பார்த்துக் கொண்டிருந்தார்.

''நீங்கள் இந்தியாவிலிருந்து வருகிறீர்களா?'' என்று அவரே பேச்சை ஆரம்பித்தார். நானும் பேச்சுக் கொடுத்தேன். அவர் மலேசியப் பிரஜை. அவருடைய மனைவி சிங்கப்பூர் பிரஜையாம்.

''ஆச்சரியமாக இருக்கிறதே! இன்னொரு நாட்டில் பெண் எடுத்திருக்கிறீர்களே'' என்றேன் நான்.

''எங்கள் திருமணம் நடக்கும்போது இரண்டு நாடு இல்லை. அப்பொழுது இருவருமே ஒரே நாட்டவராகத்தான் இருந்தோம்'' என்றார் அந்த நண்பர் திரு. டான்.

''அப்படி யென்றால்...?'' என்று சந்தேகத்துடன் நான் கேட்ட போது, அவர் சிரித்துக் கொண்டார்.

''உங்களுக்கு எங்கள் நாட்டுச் சரித்திரத்தைக் கொஞ்சம் சொல்ல வேண்டி யிருக்கிறது!''

''யெஸ்... சொல்லுங்கள்!'' என்றேன்.

''முதலில் மலாயா மட்டும் தனி ஒரு நாடாக இருந்தது. 1957-ம் வருடம் சுதந்திரம் கிடைத்தது. துங்கு அப்துல் ரஹ்மான் முதலாவது பிரதமர். இந்த விஷயங்களெல்லாம் உங்களுக்குத் தெரிந்திருக்கும். பக்கத்திலுள்ள நாடுகளையும் சேர்த்து மலேசியா என்ற நாட்டை ஏற்படுத்த வேண்டும் என்று துங்கு விரும்பினார். சிங்கப்பூர் இதை ஆதரித்தது. சரவா, சாபா ஆகிய மாநிலங்களும் மலேசியா அமைப்பை வரவேற்றன. 1963 செப்டம்பர் 16-ம் தேதி மலேசியா உருப்பெற்றது'' என்று திரு. டான் நிறுத்தினார்.

''அப்போது சிங்கப்பூருக்கும் மலேசியாவுக்கும் சுதந்திரமாக மக்கள் சென்று வந்திருக்க முடியும். இமிக்ரேஷன் கட்டுப்பாடுகள் இருந்திருக் காது. அப்படித்தானே?'' என்று கேட்டேன்.

''ஆமாம்...... ஒரே நாடாகிவிட்டதால் கட்டுப்பாடு எதுவும் இருக்கவில்லை. அந்தச் சமயத்தில்தான், சிங்கப்பூரில் பெண் பார்த்து திருமணம் செய்து கொண்டதெல்லாம். சரியாக இரண்டு வருடம் முடிவதற்குள் என் மனைவியும் நானும் வெவ்வேறு நாட்டவர்களாக ஆக்கப்பட்டோம். அதாவது 1965 ஆகஸ்டில், மலேசியாவிலிருந்து சிங்கப்பூர் பிரிந்து விட்டது.''

''இதற்கு என்ன காரணம்?'' என்றேன்.

''அரசியல்!'' என்ற ஒரு சொல்லுடன் அவர் நிறுத்திக் கொண்டார்.

''இரண்டு நாடுகளுக்கும் வித்தியாசம் அதிகம் இருக்கிறதா?'' என்று அவரைக் கேட்டேன்.

''வேற்றுமை, ஒற்றுமை இரண்டும் உண்டு. சில வேற்றுமைகள் விந்தையாகவும் தோன்றும். அரசியல் முறையை எடுத்துக் கொள்ளுங்கள். எங்கள் நாடும் ஜனநாயக நாடுதான். சிங்கப்பூரும் அப்படியே. ஆனால், மலேசியாவில் முடியாட்சியுடைய ஜனநாயகம் இருக்கிறது. மன்னர்தான் நாட்டின் தலைவர். மந்திரிசபை உண்டு. தேர்ந்தெடுக்கப்பட்ட பாராளுமன்ற உறுப்பினர்கள் இருக்கிறார்கள். சிங்கப்பூரில் மன்னராட்சி கிடையாது.''

நாணய முறையைப் பற்றியும் திரு. டானிடம் வினவினேன்.

''இரண்டு நாட்டுக்கும் பொதுவான நாணயமே இருந்தது. பிரிவினைக் குப் பிறகு தனித் தனியாக நாணயம் வந்து விட்டது. ஆனால், இரண்டின் மதிப்பும் சமம். புருனையைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். அந்த நாட்டின் நாணயத்தின் மதிப்பும் இவற்றுக்குச் சமம்!'' என்றார் அவர்.

நாற்பது நிமிடம் போனது தெரியவில்லை. 'சுபாங் இண்டர் நேஷனல் ஏர்போர்ட்'டுக்கு வந்துவிட்டதாக அறிவித்தார்கள். சில நிமிடத்தில் விமானத்திலிருந்து இறங்கினோம்.

கோலாலம்பூர் சுபாங் விமான நிலையம் பிரமாதமாக இருக்கும் என்று நண்பர்கள் சொல்லி யிருந்தார்கள். இறங்கியதுமே,விமான நிலையத்தைச் சுற்றுமுற்றும் பார்த்தேன்.

''சார், ஏர்போர்ட் ரொம்ப நல்லா இருக்கு, இல்லையா?'' என்றார் சுந்தரம்.

மிக நவீனமாக விமான நிலையத்தைக் கட்டி யிருக்கிறார்கள். தென் கிழக்காசியாவில் கோலாலம்பூர் முக்கியத்துவமுடைய ஒரு நகரம் என்பதற்கு, சுபாங் விமான நிலையம் ஓர் உதாரணம். ரோம் விமான நிலையத்தைத்தான் அது எனக்கு நினைவுபடுத்தியது.

எங்கு பார்த்தாலும் பச்சைப் பசுமையாக ரப்பர் தோட்டங்கள் தென்பட்டன. லட்சக்கணக்கான தொழிலாளர்களுக்கு ரப்பர் தொழில் வாழ்வளிக்கிறது என்று கூறினார்கள். ரப்பர் தோட்டத் தொழிலாளர் களுக்கென்று சங்கமும் இருக்கிறது. தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கம் என்று அதற்குப் பெயர்.

தோட்டத் தொழிலாளர் சிலரைச் சந்திக்க வேண்டும் என்று விரும்பினேன். ஹரிகிருஷ்ணன் என்ற நண்பர், சில தொழிலாளர்களிடம் அழைத்துப் போக முன் வந்தார்.

''தொழிலாளர்களைப் பார்ப்பது ஒருபுறம் இருக்கட்டும். உங்களைப் பற்றிச் சொல்லுங்கள்!'' என்றேன் ஹரிகிருஷ்ணனிடம். அவ்வளவுதான். ஒரேயடியாக இந்தியாவைப் பற்றி விசாரிக்க ஆரம்பித்து விட்டார்.

''இப்போது இந்தியா எப்படி இருக்கிறது? எதிர்காலத்தில் எப்படி இருக்கும்? தமிழ்நாடு எப்படி இருக்கிறது?''—இப்படிச் சரமாரியாகக் கேட்டுக் கொண்டிருந்தார்.

''நீங்கள் கேட்பதைப் பார்த்தால், இந்தியாவுக்கு நீங்கள் வந்திருக் கவே மாட்டீர்கள் போலிருக்கிறதே'' என்றேன்.

''போய்ப் பல வருஷங்களாயிற்று மிஸ்டர் மணியன். நான் பிறந்தது, வளர்ந்தது எல்லாம் மலேசியாவில்தான்'' என்றார் அவர்.

''நீங்கள் இந்தியாவுக்கு அடிக்கடி போகவில்லை என்றாலும், இந்திய அரசியலைப் பற்றியும், சமூகத்தைப் பற்றியும் நன்றாகவே தெரிந்து வைத்திருக்கிறீர்கள். இது எப்படி முடிந்தது?'' என்றேன்.

''பத்திரிகை ஞானம்தான். எங்கள் பத்திரிகைகளில் இந்திய செய்தி களுக்குப் பஞ்சமே கிடையாது'' என்றார்.

கேஸில்பீல்ட் எஸ்டேட் (Castle Field) என்னும் ரப்பர் தோட்டத் திற்கு ஹரிகிருஷ்ணன் என்னை அழைத்துச் சென்றார். தோட்டத் தொழி லாளியான ஒரு சீனரின் குடும்பத்தைச் சந்திக்க வேண்டும் என்ற ஆர்வத்தைத் தெரிவித்திருந்தேன்.

ஒரு சின்னஞ் சிறு வீடு. வாசலில் நின்றிருந்த பால் வெட்டுத் தொழிலாளியான, தாம் சியூ என்னை வரவேற்ருர்.

வீட்டு முகப்பிலேயே ஒரு சுவாமி படம் இருந்தது. ஊதுவத்தி வைப்பதற்கு அதன் கீழே இடம். சீன தெய்வங்களில் அதுவும் ஒன்ரும்.

''இது என்ன தெய்வம்?'' என்று தாம் சியூவைக் கேட்டேன்.

''குழந்தைகளைப் பாதுகாக்கும் தெய்வம்'' என்று அவர் பதிலளித்தார்.

உள்ளே அழைத்துச் சென்று உட்காரச் சொன்ஞர். குப்பைகள் இறைந்து கிடந்தன. அவருடைய மனைவி வந்து குப்பைகளை அப்புறப் படுத்த முயன்ருர். என்னதான் அகற்றினுலும் குப்பை போகாது போல் இருந்தது. குழந்தைகள் வேறு அதிகமாக இருந்தார்கள்.

நான் கவனத்தைத் திருப்பிக்கொண்டு, தாம் சியூவின் வேலை நிலைமைகள் பற்றிக் கேட்டேன்:

''நாலு வருடமாக இந்தத் தோட்டத்தில் வேலை பார்க்கிறேன். இப்பொழுது கங்காணியாக (தொழிலாளர்களைக் கண்காணிப்பவர்) இருக்கிறேன். மாதம் 300 வெள்ளி வரை வருமானம் கிடைக்கிறது'' என்ருர் அவர்.

''சினிமாவுக்குப் போவதுண்டா?''

''எப்போதாவது சீனப் படத்திற்குப் போவேன். அடிக்கடி போக முடியாது. ஆறு குழந்தைகள் இருக்கிருர்கள். இவர்களை வைத்துக் கொண்டு அடிக்கடி படம் பார்க்கப் போனுல் எப்படிப் பிழைக்க முடியும்?'' என்று வினவினுர் தாம் சியூ.

''நீங்கள் மலேசியப் பிரஜைதானே?''

''ஆமாம்! எல்லாமே இந்த மண்ணில்தான்!''

''சீனுவுக்குப் போக வேண்டும் என்று ஆசை இருக்கிறதா?''

''அங்கே போவதற்கென்று அவசியமில்லை. தூரத்து உறவினர்களைத் தவிர, நெருக்கமானவர்கள் யாரும் அங்கே எனக்கு இல்லை.''

ஒரு சிறு வீட்டில் குழந்தைகளுடன் ஓரளவுக்கு மகிழ்ச்சியாகவே குடும்பம் நடத்திக் கொண்டிருக்கிருர்கள் தாம் சியூ தம்பதி. குறைந்த வசதியே இருந்தாலும், அப்படியே வாழ்ந்து அவர்களுக்குப் பழக்கப்பட்டு விட்டது என்பதைப் புரிந்து கொண்டேன்.

அதே எஸ்டேட்டில் ஒரு தமிழ்க் குடும்பத்தைப் பார்க்கச் சென்றேன். வீட்டுக்காரரான கொல்லாபுரி (பெயர்தான்) எங்களைப் பார்த்ததும் சற்றுப் பயந்தார்.

''எதற்காக வந்திருக்கிறீர்கள்?'' என்று கொல்லாபுரி கேட்டார்.

''பயப்படாதீர்கள் ......உங்களைப் பார்க்கத்தான் வந்திருக்கிறேம்'' என்று சொன்னேன் நான்.

''நீங்கள் யார்?'' என்றார் கொல்லாபுரி.

''பத்திரிகைக்காரர்கள்'' என்று ஹரிகிருஷ்ணன் சொன்னதும், அவருடைய பயம் இன்னும் அதிகமாகப் போய் விட்டது.

''உங்களுக்கு ஊர் எது?'' என்று கேட்டேன்.

''அரக்கோணத்துக்குப் பக்கம். இப்ப இங்கேதான் குடித்தனம்'' என்றார் கொல்லாபுரி.

அவருடைய குடித்தனப் பாங்கைப் பார்க்கும் விருப்பத்தில் வீட்டிற்குப் போனோம்.

அது பெரிய வீடு. தாம் சியூ வீட்டைப் போல் அல்லாது, பெரிதாகவே இருந்தது. அவருடைய முதல் மனைவி இறந்து போய் சில வருடங்களாகி விட்டதாம். இரண்டாவது மனைவி வீட்டில் இருந்தார்.

''எப்போது இரண்டாவது கல்யாணம் செய்து கொண்டீர்கள்?'' என்று கேட்டேன்.

அவர் பதில் சொன்ன பிறகு, மேற்கொண்டு நான் குடித்தன விஷயத்தைப் பற்றிப் பேசவில்லை. கொல்லாபுரியின் மகனும் ஒரு தொழிலாளி.

''பொதுவாகத் தோட்டப்புற மக்களுக்கு என்னென்ன தேவைப்படுகிறது, என்னென்ன கிடைக்கிறது?'' என்று கொல்லாபுரியிடம் வினவினேன் நான்.

''முதல் தேவை கோயில். எஸ்டேட்டுன்னு கோயில் நிச்சயம் இருக்கணும். இங்கே நிறைய இருக்கு. அத்தோட வீட்டு வசதி முக்கியம். மத்த வசதிகளும் இருக்கு'' என்றார் அவர்.

''எஸ்டேட் வாழ்க்கை மகிழ்ச்சியாக இருக்கிறதல்லவா?'' என்று கேட்டேன்.

''இருக்கு......இருக்கு......'' என்று தலையை ஆட்டினார்.

ஒரே எஸ்டேட்டில் அருகருகே வசிக்கும் இரண்டு தொழிலாளர்கள் குடும்பங்களைப் பார்த்த பிறகு, என்னுள்ளே சில சிந்தனைகள் ஓடவே செய்தன. மலேசியாவில் வசிக்கும் சீனருக்கு மலேசியாவே தாயகம். அவர்களைச் சீனாவுடன் தொடர்பு படுத்துவதற்கு ஒன்றுமில்லை. பால் வெட்டுந் தொழிலாளியான தாம் சியூ, சீனர் என்றாலும், ஒரு மலேசியராகவே அவரை நான் கண்டேன். அவருடைய வாழ்க்கை முறையில் மலேசியத் தன்மை இழைந்திருக்கிறது.

இப்படியேதான் மலேசிய இந்தியர்களும் இருக்கிறார்கள். நமது மொழியைப் பேசுகிறார்கள். நமது கலாசாரத்தை விட்டுவிடவில்லை.

# 34

ரப்பர் தோட்டத்தில்.....

சாப்பாட்டு விஷயம் சாதாரண விஷயமாகத் தோன்றலாம். ஆனால், அதுவே எவ்வளவு பெரிய பிரச்னையாகி விடுகிறது என்பது வெளிநாடுகளுக்குப் போனால்தான் தெரியும். அமெரிக்காவுக்கோ, பிரிட்டனுக்கோ சென்றால்தான் நம் சாப்பாட்டின் அருமை தெரியும் என்பதில்லை; பக்கத்திலுள்ள கேரளத்துக்குப் போனால் போதும். சென்னைவாசி எதிர்பார்க்கும் சுவை இருக்க வேண்டுமே! ஊஹூம்!

நமக்குப் பக்கத்திலேயே இப்படி என்றால், கோலாலம்பூரில் கேட்க வேண்டுமா?அங்கு போனதுமே எனக்கு சாப்பாட்டுப் பிரச்னை ஆரம்பமாகி விட்டது. அதை மிகவும் கஷ்டப்பட்டு சமாளிக்க வேண்டியிருந்தது.

சுபாங் விமான நிலையத்தில் சுங்க இலாகா அதிகாரி ஒருவரிடம் பேசிக் கொண்டிருந்தபோது, ''எங்கள் நாட்டில் எல்லாமே கிடைக்கும். எல்லா சாப்பாடுகளையும் ருசித்துப் பாருங்கள்'' என்றார்.

''மெட்ராஸ் சாப்பாடு கிடைக்கும் அல்லவா?'' என்று கேட்டேன்.



''நிச்சயமாக. நிறைய ஓட்டல்கள் இருக்கின்றன'' என்று கூறிய அவர், சிலவற்றின் பெயர்களையும் சொன்னார்.

''எங்கள் நாட்டை நன்றாகப் பாருங்கள். நல்லது கெட்டது எல்லா வற்றையும் பார்த்துவிட்டு எழுதுங்கள்'' என்று அந்த அதிகாரி உற்சாகத் துடன் கூறினார். எனக்கும் உற்சாகந்தான். ஆனால் அந்த உற்சாகம் ஓர் ஓட்டலில் சாப்பிட உட்கார்ந்ததும் போய்விட்டது.

நல்ல வெஜிடேரியன் சாப்பாடு கிடைக்கும் என்று அந்த ஓட்டலைத் தான் பலரும் சிபாரிசு செய்தார்கள்.

மிகத் தெம்புடன் நானும் சுந்தரமும் இலையின் முன்னால் அமர்ந் தோம். இலைக்கு முன் உட்கார்ந்து விட்டால், புகைப்படக்காரர் சுந்தரம் அதிகம் பேசமாட்டார். அந்த அளவுக்குக் 'காரிய'த்தில் குறியாக இருக்கக் கூடியவர். தயக்கத்துடன் என்னைப் பார்த்தார்.

''என்ன ஆயிற்று?'' என்றேன்.

''சார், இந்தச் சாப்பாடு......'' என்று இழுத்தபோது, அவர் முகத்தில் அஷ்ட கோணல்கள்.

''இப்பொழுது உங்களை ஒரு படம் எடுக்கலாம் போலிருக்கிறது'' என்றேன் நான்.

இந்த (சாப்பாட்டு)ப் பிரச்னையை எப்படிச் சமாளிப்பது என்ற சிந்தனை வந்து விட்டது. சாப்பாட்டு விஷயத்தை ஏதோ ஒரு கடமையாக நினைத்துவிட முடியுமா? மெஷின் மாதிரி வேளைக்குச் சாப்பிட்டுவிட்டு எழுந்திருக்கிறவர்கள் உண்டு. அதில் தனி ரசனை காட்டுகிறவர்களையும் நான் பார்த்திருக்கிறேன். உணவில் சிறந்த ருசி உள்ளவர்தான், சிறந்த கலாரஸனை உள்ளவராக இருப்பார் என்பது என் கருத்து. மேல்நாடுகளில் மணிக்கணக்கில் சாப்பாட்டு டேபிளில் உட்கார்ந்திருப்பவர்கள் இருக்கி றார்கள். அதிகமாகச் சாப்பிட வேண்டும் என்பதற்காக அவர்கள் அப்படி உட்கார்ந்திருப்பதில்லை. சாப்பாட்டு நேரத்தில் எவ்வளவோ விஷயங் களைப் பேசி விடுகிறார்கள். குடும்ப விஷயம், தொழில் விவகாரம், அரசியல் அத்தனையும் சாப்பாட்டு மேஜைக்கு வந்து விடுகின்றன. ஒருவகையில் இது எனக்கு சிறந்த முறையாகவே தோன்றியது. நம் ஊரில் பெரும்பா லோருக்கு சாப்பாடும் ஒரு 'கடமை'தான்! ''இருங்கள் சார், இரண்டே நிமிடத்தில் சாப்பாட்டை முடித்துக் கொண்டு வந்து விடுகிறேன்'' என்று சொல்கிறவர்களை நாம் எல்லோருமே சந்தித்திருக்கிறோம் அல்லவா?

தமிழர்கள் அதிகமாக வசிக்கும் கோலாலம்பூரிலேயே எனக்கு சாப்பாட்டுப் பிரச்னை இருக்குமானால், மற்ற நகரங்களில் என்ன ஆகும் என்று பயந்தே போனேன். ஓட்டல் அனுபவத்தைக் கொண்டு இப்படி ஓர் அவசர முடிவுக்கு வந்து விட்டேன் என்பது பிறகுதான் தெரிந்தது.

என்ன செய்யலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தபோது, ஒரு டெலிபோன் அழைப்பு வந்தது.அது என் பிரச்னையைத் தீர்த்துவைத்தது.

''மிஸ்டர் மணியன், ராஜசுந்தரம் பேசுகிறேன். ரப்பர் எஸ்டேட்டு களுக்குப் போய் வந்தீர்களே, திருப்திதானே?''

''ரொம்பவும் நல்ல அனுபவம். நீங்கள் ஏற்பாடு செய்ததற்கு நேரிலேயே வந்து நான் நன்றி சொல்ல வேண்டும்'' என்றேன்.

''நன்றி இருக்கட்டும். நீங்கள் நேரில் நம்ம வீட்டிற்கு வரவேண்டும். அதற்காகத்தான் இப்பொழுது பேசுகிறேன். காரை ஓட்டலுக்கு அனுப்பட்டுமா?'' என்ருர் திரு. ராஜசுந்தரம்.

மலேசியாவிலுள்ள ரப்பர் தோட்டத் தொழிலாளர்களுக்கு ஒரு பெரிய சங்கம் இருக்கிறது. தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கம் என்று அதற்குப் பெயர். இந்தச் சங்கத்தின் பொருளாளர்தான் திரு. ராஜசுந்தரம். ரப்பர் எஸ்டேட்டுக்குச் சென்று பார்க்க வேண்டும் என்று நான் விரும்பியபோது, அவர்தான் ஏற்பாடு செய்தார்.

திரு. ராஜசுந்தரம் வீட்டிற்குப் போய்க் கொண்டிருந்த பொழுது, ''வீடு எவ்வளவு தூரம்?''என்று கேட்டேன்.

''வீடு, பி. ஜே.யில் இருக்கிறது சார்......'' என்ருர் டிரைவர்.

பி. ஜே. என்ருல்......? கே. எல். என்பது போல் இதுவும் ஒரு சுருக்கப் பெயராக இருக்கும் என்பதைப் புரிந்து கொண்டேன். பெட்டாலிங் ஜெயா(Petaling Jaya,) என்பதுதான் பி.ஜே.! கோலாலம்பூரிலிருந்து சுமார் ஆறு மைல் தூரத்தில் இருக்கும் புதிய நகரம் இது.

திரு. ராஜசுந்தரத்தைப் பற்றியும், அவர் மனைவி திருமதி சரளாதேவியைப் பற்றியும் உள்ளூர்ப் பத்திரிகையாளரான திரு. மைதீன் என்னிடம் சொல்லியிருந்தார். திருமதி சரளா தேவி தமிழ்ப் பற்றும், சமய பக்தியும் மிகுந்தவர்.

வீட்டிற்குச் சென்றதும் அந்தத் தம்பதியர் எங்களை வரவேற்றனர். திருமதி சரளா தேவியைப் பார்த்ததும் சற்றே வியப்பு. 'சரோங் கெபாயா' எனப்படும் உள்நாட்டு உடையில் அவர் இருந்தார்.

திரு. ராஜசுந்தரம் எங்களுடன் உரையாடிக் கொண்டிருந்தபோது, ஒரு நொடியில் உள்ளே சென்ற திருமதி சரளா தேவி,புடவையுடன் வந்து உட்கார்ந்தார்.

''உங்களை யெல்லாம் வரவேற்க நாங்கள் இருக்கும்போது ஓட்டலில் போய்த் தங்கி யிருக்கிறீர்களே? உங்கள் எழுத்து என்ருல் எங்களுக்கு மிகவும் பிடிக்கும். உங்களைப் பார்த்ததில் மிக்க மகிழ்ச்சி......'' என்று வார்த்தைகளால் என்னைத் திணற அடித்தார் சரளா தேவி.

''அதனுலென்ன? ஓட்டலில் இருந்தாலும் உங்கள் ஊர்தானே?'' என்றேன் நான்.

''பரவாயில்லை. சாப்பாட்டுப் பிரச்னை உங்களுக்கு இருக்கும். உங்கள் கட்டுரைகளில் அதைப் பற்றிப் படித்திருக்கிறேன்'' என்ருர்.

''என் கட்டுரைகளில் நான் சாப்பாட்டைப் பற்றி அதிகமாக எழுதுவதாக ஒரு புகார் உண்டு. அதை நீங்கள் நேரிடையாகவே கூறலாம்...'' என்றேன் நான் சிரித்துக் கொண்டே.

''...நோ, நோ, நீங்கள் வெஜிடேரியனுக இருப்பதால்தான் சொல்கிறேன். நீங்கள் கோலாலம்பூரில் இருக்கும்வரை, நம்

வீட்டில்தான் சாப்பாடு; மறுக்கக் கூடாது'' என்று அன்புடன் உத்தரவு போட்டு விட்டார் அந்த அம்மையார்.

''நீங்களும் வெஜிடேரியன்தானா?'' என்று கேட்டேன்.

''சில வருஷங்களாகத்தான். 1967-க்கு முன்வரை எல்லாம் சாப்பிடுவதுண்டு. அதற்குப் பிறகு முழு சைவம். ஐயா மட்டும் இதற்கு விலக்கு......'' என்றார் சரளா தேவி.

ராஜசுந்தரம் சிரித்துக் கொண்டார்.

''இதில் பிரச்னை ஒன்றும் கிடையாது. அவரவர் விருப்பப்படி சாப்பிட வேண்டியது தானே!'' என்றார் அவர்.

இலக்கியம், கலை, சமயம் எல்லாமே திருமதி சரளா தேவிக்கு உயிர். தமிழ் நாட்டிலிருந்து வருபவர்களை யெல்லாம் வரவேற்று உபசரிக்கும் இவருக்கு, இலங்கையுடனும் உறவு உண்டு.

''முன்னோர்கள் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்தவர்கள். நான் பிறந்தது சிங்கப்பூரில். வளர்ந்ததெல்லாம் ஈப்போவில். திருமணத்திற்குப் பிறகு கோலாலம்பூரில்தான் இருக்கிறேன்'' என்று அவர் சொன்னார்.

தமிழ் டைப்ரைட்டருக்கும் இவருக்கும் கூட ஒரு சம்பந்தம் இருக்கிறது. இவருடைய தகப்பனார் திரு. முத்தையாதான் தமிழ் தட்டெழுத்து முறையைக் கண்டு பிடித்தவராம்.

''உங்களுடைய இவ்வளவு அதிதமான சமய பக்திக்கும் மொழிப் பற்றுக்கும் என்ன காரணம்?'' என்று நான் கேட்டேன்.

''திருவாசகமணிதான் இதற்குக் காரணமானவர். முதலாவது உலகத் தமிழ் மகாநாடு கோலாலம்பூரில் நடந்ததல்லவா? அப்பொழுது திருவாசகமணி வந்திருந்தார். அவருடைய சொற்பொழிவுகள் என்னைக் கவர்ந்தன. சைவ சமய நெறிகளை அவர் எடுத்துச் சொல்லும்போது யாருடைய மனத்திலும் அது அப்படியே பதிந்து போய்விடும்'' என்று அவர் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, ஒரு சிறுமி அந்த அறைக்குள் வந்தாள். அவளை அருகில் அழைத்து, ''இவள் என் மகள்......'' என்று அறிமுகப்படுத்தி வைத்தார்.

அந்தப் பெண்ணை உற்றுப் பார்த்தேன். அசல் 'வாசுகி' மாதிரி இருந்தாள். அப்படி ஒரு பெண்ணை நான் பார்த்ததே இல்லை.

''திருவாசகமணி என்னிடம் ஒரு திருப்பத்தை ஏற்படுத்தி விட்டார். சமையல் பிரசாரம் செய்து கொண்டிருந்த நான், இப்போது சமயப் பிரசாரம் செய்ய ஆரம்பித்து விட்டேன். பல இடங்களுக்கும் சென்று இந்து மதச் சிறப்புகளைப் பேசி வந்திருக்கிறேன். இந்தோனேசியாவில் ஆயிரக்கணக்கான தமிழர்கள் இருக்கிறார்கள். ஆனால், இந்தியத் தொடர்பு அவர்களுக்கு இல்லாமலிருக்கிறது. திருவாசகமணி அவர்களிடையே ஒரு சமய மறு மலர்ச்சியையும், உத்வேகத்தையும் ஏற்படுத்தி இருக்கிறார்.''

''குறிப்பாக எந்த அம்சத்தை உங்கள் பிரசாரத்தில் வலியுறுத்தி வருகிறீர்கள்?'' என்று நான் கேட்டேன்.

''சிவ-விஷ்ணு ஒற்றுமைதான் என் பிரசாரத்தின் முக்கிய நோக்கம்'' என்றார் சரளா தேவி.

திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணியம் அவர்களை மலேசியத் தமிழர்கள் மிக நன்றாக அறிந்து கொண்டிருக்கிறார்கள். கடல் கடந்த நாடுகளில் பக்திப் பயிரை அவர் தழைக்கச் செய்திருக்கிறார். அவருடைய இயல், இசைத் தமிழ் நூல்களையும், திருக்குறள் மொழி பெயர்ப்புப் பணியையும் நாம் அறிந்திருக்கிறோம். ஆனால், அவர் செய்து வரும் புதுமையான, நுட்பமான இந்து சமயப் பிரசாரத்தைப் பலர் புரிந்து கொள்ளவில்லை. அதற்கென அவரிடம் தனிப்பட்ட ஆற்றல் இருக்கிறது. தர்க்க ரீதியாக அவர் எடுத்துச் சொல்லும் விஷயங்கள், நவநாகரிக இளைஞர்களையும் கவரக்கூடியதாக இருக்கிறது. மலேசியாவிலும், இந்தோனேசியாவிலும் அவர் இந்து சமயப் பிரசாரம் செய்திருக்கிறார். உலகப் பயணம் செய்து சமயப் பிரசாரம் செய்யத் திட்டமிட்டும், பல தடைகளினால் அது நின்று போய் விட்டதாகத் திருவாசகமணி ஒரு முறை என்னிடம் சொன்னார். இது அவருக்கு நஷ்டமில்லை. இந்து சமயத்திற்குத்தான் ஒரு பெரிய நஷ்டம் என்று சொல்ல வேண்டும்.

திருவாசகமணியின் பிரதம சிஷ்யை என்று சொல்லிக் கொள்வதில் பெருமைப்படுகிறார் திருமதி சரளா தேவி.

''மலேசியப் பெண்களைப் பற்றிச் சொல்லுங்களேன்'' என்று சரளா தேவியைக் கேட்டேன்.

''நான் சொல்வதை விட நீங்கள் நேரில் சந்திப்பதுதான் நன்றாக இருக்கும், இல்லையா?'' என்றார் அவர்.

''ஒரு பெண் மற்ற பெண்களைப் பற்றிச் சொல்லும் கருத்து முக்கியமானதாக இருக்கும் அல்லவா? இந்த நாட்டில் மூன்று இனங்களைச் சேர்ந்த பெண்கள் இருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியும். சீனப் பெண்கள் எப்படி யிருக்கிறார்கள்?'' என்று கேட்டேன்.

''மிகவும் முற்போக்கானவர்கள். காலத்தோடு போட்டி போட்டுக் கொண்டு முன்னேறுகிறார்கள். நவ நாகரிகமானவர்கள். இதனால் அனுகூலமும் உண்டு. பிரதிகூலமும் இருக்கிறது'' என்று சொன்னார் சரளா தேவி.

''மலாய் மாதர்கள் எப்படி?'' என்று கேட்டேன்.

''அவர்கள் இஸ்லாம் மதத்தினர். கட்டுத்திட்டமான வாழ்க்கை நடத்துகிறார்கள். அடக்கமாகவே இருக்கிறார்கள். இளம் பெண்கள் ஓரளவுக்கு இக்கால முற்போக்குக்கு ஏற்றபடி நடந்து கொள்கிறார்கள்.''

''நமது பெண்கள்......?''

''அப்படியும் இல்லை ...... இப்படியும் இல்லை......'' என்று சொல்லி முற்றுப் புள்ளி வைத்து விட்டார் சரளா தேவி.

''எங்கள் ஊரில் கோயில்கள் நிரம்ப உண்டு. பத்துமலை முருகனைத் தரிசிக்கலாம். ஸ்ரீ மகாமாரியம்மன் கோயில் மிகப் பிரசித்தம், சென்று பாருங்கள்'' என்றார் சரளா தேவி.

கோலாலம்பூரில் இருந்த போது பல கோயில்களுக்குச் சென்றேன்.

கோயில் குருக்களான வெங்கடேசுவரன் என்பவரிடம் பேசிக் கொண்டிருந்த சமயம், "தமிழ்நாட்டுக் கோயில்களில் காண முடியாத விசேடம் எதுவும் இங்கே இருக்கிறதா?" என்று கேட்டேன்.

"நிச்சயமாக உண்டு. அங்கு அர்ச்சிக்க வருபவர்கள் எல்லாம் இந்துக்கள்தான். மலேசியாவில் அப்படி அல்ல. மாரியம்மனை வழிபடும் சீனர்களையும், முருகனின் அருளைத் தேடி வரும் சீனர்களையும் இங்கே காணலாம். பத்துமலை தைப் பூசத் திருவிழா சமயத்தில் சீனர்கள் காவடி எடுப்பதைப் பார்க்கலாம். சீக்கியர்களும் நம் கோயிலுக்கு வழிபட வருகிறார்கள்" என்றார் அவர்.

பத்திரிகை ஆசிரியரான திரு. முருகு சுப்பிரமணியத்தைச் சந்திக்க விரும்பினேன். 'தமிழ் நேசன்' என்ற தினசரியின் ஆசிரியர் அவர். புதுக்கோட்டையில் முன்பு 'பொன்னி' என்ற மாதப் பத்திரிகையை நடத்தியவர்.

அவர் மருத்துவ மனையில் இருப்பதாக எனக்குப் பதில் கிடைத்தது. அரசாங்க மருத்துவ மனைக்குப் புறப்பட்டுப் போனேன்.

நான் சென்ற நேரம், விஸிட்டர்கள் நேரமல்ல! வாட்ச்மேனிடம் விஷயத்தைச் சொன்னேன். அவர் மிக மரியாதையுடன் நடந்து கொண்டார். உள்ளே செல்வதற்குச் சுலபமாக அனுமதி கிடைத்தது. 'நம்மைத் தாண்டித்தானே போக வேண்டும், கிடைத்த வரை வாங்கிக் கொள்வோமே' என்று அந்தக் காவல்காரர் நினைக்கவில்லை. 'முடிந்தவரை நிற்க வைப்போமே' என்று தன் அதிகாரத்தையும் அவர் பயன்படுத்தவில்லை. மருத்துவமனையில் பணி புரிகிறவர்களுக்கு அன்பும் பணிவும் அவசியம் என்பதற்கு அந்த மருத்துவமனைச் சிப்பந்திகள் உதாரணமாக இருப்பதைக் கண்டேன்.

என்னைச் சற்றும் எதிர்பார்த்திராத முருகு சுப்பிரமணியம் ஆச்சரியமடைந்தார். அதைவிட அவருக்கு ஒருவித அச்சம்:

"உங்களை எப்படி அனுமதித்தார்கள்?" என்று என்னிடம் கேட்டார்.

"சொன்னதுமே உள்ளே வர அனுமதித்து விட்டார்கள். உங்கள் ஊர் மரியாதை இது" என்றேன்.

"மிஸ்டர் மணியன், இங்கே டாக்டர்களின் தொல்லை அதிகம். நீங்கள் இங்கே இருப்பதைப் பார்த்து விட்டால், ஒரேயடியாகப் பாய்ந்து விடுவார்கள்" என்றார் அவர்.

"நான் அப்படி நினைக்கவில்லை."

"நீங்கள் நினைப்பது புரிகிறது. டாக்டர்கள் கண்டிப்பாக நடந்து கொள்வது நோயாளிகளின் நன்மைக்குத்தான். இங்குள்ள நிலைமையைச் சொல்கிறேன்: அதிகம் பேசக் கூடாது என்று டாக்டர் சொல்லிவிட்டுப் போனார். அடிக்கொரு தரம் சுற்றி வருவார்கள். இதோ, நாம் பேசிக் கொண்டிருக்கிறோம். பார்த்து விட்டால் கோபப்படுவார் அல்லவா?" என்றார்.

"இதனால்தான் உங்கள் டாக்டர்களை நான் பாராட்டுகிறேன்" என்று கூறி அவரிடமிருந்து விடை பெற்றேன் நான்.

# 35

மலேயா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த டாக்டர் தண்டாயுதம்

''மலாக்கா செட்டிகளை நீங்கள் சந்திக்கத் தவறாதீர்கள், மிஸ்டர் மணியன். அவர்கள் ஒரு தனிப் பிரிவினர். அவர்கள் பேச்சும், பழக்கமும் புதுமையாக இருக்கும்...'' என்று சொன்னார் கோலாலம்பூர் நண்பர் மைதீன். அவரைப் போலவே பலரும் என்னிடம் சொன்னார்கள்.

''அவர்கள் யார்?'' என்று கேட்டேன்.

''தமிழ் பேச முடியாத தமிழர்கள்'' என்று பதில் கிடைத்தது.

மலாக்கா செட்டிமார்களைச் சந்திக்கும் ஆர்வத்தில் சுந்தரமும் நானும் மலாக்கா நகரத்திற்கு காரில் புறப்பட்டோம். கோலாலம்பூரிலிருந்து சுமார் எழுபது, எண்பது மைல் தூரம் இருக்கும். செல்லும் வழியில் பல சிற்றூர்களைப் பார்த்துக் கொண்டே போனோம்.



மலாக்கா டவுனில் நுழையும்போது முதலில் என் பார்வையில் பட்டது ஒரு தமிழ் சினிமா போஸ்டர்தான். அதிலிருந்தே, தமிழர்கள் ஓரளவுக்கு அங்கே இருக்கிறார்கள் என்பதைப் புரிந்துகொண்டேன்.

''சார், அந்த போஸ்டரில் எழுதி யிருப்பதைப் பார்த்தீர்களா?'' என்றார் சுந்தரம்.

'ஜெமினி கணேசன், ராஜஸ்திரி நடித்த படம்' என்று அதில் எழுதப்பட்டிருந்தது. ராஜஸ்ரீயைத்தான் இந்தப் பாடுபடுத்தி வைத்திருக்கிறார்கள். ஏதோ தமிழ் போஸ்டரைப் பார்க்க முடிந்ததே என்ற திருப்தி எனக்கு.

பக்கத்தில் காரை நிறுத்திவிட்டு, ஓர் ஓட்டலில் காபி சாப்பிட்டோம். கடைக்காரர் நன்றாகவே கலக்கிக் கொடுத்தார். பசும்பால் காபி குடித்துப் பழகிய எனக்கு, அந்த டின் பால் சுவைக்கவில்லை.

ஓட்டல்காரர் என்னிடம் பேச்சுக் கொடுத்தார்.

''செட்டியார்களைப் பார்க்க வந்திருக்கிறோம்'' என்று அவரிடம் சொன்னேன்.

''எந்தச் செட்டியாரைப் பார்க்க வேணும்?'' என்றவர், ''நானும் ஒரு செட்டியார்தானுங்க'' என்றார்.

''இங்குள்ள செட்டியார்களுக்குத் தமிழ் பேச வராது என்று சொன்னார்கள். நீங்கள் அப்படியல்லவா?'' என்று கேட்டேன்.

''அப்படிங்களா சங்கதி! மலாக்கா செட்டியைப் பார்க்க வந்திருக்கிறீங்கன்னு சொல்லுங்க...'' என்றவாறு சிரித்துக் கொண்டார். அவர் மலாக்காவில் இருந்தாலும் தமிழ் நாட்டுச் செட்டியார்தான், மலாக்கா செட்டி அல்லவாம்.

''நீங்க நேராய்ப் போயி விசாரிங்க... விவரம் சொல்லுவாங்க. மலாக்கா செட்டிக் குடும்பம் ஏகமா இருக்கு. போய்ப் பாருங்க'' என்று ஓட்டல்காரர் வழி சொன்னார்.

மலாக்கா டவுனிலிருந்து சுமார் ஒன்றரை மைல் தூரத்தில் இருக்கும் கஜபிராங்கை நோக்கிப் புறப்பட்டோம். கஜபிராங்தான் மலாக்கா செட்டிகளின் காலனி.

''சார், இதோ பாருங்க ஒரு கோட்டை'' என்று சுட்டிக் காட்டினார் சுந்தரம். அவர் கோட்டையைப் படம் பிடிக்க விரும்புகிறார் என்பதைப் புரிந்து கொண்டு, காரை நிறுத்தச் சொன்னேன்.

கோட்டை அருகே இறங்கியதும், ''நமஸ்காரம் ஐயா'' என்ற குரல் கேட்டது. திரும்பிப் பார்த்தேன். ''நமஸ்காரம்'' என்றேன்.

''நான்தானுங்க தாண்டவராய முதலி'' என்று அவர் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார்.

''ஒ, நீங்க முதலியாரா?''

''ஆமாங்க. அதுதான் முக்கியம். 'முதலி'ங்கிறதை விடறதே இல்லிங்க'' என்ருர்.

''சென்னையிலிருந்து வந்திருக்கிருேம்'' என்று சொன்னவுடன் அவருக்குக் குஷி பிறந்து விட்டது.

''மயிலாப்பூரிலே இருக்கிற கபாலியை உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டார் தாண்டவராய முதலி.

''அவர் யார், என்ன செய்யருர்னு சொல்லுங்களேன்'' என்றேன்.

''அவர்தானுங்க நம்ப கபாலி... நமக்கு ரொம்ப வேண்டியவருங்க'' என்ருர்.

எனக்குத் தலை சுற்றியது.

''மயிலாப்பூரிலே இருக்கிற கபாலீசுவரரைத்தான் எங்களுக்குத் தெரியும். நீங்க சொல்றவர் யாருன்னு தெரியலே. அந்தக் கபாலியை நீங்க பார்த்து எவ்வளவு நாளாகுது?'' என்றேன் நான்.

''நான் எங்கேங்க பார்த்தேன்! நம்ப அண்ணுத்தேதான் அடிக்கடி மயிலாப்பூர் கபாலி... கபாலின்னு சொல்லுவார். ரொம்பப் பெரிய ஆசாமியா இருப்பார்னு நான் நெனச்சுக்குவேன். மதராஸ்ன்னு நீங்க சொன்னதும், நம்ப கபாலியை விசாரிக்கணும்னு ஆசை வந்திச்சு, அவ்வளவுதான்'' என்ருர் தாண்டவராய முதலி.

''அண்ணுத்தே, நீங்க அவசியம் மயிலாப்பூருக்கு வந்து கபாலியைப் பார்க்கணுமே'' என்று சுந்தரம் அவரிடம் வேடிக்கையாகச் சொன்ன போது, ''இந்தத் தாண்டவராய முதலி இனிமேயா கடலைத் தாண்டி வந்து கபாலியைப் பார்க்கப் போகிருன்'' என்ருர் அவர்.

''தமிழ் நாட்டை வந்து பார்க்கணும் என்ற ஆசையில்லையா முதலியாரே?'' என்று அவரிடம் கேட்டேன்.

''அங்கே வந்து என்னத்தைச் செய்யப் போறேன்! இப்படியே காலத்தைத் தள்ளிட்டுப் போக வேண்டியதுதான்...'' என்று சொன்னுர்.

''நீங்க என்ன வேலை பார்க்கிறீங்க?''

''தோட்டி வேலை. அத்தோட கார் கழுவறதும் உண்டு.''

''இந்த இடத்தில் விசேஷம் எதுவும் உண்டா, முதலியாரே?''

''இதோ, இந்த மண்டபத்தைப் பாருங்க. ஏசுநாதர் தெரியுமில்லே, அவர் இந்த மண்டபம் வழியாத்தான் கடலில் இறங்கினுர், அப்படீன்னு ஒரு ஐதிகம் இங்கே உண்டுங்க'' என்று அவர் கதை சொல்ல ஆரம்பித்து விட்டார்.

அவரிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு மலாக்கா செட்டிமார் களைத் தேடிப் போனேம் நாங்கள்.

கஜபிராங்குக்கு வந்ததும் மதுரை வீதியொன்றுக்கு வந்தது போல் இருந்தது. கோயிலை மையமாகக் கொண்டு மதுரை நகரைக் கம்பீரமாக அமைத்திருக்கிறார்களே, அது மாதிரிதான் இந்தப் பகுதியும் என்று எனக்குத் தோன்றியது. தமிழ்க் கலாசாரம் அப்படியே குடிகொண் டிருக்கிறது.

வேட்டி கட்டிய தமிழர்கள் கண்ணில் படுவார்களா என்று துருவித் துருவிப் பார்த்தேன். இல்லை; மலாய்க்காரர்களைப் போன்ற நடை உடை உள்ளவர்களைத்தான் பார்க்க முடிந்தது.

ஒரு வீட்டில் துணிந்து நுழைந்தோம்.

''வணக்கம்'' என்று குரல் கொடுத்தேன்.

''வணக்கம்'' என்று பதில் கொடுத்தார் ஒரு பெரியவர். அவர் பெயர் சிதம்பர நாயக்கர். செட்டியாரைப் பார்க்க வந்த இடத்தில் நாயக்கர் அல்லவா இருக்கிறார் என்ற வியப்பு எனக்கு.

''நீங்க மலாக்கா செட்டியார்தானே?'' என்றேன்.

''ஆமாம்'' என்றார் அவர். நிதானமாக, மிக மெதுவாக அவர் தமிழ் பேசியதைக் கவனித்தேன்.

''ஐயா, தமிழ் நாட்டுக்கு வந்ததுண்டா?'' என்று நான் கேட்டேன்.

''நான் தவறாது ஆறுபடை வீடுகளுக்குச் சென்றுவிட்டு வருகிறேன். சிக்கல் சிங்காரவேலன் சந்நிதிக்கு அனுதினமும் போகிறேன்...'' என்று அவர் சொன்னதும், எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''தினமும் இரவில் கண்ணை மூடியதும் சுப்பிரமணிய சுவாமியிடம் போய் விடுகிறேன். ஆறுபடை வீடுகளுக்கும் சென்று விடுகிறேன், பொழுது விடிந்ததும் கட்டை இங்கே எழுந்திருக்கிறது, அவ்வளவுதான்'' என்று அவர் கூறினார். கனவில் கந்தன் தரிசனம்தானாம்.

நல்ல வேளை, அப்பொழுது அவர் கண்ணை மூடாமல்தான் பேசிக் கொண்டிருந்தார். சுப்பிரமணியசாமி என்று அடிக்கொருதரம் சொன்னார். ஒவ்வொரு முறையும் கவனித்தேன். சாமி என்பதை 'ச்சாமி' என்று உச்சரித்தார். மலாக்கா செட்டிகள் எல்லோருமே அப்படித்தான் சொல்கிறார்கள். அவர்களில் தமிழ் பேசுபவர்கள் மிக மிகச் சொற்பம். அதிலும் தமிழ்ச் சொற்கள் குறைவாகவேதான் அவர்களின் பேச்சில் வருகிறது. மலாய் மொழிதான் பேச்சு மொழி.

''சுப்பிரமணியசாமியைப் பற்றி அதிகமாகத் தெரிந்து வைத்திருக் கிறீர்களே, எப்படி முடிந்தது?'' என்று கேட்டேன்.

''அவர் நாமத்தைப் படிச்சுப் படிச்சு பக்தி உண்டாகிப் போச்சு. ஸ்தல புராணங்களைப் படித்து, எல்லா ஸ்தலங்களையும் மானசிகமாகத் தரிசனம் பண்ணிக்கிட்டிருக்கேன்'' என்றார் சிதம்பர நாயக்கர்.

மலாக்கா செட்டியார்களுக்குத் தமிழ் நாடே தெரியாது. நடை உடையில் அவர்கள் மலாய்க்காரர்களைப் போல் இருக்கிறார்கள். ஆனால் இந்துமத ஆசார அனுஷ்டானங்களை முற்றாகப் பின்பற்றுகிறார்கள். வீட்டில் அவர்கள் பேசுவது மலாய் மொழி. ஆங்கிலமும் சிலர் பேசுகிறார்கள். தேவாரம் படிக்கிறார்கள். தமிழ்ப் பாடல்களை மலாய் எழுத்தில் எழுதி வைத்துக் கொண்டுதான் இவர்களால் படிக்க முடிகிறது.

இவர்களுக்குப் பல கோயில்கள் இருக்கின்றன. முத்துமாரியம்மன் கோயில், காளியம்மன் கோயில், அங்காளம்மன் கோயில், துரோபதையம்மன் கோயில், காத்தாயி அம்மன் கோயில், கைலாசநாதர் கோயில்—இப்படிப் பல கோயில்கள்.

''பொய்யாத்த விநாயகமூர்த்தி கோயில்தான் இங்கே பழமையான கோயில்'' என்று சிதம்பர நாயக்கர் சொன்னார்.

மலாக்கா செட்டிமார்கள் கொண்டாடும் பண்டிகைகள், திருவிழாக்களைப்பற்றி அவரிடம் கேட்டேன். மிகவும் சிரமப்பட்டுத் தமிழ் பேசினாலும், பல விஷயங்களை அவர் சொன்னார். பொறுமையாக உட்கார்ந்து கேட்டேன்.

அவர்கள் தீ மிதியிலிருந்து பொங்கல், மாசி மகம், சித்திரா பௌர்ணமி வரை எதையும் விடுவதில்லை. காப்புக் கட்டிக் கொண்டு, நாற்பது நாள் விரதமிருந்து தீ மிதிக்கிறார்கள். மார்கழி மாதத்தை முறையாக அனுசரிக்கிறார்கள். சாணம் தெளித்து வாசலில் கோலம் போடுகிறார்கள்.

திருமணம் இந்து சமய முறைப்படிதான் நடக்கிறது. தமிழ் நாட்டுடன் தொடர்பு இல்லாததால்தான், இவர்கள் தமிழை மறந்துவிட்டார்கள் என்பதைப் புரிந்து கொண்டேன்.

''உங்கள் முன்னோர்கள் மலாக்காவுக்கு எப்பொழுது வந்தார்கள் என்று தெரியுமா?'' என்று சிதம்பர நாயக்கரைக் கேட்டேன்.

''கட்டபொம்மன் காலத்தில், வெள்ளைக்காரர்கள் எங்கள் முன்னோர்களைப் படகில் ஏற்றி நாடு கடத்தி விட்டார்கள் என்கிறார்கள். அப்பொழுது வந்தவர்கள்தான். அவர்களும் சரி, நாங்களும் சரி, இந்த இடத்தை விட்டு நகரவில்லை'' என்றார் அவர்.

கட்டபொம்மன் காலத்திற்கு முன்பிருந்தே, சுமார் நானூறு ஆண்டுகளுக்கு முன்—மலாக்கா செட்டிகள் இருந்து வருவதாக வேறு சிலர் சொன்னார்கள். இந்த சரித்திரம் நமக்குத் தேவையில்லை என்று நான் அதை விட்டுவிட்டேன்!

''தமிழ் பேசுவது உங்களுக்குச் சிரமமாக இருக்கிறது, இல்லையா?'' என்றேன் அவரிடம்.

''தமிழ் ரத்தம் என் உடலில் ஓடுகிறது'' என்றார் பெருமையுடன். மலாக்காவுக்கு அந்தக் காலத்தில் வந்தவர்கள் தமிழ்நாட்டிலிருந்து மனைவிமார்களையோ அல்லது மாதர்களையோ அழைத்து வரவில்லை. உள்ளூர்ப் பெண்ணையே மணந்து கொண்டார்கள். நடை உடை மாற்றத்திற்கு இதுவே காரணம். ஆனால் சமய முறைகள் மாறிவிடவில்லை.

''குழந்தைகளுக்குத் தமிழ் கற்றுக் கொடுக்கிறீர்களா?'' என்று விசாரித்தேன்.

''தமிழையும் படிக்கச் சொல்லுகிறோம். மதக் கல்வியும் இருக்கிறது'' என்று அவர் சொன்னார்.

''மலாக்கா செட்டியார் என்று சொல்கிறீர்கள். உங்கள் பெயர் சிதம்பர நாயக்கர் என்கிறீர்களே?'' என்றேன்.

''எங்களில் எல்லாப் பிரிவினரும் உண்டு. படையாச்சி, பிள்ளைமார்கள், பத்தர், முதலியார் என்று பலரும் இருக்கிறார்கள். மொத்தமாகச் செட்டியார் என்றே பெயர். நாங்கள் ஜவாரி செட்டியார்'' என்று அவர் விளக்கினார்.

திருக்கோடியில் தேவார வகுப்பு நடந்து கொண்டிருப்பதாகச் சொன்னார்கள். பார்க்க வேண்டும் என்ற ஆர்வத்தில் அங்கே போனேன். நம்ப முடியாத காட்சியாக இருந்தது. பல இளைஞர்கள் உட்கார்ந்திருந்தார்கள். டைட் பாண்ட்ஸ், சைட்பர்ன்ஸ்...ஸ்போர்ட்ஸ் ஷர்ட்ஸ். மிக நாகரிகமாக உடுத்தி இருந்த அவர்கள், தேவாரம் படித்துக் கொண்டு இருந்தார்கள்.

தோற்றம் எப்படி இருந்தாலும், அவர்களின் உள்ளம் தேவாரத்தில் தோய்ந்திருக்கின்றது என்பதை உணர்ந்து கொண்டேன். பலர் கையிலிருந்த தேவாரத்தைப் பார்த்தேன். ஆங்கில எழுத்தில் தமிழ் உச்சரிப்புகளை எழுதி வைத்துக் கொண்டு இசையுடன் பாடினார்கள். வெள்ளி, சனிக்கிழமைகளில் அவர்களுக்காக சமயப் பாட வகுப்புகளை நடத்துகிறார்கள்.

சில கோயில்களுக்கும் சென்றேன். விளம்பரப் பலகைகளைப் பார்த்த போதும் வியப்பு ஏற்பட்டது. மலாய் மொழியிலேயே எழுதி வைத்திருக்கிறார்கள். கோயிலுக்கு வரும் செட்டிமார்கள் மலாய் மொழியிலேயே உரையாடுவதைப் பார்த்தேன். இடையிடையே தமிழ்ச் சொற்கள் தலைகாட்டுகின்றன. கூடம், சாம்பிராணி, பூஜை என்ற சொற்களை அப்படியப்படியே புழங்குகிறார்கள்.

மற்ருெரு குடும்பத்திற்குச் சென்றேன். வீட்டில் முருகன், விநாயகர், சரஸ்வதி படங்கள் வைக்கப்பட்டிருந்தன. வீட்டுத் தலைவர் பழநி படையாச்சி மகிழ்ச்சியுடன் எங்களை வரவேற்ருர். படையாச்சி ஆனுலும் இவரும் மலாக்கா செட்டிதான். செட்டிமார்களின் தொழில்முறை பற்றி அவரிடம் கேட்டேன். விவசாயத்தில் பலர் ஈடுபட்டிருக்கிருர்கள். இளைஞர்கள் படித்துவிட்டு அரசாங்க உத்தியோகங்களுக்குப் போவது அதிகரித்திருக்கிறது.

கஜபிராங் வட்டாரம் செட்டிமார்களுக்குச் சொந்தமானதாக இருப்பதால், நிலமில்லாத குடும்பங்களுக்கு நிலம் தருகிருர்கள். அதற்குக் குறைவான வாடகையே வாங்குகிருர்கள். மற்ற இன மக்களுக்கும் இடம் உண்டு. ஆனுல் வாடகை கொஞ்சம் கூடுதல்.

''செட்டிமார்கள் மொத்தம் எவ்வளவு பேர் இருக்கிறீர்கள்?'' என்று பழநி படையாச்சியிடம் கேட்டேன்.

''பல பேர் வேலை விஷயமாக வெளியிடங்களுக்குப் போய் விட்டார்கள். இங்கே இருநூறு, முந்நூறு பேர்தான் இருக்கிருேம்'' என்று அவர் சொன்ருர்.

''மலாக்கா செட்டிமார்களில் மூத்தவர் இப்பொழுது யார்?'' என்று நான் கேட்டபோது அவர் சற்றே கலங்கினுர்.

''அபிராமி இருந்தார். அவர் போயிட்டார். அப்போ அவருக்கு வயசு 99'' என்ருர் பழநி படையாச்சி.

மலாக்கா செட்டியார் சமூகத்தில் பிரபலமாக விளங்கியவர் அபிராமி. அவருக்கு மிகுந்த மதிப்பும் மரியாதையும் இருந்ததாம். ஐந்து வருஷத்திற்கு முன் அவர் இறந்து விட்டதாகப் பழநி படையாச்சி சொன்ருர்.

நான் சில நிமிஷம் சிந்தித்தேன். தமிழ்ப் பண்பாட்டையும், சமயத்தையும் கட்டிக் காத்துவரும் இவர்கள், தமிழ் மொழி பேச முடியாதவர்களாக இருக்கிருர்களே, இந்தச் சமூகத்தினரின் பரம்பரை எப்படி இருக்கும்? கேரளத்தில் இருக்கும் யூதர்கள், ஹீப்ரு மொழி தெரியாமல் மலையாளத்தில் வழிபாடு நடத்துகிருர்கள். ஆனுல் மலாக்கா செட்டிகள் தமிழ் தெரியாமல் தமிழ்நாட்டு முறைப்படி வழிபடுகிருர்கள். ஒரு தனி சமூகமாக ஒதுங்கிப் போவதில், உடனடியாகப் பிரச்னைகள் தென்படா விட்டாலும், பிற்காலத்தில் அவற்றைச் சந்திக்க வேண்டியிருக்கிறது. மொழி என்ற அடையாளத்திலிருந்து மலாக்கா செட்டிகள் விலகிப் போயிருக்கிருர்கள், இதயம் மாறிவிடவில்லை. மொழிப் பிணைப்பு, எந்த அளவுக்கும் ஒரு சமூகத்திற்கு அவசியம் என்பதை இவர்களைப் பார்க்கிற யாரும் உணர்ந்து கொள்ளலாம்.

''செட்டியார் ஐயா, நம்ம ஊருக்கு வாருங்களேன்'' என்றேன். பழநி படையாச்சி புன்னகை புரிந்தார்.

''முருகன்தான் உங்களை இங்கே அனுப்பி யிருக்கிறான். உங்களைப் பார்த்ததில் எனக்கு மகிழ்ச்சி. தமிழ்நாட்டைப் பார்த்தாற்போல் இருக்கிறது. நிறைய தமிழர்களை இங்கே அனுப்பி வையுங்கள்.. ...'' என்றார்.

# 36

'பாங்க் பூமி புத்ரா' என்ற பெயர்ப் பலகை ஒன்றைக் கோலாலம்பூரில் பார்த்ததும், எனக்குச் சற்று வியப்பு ஏற்பட்டது.

''பூமி புத்ரா என்றால் என்ன?'' என்று 'மாரா' என்ற ஸ்தாபனத்தைச் சேர்ந்த ஓர் அதிகாரியிடம் கேட்டேன். 'இந்தப் பூமியின் புத்திரர்' என்று அவர் பதில் சொன்னார்.

''இது சமஸ்கிருதச் சொல்லாக இருக்கிறதே?''

''ஆமாம். மலாய் மொழியில் சமஸ்கிருதச் சொற்கள் ஏராளம்'' என்றார் அவர்.

'மலேசிய மக்களைத்தானே 'பூமி புத்ரா' என்று குறிப்பிடுகிறீர்கள்'' என்று கேட்டேன் நான்.

அவர் சிறிது தயங்கினார். பிறகு—

''இல்லை. பூமி புத்ரா என்ற சொல், எல்லா இன மக்களையும் குறிக்காது. மலாய்க்காரர்களே இப்படி அழைக்கப்படுகிறார்கள்'' என்று சொன்னார்.



''அப்படியானல் இங்குள்ள மற்ற இன மக்கள்...?'' என்று ஆரம்பித்தேன்.

''நண்பரே, இது சர்ச்சைக்குரிய விஷயம். முன்பு பார்லிமெண்டில் காரசாரமாக இதுபற்றி விவாதிக்கப்பட்டிருக்கிறது. துங்கு அப்துல் ரஹ்மான் பிரதமராக இருந்த காலத்தில், 'பூமி புத்ரா' என்ற சொல் இங்கு உருவெடுத்தது. மலாய்க்காரர்கள் மட்டுமின்றி, இந்த நாட்டில் பிறந்த மற்றவர்களையும் பூமி புத்ராக்களாக மதிக்க வேண்டும் என்று பார்லிமெண்டில் பல உறுப்பினர்கள் சொன்னர்கள். அவ்வளவுதான்'' என்று நிறுத்திக் கொண்டு விட்டார் அந்த அதிகாரி.

பூமி புத்திரர்களாக மலாய்க்காரர்களே கருதப்படுகிருர்கள் என்பதைப் புரிந்து கொண்டேன்.

இந்தப் பூமி புத்திரர்களின் வளர்ச்சிக்கு உதவும் ஒரு பாங்குதான் 'பாங்க் பூமி புத்ரா.' இவர்களின் பொருளாதார நலன்களைக் கவனித்துக் கொள்வதற்காக, மாரா (Mara) என்னும் பெரிய ஸ்தாபனமும் மலேசியாவில் இயங்கி வருகிறது.

'மாரா' அலுவலகத்திற்குச் சென்று பார்த்தேன். அதன் பல பிரிவுகளுக்கும் அதிகாரிகள் அழைத்துச் சென்று காட்டினர்கள். நாடு முழுவதிலும் அதன் கிளைகள் இருப்பதாகச் சொன்னர்கள். தொழில் துறைகளையும், தொழில் நுட்பக் கல்லூரியையும் மாரா நடத்தி வருகிறது.

பூமி புத்ராக்கள் துவங்கும் தொழில்களுக்குப் பொருளாதார உதவி அளிப்பது, லைசென்ஸ் கொடுப்பது போன்ற பணிகளை மாரா செய்து வருகிறது. நாடு முழுவதிலும் பரவலாகத் தொழில்கள் ஏற்பட வேண்டும் என்று மாரா விரும்புகிறது. மாரா தோன்றிய பிறகு பூமி புத்ராக்களிடையே குறிப்பிடத்தக்க பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டிருப்பதாகச் சொன்னர்கள். கிராமப்புற அபிவிருத்தியிலும் மாரா கவனம் செலுத்தி வருகிறது.

'பூமி புத்ரா' என்ற சொல்லைக் கேட்ட பிறகு, மலாய் மொழியில் தமிழ், சமஸ்கிருதச் சொற்கள் நிறைய இடம் பிடித்துக் கொண்டிருக்கும் என்று நினைத்தேன். மிகப் பழமையான கலாசாரத் தொடர்பு இரு நாடுகளுக்கும் இடையே இருந்திருப்பதால், மலாய் மொழியில் நமது செல்வாக்கு மிக அதிகமாகவே படிந்திருப்பதைக் கண்டேன்.

மலாய் மொழியில் வனிதா என்று பெண்ணைச் சொல்கிருர்கள். ஸ்திரி என்ற சொல்லும் இருக்கிறது. கப்பலைக் கெப்பல் என்கிருர்கள். மூக்கா என்ருல் முகமாம். குளத்தைக் கொளம் என்கிருர்கள். கடை அவர்களுக்குக் கெடை. பெட்டி,பெட்டிதான். அநியாயத்தை அநியாயா என்கிருர்கள். மிசை, மிசைதான். மாமிக்கு, மாமியே. பெண் கடவுளைத் தேவி என்றே சொல்கிருர்கள். இப்படி எத்தனையோ சொற்கள்.

மலாய்க்காரர்களுக்கு மொழி உணர்ச்சி அதிகம் இருக்கிறது. 'மொழியேதான் இனத்தின் உயிர்' என்ற வாசகம் அவர்களிடையே வேரூன்றி இருக்கிறது. 'பஹாசா ஜீவா பங்சா' என்கிருர்கள். இதற்காக

இயக்கம் இருக்கிறது. மலாய் மொழியே தேசிய மொழி. இந்தோனேசிய மக்களுக்கும், மலேசியர்களுக்கும் ஒரே மொழிதான். மலேசியாவில் இந்த மொழியை இரண்டுவிதமாக எழுதுகிறார்கள். அரபு எழுத்தில் எழுதப் படுவது ஒரு முறை. இதற்கு ஜாவி என்று பெயர். ஆங்கில எழுத்திலும் எழுதுகிறார்கள். இதை ரோமனைஸ்டு மலாய் (Romanised Malay) என்கிறார் கள். ஜாவாவில் வழங்கப்படும் மொழி என்பதால் ஜாவி ஆயிற்று என்ற விளக்கம் கிடைத்தது.

அழகு கொஞ்சும் மலாய்க் கம்பங்கள் (கிராமங்கள்) சிலவற்றைச் சென்று பார்த்தேன். உண்மையிலேயே அங்கெல்லாம் அழகு கொஞ்சு கின்றன. மலாய் இளம் பெண்களின் அழகைப் பற்றிச் சொல்லாமல் இருக்க முடியவில்லை. செருக்கில்லாத இயற்கை அழகும், வாளிப்பும் அவர்களிடம் கொஞ்சிக் குலவிக் கொண்டிருக்கின்றன. இத்தகைய அழகு மலேசிய சீனப் பெண்களிடம் ஏனோ காணப்படவில்லை.

மலாய்ப் பெண்களை மணந்து கொள்வதற்கென்றே பலர் மதம் மாறுவதாகச் சொன்னார்கள். அவர்கள் முஸ்லிம் பெண்கள். அவர்களை மணந்து கொள்ள விரும்பினால், மற்ற இனத்தைச் சேர்ந்தவர்கள் மதம் மாற வேண்டும். அதற்குப் பிறகுதான் அரசாங்கம் திருமணத்திற்கு அனுமதிக்கும்.

கலப்புத் திருமணம் என்றால் முதலில் மனம் மாற வேண்டும். மலேசியாவில் மனம் மாறினால் மட்டும் போதாது. மதமும் மாறவேண்டும். அப்பொழுதுதான் மலாய் இனப் பெண்ணை மனைவியாக அடைய முடியும். பல ஆங்கிலேயர்கள் மலாய்ப் பெண்களுக்கு ஆசைப்பட்டு மதம் மாறி யிருக்கிறார்கள். தமிழர்களும் அப்படிச் செய்திருக்கிறார்கள். பெரிய பதவிகளில் இருப்பவர்கள், பெரிய பெரிய பிரமுகர்கள் கூட மனம் மாறி, மதம் மாறி, பெயரையும் மாற்றிக் கொண்டிருக்கிறார்கள். ரசமான பல தகவல்களைக் கோலாலம்பூரில் கேள்விப்பட்டேன்.

கோலாலம்பூரிலும், மற்ற மலேசிய நகரங்களிலும் தமிழர்கள் சிறப்பாகவே வாழ்கிறார்கள். வர்த்தகத்திலும் தொழில் துறையிலும் மற்ற சமூகத்தினரோடு ஓரளவுக்குப் போட்டி போட்டுக் கொண்டு முன்னேறி வருகிறார்கள். ஒரு காலத்தில் வர்த்தகம் முழுவதும் தென்னிந்திய முஸ்லிம்கள் கையிலேயே இருந்ததாகச் சொன்னார்கள்.

கோலாலம்பூரில் தென்னிந்திய முஸ்லிம்களின் சங்கம் இருக்கிறது. சங்கத்தின் உப தலைவர் ஹாஜி கே. எம். யாஹ்யாவுடன் பேசிக் கொண் டிருந்தேன். கோலாலம்பூரிலும், பினாங்கிலும், மலாக்காவிலும் தமிழ் நாட்டு முஸ்லிம் வணிகர்கள் ஒரு காலத்தில் கொடி கட்டிப் பறந்த கதையை அவர் சொன்னார். இப்பொழுது ஒரு பழங்கதை மாதிரி ஆகிவிட்டது. மலேசிய மண்ணில் அவர்கள் காலூன்றி, நிலைக்காதது தான் காரணம் என்பதை உணர்ந்து கொண்டேன்.

''உங்கள் சங்கம் என்னென்ன பணிகளைச் செய்கிறது?'' என்று அவரிடம் கேட்டேன்.

''தென்னிந்திய முஸ்லிம் பள்ளிவாசலைப் பார்த்திருப்பீர்கள். அது மலேசியத் தலைநகரில் ஏற்படுவதற்குச் சங்கம் பெரும் பங்காற்றி யிருக்கிறது. ஐந்து லட்சம் வெள்ளி செலவில் இந்தப் பள்ளிவாசலைக் கட்டியிருக்கிறோம். இங்குள்ள தமிழ்நாட்டு முஸ்லிம் சமுகம் அளித்த நன்கொடை, அரசாங்க உதவி ஆகியவற்றைக் கொண்டு கட்டி முடித்தோம்'' என்று சொன்னார் ஹாஜி யாஹ்யா.

பள்ளிவாசலின் செயலாளராகவும் இவர் இருந்து வருகிறார். இந்தப் பள்ளிவாசல், தலைநகரின் நடுநாயகமான பகுதியில் கம்பீரமாக அமைந்திருக்கிறது. அதை யொட்டிய ஒரு சாலைக்கு ஜாலான் மஸ்ஜீத் இந்தியா (இந்தியப் பள்ளிவாசல் தெரு) என்று பெயரிட்டிருக்கிறார்கள்.

''சமுக, கலாசாரப் பணிகளையும் நாங்கள் செய்து வருகிறோம். அநாதைகளுக்கு உதவுகிறோம். இறந்து போகும் அநாதைகளை அடக்கம் செய்ய உதவி அளிக்கிறோம்'' என்றார் அவர்.

மலேசியாவிலேயே மிகப் பெரிய பேக்கரியை நடத்துகிறவர் ஒரு தமிழ் நாட்டு முஸ்லிம் வர்த்தகர்தான் என்று கோலாலம்பூரில் சொன்னார்கள்.

'பெடரல் பேக்கரி' என்னும் அந்த ரொட்டித் தொழிற்சாலைக்கு, அதன் உரிமையாளர் என்னை அழைத்துச் சென்றார். பெரிய தொழிற்சாலை. நவீனமாகவே எல்லாம் நடக்கிறது. நம் நாட்டிலும் இது மாதிரியான பேக்கரிகள் ஏற்பட்டால் நன்றாக இருக்குமே என்று எண்ணினேன்.

பல துறையிலும் ஆர்வமுள்ள தமிழ் முஸ்லிம் இளைஞர்கள் பலரைச் சந்தித்தேன்.

''நான் ஒரு நாடக ஆசிரியர்'' என்று அறிமுகப்படுத்திக் கொண்டார் பாருக் என்பவர்.

இன்னொருவர் கவிஞர். பெயர் பட்டர்வொர்த் ஜெயினுதீன்.

''பெயருக்கு முன்னால் பட்டர்வொர்த் என்று போட்டிருக்கிறீர்களே, அது என்ன?'' என்று நான் கேட்டேன்.

''அது என் ஊர் பெயர். பட்டர்வொர்த் நகரில் நான் பிறந்தவன். சென்னையிலும், சிதம்பரத்திலும் படித்தேன்'' என்று அவர் சொன்னார்.

''இந்த நாட்டின் இலக்கிய வளர்ச்சிக்குத் தமிழ் நாட்டின் முஸ்லிம்கள் எவ்வளவோ செய்திருக்கிறார்கள்'' என்று ஜெயினுதீன் கூறியபோது, ''குறிப்பிடத்தக்க ஒன்றிரண்டைச் சொல்லுங்களேன்'' என்றேன்.

''மலேசியாவின் ஷேக்ஸ்பியரைப் பற்றி உங்களிடம் நான் சொல்ல வேண்டும். அவர் தமிழ் வம்சாவளியைச் சேர்ந்தவர். முன்ஷி அப்துல்லா என்று பெயர். மலாய் மொழி இலக்கியத்தின் தந்தை என்று அவரை அழைக்கிறோம். அவர் தமிழ் தெரிந்தவர். சமஸ்கிருதம் தெரியும். அரபி

மொழியும் தெரியும். மலாய் மொழியில் இலக்கியமும், சரித்திரமும் எழுதினர். அவர் வாழ்ந்தது மலாக்காவில்'' என்று ஜெயினுதீன் விவரித்தார்.

''முன்ஷி அப்துல்லாவை மலேசியாவின் ஷேக்ஸ்பியர் என்று மலாய்க்காரர்களும் மதிக்கிருர்கள் அல்லவா?'' என்று கேட்டேன்.

''நிச்சயமாக. அவரை யாரும் மறந்துவிடவில்லை'' என்ருர்.

''மலேசியாவிலுள்ள முஸ்லிம்களில் ஒரு சாரார் தங்களைச் சோழ வம்சத்தினர்'' என்று சொல்லிக் கொள்வதாகப் பட்டர்வொர்த் ஜெயினுதீன் சொன்னர்.

''மலேசியாவில் சோலியா என்ற பெயர் பழக்கமான ஒன்று. தமிழ் முஸ்லிம்கள் சோலியா முஸ்லிம் என்று ஒரு காலத்தில் இங்கு அழைக்கப்பட்டிருக்கிருர்கள். சோலியா ஸ்ட்ரீட் என்று தெருக்களுக்குப் பெயர் வைக்கப்பட்டிருக்கிறது'' என்ருர் அவர்.

அவர் சொன்ன இன்னெரு விஷயம் எனக்குப் பெருமையாக இருந்தது.

''முன்பு பிரதமராக இருந்த துங்கு அப்துல் ரஹ்மான், தன்னை ஒரு சோழ இளவரசர் என்று சொல்லிக் கொள்வதில் பெருமைப்பட்டாராம்.

தமிழ் முஸ்லிம்கள் மட்டுமின்றி எல்லாச் சமூக மக்களும் மத ஆசார அனுஷ்டானங்களுடன் அமைதியாக மலேசியாவில் வாழ்வதைப் பார்த்தேன். தமிழ் நாட்டைச் சேர்ந்த பல பிராமணக் குடும்பங்கள் கோலாலம்பூரில் உண்டு. சங்கமும் வைத்திருக்கிருர்கள்.

''இங்கே பிராமணர்கள் பிராமணர்களாக வாழ்வதற்கு எல்லா வசதியும் இருக்கிறது. எல்லா உரிமையும் இருக்கிறது'' என்று சங்கத்தைச் சேர்ந்த திரு. வனம் என்னிடம் கூறினர்.

''வனம் என்று பெயர் வைத்துக் கொண்டிருக்கிறீர்கள். கொஞ்சம் அசாதாரணமான பெயராகப்படுகிறதே, இது புனைப் பெயரோ?'' என்றேன்.

''ஆமாம், மிஸ்டர் மணியன். முழுப் பெயர் இக்ஷுவனம். இக்ஷுவனம் என்பது இங்கு பலர் வாயிலும் வர மறுத்தது. அதனுல் இக்குவனம் என்று தமிழ்ப் படுத்திக் கொண்டேன். இது என்ன பெயர் என்று சிலர் கேட்க ஆரம்பித்து விட்டார்கள். இதனுல், வனமாகி விட்டேன்'' என்ருர் அவர்.

நல்ல வேளை! நந்தவனம் என்ருே, பூங்காவனம் என்ருே அவர் மாற்றிக் கொண்டு விடவில்லை.

பல்கலைக் கழக நூல் நிலையத்தில் வனத்திற்கு வேலை. கவிதைகள் எழுதுகிருர். வெண்பா பாடுவது இவருக்குக் கைவந்த கலையாம்.

''பிராமணர்கள் சங்கத்தில் உறுப்பினர்கள் அதிகமாக இருக்கிருர்களா?'' என்று கேட்டேன்.

''இப்பொழுது 146 பேர் இருக்கிறோம்'' என்ற அவர், ''மிஸ்டர் மணியன், உங்களை ஒரு பட்சணக் கடைக்கு அழைத்துப் போகலாம் என்று நினைக்கிறேன். வருகிறீர்களா?'' என்று கேட்டார்.

''பட்சணக் கடைக்கா? தாராளமாக வருகிறேன்'' என்று கூறி அழைப்பை ஏற்றுக் கொண்டேன்.

அங்கே எனக்கு ஆச்சரியம் காத்திருந்தது. சென்னை ஓட்டல்களில் இப்பொழுதெல்லாம் கிடைக்காத, பெயர் கூட மறந்து போன பல தமிழ் நாட்டுப் பட்சணங்கள் அந்தக் கடையில் இருந்தன. அதிரசம், போளி போன்ற பல பட்சணங்களை வைத்திருந்தார்கள். எல்லாவிதமான பட்சணங்களும் கிடைத்தன. வியாபாரம் பெரிய அளவுக்கு நடக்கிறதோ இல்லையோ, பழங் காலத்துப் பட்சணக் கடையை நினைவுபடுத்துவது போல் கோலாலம்பூரில் அந்தக் கடை நடந்து கொண்டிருக்கிறது.

சடங்கு, சம்பிரதாயம் பிசகாமல் பிராமணர்கள் மலேசியத் தலைநகரில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

வெளிநாடாக இருந்தாலும் அடிப்படைப் பழக்க வழக்கங்களையும் முறைகளையும் அவர்கள் மாற்றிக் கொண்டு விடவில்லை. அமாவாசை தர்ப்பணத்தைக் கூட விடாமல் செய்கிறார்கள்.

''சங்கல்பத்தின் போது என்ன சொல்கிறீர்கள்?'' என்று வனத்தைக் கேட்டேன்.

''சரியான கேள்வி'' என்று அவர் சிரித்துக் கொண்டார்.

'''பாரத வருஷே, பரதக்கண்டே' என்கிறோம்'' என்றார் அவர்.

''நீங்கள் பரதக் கண்டத்திலா இருக்கிறீர்கள்?'' என்றேன்.

''இதை யெல்லாம் எப்படி மாற்றிச் சொல்ல முடியும் என்கிறீர்கள்? வேறு நாட்டில் இருந்தாலும், பொருத்தமான வாசகமாக இல்லையென்றாலும் அதையேதான் சொல்கிறோம். மாற்றிச் சொல்லத் தெரியவில்லை; தைரியமும் இல்லை. அர்த்தம் சரியா, தப்பா என்ற எண்ணம் தோன்றுவதில்லை. அந்தரங்க சுத்தியோடு சொல்கிறோம். அவ்வளவுதான். அதில் தவறு இருப்பதாக நாங்கள் நினைக்கவில்லை'' என்றார் அவர்.

அதுதான் முக்கியம் என்று நான் நினைத்துக் கொண்டேன்.

# 37

திரு. பெர்குஸனுடன்....

“ஈப்போவில் ஒரு முக்கியமான இடத்தை உங்களுக்குக் காட்டப் போகிறேன். நீங்கள் அசந்து போய் விடுவீர்கள்'' என்று சொல்லிக் கொண்டே வந்தார் டிரைவர். கோலாலம்பூரை விட்டு கார் புறப்பட்டதுமே, இப்படி ஒரு சஸ்பென்ஸ் போட்டார் அவர்.

ஈப்போவில் ரப்பர் எஸ்டேட்டுகளைப் பார்ப்பது விசேஷமாக இருக்கும் என்று சிலர் சொன்னார்கள். அங்கு மட்டுமல்ல; மலேசியா முழுவதிலுமே ரப்பர் தோட்டங்கள் உண்டு என்பதை கார் பயணத்தின் போது உணர்ந்து கொண்டேன். ரப்பர் இல்லாமல் மலேசியாவின் பொருளாதாரம் இல்லை. ரப்பர் தரும் செல்வத்தினால்தான் மலேசியா செழிப்புடன் விளங்குகிறது. மேல்நாடுகள் செயற்கை ரப்பரைத்(Synthetic Rubber) தயாரிக்க ஆரம்பித்த பிறகும் கூட, மலேசிய ரப்பரின் முக்கியத்துவம் குறைந்து விடவில்லை என்று கூறினார்கள். ரப்பர் விலை ஏறினால் எஸ்டேட் முதலாளிகளுக்கு மகிழ்ச்சி. விலை வீழ்ச்சியினால் சில சமயங்களில் பாதிப்பும் ஏற்பட்டிருக்கிறதாம். மலேசியாவில் ஐரோப்பியர்களுக்கு ஏகப்பட்ட ரப்பர் எஸ்டேட்டுகள் இருக்கின்றன.



சாலையின் இருபுறமும் கண்ணுக்கெட்டிய தூரம் வரை வரிசை பிடித்தாற் போல் நிற்கும் ரப்பர் மரங்களைப் பார்க்கும்போது, அலாதியான ஒரு மகிழ்ச்சி. ஈப்போவுக்குப் போவதற்குள் வழியில் பல மக்களைச் சந்தித்துவிட வேண்டும் என்ற ஆசை எனக்கு. டிரைவரிடம் சொன்னேன். அவர், வழியில் எதிர்ப்பட்ட சில கிராமங்களில் வண்டியை நிறுத்தி நிறுத்திச் சென்றார்.

''சார், அதோ கத்தியைத் தீட்டுகிறார், ஒரு தாத்தா... அவரைப் பார்த்தால் என்ன?'' என்றார் புகைப்படக்காரர் சுந்தரம்.

''அவரைப் பார்க்கத்தானே வண்டியிலிருந்து இறங்கினேன்'' என்றவாறு, அந்த சீனக் கிழவரிடம் சென்றேன். அவர் யாரையும் சட்டை செய்யாமல் கத்தியைத் தீட்டிக் கொண்டிருந்தார்.

''எதற்காகக் கத்தியைத் தீட்டுகிறீர்கள்?'' என்று மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தேன். அவர் சாவதானமாக என்னைப் பார்த்தவாறு ''கூராக்குவதற்கு'' என்றார்.

''பலே ஆசாமியாக இருப்பார் போல் தோன்றுகிறதே'' என்று சுந்தரம் முணுமுணுத்தார்.

கிழவரை முற்றுகையிட்டோம்.

அவர் பெயர் மாங் வாய் (Mong Wai). நன்றாகப் பழுத்த கிழவர். மலேசியாவில் நெடுங்காலமாக இருப்பவர்.

''நீங்கள் சீனாவுக்குப் போயிருக்கிறீர்களா?'' என்று கேட்டேன்.

''ஓ, போயிருக்கிறேனே...''

''மாசேதுங்கைத் தெரியுமா?''

''நான் 'மா'வைப் பார்த்ததில்லை.''

''பார்க்க வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டதில்லையா?''

''எதற்காகப் பார்க்க வேண்டும்? மாவுக்கும் எனக்கும் என்ன உறவு? நான் மலேசியன்'' என்றார் சீனக் கிழவர்.

''மாசேதுங்கின் சிந்தனைகளைப் பற்றித் தெரியுமா, உங்களுக்கு?'' என்று கேட்டேன்.

''அப்படி யென்றால் என்ன?'' என்று அவர் என்னையே திருப்பிக் கேட்டார்.

'''சீனத் தலைவர் மாசேதுங்கின் சிந்தனைகள்' என்று பிரமாதமாகப் பேசுகிறார்கள். சீனராயிருந்தும் உங்களுக்குத் தெரியவில்லை என்கிறீர்களே?''

''சீனாவிலுள்ளவர்களுக்கே சீனாவைப் பற்றிப் பல விஷயங்கள் தெரியாது என்பது உங்களுக்குத் தெரியாதுபோல் இருக்கிறது'' என்று மெதுவாகச் சொல்லிவிட்டு, கத்தியைத் தீட்ட ஆரம்பித்து விட்டார் மாங் வாய்.

''அப்படி யென்றால், உங்களைப் போலவே மாவின் சிந்தனைகளைப் பற்றிச் சீனாவிலுள்ள ஏராளமான சீனர்களுக்கும் தெரியாது என்று சொல்லுங்கள்'' என்றேன் வியப்புடன்.

''ஆமாம். தெரியாத விஷயத்தைப் பற்றித் தெரிந்த மாதிரி பீற்றிக் கொண்டிருக்கிறார்கள். உலகத்தில் இல்லாத அதிசயம் மாதிரிப் பேசுவார்கள். உள்ளே ஒன்றுமே இருக்காது. இதுதான் உலகம். எல்லாமே ஏமாற்று வித்தை'' என்றார் அவர்.

''மாவின் சிந்தனைகள் கூட அப்படித்தான் என்கிறீர்களா?''

''மக்களுக்குப் புரியாததை வேறு எப்படிச் சொல்ல முடியும்?'' என்றவாறு, மறுபடியும் கத்தியைத் தீட்டினார் மாங் வாய்.

''மலேசியாவில் நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள் அல்லவா?'' என்று கேட்டேன்.

''எந்தக் குறையும் இல்லை. பெரிய குடும்பம். பிள்ளைகள் என்னைக் கவனித்துக் கொள்கிறார்கள். நானும் ஏதாவது வேலை செய்கிறேன்.''

''மீண்டும் சீனாவுக்குப் போய் வர வேண்டும் என்ற ஆசை இருக்கிறதா?''

''போய்த்தான் ஆக வேண்டும் என்ற ஆசையில்லை. சந்தர்ப்பம் கிடைத்தால் ஒரு முறை போய் வரலாம்.''

''இப்பொழுது சீனாவில் மக்கள் எப்படி இருக்கிறார்கள் என்று உங்களுக்குத் தெரியுமா?''

''முன்பைவிடத் தேவலாம் என்று கேள்வி. எப்படியோ அவர்கள் நன்றாக வாழ்ந்தால் சரிதான். அவர்களும் மனிதர்கள். சந்தோஷமாக இருக்கட்டும். அதற்காகப் பிரார்த்திக்கிறேன்'' என்று சொல்லி விட்டுப் பழையபடி கத்தியைத் தீட்ட ஆரம்பித்துவிட்டார் அந்தச் சீனக் கிழவர்.

கார் விரைந்து கொண்டிருந்தது.

''கொஞ்சம் நிறுத்துங்கள்'' என்றேன் டிரைவரிடம்.

சைக்கிளில் ஐஸ் கிரீம் பெட்டியை வைத்துக் கொண்டு நின்றிருந்தாள் நடுத்தர வயதுடைய ஒரு மாது. முகத்தில் மலர்ச்சி காணப்படவில்லை. பேச்சுக் கொடுத்தால் கூடப் பதில் வராது போன்ற ஒரு தோற்றம். பேசத் தெரியாமல் வியாபாரம் செய்வது எப்படி? அந்த மாது பேசுவாள் என்று நினைத்துக் கொண்டு, பேச்சுக் கொடுத்தேன். ஐஸ் கிரீம் வாங்கினால் தான் பேசுவாள் போல் இருந்தது. சுந்தரத்தின் ஆசை நிறைவேறியது. ஆனால், எதிர்பார்த்தபடி மனம்விட்டுப் பேசவில்லை. ஒரு ஐஸ் கிரீம் வாங்கினால், இரண்டு விநாடி பேசப்படும் என்ற கணக்கில்தான் அவள் பேசினாள். ஒரு வழியாக வழிக்குக் கொண்டு வந்தோம்.

அந்த மாதின் பெயர் லீ சும் மோய். ஒரு ரப்பர் தொழிற்சாலையில் வேலை பார்த்தாளாம். பிரச்னை தோன்றியதால் வேலையிலிருந்து விலக நேர்ந்ததாம். ''அப்படி என்ன பிரச்னை வந்தது?'' என்று நான் கேட்டேன்.

''அதை மட்டும் கேட்காதீர்கள்'' என்று கூறினாள் லீ சும் மோய்.

அவள் சொல்லா விட்டாலும் கொஞ்சம் தெரிந்து கொள்ள முடிந்தது. சில வருஷங்களுக்கு முன் லீ கம் மோய் அழகியாக இருந்திருக்க வேண்டும்.

''உங்கள் கணவர் இருக்கிறார் அல்லவா?'' என்று நான் கேட்ட போது, அந்த மாதின் முகம் இருண்டது.

''இருந்தால் என்ன, இல்லாவிட்டால் என்ன, எல்லாம் ஒன்றுதான்'' என்று புகைந்தாள்.

பிறகு அந்த மாதே சொன்னாள்:

''நன்றாகத்தான் வாழ்க்கையை ஆரம்பித்தோம். கணவரின் போக்குப் பிடிக்கவில்லை. சண்டை சச்சரவு ஏற்பட்டுக் கொண்டே இருந்தது. ஒத்துப் போக முடியவில்லை. விவாகரத்து செய்து கொண்டோம்.''

லீ கம் மோய்க்கு மூன்று குழந்தைகள் இருக்கிறார்கள். மூத்த பெண்ணுக்குப் பதினாறு வயது.

''மூன்று குழந்தைகளும் படிக்கிறார்கள். செலவு அதிகரித்துக் கொண்டே போகிறது. நான் அதற்கேற்றபடி சம்பாதித்துத் தீர வேண்டும்'' என்றாள்.

''ஐஸ் கிரீம் விற்று அந்த அளவுக்குச் சம்பாதிக்க முடியுமா?''

''இப்போதைக்கு இதை நம்பித்தான் இருக்கிறேன். இன்றைய தேவைக்கு இது போதும். நாளைக்கு எப்படியோ? திட்டமிட்டுத்தான் வாழ்க்கையை நடத்துகிறேன். மூத்த பெண்ணுக்கு வயது வந்துவிட்டது. அவளுக்கு ஏதாவது செய்தாக வேண்டும். என்னைப் போல் அவள் ஆகிவிடக் கூடாது. இதுதான் என் கவலை'' என்று சொன்னபோது, கண் கலங்கினாள். சோகம் முகத்தில் சூழ்ந்தது.

'எவ்வளவு நல்ல தாய்' என்று நினைத்துக் கொண்டேன். 'நம் நாட்டிலும் இப்படித்தானே. குழந்தைகள் நன்றாக வாழ வேண்டும் என்று எந்தத் தாய் நினைக்கவில்லை? எல்லா தாய்மார்களும் ஒரே ரகம்' என்று எனக்குள் சொல்லிக் கொண்டேன்.

''எனக்கு நம்பிக்கையிருக்கிறது. என் குழந்தைகளை எப்பாடுபட்டும் ஆளாக்கிவிடுவேன். இந்தத் தொழிலைத்தான் செய்ய வேண்டும் என்று இல்லை. கடினமாக உழைக்க நான் தயாராக இருக்கிறேன்'' என்றாள் லீ கம் மோய்.

மன நெகிழ்ச்சியுடன் புறப்பட்டேன் நான்.

ஈப்போ அழகிய ஒரு நகரம். நல்ல நகர திட்ட அமைப்பு. பழைய நகரம், புது நகரம் என்று இரண்டாகப் பிரித்திருக்கிறார்கள். பசுமையான நகரம். ஈப்போ தமிழன்பர்கள் உற்சாகமான வரவேற்பு தந்தார்கள். மலேசியா-சிங்கப்பூர் ஏர்லைன்ஸ் ஏற்பாடு செய்திருந்த ஸிட்டி ஹோட்டலில் தங்கியிருந்தேன்.

கோலாலம்பூரில் பார்த்ததைப் போலவே ஈப்போவிலும் தமிழ் முகங்களை அதிகமாகவே பார்த்தேன். இலங்கையிலிருந்துவந்து குடியேறிய தமிழ்க் குடும்பங்களும் ஈப்போவில் அதிகம். அவர்கள் நல்ல நிலையில்

இருக்கிறார்கள். ஈப்போ நகரசபை, மக்கள் முற்போக்குக் கட்சி (Peoples Progressive Party) என்னும் கட்சியின் கட்டுப்பாட்டில் இருப்பதாகச் சொன்னார்கள். அந்தக் கட்சியின் தலைவர் திரு. சீனிவாசகம். சீனிவாசகம் சகோதரர்களில் இளையவர் சில ஆண்டுகளுக்கு முன்பு காலமாகி விட்டார். தமிழ் செட்டில்மெண்டும், தேவாலயமும் இருக்கின்றன.

ஈப்போவில் சற்று மாறுபட்ட ஒரு காட்சியைப் பார்த்தேன். சீக்கியர் மாடுகளை ஓட்டிக் கொண்டு சென்று கொண்டிருந்தார்கள். எல்லாம் கறவை மாடுகள். டிரைவரிடம் இதுபற்றிக் கேட்டேன்.

''மாட்டுப் பால் வேண்டுமானால் சிங்குகளின் தயவு தேவை, சார். சீக்கியர்கள்தான் பால் சப்ளை செய்கிறார்கள். நம்மோடு பழகிப் பழகி இவர்களும் நன்றாகத் தமிழ் பேசுகிறார்கள்'' என்று அவர் சொன்னார்.

தமிழும் பேசுகிற இந்த சிங்குகளை மலேசியாவில் 'வங்காளி' என்று சொல்கிறார்கள். இவர்கள் மலேசியாவைத் தாயகமாக்கிக் கொண்டு வளமாக வாழ்கிறார்கள். அங்கு ஒரு கால், இங்கு ஒரு கால் என்று இருப்ப தில்லை.

''ஈப்போவில் ஆச்சரியமான ஒன்றைக் காட்டப் போவதாகச் சொன்னீர்களே, எப்போது காட்டப் போகிறீர்கள்?'' என்று டிரைவரைக் கேட்டேன்.

''கண்டிப்பாகக் காட்டுகிறேன், சார். ஆனால் இப்பொழுதல்ல, கொஞ்சம் பொறுத்திருங்கள். ரப்பர் எஸ்டேட்டுக்குப் போய் வந்த பிறகு காட்டுகிறேன்'' என்றார்.

டோவன்பி எஸ்டேட்டுக்குச் சென்றேன். பெரிய ரப்பர் தோட்டம் அது. நிர்வாகி திரு. பெர்குஸன் வரவேற்றார். அவர் ஆங்கிலேயர்.

ரப்பர் மரத்தின் தன்மை, பால் வெட்டும் முறை, ரப்பரைப் பதப்படுத்துவது, ஏற்றுமதி செய்வது, தொழிலாளர் நிலைமை-இப்படி ஒன்றுவிடாமல் விளக்கினார் அவர். பயனுள்ள அனுபவமாக இருந்தது.

ரப்பர் தோட்டத்தை முதலில் பார்க்கும்போது ஒரு வேலையும் நடக்காதது போல் தெரிகிறது. உண்மையில் கட்டம் கட்டமாக வேலைகள் நடப்பதைக் கவனித்துப் பார்த்தால்தான் தெரியும். தோட்டத்தில் எல்லா நேரத்திலும் தொழிலாளிகளைப் பார்க்க முடியாது. அதிகாலையி லேயே பால் வெட்டு நடத்திவிட்டுப் போகிறார்கள். பால், கிண்ணத்தில் வடிந்து கொண்டிருக்கிறது. மறுபடியும் வந்து ரப்பர் பாலைச் சேகரிக் கிறார்கள்.

பால் வெட்டும் பெண்கள் பலரைச் சந்தித்தேன். வீடுகளிலிருந்து பால் வெட்டுவதற்காக சைக்கிள்களில் பெண்கள் வருவதைப்பார்த்தேன்.

''மிஸ்டர் மணியன், என் வீட்டிற்கு வாருங்கள்'' என்று அழைத்தார் திரு. பெர்குஸன். நான் மறுக்கவில்லை. நடந்தபடியே பேசிக் கொண்டு சென்றோம். ரப்பர் தொழிலைப் பற்றி, மலேசியாவின் பொருளாதாரத் தைப் பற்றி,அரசியல் உறுதியைப் பற்றி- சுவாரஸ்யமாக அவர் பேசினார்.

''சார், இங்கே ஒரே பட மேடையிலே மூணு படம் விளையாடுது. தமிழ், இந்தி, சீனம் மூணும் விளையாடுது'' என்றார் டிரைவர்.

சினிமா தியேட்டரைப் பட மேடை என்று மலேசியத் தமிழர்கள் சொல்கிறார்கள். படம் விளையாடுகிறது என்கிறார்கள்.

பெட்ரோல் போடுவதற்காக ஒரு பங்கில் காரை நிறுத்தினர். பெட்ரோலுக்குப் பணம் கொடுத்ததும் ஒரு கப்பை (Cup) இலவசமாகக் கொடுத்தார்கள்.

''பரவாயில்லையே, ஃப்ரீயாகக் கொடுக்கிறார்களே!'' என்றேன்.

''இது என்ன பிரமாதம்! பெட்ரோல் போட்டால் கிஸ் (Kiss) உங்கள் நாட்டில் கிடைக்குமா?கோலாலம்பூரில் அது கிடைத்துக் கொண்டிருந்தது, சார். பெட்ரோல் போட வருகிறவர்களுக்கு இளம் பெண்கள் முத்தம் கொடுத்துக் கொண்டிருந்தார்கள்'' என்று டிரைவர் சொன்னார்.

''நான் கேள்விப்பட்டேன்'' என்று அவரிடம் கூறினேன்.

உண்மைதான். விற்பனை உத்தியாக பெட்ரோல் போட வருகிறவர்களுக்கு இளம் பெண்கள் முத்தம் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். இதனால் அவர்கள் எதிர்பார்த்த பலன் கிடைக்கவில்லை. பயத்தினாலும், கூச்சத்தினாலும் பலர் அந்த பெட்ரோல் பங்க் பக்கமே காரை எடுத்துச் செல்லவில்லை. விற்பனை குறைந்து போனதால் 'பெட்ரோல் முத்த'மும் நின்று போயிற்று.

ஓட்டல் வாசலில் காரை நிறுத்தினர் டிரைவர்: பெயர் கிருஷ்ண பவன்.

''இதைத்தான் முக்கியமான இடம் என்று சொன்னீர்களோ?'' என்று டிரைவரிடம் கேட்டேன்.

''கொஞ்சம் பொறுங்கள் சார். நான் சொல்லிய இடத்திற்கு இனி மேல்தான் போகப் போகிறோம். முதலில் கோப்பியைச் சாப்பிடுங்கள்'' என்றார் டிரைவர்.

மறுபடியும் கார் புறப்பட்டது.

''அதோ தெரிகிறது பாருங்கள்.''

''ஒன்றும் தெரியவில்லையே.''

''பாலம் தெரியவில்லையா?''

''ஓ...... அதைச் சொல்கிறீர்களா?'' என்றேன்.

அவாஸ் (Awas) என்று எழுதப்பட்டிருந்தது. அந்த எச்சரிக்கையையும் தாண்டி கார் நகர்ந்தது. பாலத்தில் எழுதப்பட்டிருந்ததை டிரைவர் காட்டினார். அவர் கூறி வந்த ஆச்சரியத்தைப் பார்த்தேன். அண்ணாவின் பெயர் அங்கே எழுதப்பட்டிருந்தது.

''இது அண்ணா பாலம், சார்'' என்றார் டிரைவர்.

'ஜபாடா சி. என். அண்ணாதுரை' என்று எழுதப்பட்டிருந்தது. மறைந்த தமிழக முதல்வரின் பெயரில் ஈப்போவில் ஒரு பாலம் இருக்கிறது என்றால் வியப்படையாமல் இருக்க முடியுமா? நான் வியந்து போய் உட்கார்ந்திருந்தேன். ''மக்கள் முற்போக்குக் கட்சியின் தலைவரான சீனிவாசகம் சகோதரர்களின் முயற்சியினால் வைக்கப்பட்ட பெயர் இது'' என்று டிரைவர் சொன்னார்.

# 38

பினங்கு தொழிற் சங்கத் தலைவர் மிஸ்டர் டேவிட்

“உலகம் சுற்றி யிருக்கிறீர்களே, கார்களும் லாரிகளும் கடலைக் கடந்து செல்வதைப் பார்த்திருக்கிறீர்களா, சார்?'' என்று கேட்டார் டிரைவர்.

''புதிர் போடுகிறீர்களா?'' என்றேன் நான்.

''இப்பொழுது காரோடு மிதக்கப் போகிறோம்'' என்று சொல்லி விட்டுச் சிரித்தார் அவர்.

அவர் சொன்னது உண்மைதான். ஈப்போவிலிருந்து காரில் புறப்பட்டுப் பினங்குக்கு வந்து கொண்டிருந்தோம். பினங்கு ஒரு தீவு. ஈப்போவிலிருந்தோ, மற்ற நகரங்களிலிருந்தோ பினங்குக்கு வருபவர்கள் கடலைத் தாண்டியாக வேண்டும். இரண்டு மைலுக்கு மேல் இருக்கும். பட்டர்வொர்த் நகரிலிருந்து, பினங்குக்கு அடிக்கடி ஃபெர்ரி (Ferry) சென்று கொண்டிருக்கிறது. அந்த ஃபெர்ரி சர்வீசை அரசாங்கமே நடத்துகிறது.



பிரயாணிகளையும், வாகனங்களையும் ஏற்றிக் கொண்டு ஃபெர்ரிகள் அநாயாசமாகப் போவதும் வருவதுமாக இருக்கின்றன. கப்பல் பயணம் செய்திராதவர்களுக்கு இது ஒரு புதிய அனுபவமாக இருக்கும். எனக்கு இது முதல் அனுபவம் அல்ல. கவ்லூனிலிருந்து ஹாங்காங்கிற்கு ஃபெர்ரியில் பயணம் செய்திருக்கிறேன். ஹாங்காங்கிலும் இதே மாதிரி சர்வீஸ் உண்டு. கேரளத்திலும் இந்த முறை இருந்திருக்கிறது.

ஈப்போவிலிருந்து பினங்கிற்கு பிளேனில் போகாமல், காரிலேயே சென்றது எவ்வளவு நல்லதாகப் போயிற்று என்று, ஃபெர்ரியைக் கண்டதும் நினைத்துக் கொண்டேன். கார்களும் லாரிகளும் ஃபெர்ரியில் கீழ்த் தளத்தில் நிறுத்தப்படுகின்றன. பிரயாணிகளுக்கு மேல்தளத்தில் இடம். இப் பயணத்திற்குக் கட்டணம் உண்டு. பினங்கு தீவுக்கு ஒரு பாலம் அல்லது டன்னல் பாதை அமைக்க வேண்டும் என்ற உத்தேசம் அரசாங்கத்திற்கு இருப்பதாகச் சொன்னார்கள்.

'சிங்கப்பூரில் சம்பாதித்து, பினங்கில் சந்தோஷமாக இருந்துவிட்டு, மலாக்காவில் மண்டையைப் போட வேண்டும்' என்பது ஒரு பழமொழியாம்! இது எந்த அளவுக்குப் பொருத்தமாக இருக்கிறது என்பது பினங்கைப் பார்த்ததும் புரிந்து கொண்டேன். சிங்கப்பூரைப் போலவோ, கோலாலம்பூரைப் போலவோ பினங்கில் அத்தனை சுறுசுறுப்பு இல்லை. ஆனால், சுக வாசத்துக்கு அற்புதமான இடம். மலைவாசஸ்தலம்.

ஃபெர்ரியிலிருந்து இறங்கியதுமே, தமிழர்களின் நடமாட்டத்தைத் தான் முதலில் பார்த்தேன்.

'பினங்கில் என்னென்ன பார்த்தீர்கள்? மலை ரயிலில் ஏறினீர்களா? பாம்புக் கோயிலுக்குப் போனீர்களா? ரிசர்வாயரைப் பார்த்தீர்களா? பொட்டானிகல் கார்டனுக்குப் போகவில்லையா?''—இப்படிச் சரமாரியாகப் பலரும் என்னைக் கேட்க ஆரம்பித்து விட்டார்கள். இடங்களைப் பார்ப்பதைவிட, இதயங்களோடு பேசுவதுதான் எப்பொழுதுமே எனது பயண நோக்கமாக இருந்திருக்கிறது. ''பார்த்தீர்களா?'' என்று கேட்பவர்களுக்குப் ''பார்த்தேன்'' என்று பதில் சொல்வதற்காகவாவது முக்கியமான இடங்களைப் பார்த்து விடுவது வழக்கம். மக்களைச் சந்தித்துப் பேசுவதற்கு முன்பு, நகரைச் சுற்றிப் பார்த்து விடலாம் என்று புகைப்படக்காரர் சுந்தரத்துடன் புறப்பட்டுச் சென்றேன்.

காரில் போகும்போது சுந்தரம் அசை போட்டுக் கொண்டிருந்தார்.

''எதைப் போட்டு மெல்கிறீர்கள்?'' என்றேன்.

''பினங்கு சார்.''

''பினங்கையே சாப்பிட்டு விடுவேன் என்கிறீர்களா?''

''ஆமாம் சார்! பினங்கைத்தான் ருசி பார்த்துக் கொண்டிருக்கிறேன். பிரமாதம்! போகும்போது கொஞ்சம் வாங்கிக் கொண்டு போகலாமா, சார்?'' என்றார் சுந்தரம்.

அவர் மென்று கொண்டிருந்தது பாக்கு. பாக்குக்குப் பெயர்தான் பினங்கு. பாக்கு மரங்கள் நிறைந்திருந்ததால், பினங்கு என்று அந்த

இடத்திற்குப் பெயர் வைத்தார்களாம். பாக்குத் தீவு என்னும் அர்த்தத்தில் 'பூலோ பினங்கு' என்று இப்பொழுது அழைக்கிறார்கள். பெயருக்கு ஏற்றபடி பாக்கு ஏற்றுமதி பினங்கிலிருந்து நடைபெறுகிறது.

பினங்குக்குப் போகும் தமிழர்களின் காதில் கண்டிப்பாக விழும் பெயர்கள்: ஆறுமுகம் பிள்ளை, ரெங்கசாமி பிள்ளை, டேவிட்... இன்னும் பல தமிழ்ப் பிரமுகர்கள் இருக்கிறார்கள். எம்.எஸ்.ஏ-யின் விருந்தாளியான நான், பினங்கில் ரெங்கசாமி பிள்ளையின் விருந்தாளியாக இருக்க நேர்ந்தது.

''நாங்கள் இங்கு இருக்கும்போது, ஓட்டலில் நீங்கள் தங்குவதாவது?'' என்று சொல்லியபடி தம் வீட்டிற்கு அழைத்துப் போய் விட்டார் அவர். எல்லோருக்கும் அவர் 'ரெனு'தான்! 'வள்ளல் ரெனு' என்றும் சொல்கிறார்கள். நல்ல காரியங்களுக்குத் தாராளமாக உதவிகளைச் செய்ததற்காக, இவருக்குக் கிடைத்த பட்டம் 'வள்ளல்'!

ரெங்கசாமி பிள்ளையின் அண்ணன் ஆறுமுகம் பிள்ளை. ஆனால், இருவரும் 'இரு துருவங்க'ளாக இப்போதைக்கு இருக்கிறார்கள். ரெங்கசாமி பிள்ளையின் விருந்தாளியாக இருந்து கொண்டே ஆறுமுகம் பிள்ளையையும் நான் சந்தித்தேன்.

இளம் வயதில் இருவரும் கப்பலேறி வந்தவர்கள். உழைப்பால் உயர்ந்திருக்கிறார்கள். ராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள திருப்பத்தூர், இவர்களின் பிறந்த ஊர். தொடக்கத்தில் கொடுத்து வாங்கும் தொழிலைச் செய்து, பிறகு ரப்பர் தோட்டங்களை வாங்கி, தோட்டத் தொழிலதிபர்களாக மாறியவர்கள் இவர்கள்.

''உங்கள் அண்ணனைப் பார்க்கப் போகிறேன்!'' என்று ரெங்கசாமி பிள்ளையிடம் நான் சொன்னபோது, அவர் புன்னகை செய்தார்.

''பார்த்துவிட்டு வாருங்கள். காரை எடுத்துக் கொண்டு போகிறீர்களா?'' என்றார்.

''நீங்கள்தான் வரமாட்டீர்கள்; உங்கள் பையனையாவது அழைத்துப் போகட்டுமா?'' என்றேன்.

''அவன் இஷ்டப்பட்டால் அழைத்துக் கொண்டு போகலாம்'' என்று சாவதானமாகச் சொன்னார் ரெங்கசாமி பிள்ளை.

பையனை வழிக்குக் கொண்டு வர முடியவில்லை. காரில் வந்து ஆறுமுகம் பிள்ளையின் வீட்டை மட்டும் காட்டும்படி சொல்லி அழைத்துச் சென்றேன். ரெங்கசாமி பிள்ளையின் மைத்துனரே காரை ஓட்டி வந்தார்.

''தம்பி, பெரியப்பாவைப் பார்க்கலாம். இறங்கி வா!'' என்றேன். பையன் காரைவிட்டு இறங்கவில்லை. வர மறுத்துவிட்டதால் நான் மட்டும் ஆறுமுகம் பிள்ளையின் வீட்டிற்குள் பிரவேசித்தேன்.

தோற்றத்திலேயே மிகக் கண்ணியமானவர் அவர். வாழ்க்கையில் நிறைய அனுபவம் பெற்றவர் என்பதைப் பார்த்தவுடன் புரிந்து கொள்ள முடிந்தது. தோட்டத் தொழிலைப் பற்றி, நாட்டின் அரசியலைப் பற்றி, கல்வியைப் பற்றிப் பல விஷயங்களை அவர் பேசினார்.

''1929-ல் பினங்குக்கு அரை டிக்கெட் பாசஞ்சராகக் கப்பலேறினேன். லேவாதேவித் தொழிலில் சேர்ந்தேன். தோட்டங்களை வாங்கி விற்கும் தொழிலில் ஈடுபட்டேன். இப்பொழுது பல ஏக்கர் ரப்பர் தோட்டம் இருக்கிறது'' என்று ஆறுமுகம் பிள்ளை சொன்னார்.

இவருடைய எஸ்டேட்டுகளில் வேலை பார்ப்பவர்களில் தமிழர்களே பெரும்பகுதியினர். ரப்பர் ஏற்றுமதித் தொழிலையும் செய்து வருகிறார்.

''நீங்கள் அரசியல்வாதியாகவும் இருக்கிறீர்கள் என்று கேள்விப் பட்டேன்'' என்றேன் நான்.

''ஆமாம்! மிஸ்டர் மணியன், இங்கே நடப்பது கூட்டணி அரசாங்கம். இந்தியர்களின் கட்சியான மலேசிய இந்தியர் காங்கிரஸ், அதில் ஓர் அங்கம். இந்த ம. இ. கா.வில் எனக்குத் தொடர்பு உண்டு!''

ஆறுமுகம் பிள்ளை விஷயங்களை அடக்கமாகவே சொல்கிறார். திருப்பத்தூரில் 'ஆறுமுகம் பிள்ளை சிதையம்மாள் கல்லூரி'யை இவர் நடத்துகிறார். பள்ளிக்கூடத்தையும் நடத்துகிறார். மலேசியாவில் திருமுறை மாநாடு நடத்தி யிருக்கிறாராம்.

ஆறுமுகம் பிள்ளையுடன் நான் உரையாடிக் கொண்டிருந்தபோது பல முறை சீனர்களை அவர் பாராட்டுவதை உணர்ந்தேன்:

''சீனர்களிடமிருந்து சிலவற்றை நாம் கற்றுக் கொள்ள வேண்டும். அவர்களைப் போல் உழைக்க வேண்டும். ஒரு குடும்பத்திலுள்ள அத்தனை பேரும் வேலை செய்வார்கள். இதனால் அவர்களுக்குப் பொருளாதார சிரமங்கள் இருப்பதில்லை'' என்று அவர் சொன்னார்.

''மலேசியத் தமிழர்கள் அந்த அளவுக்கு உழைக்கவில்லை என்கிறீர்களா?'' என்றேன்.

''இன்னும் நன்றாகப் பாடுபட வாய்ப்பு இருக்கிறது'' என்று ஆறுமுகம் பிள்ளை சொன்னார்.

''பூமி புத்ரர்களான மலாய்க்காரர்கள் எப்படி?''

''அவர்களிடம் சிக்கனமும் சேமிப்பும் இல்லை. அதிகமாகச் செலவு செய்கிறார்கள். இருப்பதை அனுபவித்துவிட வேண்டும் என்ற போக்கு. இதனால் சேமித்து வைப்பதில்லை'' என்று அவர் கூறினார்.

ஆறுமுகம் பிள்ளையிடம் பேசி விட்டு, ரெங்கசாமி பிள்ளையின் வீட்டிற்குத் திரும்பியபோது சாப்பாடு தயாராக இருந்தது.

''போஜனக் கொறடா கொண்டு வாப்பா'' என்று சமையல்காரரிடம் சொன்னார். 'கொறடா' என்றதும், எனக்கு ஒருவித அச்சம். அது என்னவாக இருக்கும் என்று நான் யோசித்துக் கொண்டிருந்த சமயம், சமையல்காரர் ஒரு பாட்டிலுடன் வந்தார். என்ன பாட்டிலாக இருக்கும் என்று எச்சரிக்கையுடன் கவனித்தேன்.

''ஐயாவுக்குப் போஜனக் கொறடா போடு'' என்றார் ரெங்கசாமி பிள்ளை.

''வேண்டாம், வேண்டாம்'' என்றேன் நான் தயக்கத்துடன்.

''அது இல்லாமல் நாங்கள் சாப்பிடுவதில்லை'' என்று அவர் சொன்னார்.

என் இலையில் போஜனக் கொறடா விழுந்தது. பார்த்த பிறகு எனக்குப் பயம் நீங்கியது. நான் கற்பனை செய்தபடி ஒன்றும் இல்லை. ஊறுகாயைத்தான் மலேசியத் தமிழர்கள் போஜனக் கொறடா என்கிறார்கள். அந்த ஊறுகாய் பாட்டிலில் போஜனக் கொறடா என்றே அச்சிடப்பட்டிருந்தது. ''போஜனத்தை உள்ளே தள்ளுகிறது அல்லவா? அதனால் போஜனக் கொறடா என்று பெயர் வைத்துவிட்டார்கள்'' என்று ரெங்கசாமி பிள்ளை விளக்கம் கொடுத்தார்.

''அப்பா, பெரியப்பாவைப் பார்த்தேன். இளைத்துப் போயிருக்கிறார்'' என்று பையன் சொன்னதும், ரெங்கசாமி பிள்ளை ஒரு நிமிஷம் அசந்து போய்விட்டார்.

''எப்படி இருக்கிறார்...? ரொம்ப இளைத்து விட்டாரா? நீ நல்லா பார்த்தியா?'' என்று அக்கறையுடன் கேட்க ஆரம்பித்து விட்டார் அவர். என்னதான் சண்டை இருந்தாலும், ரத்த பாசம் அதையெல்லாம் மீறி விடுகிறதே!

**சி**ங்கப்பூரிலும், மலேசியாவிலும் பல அரசியல்வாதிகளை நான் சந்தித்தேன். அவர்களில், மனம் விட்டுப் பல கருத்துக்களை எடுத்துச் சொன்ன அரசியல்வாதி பினங்கைச் சேர்ந்த எம்.பி., திரு. டேவிட் ஒருவர்தான். அவர் எத்தனையோ கருத்துக்களைச் சொன்னார். அவற்றில் எதையெல்லாம் எழுதலாம், எவற்றை எழுதக் கூடாது என்பது வேறு விஷயம். ஆனால் அவர் சொன்ன விஷயங்களின் மையம், ஜனநாயகத்தைப் பற்றியது.

திரு. டேவிட் ஒரு எம். பி. பிரபலமான தொழிற் சங்கத் தலைவர். 'மக்கள் தொண்டன்' என்று இவரை அழைக்கிறார்கள். மலேசியப் பார்லிமெண்டின் உறுப்பினராகவும், சிலாங்கூர் மாநில சட்டமன்ற உறுப்பினராகவும் இருந்து வருகிறார். போக்குவரத்துத் தொழிலாளர் சங்கத்தின் பொதுச் செயலாளரும் திரு. டேவிட்தான்.

''என்னிடம் பேசுவதற்கே பலர் பயப்படுகிறார்கள். நீங்கள் துணிந்து வந்திருக்கிறீர்கள்'' என்று சொல்லிவிட்டுச் சிரித்துக் கொண்டார் அவர்.

''நீங்கள் எதிர்க்கட்சி உறுப்பினர் என்பது எனக்குத் தெரியும். எதிர்க்கட்சியைச் சேர்ந்த ஓர் அரசியல்வாதியைச் சந்திக்க வேண்டும் என்ற விருப்பத்துடன்தான் வந்தேன். இதில் பயப்படுவதற்கு என்ன இருக்கிறது?'' என்று நான் கேட்டேன்.

''உங்கள் நாடு மாதிரி எங்கள் நாட்டை நான் நினைக்கவில்லை. இந்தியாவில் இருக்கிற மாதிரி இங்கேயும் ஜனநாயகம் வரவேண்டும் என்றுதான் நான் விரும்புகிறேன். உலகில் இந்தியாவுக்கு இணையான ஜனநாயக நாடு வேறெங்கும் இல்லை'' என்று அவர் சொன்னபோது, பெருமிதத்தால் நிமிர்ந்து உட்கார்ந்தேன்.

''ஆனால், இந்தியாவின் ஒருமைப்பாட்டுக்கு இன்னும் பல காரியங்களைச் செய்தாக வேண்டும். ஒருமைப்பாட்டு அடையாளங்களைச் சில விஷயங்களில் காண முடியவில்லை'' என்றார் டேவிட். அரசியல்வாதி என்ற முறையிலும், தொழிற்சங்கவாதி என்ற முறையிலும் அவர் பல முறை இந்தியாவுக்கு வந்து போயிருக்கிறாராம்.

''உதாரணத்திற்கு ஏதாவது சொல்லுங்கள்'' என்றேன் நான்.

''போலீஸ்காரர்களை எடுத்துக் கொள்ளுங்கள். தமிழ் நாட்டில் போலீஸ்காரர்களுக்கு ஒரு மாதிரி உடை; கேரளத்தில் வேறு மாதிரி உடை. இப்படி ஒவ்வொரு ஸ்டேட்டிலும் வெவ்வேறு சீருடைகள். இதில் ஒருமைப்பாடு எங்கே இருக்கிறது? எல்லாருமே இந்தியப் போலீஸ்காரர்கள்தானே? மாநில அரசுகள் சீருடை விஷயத்தில் ஏன் ஒருமையை ஏற்படுத்தக் கூடாது?'' என்று அவர் கேட்டார்.

டேவிட்டின் கேள்வி பொருத்தமானதாகவே எனக்குப் பட்டது. இது மாதிரிப் பல விஷயங்களைப் புதிய கோணங்களிலும் அவர் பேசினார்.

''எழுத்துச் சுதந்திரம், பேச்சு, கருத்துச் சுதந்திரம் எல்லாமே இந்தியாவில் உண்டு. நாடு முன்னேற வேண்டுமானால், இந்தச் சுதந்திரங்கள் அவசியம். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று டேவிட் கேட்டார்.

''நீங்கள் சொல்லும் அத்தனை சுதந்திரங்களும் எங்களுக்கு முழுமையாக அளிக்கப்பட்டிருக்கின்றன'' என்றேன்.

''தமிழ் நாட்டில் திராவிட முன்னேற்றக் கழக அரசாங்கம் இந்தச் சுதந்திரங்களுக்குத் தடையாக இருக்கிறதா?'' என்று டேவிட் வினவினார்.

''இல்லை. எந்தப் பத்திரிகையும் சுதந்திரமாக எதையும் எடுத்துச் சொல்ல அரசு அனுமதிக்கிறது. எங்களுக்குச் சிரமம் எதுவும் இல்லை'' என்று சொன்னேன்.

''ஜனநாயகம் மட்டுமல்ல, ஜெயில் கூட இந்தியாவில் நன்றாக இருக்கிறது'' என்றார் டேவிட்.

''ஜெயில் அனுபவம் உங்களுக்கு அதிகம் போல் தெரிகிறது.''

''நெருக்கமான உறவு என்று வைத்துக் கொள்ளுங்களேன். அடிக்கடி அழைப்பு வரும். அரசியல் கைதியாக அடைத்து வைக்கப்படுவேன். உங்கள் ஊர் ஜெயில் மாதிரி இருந்தால், எங்கள் நாட்டு அரசியல் காவல் கைதிகள் விடுதலையைப் பற்றிச் சிந்திக்கவே மாட்டார்கள்'' என்று சிரித்துக் கொண்டே சொன்னார் திரு. டேவிட்.

வெளிப்படையாக அவர் சொன்ன பல விஷயங்கள் சிந்தனைக்கு உரியவையாக இருந்தன.

# 39

"'பெஸ்தா—70' பார்க்கப் போகலாமா?" என்று கேட்டார், நண்பர். எக்ஸ்போ—70 மாதிரி ஏதாவது இருக்கும் என்ற நினைப்பில், அது பற்றி விசாரித்தேன்.

"ஒரு மினி எக்ஸ்போ. பினங்கு எக்ஸ்போ. கலை, தொழில் கண்காட்சி" என்று விளக்கினர் அவர்.

பினங்கு ஜார்ஜ் டவுன் மைதானத்தில் 'பெஸ்தா—70' அரங்கை அமைத்திருந்தார்கள். அதை ஒட்டி அன்றைக்குப் பெரிய ஊர்வலம் ஒன்று நடந்தது. பினங்கு மக்கள் அனைவரும் வீதிக்கு வந்து விட்ட மாதிரி, அத்தனை பெரிய கூட்டம். தமிழர்கள், சீனர்கள், மலாய்க் காரர்கள் எல்லோருமே காணப்பட்டார்கள்.

பெஸ்தா—70 கண்காட்சியில் பிரமாதமாக ஒன்றும் இல்லாவிட்டாலும், ஒரு விஷயம் மட்டும் என்னைக் கவர்ந்தது. அதுதான் தேசிய ஒருமைப்பாடு! இதுபற்றி ரெங்கசாமி பிள்ளையுடன் சிறிது நேரம் கலந்தாலோசித்தேன். பெஸ்தா—70 பார்க்கப் போய், மே—13 பற்றிச் சிந்திக்க ஆரம்பித்து விட்டேன்.



மே—13 மலேசியர்களால் மறக்க முடியாத ஒரு நாள்! நான் பார்த்த வரையில் மலேசியாவில் எல்லா இன மக்களிடையேயும் அந்நியோன்னியம் காணப்பட்டது. இந்தச் சூழ்நிலையில் எப்படி ஒரு பயங்கரமான இனக் கலவரம் ஏற்பட்டிருக்க முடியும் என்ற கேள்வி என்னுள் இருந்து கொண்டே இருந்தது.

''மே—13 கலவரத்தைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''அது ஒரு கெட்ட கனவு. மெதுவாக அதை மறந்து கொண்டிருக் கிறோம், மிஸ்டர் மணியன்.''

''அப்படி ஒரு கலவரம் தோன்றுவதற்கு என்ன காரணம்?''

''இனக் கலவரம், அவ்வளவுதான். கம்யூனிஸ்டுகளால் தூண்டப் பட்டது என்றும் கூறினார்கள். எப்படியோ ஆயிரக்கணக்கானவர்கள் பாதிக்கப்பட்ட பிறகு கலவரம் அடங்கிப் போயிற்று. இனி, அந்த மாதிரி ஒரு பயங்கரம் நடக்காது என்று நம்புகிறோம். பல இன ஐக்கியத்திற்காக அரசாங்கம் எவ்வளவோ செய்து வருகிறது'' என்றார் ரெங்கசாமி பிள்ளை.

அவர் மட்டுமல்ல, மலேசியாவில் எல்லோருமே மே—13 போன்ற கலவரம் மீண்டும் ஏற்படக் கூடாது என்றே விரும்புகின்றனர். 1969 மே மாதம் 13-ம் தேதி ஆரம்பமான இனக் கலவரத்தில் எத்தனையோ பேர் மடிந்திருக்கிறார்கள். அப்போது பிரதமராக இருந்த துங்கு அப்துல் ரஹ்மான் இந்தக் கலவரத்தைப் பற்றி எழுதியுள்ள ஒரு புத்தகத்தைப் பார்த்தேன். கம்யூனிஸ்டுகளே இதற்குக் காரணம் என்று அவர் கூறுகிறார்.

பெஸ்தா—70 கூட்டத்தில் ஒற்றுமை உணர்ச்சியுடன் பல இன மக்களும் திரண்டு நின்றதைப் பார்த்தேன். கலவரங்களின் விளைவுகளை எல்லோருமே புரிந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை உணர்ந்து கொண்டேன். பெஸ்தா—70-ன் நோக்கம் எதுவாக இருந்தாலும், மக்களின் ஐக்கியத்திற்கு அது உதவியாக இருக்கிறது என்று எனக்குத் தோன்றியது.

ரெங்கசாமி பிள்ளை சில கோயில்களுக்கு என்னை அழைத்துச் சென்றார். ஒரு சிவன் கோயிலுக்குப் போனோம். அந்த இடத்திற்கு வந்ததும் பினங்கில் இருக்கிறோம் என்பதை மறந்து விட்டேன். நம் ஊரில் அக்ரகாரம் எப்படி இருக்குமோ, அப்படி இருந்தது அந்த வீதி.

இன்னொரு கோயில். 'இது காளியம்மன் கோயில்' என்று ரெங்கசாமி பிள்ளை சொன்னதும், எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவர் காட்டியது சீனக் கோயில்.

''இதைப் போய்க் காளியம்மன் கோயில் என்கிறீர்களே'' என்றேன்.

''ஆமாம், சீனக் காளியம்மன் கோயில். சாமிகளைப் பாருங்கள். சீனர்களுக்கும் பெண் தெய்வங்களும், தேவதைகளும் உண்டு'' என்று விளக்கத் தொடங்கினார் அவர்.

'காங்ஹாக் கியோங்' என்னும் பெயருடைய அந்தக் கோயில் 125 வருடங்களுக்கு முன் கட்டப்பட்டது என்று சொன்னார்கள்.

தெய்வங்கள் எத்தனையோ இருந்தாலும் சீன இளைஞர்களும், இளம் பெண்களும் வழிபாடுகளில் அதிகமாகக் கவனம் செலுத்தவில்லை. வான் சூ போ என்னும் இளம் பெண்ணுடன் பேசிக் கொண்டிருந்தபோது, இது பற்றிக் கேட்டேன். அவள் ஒரு மாணவி.

''மிஸ் வான், உன்னுடைய மதத்தைப் பற்றிக் கூற முடியுமா?'' என்று கேட்டேன்.

''அப்படி எதுவும் எனக்குக் கிடையாது'' என்று சர்வ சாதாரண மாகச் சொன்னாள் அந்தப் பெண்.

''சீனர்களுக்குக் கடவுள்கள் ஏராளம் என்று நான் கேள்விப் பட்டேன். பல சீனக் கோயில்களுக்கும் சென்று பார்த்தேன். மத நம்பிக்கையே இல்லை என்று நீ சொல்வது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது'' என்றேன் நான்.

''நான் மாணவி. படிப்புதான் இப்போதைக்கு எனக்கு முக்கியம். அதுதான் என்னுடைய மதம்! படிப்பைக் கொண்டுதான் எதிர்காலத்தை நான் அமைத்துக் கொள்ள முடியும். மதமெல்லாம் அப்புறம்தான்'' என்றாள் வான்.

''பொதுவாக எல்லா சீன இளம் பெண்களும் இதே மாதிரி சிந்தனை யுடையவர்களாகத்தான் இந்த நாட்டில் இருக்கிறார்களா?''

''அதைப் பற்றி நான் சொல்வதற்கில்லை. நான் இப்படி நினைக் கிறேன். வெளியுலகத்தைப் பற்றிய எண்ணமும் இந்தச் சமயத்தில் எனக்குக் கிடையாது'' என்றாள் வான் சூ போ.

''மிஸ் வான், விளையாட்டு ஏதாவது தெரியுமா உனக்கு?''

''நேரம் கிடைக்கும்போது விளையாடுவேன். டேபிள் டென்னிஸ் விளையாடுவது பிடிக்கும். நிறையப் புத்தகங்கள் படிப்பேன்.''

''சினிமாவுக்குப் போவதுண்டா?''

''அதுவும் ஒரு லிமிட்தான். இந்துஸ்தானி படங்களுக்குப் போவ துண்டு. 'வக்த்' என்ற படம் பார்த்தேன். அது நல்ல படம். மிகவும் பிடித்திருந்தது'' என்றாள் இளம் பெண் வான் சூ போ.

''எங்கிட்டுப் போறிக?'' என்று கேட்டார் சைக்கிள் ரிக்ஷாக்காரர். அவர் தமிழ் பேசுவார் என்று நான் நினைக்கவில்லை. மலாய்க்காரராக இருப்பார் என்று நினைத்தேன்.

''உங்களிடம் பேச வேண்டும் என்று நினைத்துத்தான் வந்தேன்'' என்று நான் சொன்னேன்.

''என்ன பேசப் போறிக?'' என்றார்.

அவருடைய பெயர் அபூபக்கர். ராமநாதபுர மாவட்டத்தைச் சேர்ந்தவர். குடும்பத்துடன் பினங்கில் இருக்கிறார். இரண்டு பிள்ளைகள் உண்டு.

''இந்த வண்டிக்கு என்ன பெயர் இங்கே?'' என்று கேட்டேன்.

''பேச்சா காடின்னு சொல்லுவோம். 'டிரைஷா'ன்னும் சொல்றது'' என்றார் அபூபக்கர்.

நம் ஊரிலுள்ள சைக்கிள் ரிக்ஷா மாதிரி இல்லை அது. பிரயாணிகள் முன்னால் உட்கார வேண்டும். ரிக்ஷாக்காரர் பின்னாலிருந்து 'பெடல்' செய்கிறார். இந்த டிரைஷாக்களில் சவாரி செய்வதை வெளிநாட்டு உல்லாசப் பயணிகள் மிகவும் விரும்புகிறார்கள்.

''இந்தத் தொழில் உங்களுக்குப் பிடித்திருக்கிறதா?'' என்றேன்.

''பிழைப்புக்கு ஏதாவது செய்தாக வேண்டுமே. இதுதான் எனக்குக் கை கொடுத்துக் கொண்டிருக்கிறது'' என்று அவர் கூறினார்.

''தினமும் எவ்வளவு சம்பாதிக்கிறீர்கள்?''

''ஒவ்வொரு நாள் வருமானமும் வித்தியாசப்படும். ஐந்து வெள்ளியும் கிடைக்கும், இருபது வெள்ளியும் கிடைக்கும்!''

''எந்த மாதிரிப் பிரயாணிகளை நீங்கள் விரும்புகிறீர்கள்?''

''இதில் விருப்பு, வெறுப்பு என்றெல்லாம் கிடையாது. வெளி நாட்டுப் பிரயாணிகள் கொஞ்சம் தாராளமாக நடந்து கொள்வார்கள். அவர்கள் கணக்குப் பார்த்துக் காசு கொடுப்பதில்லை. உற்சாகத்தில் கூடுதலாகவே நீட்டி விடுவார்கள். சைகோனிலிருந்து அமெரிக்க வீரர்கள் விடுமுறையைக் கழிக்க இங்கே வருவார்கள். அந்தச் சமயத்தில் பேச்சா காடிக்காரர்களுக்கு வரும்படி அதிகமாக இருக்கும்'' என்று சற்று உற்சாகத்தோடு அவர் கூறினார்.

நான் கொஞ்சம் அத்து மீறி, ''அவர்களை எங்கெல்லாம் அழைத்துக் கொண்டு போவீர்கள்?'' என்றேன்.

''அவர்கள் விரும்பும் இடங்களுக்கெல்லாம்!''

''குறிப்பாக சிலவற்றைச் சொல்லுங்கள்'' என்று வலியுறுத்தியதைப் புரிந்து கொண்ட அவர், ''எல்லா இடங்களுக்கும். அதற்குமேல் கேட்கக் கூடாது. நீங்களாகப் புரிந்து கொள்ள வேண்டும்'' என்று சட்டென்று சொல்லிவிட்டார்.

''அதையெல்லாம் நீங்கள் தவறாகக் கருதவில்லையா?'' என்று வினவினேன்.

''இதில் தப்பு என்ன இருக்கிறது? சிலரிடம் பணம் இருக்கிறது. வேறு சிலரிடம் பசியும் வறுமையும் இருக்கின்றன...'' என்று பதற்றமில்லாமல் அபூபக்கர் கூறினார்.

ஓய்வாக இருந்த நேரத்தில் ரேடியோ நிகழ்ச்சிகளைக் கேட்டேன். ரேடியோ மலேசியாவின் சில நிகழ்ச்சிகள் என்னை மெய்மறக்கச் செய்தன. எவ்வளவு தரமான நிகழ்ச்சி என்று சில சமயம் வியந்து போனேன்.

இலக்கியப் பாடல்களுக்கு இசை அமைத்து வாரந்தோறும் மலேசியா வானொலியில் ஒலிபரப்புகிறார்கள். இலக்கிய நயம் சொட்டச் சொட்ட இசையில் குழைத்து அந்தப் பாடல்கள் பாடப்படும்போது, இதயம் மலர்ந்து போகிறது. கடல் கடந்த ஒரு நாட்டில் இப்படிக் கேட்க முடிகிறதே என்று பூரித்துப் போனேன்.

வெள்ளிவீதியார் என்ற பெண் புலவர் இயற்றிய நற்றிணைப் பாடல் ஒன்றை சுசிலா திருச்செல்வம் என்பவர் ஒரு நாள் இசையுடன் பாடினார். இசையமைப்பு சிறப்பாக இருந்தது. இதயத்தைப் பிணைக்கும் வகையில் பழங்கால இலக்கியப் பாடலையும் பாட முடியும் என்பதை மலேசிய வானொலி கலைஞர்கள் மெய்ப்பித்துக் கொண்டிருக்கின்றனர் என்றே எனக்குத் தோன்றியது.

''குழந்தைக்குத் தொட்டில். படுப்பதற்குக் கட்டில். இறந்தவருக்கு...?'' என்று சொல்லியவாறு என்னைப் பார்த்தார் இளைஞர் பாலன்.

பினாங்கில் என்னைப் பல இடங்களுக்கு இவர் அழைத்துச் சென்றார்.

''தத்துவம் பேசுகிறீர்களா?'' என்றேன்.

''இல்லை, மிஸ்டர் மணியன். என் தொழிலைப் பற்றி ஒருவித சந்தேகத்தோடு கேட்டீர்கள் அல்லவா, அதற்கு விளக்கம் கூற வேண்டாமா?'' என்று அவர் சொன்னார்.

பாலன் ஒரு புதிய தொழிலைத் துவக்கப் போவதாகச் சொன்னார். அது இயல்புக்குச் சற்றே மாறிய தொழில் போல் எனக்குப் பட்டதால், அதைப் பற்றி விசாரித்தேன்.

''தொட்டில் செய்கிறார்கள், கட்டில் செய்கிறார்கள். இவை யெல்லாம் தொழில்தானே! இது மாதிரிதான் சவப்பெட்டி செய்வதும். கல்லறைக் கற்கள் தயார் செய்வதும், கல்லறைக் கல் வியாபாரம் செய்வதும் எனக்கு நல்ல தொழிலாகப் படுகிறது. அருமையான பிஸினஸ்'' என்று கூறினார் அவர்.

''இந்தத் தொழிலைத் துவக்க வேண்டும் என்ற எண்ணம் எப்படி ஏற்பட்டது?'' என்று கேட்டேன்.

''இரண்டு மூளைகளில் உதயமான யோசனை இது. நானும் ஒரு சீனருமாகச் சேர்ந்து தொழிலை ஆரம்பிக்கப் போகிறோம். இந்தியாவில், ஜெய்ப்பூரில் அருமையான கற்கள் கிடைக்கின்றன. இந்தியாவில் இருக்கும் உங்களுக்கு இது தெரிந்திருக்க வேண்டும் என்று நினைக்கிறேன். அதற்கெல்லாம் இங்கே என்ன கிராக்கி இருக்கிறது என்று தெரிந்த பிறகுதான், இந்தத் தொழிலைத் துவக்க முடிவு செய்தோம்!''

ஹாங்காங், சிங்கப்பூர், மலேசியா, இலங்கை ஆகிய நாடுகளில் தமிழர்கள் கல் வியாபாரம் செய்கிறார்கள். ஆனால், பாலன் ஆரம்பிக்கப் போகும் கல் வியாபாரம் அப்படிப்பட்டதல்ல. இது கல்லறைக் கல், அது வைரக்கல்.

''தமிழர்கள் எதற்கெடுத்தாலும் உணர்ச்சி வசப்படுவது எனக்குப் பிடிக்கவில்லை. பல சந்தர்ப்பங்களில் பார்த்திருக்கிறேன்'' என்று குறைப் பட்டுக் சொண்டார் பாலன்.

''குறை சொல்ல வேண்டும் என்று நீங்கள் நினைப்பதாகத் தெரிகிறது'' என்றேன் மெதுவாக.

''ஒரு தலைவர் இறந்து போகிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். எல்லாமே முடிந்து போய்விட்டது என்று நினைக்கிற மாதிரி ஒரேயடியா கக் கண்ணீர்விட ஆரம்பித்து விடுகிறார்கள். உலகமே அவர்தான் என்ற நினைப்பு போலிருக்கிறது. உண்மையில் உலகத்தைப் புரிந்து கொள்ளாத தால் ஏற்படக்கூடிய பலவீனம் அது.''

''மற்ற நாடுகளில் மக்கள் அப்படி இல்லை என்று நினைக்கிறீர்களா?''

''இல்லை என்று நான் சொல்வேன். கென்னடி இறந்து போனார். அதற்காக அமெரிக்கர்கள் துக்கத்தில் ஆழ்ந்து போய்விடவில்லை. புதிய சூழ்நிலைக்குத் தயாரானார்கள். கென்னடிக்காக சவப்பெட்டி தயார் செய்யப்பட்டது. சவப் பெட்டியை எடுக்கப் போன போது, அதைச் செய்தவன் என்ன சொன்னான் தெரியுமா? 'பணத்தைக் கொடுத்துவிட்டு பெட்டியை எடுத்துச் செல்லுங்கள்' என்றான். அவன் வியாபாரி. வியா பாரம் வேறு, உணர்ச்சி வேறு. இந்த மாதிரி மனப்பக்குவம் இருந்தால் தான் உருப்பட முடியும். எடுத்ததற்கெல்லாம் உணர்ச்சி வசப்பட்டுக் கொண்டிருந்தால் முன்னேறவே முடியாது'' என்று சரமாரியாகப் பாலன் பேசிக் கொண்டிருந்தார்.

'இவர் ஒரு கேரக்டர்' என்று நான் நினைத்துக் கொண்டேன்.

40

**பினாங்கு பாம்புக் கோயிலில் உள்ள பாம்பைப் படம் எடுக்கிறார் ஒரு டூரிஸ்ட்!**

“சும்மா தொட்டுப் பாருங்கள் சார்” என்றார் பக்கத்தில் நின்றிருந்த நண்பர்.

எனக்கு நடுக்கம்.

“என்ன யோசிக்கிறீர்கள்? புடலங்காயைத் தொடுவீர்களா, மாட்டீர்களா? அது மாதிரிதான் இதுவும். இந்தப் பாம்புகள் கடிப்பதில்லை. பரம சாதுக்கள்” என்றார் அவர்.

புகைப்படக்காரர் சுந்தரத்தைப் பார்த்தேன். அவர் எனக்கு மேல் பயந்து போய் இருந்தார். நாங்கள்தான் இப்படி. வெளிநாட்டு டூரிஸ்டுகள் பாம்புகளைத் தொட்டுத் தொட்டுப் பார்த்தார்கள். சிலர் தோளில் தூக்கிப் போட்டுக் கொண்டார்கள். ஒரே வேடிக்கையாக இருந்தது.

பினாங்கு பாம்புக் கோயிலை ஒருமுறை பார்த்துவிட்டு வந்தால், பாம்பு என்றதும் பயந்து ஓடுகிறவர்களுக்கும் பயம் தெளிந்துபோய்விடும்.

எத்தனைவிதமான பாம்புகள்! கிளைகளைச் சுற்றிக் கொண்டு தியான நிலையில் பல பாம்புகள். பெரிய பெரிய மலைப் பாம்புகள் வேறு. தப்பித் தவறித் தூணிலோ, சுவரிலோ, கதவிலோ கை வைத்து விட்டால் பாம்புதான்.



''இவை கடிக்காது என்கிறீர்களே, ஏன்?'' என்று கேட்டேன்.

''இந்த இடத்தின் தன்மை அப்படி. இது வெறும் பாம்புப் பண்ணை அல்ல. பூஜிக்கப்படும் இடம். ஏதோ ஒரு சக்தி இருக்கிறது. அதனால் தான் இந்தப் பாம்புகள் சாதுக்களாக இருக்கின்றன'' என்று அந்த உள்ளூர் நண்பர் சொன்னார்.

''எங்கள் நாட்டிலும் இப்படித்தான். பாம்புகளுக்குப் பால் வைக்கும் பழக்கம் இருக்கிறது. நாகராஜன் என்று உயர்வாக மதிக்கிறோம். அரசமரத்தடியில் பாம்புச் சிலை வைக்கப்படுகிறது. நம்பிக்கைகள் எல்லா நாட்டுக்கும் பொதுவானவைதானே'' என்றேன் நான்.

''சீனர்களுக்கு என்னவோ பாம்பு விஷயத்தில் அளவு கடந்த ஈடுபாடு'' என்றார் நண்பர்.

எனக்கென்னவோ அவற்றைத் தொட்டுப் பார்க்கக் கடைசிவரை கூச்சம். அந்தக் கோயிலுக்கு வரும் வெளிநாட்டுத் தலைவர்கள் கூட பாம்பைத் தொட்டுப் பார்க்காமல் போவதில்லையாம்.

''ஈரான் அரசி ஒருமுறை பினாங்குக்கு வந்திருந்தார். பாம்புக் கோயிலுக்கு வந்தபோது பாம்பைத் தொட்டுப் பார்த்தார்.''

''அவராகவே தொட்டாரா, இல்லை, யாராவது தொட்டுப் பார்க்கச் சொன்னார்களா?'' என்று நான் கேட்டேன்.

நண்பர் சிரித்துக் கொண்டார்.

''அது பெரிய விஷயமாகப் போய்விட்டது. பத்திரிகை நிருபர்கள் தொடச் சொன்னதால் அந்த அரசி தொட்டுப் பார்த்தார். ஒரு மகாராணியைப் பாம்பைத் தொடும்படி எப்படி நிர்ப்பந்திக்கலாம் என்கிற மாதிரி ஒரு விவகாரம் ஏற்பட்டு விட்டது. எல்லாம் பத்திரிகைக்காரர்களின் திருவிளையாடல்கள்தான்'' என்றார் அவர்.

பிறகு நான் கேள்விப்பட்டேன். இந்தியாவிலிருந்து சென்றிருந்த ஒரு பத்திரிகையாளரைப் பாம்புக் கோயில் பாம்பு ஒன்று கடித்து விட்டதாம். ஆனால் அவர் பாதிக்கப்படவில்லை.

பினாங்கு பாம்புக் கோயிலைப் பார்த்த பிறகு எனக்கு சிங்கப்பூர் ராமலிங்கத்தின் நினைவு வந்தது. இந்தக் கோயிலைப் பார்த்த பிறகுதான் சிங்கப்பூரில் ஒரு பாம்புப் பண்ணை வைக்க வேண்டும் என்ற எண்ணம் அவருக்கு ஏற்பட்டிருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டேன். அடுக்கு மாடியில் பாம்புப் பண்ணை வைத்துக் கொண்டிருந்த சிங்கப்பூர் ராமலிங்கம், இப்பொழுது லண்டனில் இருக்கிறார். அங்கும்கூட இந்தச் சமயத்தில் அவர் ஒரு பாம்புப் பண்ணையை ஏற்படுத்தி யிருந்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை.

**வா**ழ்க்கையில் நன்கு உழைத்து அனுபவம் வாய்ந்த ஒரு சீனரையும், மலாய்க்காரரையும் சந்திக்க வேண்டும் என்று நான் விரும்பினேன். வள்ளல் ரெங்கசாமி பிள்ளை இதற்கு ஏற்பாடு செய்திருந்தார்.

'மெர்லின்', பினங்குக்குச் செல்லும் யாரையும் கவரக்கூடிய ஓர் ஓட்டல். ரிவால்விங் ரெஸ்டாரண்டும் அதில் உண்டு. எடுப்பாக நிமிர்ந்து நிற்கும் அந்த ஓட்டலைப் பார்த்ததும், அதன் முதலாளி அமெரிக்கராக இருப்பார் என்றே நினைத்தேன்.

''மிஸ்டர் மணியன், மெர்லின் ஓட்டலின் முதலாளியிடம் உங்களை அழைத்துப் போகிறேன். சீனப் பிரமுகர் ஒருவரைச் சந்திக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறீர்கள் அல்லவா? அவர் மிகவும் நல்லவர்'' என்றார் ரெங்கசாமி பிள்ளை.

பிரமுகரான திரு. லோ பூன் சியூவை (Loh Poon Siew) சந்தித்தேன். ஆரவாரமில்லாமல் மனம்விட்டு அவர் பேசினார்.

''நீங்கள் பிறந்தது மலேசியாவில்தானா?'' என்று அவரைக் கேட்டேன்.

''சீனாவில்தான் பிறந்தேன். பன்னிரண்டு வயதில் இங்கே வந்தேன்' அது முதல் இந்த நாடுதான் என் தாயகம்'' என்று சொன்னார் திரு. லோ.

''உங்கள் வயதைச் சொல்லலாமா?''

''ஐம்பத்தைந்து. இல்லை, ஐம்பத்தி நாலு என்று வைத்துக் கொள்ளுங்கள்'' என்றார்.

எனக்குப் புரியவில்லை.

''நான் எப்படி வைத்துக் கொள்வது? உங்கள் சரியான வயது உங்களுக்குத்தானே தெரியும்'' என்றேன்.

''இந்த நாட்டுக் கணக்குப்படி எனக்கு வயது ஐம்பத்திநாலு. சீனாவிலுள்ள கணக்குப்படி ஐம்பத்தைந்து'' என்று மறுபடியும் அவர் புதிர் போட்டார்.

எனக்குப் புரியவில்லை என்பதைத் தெரிந்து கொண்டு, அவரே விளக்க ஆரம்பித்தார்.

''குழந்தை கர்ப்பத்திலிருக்கும் காலத்தையும் வயதுக் கணக்கில் சேர்த்துக் கொள்ளும் பழக்கம் சீனாவில் உண்டு. மலேசியாவில் அந்தக் கணக்கை நான் சொல்ல முடியுமா? எப்படியோ, நான் பிறந்து ஐம்பத்திநாலு வருடம் ஆகிறது; ஐம்பத்திநாலு வயது என்றே சொல்லுவோம். சரிதானே?'' என்றார் அவர் சிரித்துக் கொண்டே.

திரு. லோ பூன் சியூ, ஹொக்கியன் பிரிவைச் சேர்ந்தவர். சீனர்களில் ஹொக்கியன், தியோச்சு, கண்டோனீஸ் போன்ற பிரிவுகள் உண்டு என்று சொன்னார்கள். மொழி, வட்டார அடிப்படையில் ஏற்பட்ட பிரிவுகள் இவை.

''வேலை தேடித்தான் மலாயாவுக்கு நான் வந்தேன். சில வருடங்களிலேயே பலருக்கு வேலை கொடுக்கும் நிலைமையை உருவாக்கி விட்டேன். பதினெட்டாவது வயதில் ஒரு ஒர்க்ஷாப் ஏற்படுத்தினேன். போர்மனாக இருந்து அனுபவம் பெற்றிருந்தேன். ஒர்க்ஷாப்பில் முதலில் பத்து

பேருக்கு வேலை கொடுத்தேன். பிறகு பஸ் கம்பெனிக்குச் சொந்தக்காரர் ஆனேன். மஞ்சள் பஸ் கம்பெனி (Yellow Bus Company) என்றால் பினங்கில் எல்லோருக்கும் தெரியும்'' என்றார் திரு. லோ.

''ஓட்டல் தொழிலில் எப்படி உங்களுக்கு நாட்டம் வந்தது?'' என்று கேட்டேன்.

''சொல்கிறேன், மிஸ்டர் மணியன்'' என்று உற்சாகத்தோடு பேச ஆரம்பித்தார் அவர் :

''நிலங்களை வாங்கி விற்பதில் சில வருடம் ஆர்வம் காட்டினேன். ஹோண்டா மோட்டார் சைக்கிள் உங்களுக்குத் தெரியும். அதற்கு ஏஜென்ஸி எடுத்துப் பினங்கில் விநியோகித்தேன். பாங்கி டைரக்டர் ஆனேன். இப்படிப் பல தொழிலில் ஈடுபட்ட பிறகு, ஒரு முதல்தரமான ஓட்டலையும் நடத்தவேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது, அவ்வளவுதான்'' என்று அவர் கூறினார்.

திரு. லோ பூன் சியூவுக்கு ஆறு குழந்தைகள். சீனாவுடன் இவருக்கு எந்தத் தொடர்பும் கிடையாது.

''சீனாவுக்குப் போய்வர வேண்டும் என்ற எண்ணம் இருக்கிறதா?'' என்று கேட்டேன்.

''இல்லை. அதற்கு அவசியம் இல்லை, ஆசை இல்லை'' என்றார் அவர்.

திரு. லோ புத்த மதத்தைப் பின்பற்றுகிறவர். வர்த்தகத்திலும் தொழில் துறையிலும் சிறந்து விளங்கும் இவருக்கு, அரசியலில் ஈடுபாடு இல்லை. இது எனக்கு ஆச்சரியமாகவே இருந்தது. 'அரசியலில் எனக்கு நாட்டம் இல்லை' என்று சர்வ சாதாரணமாகச் சொன்னார்.

இறுதியாக திரு. லோ பூன் சியூ சொன்னார்:

''உழைப்பினால் யாரும் உயர்வடையலாம். பினங்குக்கு வெறுங் கையுடன் வந்தேன். உழைப்பு கை கொடுத்தது. உயர்த்தி யிருக்கிறது. உழைத்து முன்னேற விரும்புகிறவர்களுக்கு பினங்கு ஒரு நல்ல இடம்.''

அவர் கூறியது பசுமையாக நினைவில் இருக்கிறது.

''பினங்கு அரசியல் நிலைமை எப்படி?'' என்று சிலரிடம் கேட்டேன்.

''தி. மு. க. அரசாங்கம் மாதிரிதான்'' என்று எனக்குப் பதில் கிடைத்தது.

''எந்த அடிப்படையில் அப்படிச் சொல்கிறீர்கள்?'' என்றேன்.

''மத்தியில் அரசு நடத்துவது கூட்டணி. பினங்கு மாநிலத்தை ஆள்வது 'கெராக்கன் ரயத்' என்ற கட்சி. தமிழ் நாட்டில் தி. மு. கழகம் ஆள்வது மாதிரிதானே இதுவும்'' என்றார்கள்.

பினங்கு மாநிலத்துக்கு இப்படி ஒரு சிறப்பு — ஒரு மாற்றம் — கிடைத்திருக்கிறது.

எழுபது வயதான மலாய்ப் பிரமுகர் டத்தோ ஹாஜி இஸ்மாயிலைப் பார்க்கச் சென்றேன். அவர் இளைஞரைப் போல் உற்சாகத்துடன் வரவேற்றார். அவர் ஓர் அரசியல்வாதி. நாற்பது வருடம் கல்வித் துறையில் சேவை புரிந்துவிட்டு ஓய்வு பெற்றிருக்கிறார்.

நான் முதலில் அவரைக் கேட்டது 'டத்தோ' பற்றித்தான்.

''டத்தோ என்று பெயருக்கு முன்னால் சேர்த்திருக்கிறீர்களே, அது என்ன?'' என்றேன்.

''எங்கள் அரசாங்கம் கொடுக்கும் விருது. அலி மெங்கு நகாரா என்ற பட்டத்தை அரசாங்கம் எனக்குக் கொடுத்தது'' என்று, ஹாஜி இஸ்மாயில் சொன்னார்.

''எங்கள் நாட்டில் ஜனாதிபதியின் விருது அளிக்கப்படுகிறது. அது மாதிரிதானே இங்கும்?'' என்று வினவினேன்.

''இங்கு அப்படியும் உண்டு. வேறு மாதிரி விருதுகளும் உண்டு. எங்கள் நாட்டுப் பேரரசர் (யாங்-டி-பெர்த்வான் அகோங்) பிரமுகர்களுக்கு விருது வழங்குகிறார். ஒவ்வொரு மாநிலத்தின் சுல்தான்களும் அவரவர் பிறந்த நாளின்போதும் பலருக்கு விருது கொடுக்கிறார்கள். டுன், டான்ஸ்ரீ, டத்தோ, ஜே. பி., ஏ. எம். என்., பி. ஜே. கே.— இப்படிப் பல விருதுகள் உண்டு'' என்றார்.

குடும்ப பாரம்பரியத்தைப் பற்றியும் ஹாஜி இஸ்மாயில் சொன்னார். மலேசியாவில் இவருடைய குடும்பம் பழமையான ஒன்று. இவர் ஏழாவது தலைமுறையைச் சேர்ந்தவராம்.

''அரசியலில் உங்களுக்கு எப்படி அக்கறை ஏற்பட்டது?'' என்று கேட்டேன்.

''கல்வித் துறையிலேயே காலத்தைச் செலவழித்துக் கொண்டிருந்தேன். அரசியலைப் பற்றிச் சிந்தனை இல்லை. ரெங்கசாமி பிள்ளைதான் அரசியலில் ஈடுபட உற்சாகமளித்தார். நாங்கள் இருவரும் பழைய நண்பர்கள்'' என்று பெருமிதத்தோடு அவர் சொன்னார்.

ஹாஜி இஸ்மாயில், பினாங்கு சட்ட மன்ற உறுப்பினர்.

''தமிழ்நாட்டு மக்களோடு மலாய்க்காரர்களை ஒப்பிட்டுச் சொல்லலாம்'' என்று அவர் ஆரம்பித்தபோது, என்ன சொல்லப் போகிறார் என்று ஆர்வத்துடன் கவனித்தேன்.

''இருவருமே விவசாயத்தில் ஈடுபட்டிருப்பவர்கள். 'மலாய்க்காரர்கள் எதையும் சுலபமாக எடுத்துக் கொள்பவர்கள், கடுமையாக உழைக்கமாட்டார்கள்' என்று பலர் சொல்கிறார்கள். இதை நான் ஒப்புக் கொள்வதில்லை'' என்று சொல்லிவிட்டு, நிதானமாக என்னைப் பார்த்தார்.

''சொல்லுங்கள்'' என்றேன் நான்.

''மலாய்க்காரர்கள் சுலபமாகவும் சில சமயங்களில் காரியங்களை எடுத்துக் கொள்வார்கள். கடினமாக எடுத்துக் கொள்வதும் உண்டு. பூமியில் பாடுபடுகிறவர்கள் வருடம் முழுவதும் உழைக்க வேண்டும் என்பதில்லை. பூமி நன்ருக விளைந்து விட்டால், சில காலம் விவசாயி ஓய்வாக இருப்பது இயற்கைதானே! ஒரு போகமோ இரு போகமோ பயிர் செய்து, பலன் கண்ட பிறகு ஓய்வெடுத்துக் கொள்வது சகஜம். உங்கள் நாட்டிலும் இப்படித்தான் இருக்கும்'' என்ருர் அவர்.

''மலாய்க்காரர்களின் முன்னேற்றத்திற்காக இயங்கும் மாரா நிறுவனத்தைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''மாராவின் காரியங்கள் மகத்தானவை. அதனுல் மலாய்ச் சமூகத்திற்கு எவ்வளவோ நன்மை ஏற்பட்டிருக்கிறது. பொருளாதார நிலைமை உயர்ந்திருக்கிறது'' என்று டத்தோ ஹாஜி இஸ்மாயில் சொன்னுர்.

பினங்கின் செல்வச் செழிப்புக்கும் வளர்ச்சிக்கும் இவர்களைப் போன்ற மலாய், சீன, இந்தியப் பிரமுகர்களும், உழைப்பாளிகளுமே காரணம் என்று நான் புரிந்து கொண்டேன்.

# 41

ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் நான் பெற்ற அனுபவங்களுக்கும் கீழ்த் திசை நாடான சிங்கப்பூர், மலேசியாவில் நான் பெற்ற அனுபவங்களுக்கும் நிறைய வித்தியாசம் இருந்தது. நமது கலாசாரத்திலிருந்து முற்றிலும் மாறுபட்ட ஒரு சமுதாயத்தை மேற்கத்திய நாடுகளில் நான் சந்தித்தேன். உணவு, உடை, பழக்க வழக்கங்கள் எல்லாவற்றிலும் அவர்கள் மாறுபட்டார்கள். ஆனால் இவை அனைத்தையும் மீறி 'மனிதன்' என்ற நோக்கில், ஆசாபாசங்கள், பந்தங்கள், பிணைப்புகள் ஆகியவற்றில் அவர்களுக்கும் நமக்கும் உள்ள பல ஒற்றுமைகளை என்னால் காண முடிந்தது. இதைத்தான் என்னுடைய கட்டுரைத் தொடரில் நான் குறிப்பிட முயன்றிருந்தேன்.

ஆனால், சிங்கப்பூர், மலேசியாவைப் பொறுத்தவரை, முற்றிலும் வேறுவிதமான அனுபவம் என்னுடையது. இங்கெல்லாம் வேற்று நாட்டில் இருக்கும் உணர்வே எனக்கு ஏற்படவில்லை. ஒருவேளை, வேஷ்டியைக் கட்டிக் கொண்டு, வேண்டியதைச் சாப்பிட்டுக் கொண்டு, தமிழில் பேசிக் கொண்டு வாழ்ந்ததால் அந்த எண்ணம் ஏற்படவில்லையோ, என்னவோ? இந்தப் பழகிய சூழ்நிலையிலும் ஒரு புதுமையான உயர்ந்த தத்துவத்திற்கு இந்த நாடுகள் உருவமாக இருப்பதைக் கண்டேன்.



யூனிடி இன் டைவர்ஸிடி (Unity in diversity) என்பார்களே, அதன் அர்த்தத்தை முழுமையாக இங்கேதான் நான் புரிந்து கொண்டேன். பல இன மக்கள், பல மொழி பேசும் மக்கள் ஒன்று கூடி, பேதமில்லாமல் இணைந்து வாழ முடியும் என்பதற்கு இந்த இரு நாடுகளும் முன்மாதிரியாக விளங்குகின்றன.

பிறப்பாலும் பாரம்பரியத்தாலும் பல இனத்தைச் சேர்ந்த மக்கள் அங்கு வாழும்போது, அவர்களை ஓர் அரிய ஆதார சக்தி இணைத்துக் கொண்டிருக்கிறது.

அதுதான் தேசபக்தி.

இந்த தேசபக்தி, இன பக்தியைவிட மேலானது. தான் வாழும், தன்னை வாழ வைக்கும் தேசத்துக்கு விசுவாசமாக இருக்கும் உயர்ந்த பக்தி இது.

பிறப்பால் இந்தியரானாலும் சிங்கப்பூரிலுள்ள இந்தியர் தன்னை இந்தியர் என்று தனித்துச் சொல்வதில்லை. சிங்கப்பூரர் (Singaporean) என்றே சொல்லிக் கொள்கிறார். சிங்கப்பூரிலுள்ள சீனரும், மலாய்க்காரரும் இப்படித்தான். எல்லோருமே சிங்கப்பூரர். மலேசியாவிலும் இப்படித்தான். ஒரு தமிழர், ஒரு சீனர், ஒரு மலாய்க்காரர், ஒரு யுரேஷியர் என்பதையெல்லாம் விட, ஒரு மலேசியர் என்ற தன்மையே அங்கு மேலோங்கி நிற்கிறது. மொழியும் இதற்குப் பாலமாக அமைந்து விட்டது. நம்முடன் தமிழில் பேசும் சிங்கப்பூர் தமிழர், தம் நாட்டு சீனருடன் அல்லது மலாய்க்காரருடன் மனம் விட்டு மலாய் மொழியில் உரையாடுவதைப் பார்க்கும்போது பெருமைப் படாமல் இருக்க முடியவில்லை.

மொழி விஷயத்தில் இந்த நாடுகளில் பிரச்னை இல்லை. இந்த இரண்டு நாடுகளிலும் தமிழ் தழைத்து வாழ்கிறது. தமிழ் இலக்கியம் செழிப்புற வளர்ந்து கொண்டிருக்கிறது.

'சிங்கப்பூரும், மலேசியாவும் இந்தியாவைப் போல் பெரிய நாடுகள் அல்ல. இதனால் எந்த விஷயமும் பிரச்னையாக உருவெடுக்காமல் பார்த்துக் கொள்வது சுலபம்' என்று வாதிடலாம். சிங்கப்பூர், மலேசியப் பயணக் கதையின் துவக்கத்தில் நான் ஒரு விஷயத்தைக் கூறியிருந்தேன். உலகில் எந்தப் புதிய கண்டு பிடிப்பும், சோதனைக் குழாயில்தான் (Test Tube) ஆரம்பத்தில் செய்யப்படுகிறது. அதிலிருந்துதான் சாதனைகள் உலகுக்குக் கிடைக்கின்றன. சிங்கப்பூர் சிறிய நாடு. மக்கள் தொகை இருபது லட்சமே. மலேசியா அதைவிடப் பெரிய நாடு. சுமார் ஒரு கோடி மக்கள் இருக்கிறார்கள். திட்டங்களை நிறைவேற்றுவதில் சிறிய நாடு, பெரிய நாடு என்ற பிரச்னை இருக்க முடியாதுதானே? சிங்கப்பூர், சோதனை நடத்தி, வெற்றிகரமாகக் காரியங்களை முடிக்கிறது என்றால், பெரிய நாடுகள் அது மாதிரியான சோதனையைப் பெரிய அளவில் விரிவுபடுத்திக் கொள்ள வேண்டியதுதான் முறை அல்லவா?

அரசியலிலும் கூட ஒரு புதுமை. சிங்கப்பூரில் ஒரே கட்சி அரசாங்கம் நடக்கிறது. மலேசியாவில் கூட்டணி அரசாங்கம். இரண்டுமே

இருவிதத்தில் சிறப்புடையவை. ஒரு கட்சி அரசியல், சிங்கப்பூரில் வெற்றி கரமாக நடைபெறும் முறையை முன்பே சொல்லியிருக்கிறேன். மலேசியாவில் மூன்று அங்கங்கள் ஒன்று சேர்ந்து அரசு நடத்துகின்றன. மலேசிய இந்தியர்களின் மலேசிய இந்தியர் காங்கிரஸ், மலாய்க்காரர்களின் ஐக்கிய மலாய்க்காரர் தேசிய ஸ்தாபனம். மலேசிய சீனர்களின் கட்சியான மலேசிய சீனர் சங்கம்—இந்த மூன்று கட்சிகளுமே கூட்டணி (Alliance). தேசிய ஒற்றுமைக்கு இது சிறந்த அடிப்படை. தேசிய ஒற்றுமைக்கென்றே ஓர் அமைச்சரகமும் மலேசியாவில் இருக்கிறது. மலேசிய இந்தியர் காங்கிரஸின் தேசியத் தலைவர் டுன் வி. தி. சம்பந்தன், தேசிய ஒருமைப்பாட்டு அமைச்சராக இருந்து வருகிறார்.

தனி நபர்களைத் தேசிய மயமாக்கியிருக்கும் சிங்கப்பூரின் சாதனை, உலகத்துக்கு ஓர் உதாரணம். தனி நபர்கள் இனம் இனமாக, பிரிவு பிரிவாக ஒரு பல இன நாட்டில் ஒதுங்கி நின்றால் முன்னேற முடியாது. தேசியத்தன்மை உருவாக முடியாமல் போய்விடும். சிங்கப்பூர் அரசாங்கம் இதைத் தெளிவாக உணர்ந்து சுலபமான நடைமுறைகளை ஏற்படுத்தியிருக்கிறது. மக்களைத் தேசியமயமாக்குவது என்ற ஒரு புதிய கருத்துக்கு சிங்கப்பூர் உறைவிடமாக இருக்கிறது.

மக்கள் பொதுவிடத்தில் குப்பை போடுவதில்லை. எச்சில் துப்புவதில்லை. சினிமா தியேட்டரில் சிகரெட் பிடிப்பதில்லை. இதற்கெல்லாம் சட்டம் இருக்கிறது. சட்டம் நம்மைக் கட்டுப்படுத்துமே என்ற அச்சத்தை விட, நாம் ஒவ்வொருவரும் நமக்கு நாமே இந்தப் பழக்கங்களைப் பின்பற்ற வேண்டும் என்ற இயற்கையான மனோ பக்குவம் மக்களிடம் ஏற்பட்டிருக்கிறது. தேசத்தையும், தேசியத் தன்மையையும் மக்கள் உணர்ந்து கொண்டிருக்கின்றனர். அவர்களே தேசியமயமாகியிருக்கின்றனர். ஒரு பல இன நாட்டில் பன்மையில் ஒருமை தோன்றுவதற்கு இவையெல்லாம் ஆதாரங்கள். மலேசிய, சிங்கப்பூர் மக்களுக்கு இது தனியொரு பக்குவம். பல தலைமுறைக்கு முன் குடியேறிய ஒரு சீனக் குடும்பத்தைச் சேர்ந்தவரோ, தமிழ்க் குடும்பத்தின் சந்ததியினரோ சீனாவுக்கோ, இந்தியாவுக்கோ சென்று பார்க்க விரும்பாத அளவுக்கு, தேசிய மனப்பாங்கும் பக்குவமும் ஏற்பட்டிருக்கின்றன.

சிங்கப்பூரிலும், மலேசியாவிலும் பலதரப்பட்ட மக்களைச் சந்தித்துப் பேசும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. பல்வேறு விஷயங்களைப் பற்றி உரையாடினேன். அதிலிருந்து சிங்கப்பூரையும், மலேசியாவையும் அணு அணுவாக, அங்கம் அங்கமாகப் புரிந்து கொண்டுவிட்டதாக நான் சொல்லிக் கொள்ளவில்லை. சீன மக்கள் எப்படி இருப்பார்கள் என்பது நம்மில் பலருக்குத் தெரியாது. மலாய்க்காரர்கள் பற்றியும் பலர் அறியாமலிருக்கலாம். மலேசியாவிலும் சிங்கப்பூரிலும் இருக்கும் இந்தியர்களைப் பற்றி அறிந்து கொள்வதும் இங்குள்ள பலருக்குப் புதியதாகவே இருக்கலாம். பல இனங்களையும் சேர்ந்த மக்களைப் பார்த்தேன். பிரமுகர்களைக் கண்டேன். தொழிலாளர்களைப் பார்த்தேன். தோட்டப் பாட்டாளிகளுடன் பேசினேன்.

ரிக்ஷாக்காரரையும், தோசை விற்பவரையும் கூடச் சந்தித்தேன். இவர்களை யெல்லாம் நம் நாட்டு மக்களுடன் ஒப்பிட்டுக் காட்டவோ, பேசவோ எனக்கு வாய்ப்பில்லை. ஆகவேதான், மேற்கத்திய பயண அனுபவத்தில் இருந்து சிறிது மாறுபட்ட ஓர் அனுபவமாகவே இதைக் கருதுகிறேன்.

சிங்கப்பூர், மலேசியப் பயணக் கதையை ஒரு சரித்திரம் போலவோ, ஆதார நூலாகவோ ஆக்கிவிடும் எண்ணம் இல்லை. அந்தந்த நகரங்களில் நான் சந்தித்த மக்கள், அவர்கள் கூறியவை, நான் உணர்ந்தவை — ஆகியவற்றையே எழுதினேன். தனிப்பட்டவர்கள் கூறிய சொந்தக் கருத்துக்கள்தான் அவை. இது சமுதாயத்தின் பொதுக் கருத்துக்களாகி விடாது. அப்படி எடுத்துக் கொள்வதும் பொருத்தமல்ல. இது இந்திய மக்களோடு மலேசிய, சிங்கப்பூர் மக்களை ஒப்பிட்டுக் காட்டும் ஒரு முயற்சியும் அல்ல. சிங்கப்பூர், மலேசியத் தமிழர்களைப் பற்றி மட்டுமே எழுதும் முயற்சியிலும் நான் இறங்கவில்லை. இந்தத் தேசங்களோடு ஒன்றிவிட்ட ஒரு பகுதியினர்தான் தமிழர்கள். அவர்களைத் தனித்து, பிரித்துப் பேச முடியாது.

சிறிய நாடுகளிடமிருந்து உலகம் பல பெரிய விஷயங்களைக் கற்றுக் கொள்ள முடியும். பின்பற்றக் கூடிய அரிய காரியங்களைச் சிறு நாடுகள் சாதிக்க முடியும். இதற்கு சிங்கப்பூரும் மலேசியாவும் உதாரணங்கள் என்பது என் அனுபவம். எந்த நாடாயினும் மக்கள் தேசியமயமாக வேண்டும். தேசியம் நிமிர்ந்து நின்றால் எதையும் சாதித்து விடலாம். சிங்கப்பூர் இதைச் செய்து காட்டி விட்டது. நாட்டின் இருபத்தோரு லட்சம் மக்களும் பயனுள்ள குடிமக்களாக விளங்குகிறார்கள். மலேசியாவும் அப்படியே.

மொழியும் கலாசாரமும் அரசியல் பிரச்னைகளாகிவிடக் கூடாது என்று சிங்கப்பூர் பிரதமர் திரு. லீ குவான் இயூ கூறியிருப்பதைச் சில முறை சிந்தித்திருக்கிறேன். இந்த வெடிகுண்டுகளை யெல்லாம் சிங்கப்பூர் அகற்றிவிட்டது என்று அவர் சொல்கிறார். உண்மைதான். உழைத்து முன்னேறி நாட்டை உயர்த்த வேண்டும் என்ற எண்ணம்தான் அந்த நாட்டு மக்களிடம் இருக்கிறது. பல இன மக்களைக் கொண்ட ஒரு நாடு முன்னேறுவதற்கு அரசியல் பிரச்னைகள் முட்டுக் கட்டையாக இருக்கக் கூடாது என்பதை சிங்கப்பூர், மலேசியத் தலைவர்கள் தெளிவாக அறிந்திருக்கிறார்கள். இதை மக்கள் அனைவரும் அறிந்திருப்பதில் வியப்பு எதுவும் இல்லை.

பன்மையில் ஒருமை காண்பது என்பதை நினைக்கும்போது சிங்கப்பூரும் மலேசியாவும்தான் எடுத்த எடுப்பில் எனக்கு நினைவுக்கு வருகின்றன. பசுமையான நினைவுகளை இந்த நாடுகள் அளித்துக் கொண்டிருக்கின்றன. பல இன மக்களை ஒருமையாக்கி, சேய்களை அணைத்து நிற்கும் தாய்போல் விளங்கும் இந்த நாடுகள் எல்லா வளமும் பெற்றுச் சிறப்படைய வேண்டும் என்பதே என் ஆசை.

**ஆஸ்திரேலிய, சிங்கப்பூர், மலேசியப் பயணக் கதை முற்றும்.**

